# தமிழ்நாட்டுக் கிறித்துவம்

**(கி.பி. 52 முதல் கி.பி. 1747 வரை)**

**தொகுதி - ஒன்று**

**ம. சோ. விக்டர்**




**யாத்திசைப் பதிப்பகம்**

50, அண்ணா நகர்

அரியலூர் – 621 713

அலைபேசி: 98432 73914

தமிழ்நாட்டுக் கிறித்துவம் – வரலாற்று நூல்
(கி.பி. 52 முதல் கி.பி. 1747 வரை)

Dr. Ma.So. Victor, M.A., Ph.D.,
Cell : 9843273914



முதல் பதிப்பு : ஜூலை 2007
இரண்டாம் பதிப்பு : சனவரி 2013
பக்கம் : 496
படிகள் : 1200

பதிப்பு :
**யாத்திசைப் பதிப்பகம்**
50, அண்ணா நகர்
அரியலூர் - 621 713
அலைபேசி: 98432 73914

வடிவமைப்பு :
**எஸ். தனசேகர்**

விலை : **400. 00**

அச்சிட்டோர்:
**ஸ்ரீராகவேந்திரா லேசர் பிரிண்டர்ஸ்**
15, தானப்ப தெரு, திருவல்லிக்கேணி,
சென்னை - 600 005.
தொலைபேசி : 044-42664695, 90031 81586

Website : http://www.cict.in
Email : ramsay2@rediffmail.com
ramasamy.k@cict.in



Phones (O): 044-28448841
044-28442716
Fax : 044-28448888

செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம்
இந்திய அரசு, மனித வள மேம்பாட்டு அமைச்சகம், உயர் கல்வித்துறை, மொழிகள் பிரிவு )
எண். 6, பாலாறு இல்லம், காமராசர் சாலை, சேப்பாக்கம், சென்னை - 600 005, இந்தியா

CENTRAL INSTITUTE OF CLASSICAL TAMIL
(Government of India, Ministry of Human Resource Development, Department of Higher Education, Languages Division)
No. 6, Kamarajar Salai, Chepauk, Chennai - 600 0050, India

---

F.No. 11-264/CICT/2011-12/

**Prof. K. RAMASAMY**
Officer in Charge

This is to certify that Dr. Ma.So. Victor, M.A., Ph.D., known to me for the last twenty years, is a reputed scholar and researcher, who has been working on the ancientness and classicality of the Tamil language for the last twenty-five years. He has written about forty well-researched books running to more than 10,000 pages on the impact of Tamil Culture and Civilization on the Western nations during the pre-historic days as well as on the achievement of the ancient Tamils in various branches of knowledge including science, mathematics, astronomy, theology and sociology.

Dr. Ma.So. Victor is a very distinguished etymologist, who has been steadily making substantial contributions to ancient Tamil studies. He has explained with suitable illustrative examples how the roots of several hundreds of words in world's languages are to be found in Tamil. He has presented learned papers in numerous seminars and conferences and published scholarly articles in a number of

standard journals and magazines. He has now been invited to give lectures by the Tamil Organisations in Italy, France, Germany, Norway and other European nations.

Central Institute of Classical Tamil, Chennai, has granted a sum of Rs.2,50,000/- for his research project on "Tamil and Western Semitic Famlily of Languages".

We hope and trust that Dr. Ma.So. Victor will receive the international encouragement he deserves.

K. Ramasamy

**(K. RAMASAMY)**

## உள்ளே...


ஆசிரியர் உரை 15

முன்னுரை 19

பொருளடக்கம்

பகுதி – 1

I

**கிறித்துவம் பற்றிய சான்றுகள்** 29

- மறைத்தொண்டர்களின் செயல்பாடுகள் 29
- மறைத்தொண்டர்களின் மடல்கள் 30
- நற்செய்திகள் நான்கு 30
- மறைத் தொண்டர் பால் 33
- பிற நூல்கள் 36
- இயேசுவின் வாழ்க்கை 40
- சில முரண்பாடுகள் 41
- சின்னப் பிளினி 42
- பொதுவுடைமையர் நோக்கு 43
- கிழக்கிந்தியக் கடவுளர்கள் 45
- யூதக் குழுக்கள் 47
- குறுக்கம் என்னும் சிலுவை 49
- யூதர் - புறவினத்தார் மோதல் 51

**கிறித்துவம் – ஏழை எளியோரின் சமயம்** 53

- கிறித்துவத்துக்கு எதிரான நடவடிக்கைகள் 54
- கலை - பண்பாட்டு அழிவுகள் 56
- படிப்படியான வளர்ச்சி 58
- மெய்யியல் கொள்கையில் முரண்பாடுகள் 58
- கிறித்துவத்துக்கு எதிரான அறிவியல் 61

**கிறித்துவத்தின் திருச்சபைகள்** 63

- மார்ட்டின் உலூத்தர் 63
- ஜான் கால்வின் 64

- ஐரோப்பாவில் கத்தோலிக்கத் திருச்சபை 65
- உருசிய பழமைத் திருச்சபை 67

**கிறித்துவத் தொழிலாளர் இயக்கங்கள்** 68

**கிறித்துப் பிறப்பாண்டுகளில் இந்தியச் சமயங்கள்** 70

- ஆரிய சமயம் 70
- இந்து - பொருள் யாது? 75
- பிராமண மெய்யியல் 79
- திருமூலர் - திருமந்திரம் 81
- ஆசீவகம் 84
- ஆசீவகர்களின் சமயக் கொள்கை 86
- புத்த சமணச் சமயங்கள் 87
- இந்தியச் சமயங்களில் கிறித்துவத்தின் தாக்கங்கள் 93

**உலகின் முதல் சமயம் – தமிழ்ச் சமயமே** 101

**விவிலியத்தின் மூன்று தெய்வ நிலைப்பாடுகள்** 106

II

**தோமையார் காலத் தமிழகம்** 111

- சேரமன்னர் மரபு 112
- சோழர்கள் 114
- பாண்டியர்கள் 114

**சேரநாடு – கிறித்துவத்தின் விளைநிலம்** 115

- கொடுங்கல்லூர்த் துறைமுகம் 115
- செல்வச் செழிப்பு 117

**தோமையார் இந்தியாவுக்கு வந்தாரா?** 120

**தோமையார் பற்றிய ஆவணச் சான்றுகள்** 128

- தோமையாரின் செயல்பாடுகள் 128
- அலெக்சாந்திரிய நகரத்துக் கிளமெண்ட் 129
- ஓரிகன் 129
- எபிரெம் 130
- மிலான் நகரத்து அம்புரோஸ் 132

**தூய தோமையார்** 133
- அக்காலத்தில் தரை மற்றும் கடல் வழிகள் 134
- கொண்ட போரஸ் 136
- நாணயங்கள் 138
- தோமையாரும் அப்பனும் 139
- கட்டிடக் கலைஞர் தோமையார் 139
- படிக்காத மேதை தோமையார் 143
- முசிறித் துறைமுகம் 145
- இந்தியாவிற்கான கடல்வழி 147
- முசிறியில் தோமையார் 148
- தோமையரும் பிராமணர்களும் 149
- தோமையாரின் சமயப் பணி 150
- பகைவர்களான பிராமணர்கள் 151
- தோமையாரின் இறப்பு 153
- தோமையாரின் மறைவுக்குப் பிறகு 155

**தூயவர் பர்த்தலோமியூ** 160

**சேர நாட்டுச் சிரியன் திருச்சபை** 165
- சிரிய நாட்டு மக்களின் தமிழக வருகை 169
- வணிகர் குழுத் தலைவன் தோமா 171
- தோமாவின் கடல்வழி 173
- தோமாவும் மன்னனும் 175
- தோமாவும் கம்மாளரும் 176
- சிரியன் திருச்சபையின் வளர்ச்சி 177

**இந்தியக் கிறித்துவத்தில் மேலைநாட்டுக் கொள்கைகள்** 180
- ஞானவழி 181
- மணிகிராமம் 182
- நெஸ்டோரியன் கொள்கை 185

**கேரளத்தில் கிறித்துவத்தின் செல்வாக்கு** 187
- ஸ்தானு இரவிகுப்தன் 190
- கிறித்துவ அரசு 193

**இசுலாமியர்களின் எழுச்சி** 196

**வளர்ச்சிப் பாதையில் கேரள கிறித்துவம்** 202

இந்தியாவிற்கு கிறித்துவம் அளித்த கொடைகள் 208
பக்தி மார்க்கம் 213
- கிறித்துவமும் சிலப்பதிகாரமும் 218
- கிறித்துவமும் வஞ்சியும் 227
- கொண்ட போரஸ் - குட்டுவனே 231

பகுதி – 2

ஐரோப்பியர் வருகைக்கு முன்பிருந்த தமிழகம் 237
தோமையார் பற்றிய பழம் பாடல்கள் 244
இடைக்காலத் தமிழகம் 247
இசுலாமியர்களின் வருகை 251
பள்ளிகள் யாவர்? 256
கடல்வழியும் கிறித்துவ சமயமும் 266
இடைக்காலத்தின் கடல்வழிகள் 274
தமிழகத்தின் குழப்பமான அரசியல் சூழ்நிலை 279
இடைக்காலத்துத் தமிழகக் கிறித்துவர்கள் 283
போர்த்துக்கீசியரின் வருகை 290
போர்த்துக்கல் நாடு 297
போர்த்துக்கீசியரும் இந்தியக் கிறித்துவமும் 299
கிறித்துவர் சமய வழிபாட்டு முறைகள் 304
போர்த்துக்கீசியரும் கிறித்துவ சமயமும் 307
போர்த்துக்கீசியரின் இந்தியக் குடியிருப்புகள் 317
- தமிழகத்தின் முதல் நகராட்சி 321
- தேவானம்பட்டினம் 321
- நாகப்பட்டினம் 322

தமிழ்ச் செட்டிகளும் போர்த்துக்கீசியரும் 324
பரவர்கள் 326
- காதுச் சண்டை 327

போர்த்துக்கீசியரின் கிறித்துவ சமயப் பணிகள் 332
- பிரான்சிஸ்கன் சமயத் துறவிகள் 335
- இயேசு அவையினர் 336

**தூய பிரான்சிஸ் சேவியர்** 340
- கோவாவில் சேவியர் 342
- சேவியரை வருத்திய சாதிப்பிரிவுகள் 344
- பரவர்களிடையே சேவியரின் பணி 346
- சேவியரும் சிரியன் கிறித்துவமும் 349
- தலைமன்னார் மீனவர்கள் 350
- சேவியரின் கிழக்குப் பயணம் 351
- இயேசு அவையில் சீர்த்திருத்தங்கள் 352

**சிரியன் கிறித்துவமும் இயேசு அவையினரும்** 357

**மோதல் முற்றியது** 364

**தமிழகத்தில் ஐரோப்பியக் கிறித்துவம்** 381

**இராபர் – டி – நொபிலி** 385
- நொபிலி காலத்தில் - மதுரை 388
- நொபிலியும் பிராமணர்களும் 390
- திருச்சியில் நொபிலி 398
- நொபிலியின் கொள்கைப் போர் 401
- நொபிலியின் மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டுகள் 407
- நொபிலியின் அறிக்கை 411

**ஜான் – டி – பிரிட்டோ** 416
- கொழையில் பிரிட்டோ 418
- வடுகர் பேட்டையின் லிங்காரெட்டி 421
- மறவநாட்டில் பிரிட்டோ 422
- பிரிட்டோவின் இறப்புக்குப் பிறகு 427
- மதுரைக் கிறித்துவமும் மங்கம்மாளின் ஒத்துழைப்பும் 428

**ஜோசப் கான்ஸ்டண்டைன் பெஸ்கி** 432
- மதுரை 433
- மறவநாடு 433
- தஞ்சை நாடு 434
- தமிழகத்தின் நிலை 435
- தமிழ்த் தந்தை பெஸ்கி 437
- நொபிலி வழியில் பெஸ்கி 438
- சமயப் பணிகள் 439

**கிறித்துவமும் தமிழ்மொழியும்** 442
- ஹென்றிக் அடிகளார் 445
- தமிழில் முதல் அச்சிடப்பட்ட நூல் 448
- இந்தியாவில் முதல் அச்சுக் கூடம் 450
- தம்பிரான் வணக்கம் 451
- போர்த்துக்கீசியரின் தமிழ் நடை 452
- தமிழில் முதல் ஐரோப்பியரின் இலக்கண நூல் 456
- தமிழில் முதல் அகரமுதலி 457
- தமிழில் முதல் உரைநடை 457
- கிறிசிட்டியானி வணக்கம் 458
- தூயவர்கள் பற்றிய வரலாற்றின் குறிப்புநூல் 459
- தமிழ் நாட்காட்டி 460

**ஐரோப்பியரின் தமிழ்ப் படைப்புகள்** 461
- ஹென்றிக் அடிகளாரின் படைப்புகள் எட்டு. 461
- நொபிலியின் படைப்புகள்; 461
  - இலத்தீனில் எழுதியவை, 463
  - 56 மடல்கள் 463
  - தமிழ் நூல்கள் பதினான்கு 463
- பல்தசார் டிகொஸ்தாவின் படைப்புகள் 464
- புசேவின் நூல்கள் 464
- வீரமாமுனிவரின் படைப்புகள் முப்பத்தேழு: 465
  - பாநடை நூல்கள் எட்டு 465
  - உரை நடை நூல்கள் பத்து 465
  - இலக்கண நூல்கள் நான்கு 466
  - அகர முதலிகள் ஐந்து 466
  - மொழிபெயர்ப்பு நூல் ஒன்று 466
  - மடல் இலக்கியம் இரண்டு 466
  - மருத்துவ ஏடுகள் மூன்று 467
  - வடமொழி நூல்கள் இரண்டு 467
- சீகன் பால்கு 467

**மேற்கோள் நூல்கள்** 469

**விளக்கப்படங்கள்** 479

**சொற்பட்டியல்** 497



## ஆசிரியர் உரை

தொடக்க கால இந்தியக் கிறித்துவம் தோமையாரால் வித்தூன்றப்பட்டு, இன்று இந்தியாவின் அனைத்து மாநிலங் களிலும் விளைச்சலைக் கண்டுள்ளது. தோமையார், சங்ககாலத் தமிழகத்திலும், பாரசீகத்திலும், வட இந்தியாவின் வடமேற்குப் பகுதிகளிலும் பணியாற்றியதாக அறியலாம். சீனாவுக்கும் சென்று வந்ததாகக் குறிப்புகள் உள்ளன. கி.பி. 33 முதல் 52 வரையிலான காலங்களில், தமிழகத்தைத் தவிர்த்த பகுதிகளிலும், கி.பி. 52 முதல் 72 வரையில், தமிழகத்திலும் தோமையார் சமயப் பணி யாற்றினார் என அறியலாம்.

இயேசுவின் மறையைத் தாங்கித் தமிழகம் வந்த தோமை யார் பிறகு தனது தாய் நாட்டுக்குத் திரும்பவேயில்லை. தமது மனைவி மக்களுடன் அவர்தம் தாய்நாடான இஸ்ரேல் நாட்டி லிருந்து வெளியேறி, நாற்பதாண்டுகள் கடும் பணியாற்றி, திரு மயிலையில் தம்முயிரை நீத்தார். தோமையாரின் மனைவியும் திரு மயிலையிலேயே மரித்ததாகவும், அவர்தம் மக்கள் தமிழ் மக்களோடு இணைந்து திருமண உறவுகள் கொண்டு, மயிலை யிலேயே வாழ்ந்து மறைந்ததாகவும் செவிவழிச் செய்திகள் கூறுகின்றன.

இயேசுவின் கிறித்துவ சமயம், பாலத்தீனத்திலிருந்து நடுத் தரைக் கடலைத் தாண்டி ஐரோப்பாவுக்குச் செல்லு முன்னரே, அரபிக் கடலைத் தாண்டி தமிழகம் வந்துவிட்ட தென்பது வரலாற்றுண்மையாகும். **பெஞ்சமின்** வாக்கர் என்பார் கூறுவார்,

> "Christianity is of a greater antiquity in India than in any other country in the world except Palestine. It is older in India than in Rome itself."

இந்தியாவின் முதல் குடியரசுத் தலைவரான டாக்டர் இராசேந்திர பிரசாத், 1955ஆம் ஆண்டு, திசம்பர்த் திங்கள்

18ஆம் நாள், தோமையாரின் விழாவொன்றில் கலந்து கொண்டு பேசும் போது இவ்வாறு கூறினார்.

> "Remember St. Thomas came to India when many countries in Europe had not yet become Christian and so the Indians who trace their Christianity to him have a longer history and a higher ancestry than that of the Christians of many of the European contries. It is really a matter of pride to us that it so happened."

இந்தியாவில் தோன்றிய பிராமண சமயம், சமண சமயம், புத்த சமயம் போன்ற சமயங்கள், தமிழகத்தை வந்தடைய ஆண்டுகளை எடுத்துக் கொண்டன. கிறித்துவம் தொடங்கப் பட்ட 20 ஆண்டுகளுக்குள் தமிழகம் வந்துவிட்டது. தோமையாரின் தமிழக வருகை, அவரது தமிழகப் பணிகள் பற்றிய விரிவான செய்திகள் தமிழகத்தில் கிடைக்காமற் போனது வரலாற்றில் ஒரு பின்னடைவைத் தந்தாலும், வெளிநாட்டினரின் குறிப்புகள் பெருமளவில் இக்குறையை நிறைவு செய்கின்றன. சேர நாட்டுத் தமிழர்கள் தான் முதன்முதலில் கிறித்துவத்தை, தோமையார் வழியாக ஏற்றுக் கொண்டனர் என்பது தமிழகக் கிறித்துவத்துக்குப் பெருமை. தமிழகத்தின் பெருநகரம் மயிலையில் தோமையார் தமது இன்னுயிரை நீத்தது, இன்றும் தமிழ் மக்களால் நினைவுகூரப்பட்டு வருகின்றது. **மயிலையில் வாழ்ந்திருந்ததாக அறியப்படும் திருவள்ளுவரும் அவர் காலத்திலேயே வாழ்ந்திருந்தவராகக் கருதப்படும் தோமையாரும் சந்தித்திருப்பார்களா? உரையாடியிருப்பார்களா? தமிழ் - கிறித்துவ சமயங்களின் மெய்யியல் குறித்து விவாதித்திருப்பார்களா?**

விடை காண முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. உலகப் பொது மறைகளான கிறித்துவமும் திருவள்ளுவமும் ஒன்றையொன்று தழுவிச் செல்கின்றனவே என்ற சிந்தனை பலருக்கும் வந்ததுண்டு. **டாக்டர் புலவர் தெய்வ நாயகம்** பெருமளவில் சிந்தித்திருக்கிறார். தோமையார் - திருவள்ளுவரின் பிணைப்பை இறையருள் வெளிப்படுத்தும் என்ற நம்பிக்கையிலும் இருக்கிறார். புலவர் தெய்வ நாயகம் அவர்களது பணிகள் வெற்றியடைய வாழ்த்துவோம்.

தமிழகத்தில் இன்று வாழ்ந்து கொண்டிருக்கும் பிற சமய உடன் பிறப்புகளுக்கும் மற்றவர்க்கும் கிறித்துவ சமயம் பற்றிய

தெளிவான கண்ணோட்டம் இல்லையென்பது ஒரு குறை யாகவே உள்ளது. கிறித்துவ சமயம் சார்ந்த வரலாற்று நூல் தமிழில் இதுவரை வெளிவரவில்லை. சமய நூல் எழுதுவது எளிது. சமய வரலாற்று நூல் எழுதுவதென்பது மிகவும் கடினமான பணியாகும். சமயமும் வரலாறும் பல நேரங்களில் முரண்படு வதால், சமய வரலாற்று நூலை எழுதப் பலரும் தயங்குகின் றனர். குறிப்பாக, கிறித்துவ சமய வரலாற்றை எழுதப் பலரும் முன்வருவதில்லை.

இதுவரையில் தமிழகத்தில் வெளியிடப்பட்ட கிறித்துவம் தொடர்பான நூல்கள் பலவும் சமய நோக்கில் எழுதப்பட்ட வைகளாகவே உள்ளன. முதல் முயற்சியாக, தமிழில் இத்தகைய வரலாற்று நூலை எழுத முற்பட்ட போது சிறிது தயக்கம் ஏற்பட்ட போதிலும், வரலாற்றுச் செய்திகளைத் தெரிவித்தே ஆக வேண்டும் என்ற உந்துதலில் இந்நூல் எழுதப் பெற்றது.

கி.பி. முதல் நூற்றாண்டு முதல் கி.பி. பதினெட்டாம் நூற் றாண்டு வரையிலான கிறித்துவ சமயம் தொடர்பான செய்திகள் தரப்பட்டுள்ளன. கிறித்துவ சமய வரலாறென்பது ஒரு பெரும் ஆழியைப் போன்றது. முடிந்தவரையில் சுருக்கி இந்நூலில் தரப்பட்டுள்ளது.

தமிழகத்தின் பொற்காலமான கடைச் சங்க காலத்தில் தோற்றம் பெற்ற கிறித்துவம், தமிழைப் போலவே வளர்ச்சி யுற்றிருப்பது பெருமைக்குரியதே. கிறித்துவம் பற்றி அறிந்து கொள்ள விரும்பும் அன்பர்களின் எதிர்பார்ப்புகள் பெருகு மானால், இந்நூல் போன்ற பல வரலாற்று நூல்களை வெளிக் கொணர முடியும்.

இந்நூலை வடிவமைத்து அச்சிட்டு உதவிய ஸ்ரீராக வேந்திரா லேசர் பிரிண்டர்ஸ் நிறுவனத்துக்குஎனது நன்றி.

– ம. சோ. விக்டர்

## முன்னுரை

ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பு பாலத்தீனத்தில் தோன்றிய **இயேசு என்னும் மெசியா** *(மீட்பர்)* வழியில் தோன்றியதே கிறித்துவ சமயம் ஆகும். ஈசுவ, ஈசுவா என்ற எபிரேயச் சொல் லின் விரிவே, ஈசா என அரபுமொழியிலும், இயேசு என்று கிரேக்க மொழியிலும், ஜீசஸ் என்று ஆங்கில மொழியிலும் அழைக்கப்படுகின்றன. மிக எளிய தச்சுத் தொழிலாளியாகப் பிறந்தவரே இயேசு என்றும் பிற்காலத்தில் கிறித்து என்றும் அழைக்கப்படுபவராவார். **கிறித்து** (Christ) **என்ற கிரேக்கச் சொல்லுக்கு மீட்பர் என்பதே பொருளாகும்**. இப்பொருளைத் தாங்கிய எபிரேயச் சொல், மெசியா (Messiah) என்பதாகும். இயேசுவின் பிறப்பு, வளர்ப்பு, பொது வாழ்க்கை, அவர் கூறிய செய்திகள் போன்றவற்றைத் தாங்கி நிற்கும் நூலே புதிய ஏற்பாடு (New Testament) என்னும் விவிலிய (Bible) நூலாகும். இதனை காஸ்பல் (Gospel) என்றும் அழைப்பர். இதற்கு நற்செய்தி (Good News) என்பதே பொருளாகும்.

இன்றைக்கு ஏறக்குறைய 2000 மில்லியன் (200 கோடி) மக்கள், இயேசுவின் வழியிலான கிறித்துவ சமயத்தைப் பின்பற்றி வருகின்றனர். இயேசு யூதர் இனத்தில் தோன்றியவராதலால், தனது முதன்மைத் தொண்டர்களாகப் பன்னிருவரையும் தமது இனத்திலேயே தேர்வு செய்து கொண்டார். தமது 30ஆம் அகவையில், இறைவனின் கொள்கைகள், திட்டங்கள் பற்றிய நற்செய்திகளை அறிவித்தார். அச்செய்திகள், ஏற்கனவே யூத சமயத்தினரால் பின்பற்றப்பட்டுவந்த கொள்கைகளுக்கு முரண் பாடாக அமைந்திருந்தன. ஆனால் மக்கள் அனைவரும் இயேசு வின் செய்திகளுக்குச் செவி மடுத்தனர். இதனால் சினமுற்ற யூத

சமயத் தலைவர்கள், இயேசுவை அழிப்பதின் வாயிலாக, அவரது கொள்கைகளையும் அழித்துவிட எண்ணினர். தமது 33ஆம் அகவையில், இயேசு, சிலுவை என்னும் குறுக்கத்தில் அறைந்து கொலை செய்யப்பட்டார்.

இயேசு மறைவுற்றபின் வந்த மூன்றாம் நாளில் உயிர்த் தெழுந்தார் என்னும் நம்பிக்கையின் அடித்தளத்தில் அமை வுற்றதே கிறித்துவ சமயமாகும். உலக மீட்புக்காகத் தனது இன்னுயிரை ஈந்த மெசியாவாக இயேசு போற்றப்படுகிறார். ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பு பாலத்தீனத்தில் ஏற்றப்பட்ட ஒளி, இன்று உலகம் முழுதும் ஒளிர்ந்து கொண்டிருப்பதைக் காணமுடிகின்றது. இன்று கிறித்துவம் இல்லாத நாடே இல்லை என்னும் நிலை ஏற்பட்டுள்ளது.

கிறித்துவ சமயத்தின் தொடக்ககாலத்தில், அச்சமயத்துக்கு கிறித்துவம் என்ற பெயர் வழங்கப்படவில்லை. கிறித்துவ சமயத்தைப் பின்பற்றியவர்கள் தங்களை நம்பிக்கையாளர்கள் (Believers), உடன் பிறப்புகள் (Brothern) என்றவாறு அழைத்துக் கொண்டனர். **இச்சமயத்தின் எதிர்ப்பாளர்கள் வைத்த நக்க லான பெயரே** (derogratory name) **கிறித்துவர்கள்** (Christians) **என்பதாகும்**. இப்பெயரே கி.பி. 2ஆம் நூற்றாண்டு முதல் இக்காலம் வரையில் நின்று நிலைத்துவிட்டது. உலக வரலாற்றில் இப்படி வேறுபாடான முறையில் விளக்கப்பட்ட சொற்கள் அல்லது பெயர்கள் கூட, நின்று நிலைத்து விடுவதுண்டு. (தமிழ் நாட்டில் ஜஸ்டிஸ் (Justice) என்ற செய்தித் தாளை நடத்திவந்த கட்சி, ஜஸ்டிஸ் பார்ட்டி அல்லது நீதிக்கட்சி எனப்பட்டதை நோக்குக.)

கிறித்துவ சமயத்தின் தொடக்ககாலம் முதல் கி.பி. 13ஆம் நூற்றாண்டு வரை, கிறித்துவ சமயம் ஏறக்குறைய ஒரு தலைமை யின் கீழ் செயல்பட்டுவந்தது. இடைக்கால ஐரோப்பாவில் தோன்றிய புதிய சிந்தனைகள், சமய மறுமலர்ச்சி என்ற பெயரில், புதுப்புது திருச்சபைகளை (Churches)த் தோற்றுவித்தன. இன்று கிறித்துவ சமயத்திலுள்ள திருச்சபைகளின் பெயர்களை எண்ண முடியாத அளவுக்குப் பல்வேறு பிரிவினைச் சபைகள்

உலகெங்கும் உள்ளன.[1] இவைகள் யாவும் இயேசுவைக் கடவுளாக ஏற்றுக் கொண்டிருந்தாலும், விவிலியத்தில் சொல்லப் படும் செய்திகளுக்குத் தத்தம் பார்வைகளில் பொருள் கூறி, ஒன்றுக்கொன்று முரண்படுகின்றன. இம்முரண்பாடுகளில் பல, தொடக்க நூற்றாண்டுகளில், கிறித்துவம் கூறிவந்த மெய்யியல் கொள்கைகளைச் சார்ந்தவைகளாகும். கிறித்துவ சமயத்தின் வரலாற்றைத் தொகுப்பதென்பது மிகவும் கடினமானதொரு பணியாகும். இச்சமயத்தில் நம்பிக்கையுணர்வுகளே முதலில் நிறுத்தப்பட்டு, வரலாற்றுச் செய்திகள் பின்னுக்குத் தள்ளப் பட்டுள்ளன. **வரலாற்று அடிப்படையில் கிறித்துவ சமயத்தை அணுகும் போது. பல நேரங்களில் அவை முரண்பாடான விளைவுகளையே தோற்றுவித்து விடுகின்றன.**

கிறித்துவ சமயத்தின் மூலமும் வேரும் எங்குள்ளன என் பதைக் காண முயல்வதும் மிகக் கடினமான பணிகளாகும். அடிப்படையில், கிறித்துவுக்கு முன்பு பாலத்தீனத்தில் வாழ்ந் திருந்த பல யூத இனப் பெரியோர்களின் வாழ்வியல் செய்தி களைப் பின்புலமாகக் கொண்டே கிறித்துவம் துளிர்விட்டது. அபிறகாம்,* மோயீசன் போன்ற யூதவினப் பெரியோர்கள் வகுத்துக் கொடுத்த சமயவழிபாட்டு முறைகளையொட்டியே கிறித்துவம் வெளிவந்தது. கிறித்துவே ஒரு யூதர் என்ற அடிப் படையில், யூத சமயத்தின் தாக்கங்கள் கிறித்துவ சமயத்தில் வெளிப்படுகின்றன என்ற செய்தியில் வியப்பேதுமில்லை.

---

1. The Cambridge Encyclopedia, p. 251.
Adventists, African Methodist, Episcopical Church, Anabaptists, Anglocatholicism, Assemblies of God, Baptists, Brethern in Christ, Calvinism, Christadelphians, Christian Science, Church of scotland, Confessing Church, Congregationalism, Coptic Church, Dutch Reformed Church Episcopical Church, Evangelical Church, Friends Society Church, Greek Orthodox Church, Luthern Church, Methodist Church, Mormons Church Nonconformists Church, North India (Church of), Orthodox Church, Pentecost Church, Reformed Churches, Roman Catholicism, Russian Orthodox Church, Salvation Army, Secular Christian Church, South India (Chruch of), United Church of Canada and so on.

---

* அபிறகாம் என்பது அப்பா + அறம் + அகம் என்ற தமிழ்ச் சொற் களின் திரிபே. அபிரகாம் என்று எழுதுவது தவறானது.

ஆனால், இயேசு கிறித்து, முழுக்க முழுக்க யூத சமயத்தின், குறிப்பாக மோயீசனின் சட்டங்களை ஏற்றுக் கொள்ளவில்லை. மாறாக, அவற்றில் பல திருத்தங்களைச் செய்தார். இயேசுவே கூறுகிற, **"நான் யூத சட்டங்களை அழிக்க வரவில்லை. ஆக்கம் செய்து மெருகூட்டவே வந்தேன்"**, என்ற விவிலிய வரிகள், கிறித்துவ சமயத்தில் யூத மெய்யியல் கொள்கைகளின் தாக்கங்களை உணர்த்தும்.

கிறித்துவுக்குப் பிறகு ஈராயிரம் ஆண்டுகள் கடந்துவிட்டன. இன்று கடைப்பிடிக்கப்படும் கிறித்துவத்துக்கும், தொடக்க காலக் கிறித்துவத்துக்கும் பெருமளவில் வேறுபாடுகள் உள்ளன. இன்றைய கிறித்துவம், ஈராயிரம் ஆண்டுகளாக, நூற்றாண்டு வழி நூற்றாண்டுகளாக மாற்றம் காணப்பட்டுள்ள கிறித்துவம் ஆகும். இந்தியாவைப் பொருத்தவரை, கிறித்துவம் நான்கு நிலைகளில் அறியப்படுகின்றது.

1. தோமையார் வழிக் கிறித்துவம் (கி.பி. முதல் நூற்றாண்டு).
2. சிரிய நாட்டு வழிக் கிறித்தும் (கி.பி. 2 முதல் 10 நூற்றாண்டுகள்)
3. ஐரோப்பியக் கிறித்துவம் (கி.பி.15 முதல் 20ஆம் நூற் றாண்டின் முற்பகுதிவரை)
4. இந்தியக் கிறித்துவம் (கி.பி.1962 முதல் இன்று வரை)

கிறித்துவ சமயம் பாலத்தீனத்தில் தோன்றியது என்றாலும், இன்று உலகெங்கும் உள்ள அச்சமயத்தில், யூத மரபுத்தாக்கங் களைவிட ஐரோப்பிய வழித் தாக்கங்களே பெருமளவில் உள்ளன. இந்தியா, ஆப்பிரிக்க நாடுகள், தென்னமரிக்க நாடுகள் போன்ற பலநாடுகளில், அந்தந்த நாட்டின் பண்பாட்டுத் தாக்கங் களும் கிறித்துவ சமயத்தில் உள்ளன. குறிப்பாக ஆப்பிரிக்கப் பழங்குடியினர் பின்பற்றும் கிறித்துவம், அவர்களின் முன்னோர் களின் வழிபாட்டு முறைகளையே கொண்டுள்ளது எனலாம்.

நான்கு நற்செய்திகள் (Gospels)[2] எனப்படும் புதிய ஏற்பாட் டின் விவிலியத் தொகுப்புகளை, **தூய மத்தேயு** (St. Matthew)[3],

---

2. The New American Bible, B.D.A.C., p. 70. Gospel translates the Greek 'Euaggelion' which literally means, 'Good tidings'.

3. The New American Bible, B.D.A.C., p. 70. Probably written in 70 A.D.

**தூய மார்க்கு** (St. Mark)[4], **தூய உலூக்கா** (St. Luke)[5], **தூய அருளப்பர் என்றும் யோவான்** (St. John)[6]. ஆகியோர் தந்துள் ளனர். இவர்கள் நால்வரும் இயேசுக்கிறித்துவை உடனுறைந்து அறிந்த அவரது தொண்டர்களாவர். இவர்கள் நால்வரும் அளித் துள்ள இயேசுவைப் பற்றிய செய்திகளில் பல ஒன்றுபட்டும், சில வேறுபட்டும், சில தனித்தனிச் செய்திகளாகவும் காணப்படு கின்றன. இவர்கள் நால்வரும் ஓரிடத்தில் அமர்ந்து, ஒருவருக் கொருவர் கலந்து பேசி, நீ இதை எழுது, நான் இதை எழுது கிறேன் என்று ஒப்புக் கொண்டு, நற்செய்தியை எழுதவில்லை. இன்னும் சொல்லப் போனால், கிறித்துவின் மறைவுக்குப் பின் பல்வேறு இடங்களிலிருந்த இவர்கள், ஒருவர் எழுதியது பற்றி மற்றவர் தெரிந்து கொள்ளாமலேயே தங்கள் நற்செய்தியைப் பதிவு செய்துள்ளனர்.

விவிலிய நற் செய்தியை ஆய்வு செய்த விற்பன்னர்கள், இயேசுவின் வரலாற்றைப் பின்வரும் தலைமுறைகளுக்குப் பதிவு செய்து கொடுக்க வேண்டும் என்ற எண்ணத்தில் அவர்கள் நற்செய்தியை எழுதவில்லையென்று கூறுகின்றனர். கிறித்துவின் நற்செய்தியை மக்களுக்கு எடுத்துச் சொல்ல விழைந்த கிறித்து வின் மறைத் தொண்டர்களான இந்நால்வரும், மக்களிடையே கிறித்துவின் செய்திகளை விளக்கிப் பேசுவதற்காக எழுதப்பட்டு வைக்கப்பட்ட குறிப்புகளே, பிற்காலத்தில் நற்செய்தியாகத் தொகுக்கப்பட்டன என்பது ஆய்வாளர்களின் முடிவுகளாகும். **எனவே, நற்செய்தி என்பது வரலாறு எழுத வேண்டும் என்ற நோக்கில் எழுதப்பட்ட ஆவணங்கள் அல்லவென் பதும், அவ்வாறு அவர்களுக்கு அவ்வெண்ணம் இருந்திருந் தால் மேலும் பல செய்திகளைக் கொடுத்திருப்பார்கள் என்பதும், ஆய்வாளர்களின் கருத்துரைகளாகும்**. மேலும் இந்த நால்வரும் முறையான கல்வியறிவைப் பெற்றவர்களு மல்லர். இவர்களில் யார் யார் எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் என்பதற்கும் சான்றுகள் இல்லை. இவர்கள் நேரிடையாகவோ,

---

4. The New American Bible, B.D.A.C., p. 70.
   The date of composition is 70 A.D.
5. The New American Bible, B.D.A.C., p. 70.
   Approximately written in 75 A.D.
6. The New American Bible, B.D.A.C., p. 70.
   Finally edited between 90 A.D. to 100 A.D.

இவர்களுடனிருந்த மறைத்தொண்டர்களின் வாயிலாகவோ இக்குறிப்புகளைப் பதிவு செய்துள்ளார்கள் எனக் கருதலாம்.

இந்நால்வரின் நற்செய்திகளில் காணப்படும் பல செய்திகள் ஒற்றுமைப்படுவதால் இந்நற்செய்திகளின் நம்பகத் தன்மையை உறுதி செய்யலாம். சிலவிடங்களில் முரண்பட்ட செய்திகள் காணப்படுவது இயற்கையே. இம்முரண்பாடுகள் நற்செய்தி களின் நம்பகத் தன்மையைக் குறைத்துவிடவில்லை.

இந்நற்செய்திகளைத் தந்தவர்கள் கல்வியறிவற்றவர்கள் என்பதும், வரலாற்றுணர்வில்லாதவர்கள் என்பதும் வெள்ளிடை மலை. இருப்பினும் கற்றறிந்தார் ஏற்றுக் கொள்ளும் அளவிலும், பல்வேறு வரலாற்றுச் செய்திகளைத் தாங்கியும் இந்நற்செய்திகள் உள்ளன. கிறித்துவின் வாழ்க்கையைப் பற்றிச் சொல்லப்பட்ட செய்திகளை விட, சொல்லப்படாதவைகளே எண்ணிக்கையில் கூடுதலாக இருக்கும். இந்நான்கு நற்செய்திகளில், முதல் மூவரின் செய்திகளில் பல ஒற்றுமைகள் காணப்படுகின்றன. நாலா மவரான யோவானின் நற்செய்தி முன்னவர்களின் செய்திகளி னின்றும் மாறுபட்டுள்ளதைக் காணலாம். இருப்பினும், **கிறித்துவ சமயம், இந்நால்வரின் நற்செய்திகளும் தேவ ஏவுதலால் உந்தப்பட்டு, தூய ஆவியின் வழிகாட்டுதலில் பதிவு செய்யப் பட்டவை என நம்புகிறது.**

இந்நான்கு நற்செய்திகளில் கூறப்படும் முரண்பாடுகள் பற்றி, கடந்த ஈராயிரம் ஆண்டுகளாகவே பேசப்பட்டு வரு கின்றன. மிகச் சிறந்த சொற்பொழிவாளர்கள் கூட, தமது உரை களின் வழியே, முரண்பாடான செய்திகளைக் கொடுத்து விடுவது இயற்கையே. அவைகளைப் பெரிதுபடுத்தி பேசுவ தென்பது, உண்மை நிலையை அறிய முற்படுவோரைத் தடுக்கும் செயலாகவே கொள்ள வேண்டும். சமய நோக்கை விடுத்து, ஓரிலக்கியம் என்ற அளவிலோ, வரலாறு என்ற அளவிலோ, நற்செய்திகளை நோக்கும் போது, பல்வேறு வரலாற்றுச் செய்தி களை அந்நான்கு நற்செய்திகளும் தருகின்றனவென்பது மறைக்கவியலாத உண்மையாகும். இடைக்காலத்து ஐரோப்பிய ஆய்வாளர்கள் இம்முரண்பாடுகள் பற்றி எழுதியுள்ளனர். அந்நிகழ்வுகள் இன்று வரையிலும் கூடத் தொடர்கின்றன. உலகின் சிறந்த சமய நூல்களில், இடைச் செருகல்கள் நிகழ் வுற்றுள்ளனவென்பது, காலம் காலமாகச் சொல்லப்பட்டு வரும் செய்திகளாகும். அவைகளில் உண்மையுங்கூட இருக்கலாம்.

எடுத்துக்காட்டாக இரிக்கு வேதத்தில் கூறப்பட்டுள்ள செய்திகள், பல வரலாற்றுச் சான்றுகளை வெளிப்படுத்து கின்றன. இரிக்கு வேதத்திலும் இடைச் செருகல்கள் உள்ளன வென்று பலரும் கருதுகின்றனர். தொல்காப்பியம் போன்ற பழம் பெரும் இலக்கியங்களிலும் இடைச் செருகல்கள் உள்ளன வென்பது தெளிவு. இடைச் செருகல்கள் உண்மைச் செய்தி களைக் குழப்பும் வகையிலும் பலவிடங்களில் அமைந்துள்ளன.

கிறித்துவ சமயம், 21ஆம் நூற்றாண்டில் கொண்டிருக்கும் கொள்கைகள் பலவும் கி.பி. முதல் நூற்றாண்டில் இடம் பெற் றிருக்கவில்லை. தொடர்ந்து ஒவ்வொரு நூற்றாண்டிலும் கொடுக்கப்படும் விளக்கங்களும், சேர்க்கப்படும் நம்பிக்கை களும் வளர்ந்து கொண்டே வந்துள்ளதை, கிறித்துவ வரலாற்றை ஆய்வு செய்யுங்கால் விளங்கும். எடுத்துக்காட்டாக, போப் பாண்டவர் எனப்படும் கிறித்துவ சமயத்தலைவர் பதவி கி.பி. 3ஆம் நூற்றாண்டு வரை ஏற்படுத்தப்படவில்லை. அவருக்கு உள்ள ஆளுமைப் பண்புகளும், அதிகார வரம்புகளும், பலநூறு ஆண்டுகளில் வளர்ச்சியடைந்து வந்துள்ளதை கிறித்துவ வர லாற்றில் காணலாம்.

இயேசு கிறித்துவின் தாய் மறியன்னை பற்றிய செய்தி களும் நம்பிக்கைகளும் பல நூற்றாண்டு காலங்களில் வளர்ந் தவைகளே. கிறித்துவ சமயத்தில் புனிதர்கள் எனப்படும் கிறித்து வின் தொண்டர்கள், சிறப்பித்துக் கூறப்பட்ட செய்திகளும் பிற்கால வளர்ச்சிகளே. கிறித்துவின் மாந்தப் பண்பு - தெய்வீகப் பண்பு பற்றிய கருத்து வேறுபாடுகளும் மோதல்களும் கூட பிற்காலத்தில் தோன்றியவைகளே. விண்ணகம் - எரிநரகம் போன்ற நம்பிக்கைகளின் அடிப்படையில், இடை ஒறுப்பு இடம் (Purgatory) என்ற கொள்கையும் இடைக்காலத்தில் உரு வானதே. ஒவ்வொரு கொள்கையையும் ஏற்போரும் மறுப் போரும் கிறித்துவ சமயத்தில் இருந்தனர். ஏற்போர், போப் பாண்டவர் தலைமையில் தொடர்ந்து இருந்து வந்துள்ளனர். இவர்களே உரோமன் கத்தோலிக்கக் கிறித்துவர் எனப்படு கின்றனர். ஒவ்வொரு கொள்கையிலும் கருத்து வேறுபாடு கொண்டோர், தமக்கென ஒரு பிரிவை ஏற்படுத்திக் கொண் டனர். இவர்களே சீர்திருத்தப் பிரிவினர் எனப்படுகின்றனர். இவர்களின் எண்ணிக்கை பலவாகும். போப்பாண்டவர் தலைமையில் உள்ள உரோமன் கத்தோலிக்கர் ஒரு பெரும்

பிரிவாகவும், பிரிந்து சென்றவர்கள், பல எண்ணிக்கையில், பல பிரிவுகளாகவும் தற்போது உள்ளனர். இருப்பினும் கிறித்துவப் பிரிவுகள் அனைத்தும், இயேசு கிறித்துவைத் தெய்வமாக ஏற்றுக் கொண்டுள்ளனர் என்பது பொதுவான கருத்தாகும்.

**தூபிங்கன்** (Tubingen)[7] என்ற சீர்திருத்தச் சபையினர், நற்செய்தியின் நான்கு பகுதிகளையும் ஆய்வுசெய்து, இயேசு கிறித்து ஆற்றியதாகச் சொல்லப்பட்டுள்ள அருஞ்செயல்கள் (Miracles) மற்றும் வாழ்வியலுக்குப் பொருந்தாத நிகழ்வுகளை யெல்லாம் களைந்துவிட்டனர். நற்செய்தியை இவர்கள் வர லாற்று அடிப்படையிலேயே நோக்கினர். வரலாற்றுக்குப் புறம் பான செய்திகளை விடுத்தனர். இவர்களுடைய கொள்கை களைப் பல திருச்சபையினர் ஏற்றுக் கொள்ளவில்லை. சமயம் என்பது வரலாற்றுக்கப்பாற்றப்பட்டதென்பதும், நம்பிக்கை யின்மை சமயச் சார்புடையோரிடம் இருக்கக் கூடாதென்றும் இவர்களுக்கெதிரானவர் வாதாடினர்.

கிறித்துவ சமயம் பற்றிய ஆய்வுகள், கி.பி. 13ஆம் நூற் றாண்டுக்கு முன்பு எவராலும் மேற்கொள்ளப்படவில்லை. ஆங்காங்கே சொல்லப்பட்ட சில எதிர்மறையான கருத்துகள் நசுக்கப்பட்டன. அக்கால ஐரோப்பாவில், விவிலியம் என்பது ஆய்வுகளுக்கு அப்பாற்பட்ட நூலாகவே கருதப்பட்டது. இந் நிலையில் கி.பி. 14ஆம் நூற்றாண்டில், திருச்சபை பிளவுபட்ட தற்குப் பிறகு, பலரும் பல்வேறு கொள்கை விளக்கங்களைக் கூற முற்பட்டனர். கி.பி. 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த வரலாற் றறிஞர் பலர், கிறித்துவ சமயத்தில் பல்வேறு கீழ்த்திசைச் சமயங் களின் தாக்கங்கள் உள்ளனவென்று கூறினர். இந்திய சமயத்தின் (இந்து சமயமன்று) நிழல்கள் கிறித்துவ சமயக் கோட்பாடுகளில் படர்ந்துள்ளன என்பதையும் விளக்கினர்.

கிறித்துவம், யூத சமயத்தின் தொடர்ச்சி என்பதில் கருத்து வேறுபாடுகள் இல்லை. யூதசமயம் என்பது, சுமேரியச் சமயத் தினின்றும் கிளைத்ததாகவே அறியப்படுகின்றது. சுமேரியச்

---

7. History of Religion, p. 322.
Tubingen: The Protestant Church of Biblical research contributed much to the crituque of the gospels and eliminated the clearly fantany elements in gospel texts all the miracles and contradictions.

சமயம் சிந்துவெளிச் சமயமே என்பதும், சிந்துவெளிச் சமயம் தமிழ்ச் சமயமே என்றும் அறியக்கிடக்கின்றது. கிறித்துவ சமயத்தின் வேர், தமிழகத்திலேயே உள்ளதை பெருகிவரும் ஆய்வுகள் வெளிப்படுத்துகின்றன. தமிழகத்தினின்றும் வெளி யேறி, மேலை நாடுகளில் பரவி வாழ்ந்த தமிழ் மக்களின் சமயக் கோட்பாடுகள், யூத, எகிப்திய, சிரிய, பாபிலோனியச் சமயங் களில் காணப்படுகின்றன.

தமிழ்ச் சமயத்தின் பல்வேறு கூறுகள், மேற்காசியச் சமயங் களில் ஊடுருவி நின்று, கிறித்துவ சமயத்திலும் படர்ந்துள் ளதைக் காணவியலும். கி.பி. முதல் நூற்றாண்டில் தமிழகம் வந்து **தூயதோமா** (St. Thomas), மெருகேற்றப்பட்ட தமிழ்ச் சமயக் கருத்துக்களைத் தாங்கிய கிறித்துவ சமயத்தை, தமிழகத் தில் அறிமுகம் செய்தார். தந்தை, மகன், தூய ஆவி (Father-son-Holy spirit) என்ற மூவொரு கடவுட் கொள்கையை கிறித்துவ சமயம் பற்றி நிற்கிறது. இக்கொள்கையை தூய தோமா தமிழ கத்தில் அறிமுகம் செய்தார் என்று ஆய்வாளர்கள் கருதுகின் றனர். சைவ சித்தாந்தம் என்ற தமிழ்ச் சிவநெறியின் கொள்கை, கி.பி. 5ஆம் நூற்றாண்டுகளுக்குப் பிறகே அறியப்பட்டதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். திருமூலர் தொடங்கிவைத்த இக்கொள்கைகள், கி.பி. 6ஆம் நூற்றாண்டில், பரவலாக அறியப் பட்டன.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டுகளில், கேரளத்தில் சிரிய நாட்டுக் கிறித்துவர்களின் குடியேற்றம் நிகழ்வுற்றதாக வரலாறு கள் தெரிவிக்கின்றன. கேரளத்தின் அங்கமலை (Angamaly) என்ற ஊரில், கி.பி. 5 நூற்றாண்டுகளில், பெருமளவிலான சிரியக் கிறித்துவர்கள் (Syrian Christians) வாழ்ந்திருந்தனர் என்ற செய்திகள் உறுதிப்படுத்தப்பட்டுள்ளன. அங்க மலை என்ற ஊருக்கு 3 கி.மீ. தொலைவிலுள்ளதே காலாடி (Kaladi) என்ற சிற்றூர் ஆகும். இங்கு பிறந்தவரான ஆதிசங்கரர், தமிழ்ச் சிவ நெறியை ஆரிய சமயத்தோடு கலந்து, புதிய சமய நெறியைத் தோற்றுவித்தார். **ஆதி சங்கரர். சிரியக் கிறித்துவர்களோடு தொடர்பு கொண்டிருக்கவும். கிறித்துவ சமயக் கொள்கைகள் பற்றி முற்றிலுமாகத் தெரிந்து கொண்டிருக்கவும் வாய்ப்புகள் உள்ளனவென்பது. ஆய்வாளர்களின் கருத்துரைகளாகும்.** துவைதம் என்ற சங்கரரின் கொள்கையில், கிறித்துவ சமயத் தின் தாக்கம் பெருமளவில் உள்ளதாகவும் ஆய்வாளர்கள்

கருதுகின்றனர். துவைதம், அத்துவைதம், விசிட்டாத்துவைதம் போன்ற புதிய கொள்கைகள், கி.பி. 5ஆம் நூற்றாண்டுக்குப் பிறகே, இந்தியாவில் அறிமுகமாயின.

கேரளத்தில் அங்க மலை போன்று, தமிழகத்தில் நாகைக்கு அருகிலுள்ள மணிகிராமம் என்ற சிற்றூரிலும், சிரிய நாட்டுக் கிறித்துவர்கள் குடியிருந்தனர் என்று எண்ண இடமுண்டு. மணீசியர் (Manichears) எனப்படும் சிரிய நாட்டு வணிகக் குழு வினர் தமிழகத்தில் வாழ்ந்திருந்த குடியேற்றப் பகுதியே மணி கிராமம் எனப்பட்டதாகும். இக்கிராமத்தில் இரண்டாயிரத் துக்கும் மேற்பட்ட கிறித்துவர்கள் வாழ்ந்திருந்ததாகவும், இவர் களை மாணிக்கவாசகர் சிவ நெறிக்குத் திருப்பிவிட்டதாகவும், செவி வழிச் செய்திகள் கூறுகின்றன. தமிழகத்தில் கிறித்துவ சமயத்தின் வளர்ச்சியைப் பெருமளவில் தடுத்து நிறுத்தியவர்கள் திருநாவுக்கரசரும் மாணிக்க வாசகருமே என்ற கருத்தும் உண்டு.

மணிகிராமத்து வணிகக் குழுவிற்கும், அங்கமலை சிரியக் கிறித்துவர்களுக்கும் உள்ள தொடர்பு தெளிவாகக் கூறப்பட் டுள்ளதால், கி.பி. ஆறாம் நூற்றாண்டுகளில், தமிழகத்திலும் கிறித்துவம் அறியப்பட்டிருந்தது என்பது தெளிவு. தூய தோமாவின் முதல் நூற்றாண்டு முதல், 8ஆம் நூற்றாண்டு வரையிலான தமிழகத்தின் கிறித்துவ சமயவரலாறு, பல்வேறு சான்றுகளை உள்ளடக்கிக் கொண்டுள்ளதை, இந்நூல் விளக்க முற்பட்டுள்ளது. கி.பி. முதல் நூற்றாண்டு முதல், கி.பி. பதி னெட்டாம் நூற்றாண்டு வரையிலான ஆயிரத்து எண்ணூறு ஆண்டுக்காலத் தமிழகக் கிறித்துவ வரலாறு பற்றிய செய்திகளை உள்ளடக்கி இந்நூல் எழுதப்பட்டுள்ளது. தமிழில் இவ்வகை யிலான வரலாற்று நூல் இதுவரை வெளிவரவில்லை என்ற குறையை, இந்நூல் நீக்கும் என நம்பலாம்.



பகுதி - I

## கிறித்துவம் பற்றிய சான்றுகள்

தொடக்ககாலக் கிறித்துவத்தை அறியும் சான்றுகளை இரு கூறுகளாகப் பிரிக்கலாம். அவை கிறித்துவச் சமயம் சார்ந்தவை மற்றொன்று கிறித்துவச் சமயம் சாராதவைகளாகும். கிறித்துவச் சமயம் சார்ந்தவைகளை மூன்று பிரிவுகளாகக் கொள்ளலாம்.

1. திருச்சபை சார்ந்த சமய நூல்கள் (Canonical Books)
2. நற்செய்திகளைத் தரும் புதிய ஏற்பாட்டு நூல் (New Testament)
3. திருச்சபை சாராத நூல்கள் (Non - Canonical Compositions) மற்றும் பழைய ஏற்பாட்டை (Septuagint)த் தழுவிய சிறப்புப் பெறாத நூல்கள் (Apocrypha). தொடக்ககால எழுத்தாளர்களின் சில குறிப்புகள் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

### திருச்சபை சார்ந்த சமய நூல்கள்

### மறைத்தொண்டர்களின் செயல்பாடுகள்

கிறித்துவின் முதன்மைத் தொண்டர்களின் சமயப் பணிகளை விளக்கும் நூல் (Acts of the Apostles), கிறித்துவ சமயத்தின் ஐந்தாவது நற்செய்தி நூலாகக் கருதப்படுகின்றது. நற்செய்தியின் இரண்டாம் நூலைத் தந்த தூய உலூக்கா என்பவரே இதன் ஆசிரியருமாவார். இவர் தனது முதல் நூலின் தொடர்ச்சியாகவே இந்நூலையும் கொடுத்துள்ளார். தூய ஆவியின் உந்துதலால் சமயப் பணிகளை விளக்கும் இந்நூல் எழுதப்பட்டதாக (Acts 1:8) குறிப்பிடப்பட்டுள்ளது. **தூய பேதுரு** (St. Peter)வுடன் இணைந்து **தூய உலூக்கா** செயல்பட்ட குறிப்புகள் இந்நூலில் காணப்படுகின்றன. யூத சமயத்தாரைக் கிறித்துவ சமயத்துக்கு மாற்றுவதற்கு இவ்விருவரும் மேற்கொண்ட முயற்சிகளை

இந்நூல் விளக்குகிறது. இந்நூலின் இரண்டாம் பகுதி தூய பால், யூதரல்லாத புறவின மக்களைச் சமய மாற்றம் செய்தது குறித்து விளக்குகிறது. தூய பால், தூய பர்னபா (St. Paul, St. Brnabas) ஆகியோர் ஆசியாமைனர் பகுதிகளில் ஆற்றிய பணிகள் *(13, 14, 14-27)*, தூய பாலின் தொலைவுப் பயணங்கள், ஆகியவை விளக்கப்பட்டுள்ளன. மறைத் தொண்டர்களின் பணிகளை ஏழு பகுதிகளாக[8] இந்நூல் விளக்குகிறது.

## மறைத் தொண்டர்களின் மடல்கள்
(The Epistles of the Apostles)

கிறித்துவ மறையைத் தழுவிய புதியவர்களுக்கு, கிறித்துவின் மறைத் தொண்டர்கள் எழுதிய கடிதங்கள், கிறித்துவின் கொள்கைகளுக்கு விளக்கம் தரும் வகையில் உள்ளன. இக்கடிதங்கள் வாயிலாகப் பல்வேறு வரலாற்றுச் செய்திகளும் அறியக் கிடக்கின்றன. 21 கடிதங்கள் இவ்வாறு அறியப்பட்டுள்ளன. அவற்றில் 14 கடிதங்களை தூய பாலும், 2 கடிதங்களை தூய பேதுருவும், 3 கடிதங்களை தூய யோவானும், 1 கடிதத்தை தூய ஜேம்ஸ் மற்றுமோர் கடிதத்தை தூய ஜூட் ஆகியோரும் எழுதியுள்ளனர். தூய பால் எழுதியவை 13 கடிதங்களே என்பாரும் உளர்.[9]

## நற்செய்திகள் நான்கு

விவிலியத்தின் புதிய ஏற்பாட்டில் சிறப்பு பெறுபவை, நால்வர் எழுதிய நற்செய்தி நூல்களே.

**மத்தேயு**

இயேசு கிறித்து தேர்ந்தெடுத்துக் கொண்ட பன்னிரு தொண்டர்களில் ஒருவர்.[10] வரி தண்டும் அலுவலராயிருந்த

8. Acts. 13, 14, 14-27.
   I. Prologue (1, 1-14). II: The community in Jerusalem finds maturity in the Spirit (1, 15-5, 42). III: Spread of the church through persecution is Jerusalem (6, 1-8, 3). IV. The Community carries the message to Samaria, Syria and Cyprus (8, 4-12, 24). V: Mission of Barnabas and Saul (12, 25-15, 35). VI: Paul's mission to Gentiles (15, 36-21, 14) VII: Paul the prisoner bears the witness to the Resurrection (21, 15-28, 31).
9. The New American Bible, B.D.A.C., pp. 140-141.
10. Matt, 10:3; Mark, 3:18; Luke. 6:15.

மத்தேயுவை இயேசு அழைத்தவுடன், அவரின் பின் சென்ற தாக (மத். 9:9-13) மத்தேயுவே கூறுகிறார்.[11] இவர் இசுராயேலின் பன்னிரு மரபுகளில், இலெவி என்ற குருமார் மரபைச் சார்ந் தவராவார். அல்பேயு (Alphaeus) என்பது இவரது தந்தையின் பெயராகும். இவருடைய நற்செய்தி முதலில் அரமாயிக் மொழி யில் தொகுக்கப்பட்டுப் பின்னர் கிரேக்க மொழியில் மாற்றம் செய்யப்பட்டதாகக் கூறப்படுகின்றது. மத்தேயு கூறும் இயேசு வின் மரபு வழிப்பட்டியல், உலுக்கா கொடுத்திருக்கும் பட்டியலி லிருந்து வேறுபடுகின்றது. மத்தேயுவின் நற்செய்தி கி.பி. 70ஆம் ஆண்டில் எழுதப்பட்டதாகக் கருதப்படுகின்றது. சிலர் கி.பி. 85ஆம் ஆண்டில் எழுதியதாகவும் கருதுகின்றனர்.[12] மத்தேயுவின் நற்செய்தி ஏழு பிரிவுகளாகச் சொல்லப்படுகின்றது.[13]

**மார்க்**

யோவான் மார்க் என்றும் அழைக்கப்பட்டார். மறியாளின் மகனும் பர்னபாவின் உறவினருமான மார்க், எருசலேம் நகரத் தைச் சார்ந்தவர். தொடக்ககாலக் கிறித்துவர்கள், குறிப்பாக யூதக் கிறித்துவர்கள் இவர் வீட்டில் தான் அடிக்கடி கூடிக் கலந்துரையாடினர்.[14] மார்க் தனது நற்செய்தியில், இயேசுவின் பிறப்புச் செய்திகளையெல்லாம் விடுத்து திருமுழுக்கு யோவான் (John the Baptist) வரலாற்றை முதற் செய்தியாகக் கொண்டு தொடங்குகிறார். உலூக்கா, மத்தேயு தரும் செய்திகளுக்கு மாறுபட்டு, கிறித்துவின் சமயப் பணியை ஆழமான விளக்கத் துடன் மார்க் கூறுகிறார் எனலாம். மார்க்குவின் காலத்தில் இயேசு என்ற பெயருடன் கிறித்து (Christ) என்ற அடைபெயரும் வழக்கிலிருந்தது.

**உலூக்கா**

மூன்றாம் நற்செய்தியின் ஆசிரியரான உலூக்கா, மறைத் தொண்டர்களின் செயல்பாடுகள் (Acts of Apostles) என்ற நூலுக்கும் ஆசிரியர் ஆவர். புதிய ஏற்பாட்டில், மூன்று இடங் களில் உலூக்காவைப் பற்றிய செய்திகள் தரப்பட்டுள்ளன. தூய

---

11. Matt. 9:9-13.
12. The New American Bible, p. 3.
13. Ibid.
14. Ibid, B.D.A.C, p. 137.

பால் தொண்டருடன் இவரும் இணைந்து பணியாற்றியதாக அறியப்படுகின்றது. 'அன்பிற்குரிய மருத்துவர்' (beloved physician) என்று உலூக்கா அழைக்கப்படுகிறார்.[15] மரபுவழிச் செய்தி களின்படி, உலூக்கா சிரியன் இனத்தைச் சார்ந்தவராகக் கருதப் படுகின்றார். மறைத் தொண்டர்களின் செயல்பாட்டு நூலில், சில பகுதிகளை, தன்மைப்பன்மை மொழியில் (first person Plural) விளக்குகிறார்.[16] மரபுவழிச் செய்திகளின்படி, உலூக்கா திருமணம் செய்துகொள்ளவில்லை என்று கூறப்படு கின்றது. தனது நற்செய்தியை கி.பி. 70-80 ஆண்டுகளில் உலூக்கா எழுதி யிருக்கலாம் என்று நம்பப்படுகின்றது. தனது 84ஆம் அகவை யில் இவர் காலமானார்.[17] மார்க்குவின் நற்செய்தி நூலுக்குப் பிறகே, உலூக்கா தனது நூலை எழுதியதாகக் கூறுகின்றனர்.

**யோவான்**

நான்காம் நற்செய்தியின் ஆசிரியர். செபதேயின் மகனும் ஜேம்ஸ் என்பாரின் உடன் பிறந்தாருமான யோவான், மீனவராக அறியப்படுகிறார். தந்தையுடன் வலைகளைச் சரி செய்து கொண்டிருந்த யோவானை இயேசு அழைக்க, உடனே அவர்பின் சென்றார். இயேசுவின் உள்வட்டத்தில் நெருக்கமானவர்களில் ஒருவராக யோவான் கருதப்பட்டார். மற்ற மூன்று நற்செய்தி களின் ஆசிரியர்களைவிட இயேசுவுடன் நெருங்கிப் பழகிய யோவான், இயேசுவின் செயல்பாடுகள் ஒவ்வொன்றுக்கும் பின்னணியில் இருந்துள்ளார். அந்தவகையில், இயேசுவின் கொள்கைக்கும் வாழ்க்கைக்கும் முதற் சான்றாளராக யோவான் கருதப்படுகின்றார். இவருக்கு இருந்த மன உறுதியைக் கருத்தில் கொண்டு, இயேசுவே இவரை 'இடியின் மகன்' (Son of thunder) என்று அழைத்தார். மறைத் தொண்டர்களின் செயல்பாட்டு நூலையும் யோவான் எழுதியுள்ளார். இயேசுவின் மறைப் பணி களை, பேதுருவுடன் இணைந்து பிற்காலத்தில் மேற்கொண்ட செய்திகள், அந்நூலால் அறியப்படுகின்றன. புதிதாகச் சமயத்தில் சேர்ந்தோரை நிலைப்படுத்த யோவான் எழுதிய மடல் சிறப் புடையதாகக் கருதப்படுகின்றது. கி.பி. 90-100 ஆண்டுகளில் இவருடைய நற்செய்தி எழுதப்பட்டதாகக் கூறுவர்.[18]

15. col. 4:14.
16. Acts. 16:10-17; 20-5-16; 27:1-28.
17. The New American Bible, B.D.A.C., p.132.
18. The New American Bible.

யோவான் எழுதியுள்ள வெளிப்பாடு (Revelation) என்ற நூல், கி.பி. 68-69 ஆண்டுகளில் எழுதப்பட்டதாகவும், இதற்குப் பிறகு சில ஆண்டுகள் கழித்தே தனது நற்செய்தியை எழுதினார் என்றும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.[19] மேலும் சிலர் வெளிப்பாட்டு நூலை யோவான் எழுதவில்லையென்றும், கிறித்துவ சமயத்தின் உயிர்நாடிகளான மன்னிப்பு (forgiveness), பொறை (tolerence) பற்றி வெளிப்பாட்டு நூல் விளம்பவில்லையென்றும் கூறுவர். உரோமர்களை எதிர்த்து யூதர் போரிட்டு வந்த காலத்தில் இந்த வெளிப்பாட்டு நூல் எழுதப்பட்டுள்ளது என்பது ஆய்வாளரின் கருத்து. இக்கருத்தை விளக்கும் வகையில்,

"ஆங்கே ஏழு மன்னர்கள் இருந்தனர். ஐந்து மன்னர்கள் வீழ்ந்துபட்டனர்; ஒருவர் இருக்கின்றார்; மற்றொருவர் இன்னும் வரவில்லை. அவர் வரும் காலை, அவர் சில கால அளவுகளில் தொடர்வார்"[20] (வெளி. 17:10), என்று குறிக்கப்படுவது, உரோம ரின் ஆளுகையினின்று விடுபடத் துடிக்கும் பாலத்தீனத்தின் எண்ண எழுச்சியையே இவ்வரிகள் காட்டுவதாகவும் கூறுகின் றனர். வரவிருக்கும் மெசியா என்ற மீட்பர், வல்லாற்றல் மிக்க மன்னனாகவே பாலத்தீனத்தில் பிறப்பார் என்பதே யூதர்களின் நம்பிக்கையாகவுமிருந்ததை நினைவு கூர்க.

யோவானுடைய காலத்தில் யூத மக்களில் சிலரும், ஆசியாமைனர் எனும் பகுதியில் பலரும் கிறித்துவ சமயத்தைத் தழுவியிருந்தனர். யோவான், ஆசியாமைனரிலுள்ள அந்தியோக் நகரில் வாழ்ந்திருந்ததாகவும், முதிய அகவையில் இறந்ததாகவும் கூறப்படுகின்றது. நான்கு நற்செய்திகளில், யோவானுடைய நற்செய்தியே, நிகழ்ச்சிகளைக் கண்டு எழுதிய சான்றாளரின் நற்செய்தியாகச் சொல்லப்படுவதால், இயேசுவின் வாழ்க்கை வரலாற்றை அறிய, யோவானுடைய சான்று சிறப்புடையதாகக் கொள்ளப்படுகின்றது எனலாம்.

### மறைத்தொண்டர் பால்

இயேசுவின் நேரடித் தொண்டர்களும் ஆற்றிமுடிக்க இயலாத அருஞ்செயல்களைச் செய்தவர் தூய பால் எனப்படும்

19. History of Religion, p. 324.
19. A careful study shows that Revelation was the first to be writeen apparently in 68 and 69, right after the death of Nero. - History of Religion.
20. Rev. 17:10



3

சவுல் ஆவார். **தொடக்ககாலக் கிறித்துவ சமயத் தொண்டர்களில் தனக்கு ஒப்பாருமிக்காருமில்லா தனிப்பெரும் ஆற்றலாளராகப் பால் திகழ்கிறார்**. கிறித்துவ சமய வரலாற்றில் பாலின் செயல்பாடுகள் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்பட்டுள்ளன. யூதராகப் பிறந்து, யூதராகவே வளர்ந்த பால் யூதரல்லாத புறவினத்தாரைக் கிறித்துவ சமயத்தின் பால் திருப்பியவர். பாலினுடைய வாழ்க்கை வரலாறு பலதிருப்பங்களைக் கொண்டது.

ஆசியாமைனரில் உள்ள தார்சுஸ் என்ற நகரத்தில் கி.பி. 10ஆம் ஆண்டில் பிறந்த பால், இயேசுவுக்குப் பத்து அகவை இளையவராவர். இவர் அறமாயிக் மொழிபேசும்[21] யூத இனத்தில், பெஞ்சமின் மரபில் பிறந்தார்.[22] யூதராயினும் உரோமைக் குடியுரிமையை பால் பெற்றிருந்தார்.[23] இவர் பிறந்த எட்டாம் நாளில் இவருக்கு சுன்னத் (circumcision) செய்யப்பட்டது.[24] எபிரேய மொழிச் சொல்லான சவுல் (Saul) என்ற பெயர் இவருக்குச் சூட்டப்பட்டது. சவுல் என்ற சொல்லின் இலத்தீன் வடிவமே பால் அல்லது பவுல் (Paul) எனப்படுவதாகும். தார்சூஸ் நகரத்தில் கிரேக்கப் பண்பாட்டில் வளர்ந்த பால், யூத சமயத்தின் கொள்கைகளில் ஆழ்ந்த பிடிப்பு கொண்டவர்.[25] இவருக்குப் 18 அகவை நிரம்பியபோது, எருசலேம் நகருக்கு வந்து, **கமாலியேல்** என்ற யூத சமயகுருவிடம் சமயக்கல்வி பயின்றார்.[26] தொடக்கத்தில் கிறித்துவ சமயத்தினின்று யூத சமயத்தைக் காக்கச் சூளுரைத்து, கிறித்துவ சமயத்தார் மீது தாக்குதல் தொடுத்தார்.[27] ஸ்டீபன் (Stephen) என அழைக்கப்பட்ட கிறித்துவின் தொண்டரைக் கல்லால் எறிந்து கொன்ற கூட்டத்தில் பாலுப் ஒருவராக இருந்தார்.[28]

---

21. II cor. 11:22.
22. Rom. 11:1
23. Acts, 22:24-29.
24. Phil. 3:6.
25. Acts. 17:28; I Cor. 15:33; Ti. 1:12
26. Acts. 22:3; 23:6; Phil. 3:6.
27. Gal. 1:14
28. Acts. 58-60; 9:1-2.

தமாஸ்கு நகர் நோக்கிச் சென்று கொண்டிருந்த பால், கிறித்துவின் அருளால், கிறித்துவ நெறிக்குத் திரும்பினார்.[29] பாலின் வாழ்க்கையில் ஏற்பட்ட இத்திருப்பம், கிறித்துவ சமயத் துக்கும் ஒரு திருப்பமாக அமைந்தது.[30] அந்நாள் முதல் கிறித்துவின் கொள்கைகளை யூதரிடையேயும்,[31] யூதரல்லாதவ ரிடையேயும்[32] பரப்பத் தொடங்கினார். ஆசியாமைனர் பகுதி யில் இவருடைய அயராத உழைப்புக்கு நல்ல அறுவடை கிடைத்தது.

பால் தனது சமயப் பணிகளை நிறைவேற்ற மூன்று பயணங்களை மேற்கொண்டார். முதற்பயணம்[33] கி.பி. 46-49 ஆண்டுகளிலும், இரண்டாம் பயணம்[34] கி.பி. 50-53 ஆண்டு களிலும், மூன்றாம் பயணம்[35] கி.பி. 54-58 ஆண்டுகளிலும் நிகழ்வுற்றன. இவர் பலமுறை கைது செய்யப்பட்டு சிறை யிலும் அடைக்கப்பட்டார். இறுதியாக உரோம் நகரில் கைதி யாகவிருந்தபோது, சாவுக்குத் தீர்ப்பளிக்கப்பட்டார் என்று செவிவழிச் செய்திகள் கூறுகின்றன. உரோமை மன்னர் நீரோ (Nero) காலத்தில் (கி.பி. 67 அல்லது 68) பால் கொல்லப்பட்ட தாகச் செய்திகள் கூறுகின்றன.[36]

தொடக்ககாலக் கிறித்துவ வரலாற்றை, பாலின் மடல்கள் மிகத் தெளிவாக விளக்குகின்றன. கிறித்துவின் கொள்கை களுக்குப் புரியும் அளவில் பொருள் விளக்கம் தந்தவர் பால் தொண்டரே. கிறித்துவின் நேரடித் தொண்டர்களும் பெற்றிராத அறிவும், மிக நுண்ணிய பார்வையும், பாலின் மடல்கள் வாயிலாக வெளிப்படுகின்றன. பாலின் விரைவான செயல் பாடுகள் கிறித்துவ சமயத்துக்குக் கிட்டாமற் போயிருப்பின், கிறித்துவ சமய வளர்ச்சி ஓரிரு நூற்றாண்டுகள் கூடத் தள்ளிப் போயிருக்கும் என்று ஆய்வாளர்கள் கருதுவது மிகவும் சரியான கருதுகோளே ஆகும்.

---

29. Acts. 9:1-19, According to Luke.
30. Ibid, 22:5-16; 26:12-18, According to Paul.
31. Gal, 1:18-19
32. Acts, 26:16; Gal. 1:15; Phil. 3:12; I Cor. 9:1.
33. Acts, 13:14
34. Acts, 16:1-3; II Tim. 1:5.
35. Acts, 18:25; 21:19.
36. The New American Bible, B.D.A.C., p. 174.

பால் தொண்டரின் மடல்கள், யோவான் எழுதிய வெளிப் பாட்டு நூலுக்குப் பிறகே எழுதப்பட்டன என்பது ஆய்வாளர் களின் முடிபுகளாகும். பால் உள்ளிட்ட பலரும் எழுதிய மடல் கள் வெவ்வேறு கால அளவுகளில், பல்வேறு ஆசிரியர்களால் எழுதப் பெற்றவைகளாகும். இவை மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்படுகின்றன.

1. கி.பி. 100 ஆண்டுகளிலும், 2. கி.பி. 125 ஆண்டுகளிலும், 3. கி.பி. 150 ஆண்டுகளிலும், இவை எழுதப் பெற்றுள்ளன.

இவைகளில் மூன்றாம் காலத்தில் எழுதப்பெற்றவை, முதலில் எழுதப் பெற்றவைகளினின்று கொள்கைக் கோட்பாடு களால் வேறுபடுகின்றன. இவை பாலின் மடல்களினின்றும் மாறுபாடான செய்திகளையும் தெரிவிக்கின்றன.

## பிற நூல்கள்

மேற்கண்ட செய்திகளை அடிப்படையாகக் கொண்டே, தொடக்ககாலக் கிறித்துவ சமய வரலாறு ஆய்வு செய்யப் பட்டது. மேற்கண்ட சான்றுகளோடு மேலும் பல நூல்களும் சான்றுகளாக அறியப்படுகின்றன. ஆனால் இவைகளை ஆவணங்களாக மட்டுமே திருச்சபை ஏற்றுக் கொள்கிறது. மாறாக மேலே சொல்லப்பட்ட நான்கு நற்செய்திகள், மறைத் தொண்டர்களின் செயல்பாடுகள், மறைத் தொண்டர்களின் மடல்கள் போன்றவை, அந்தந்த ஆசிரியர்கள் தூய ஆவியின் தூண்டுதலால் எழுதப் பெற்றவை என திருச்சபை அறிவித் துள்ளது. அடியிற்கண்ட நூல்கள்.[37] அவ்வாறான சிறப்புத் தகுதி களைப் பெறவில்லை. இவை ஆவணச் சான்றுகளாகவே அறியப் படுகின்றன. இவைகளில் பலநூல்கள் அழிந்துபட்டன. கிடைத் துள்ள நூல்களில் குறிப்பிடத்தக்கவைகளாவன.

1. நிக்கோதேமுவின் நற்செய்தி
   (The Gospel of Nicodemus),
2. யாகப்பரின் நூல்
   (The Book of James),
3. மறியன்னையின் பிறப்பு நற்செய்தி
   (The Gospel of the Birth of Mary),

37. History of Religion, pp. 341-342.

4 கம்மாளர் சூசையின் வரலாறு
(History of Joseph the Carpenter),

5. மறைத் தொண்டர்களின் செயல்பாடுகள்
(Acts of Apostles),

6. ஆயன் (Shepherd),

7. பன்னிரு முதன்மைத் தொண்டர்களின் உரைகள்
(The teachings of the twelve apostles)

தொடக்ககாலத்துக் கிறித்துவ சமய நூல்கள் பல, ஆளுவோரின் கெடுபிடிகளுக்கு அஞ்சி, கிறித்துவர்களாலேயே அழிக்கப்பட்டுவிட்டன. அவைகளில் பல தொடக்ககாலக் கிறித்துவ வரலாற்றை இன்றைய கால அளவில் அறிந்து கொள்ள பயனுடையவைகளாக இருந்திருக்கும். பன்னிரு முதன்மைத் தொண்டர்களின் உரைகள் என்ற நூல் பல்வேறு செய்திகளைத் தாங்கி நிற்கின்றன. இவைகளின்றி தொடக்க கால மறைத் தொண்டர்கள் எழுதிய குறிப்புகளில் சிலவும் பயனுள்ளவை களாக அமைந்துள்ளன.

1. மெய்யியல் அறிஞர் தூய ஜஸ்டின்
(St. Justin the Martyr) கி.பி.150,

2. தூய இரேனியுஸ் (St. Irenaeus), கி.பி.180,

3. கார்தேஜ் தெர்த்துல்லியன்
(Tertullian of Carthage), கி.பி.190-210,

4. செல்சுசுக்கு எதிரான ஆறு நூல்களை ஓரிகன் என்பார் எழுதினார், (Six books against celsus by Origen), கி.பி. 200. செல்சுஸ் என்பவர் கிறித்துவ சமயத்துக்கு எதிராக எழுதித் தள்ளியவர்.

5. அலெக்சாண்ட்ரியா நகரத்து கிளமெண்ட்
(Clement of Alexandria), கி.பி. 200-225.

6. ஈசுபியஸ் எனப்படும் திருச்சபையின் முதல் வரலாற்று ஆசிரியர், கி.பி. 300 (The first historian of the Christian Church Eusebius of Caesarea)

கி.பி. 1946ஆம் ஆண்டு, தொல்லியல் ஆய்வாளர்கள், எகிப்து நாட்டில், கி.பி. மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்த சில பாப்பிரஸ் கட்டுக்களை கண்டெடுத்துள்ளனர். கொப்தே மொழியில் (Coptic language) உள்ள அக்குறிப்புகள் ஜெனோஸ்

(Gnostics)[38] என்ற கிறித்துவப் பிரிவினருடையதாகக் கருதப்படு கின்றது. அக்குறிப்புகளில் தொடக்ககாலக் கிறித்துவ வளர்ச்சி பற்றிய செய்திகள் உள்ளன. அவைகளில் குறிப்பிட்டுச் சொல்லக் கூடியவைகளாவன,

1. தூய தோமாவின் நற்செய்தி (The Gospel of St. Thomas)
2. மறைத்தொண்டர் பிலிப்புவின் நற்செய்தி
   (The Gospel of philip the Evangelist)

மேலும் சில குறிப்புகள் பாலத்தீனத்திலுள்ள சாக்கடல் பகுதி, கம்ரான் குகைக் குன்றுகளில் கிடைத்துள்ளன. இவை எசேனியர் (Essenes) என்ற கிறித்துவப் பிரிவினருடையது என அறியப்பட்டுள்ளன. இவைகளின்றி, உரோமை நகரிலும், எருசலேம் நகரிலும் பயனுள்ள பல குறிப்புகள் கண்டெடுக்கப் பட்டுள்ளன. உரோமை நகரிலுள்ள பல கல்லறைகளில் காணப் படும் செய்திகள், தொடக்ககாலக் கிறித்துவம் பற்றிய பல செய்திகளை விளக்குகின்றன. இவைகள் யாவும் கி.பி. 200 ஆண்டு கட்கு முற்பட்டவைகள் அல்ல என்பதும் தெளிவுபடுத்தப்பட் டுள்ளன.

---

38. Gnostic: The role of Gnosticism in early Christianity is unclear. The word Gnosis means knowledge in Greek. But the Genostics talked not about the experimental knowledge of the real world but the mystical knowledge of God. Gnostics were mystic philosophers who claimed that man could understand through reason the mystery of divinity and essence of the world. Historians of Christianity usually regard Gnosticism as a branch of the religion as heresy, a sectarian faith that was soon suppressed by pious Christian theologians. Other scholars believe that Gnoticism did not grow out of Christianity, but the contrary, Christianity developed out of Gnosticism, making Gnosticism more ancient than Christianity. There is some truth in both points of view: early Gnostic teachings (first and second centuries) did infact influence the very development of Christian ideology. Philo of Alexandria who is called the father of christianity, was a Gnostic. The later Gnostic teachings (from the middle of the second century) were regarded as deviations from true Christianity.

   - History of Religion.

தொடக்க காலத்திலேயே கிறித்துவ சமயத்தில் பலவழி பாட்டுப் பிரிவுகள் தோன்றியுள்ளன என அறியலாம். ஜெனோஸ்டிக்ஸ் என்ற சொல்லில் உள்ள ஜெனோ (Gno) என்ற கிரேக்கச் சொல்லுக்கு அறிவு என்பதே பொருளாகும். இது ஞானம்* என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகும். ஞானம் என்பது வடசொல் என்பர். அது தவறு. ஞால் - ஞாலம் என்பதற்கு பெரியது என்ற பொருளில் உலகைக் குறித்தது. அறிவு உலகினும் பெரியது என்பதையுணர்த்தும். **அலெக்சாண்டிரியா நகரத்து ஃபிலோ என்பார் கிறித்துவ இலக்கியங்களின் தந்தை எனப் படுபவராவர். இவர் ஜெனோஸ்டிக் பிரிவைச் சார்ந்தவரே.**

அடுத்து **எசனியர்** (Essenes)[39] என்ற பிரிவினர் கி.பி. 300 ஆண்டுகளில் பாலத்தீனத்தின் சாக்கடல் பகுதியில் உள்ள கம்ரான் குன்றுகளில் இயற்கையாய் அமைந்திருந்த குகைகளில் (Qumaran caves) வாழ்ந்து வந்தனர். அங்கு அவர்கள் பாது காத்து வந்த நூல்நிலையம் ஒன்று கி.பி. 1947ஆம் ஆண்டில் கண்டுபிடிக்கப்பட்டது. Essenes என்ற சொல், எம்மொழிச் சொல் என அறியப்படவில்லையென்றாலும், Hasidim என்ற எபிரேயச் சொல்லின் திரிபாக இருக்கலாம் என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். தாழ்மையும் ஏழ்மையும் கொண்டு வாழ்ந் தவர்கள் (Pious one) என்ற பொருளால் Hasidim என்ற சொல் விளக்கப்படுகின்றது. இவர்களைப் பற்றி அலெக்சாந்திரியா நகரத்து **ஃபிலோ, ஜோசப் ஃபிளாவிஸ்** போன்றவர்கள் குறிப்புகள் எழுதி வைத்துள்ளனர். இவர்கள் திருமணம் செய்து கொள்வதில்லை. ஆலயத்தில் பலி எதையும் கொடுப்பதில்லை. கம்ரான் குகையில் கிடைத்த பல சான்றுகள், தொடக்ககால கிறித்துவம் பற்றிய பல செய்திகளை அளிக்கின்றன.

---

39. The New American Bible, B.D.A.C, p. 55.

39. Essenes: A religious sect of Judaism at the time of the New Testament known to us writings of Philo of Alexandria (1st C.A.D.) and Josephus Flavis. According to the more common opinion of the specialists, the monks of Qumran, whose library was discovered from 1947 on in caves along the north west coast of the Dead sea.

- The New American Bible.

* ஞானம் என்பது க்யான் என்ற வடசொல்லின் திரிபே என்பர். கையாள் என்பது கைத்திறன் கொண்ட கம்மாளன் எனவும், கை என்பதே க்யா என வடமொழியில் திரிந்ததாகவும் கூறுவர். க்யான் என்ற சொல்லுக்கு அம் மொழியில் மூலச் சொல் இல்லை என்பர்.

## இயேசுவின் வாழ்க்கை

மேலே கூறப்பட்ட சான்றுகளாலும், இன்னும் சொல் லாமல் விடப்பட்ட சான்றுகளாலும், இயேசு என அழைக்கப் படும் யேசுவா அல்லது ஈசுவா, பாலத்தீனத்தில் பிறந்து, வாழ்ந்து, தனது சமயக் கொள்கைகளை மக்களிடையே பரப்பி, யூத சமயத்தலைவர்களின் பகைமைக்கு ஆளாகி, சிலுவையில் அறைந்து கொல்லப்பட்டார் என்பது தெளிவாகிறது. பிறவாத ஒருவரைப் பற்றியும் வாழாத இயேசுவைப் பற்றியும் இவ்வளவு நூல்களும் குறிப்பிட்டிருக்க இயலாது. **இயேசுவின் மறைத் தொண்டர்கள் நால்வர் எழுதிய நற்செய்திகளாலும், அவர் களது செயல்பாடுகளை விளக்கும் நூல்களாலும், அவர்கள் எழுதியுள்ள மடல்களாலும், கி.பி. 200-300 ஆண்டுகளில் மற்ற பிறரால் எழுதிவைக்கப்பட்டுள்ள குறிப்புகளாலும், இயேசு வின் பிறப்பும் வாழ்க்கையும் உறுதி செய்யப்படுகின்றன.** கி.பி. 400 ஆண்டுகளில் உரோமைப் பேரரசின் அனுமதிக்கப் பட்ட சமயமாக கிறித்துவம் அறிவிக்கப்பட்ட பிறகு, தகுதி சார்ந்த எழுத்தாளர்கள் (Classical writers), மேற்கண்ட நூல்களை முறை யாக வரிசைப் படுத்தி, திருத்தம் செய்து கொடுத்தார்கள் என்று வரலாறுகள் தெரிவிக்கின்றன. உரோமப் பேரரசன் **கான்ஸ் டண்டைன்** (Constantine) காலத்தில் இவ்வாறான செம்மைப் படுத்தும் பணிகள் அரசின் உதவியோடு நடைபெற்றன. இக்கால அளவுகளில் பல செய்திகள் அந்நூல்களில் இடைச்செருகலாக சேர்க்கப்பட்டன என்பது சிலரின் குற்றச்சாட்டுகளாகும். இச் செய்திகளைச் சேர்த்த உரோமை எழுத்தாளர்களுக்கு, பாலத் தீனத்தின் புவியியல் அமைவு புரியவில்லை என்பதால், சில இடப்பெயர்களை மாற்றி எழுதி விட்டனர் என்பர்.[40]

---

40. History of Religion, p. 325.

    The Gospels, regarded by the Church as the earliest works, actually were not written before the middle of the second century and by authors who did not know much about the country and epoch about which they were writing. The gospels contain numerous geographical and historical mistakes. They mention animals and plants that did not exist in those days in Palestine.

    - History of Religion.

## சில முரண்பாடுகள்

சில விலங்குகளும், மரங்களும், செடிகளும் பாலஸ்தீனத்தில் காணப்படாதவைகளாயிருந்தன. எடுத்துக்காட்டாகப் பன்றிகள் பாலஸ்தீனத்தில் அக்காலத்தில் இல்லை என்பதைச் சுட்டிக் காட்டுகின்றனர். கடுகுச் செடியை, மரமாக விளக்கியுள்ளனர். சில மன்னர்களின் பெயர்களையும் கால அளவுகளை மாற்றிக் குறித்துள்ளனர்.[41] இயேசுவின் மரபு வழிப்பட்டியல், மத்தேயு - உலூக்கா ஆகிய இருவர் கொடுத்திருப்பது ஒன்றுக்கொன்று மாறுபடுகின்றன.[42] மத்தேயு 42 தலைமுறைகளையும், உலூக்கா 28 தலைமுறைகளையும்[43] கொடுத்துள்ளனர். மத்தேயு, இயேசுவை, யாக்கோபுவின் மரபுவழியிலும், உலூக்கா எலியா வழியிலும் கூறியுள்ளனர். மத்தேயு, இயேசுவின் பெற்றோர், குழந்தையுடன் எகிப்துக்குச் சென்றதாகவும், எரோது மன்னன் இறந்த பிறகு நாசரேத் நகருக்குத் திரும்பியதாகவும் குறிப்பிடும் வேளையில், [44] உலூக்கா எகிப்து செய்தியை விடுவிக்கின்றார்.

இவை போன்ற செய்திகளால், நற்செய்திகளின் நம்பகத் தன்மைக்கு பாதிப்பு ஏற்பட்டுள்ளதாகச் சிலர் கருதுவதையும் காணலாம். மேலே குறிப்பிடப்பட்ட செய்திகளுடன் மேலும் பல முண்பாடுகளை ஆய்வாளர்கள் காட்ட முற்படுகின்றனர். ஜோசபுஸ் பிளாவிஸ் எழுதிய குறிப்புகளில், பிலாத்து (Pilate) என்ற உரோம ஆளுநர் காலத்தில், இயேசு என்பார் சிலுவை யிலறைந்து கொல்லப்பட்டதாகவும், மீண்டும் அவர் மூன்றாம் நாளில் உயிர் பெற்றதாகவும் குறிப்பிடுகிறார். இயேசுவை மாபெரும் அறிவாளி என்றும், அரும் பெருஞ்செயல்களைச் செய்த மீட்பர் என்றும் குறிப்பிடுகிறார். இச் செய்திகள் மிகைப் படுத்தப்பட்டவை என்றும் இடைச்செருகல்களே என்றும், இயேசு சிலுவையில் கொல்லப்பட்டதற்கானச் சான்றுகள் ஏதுமில்லை என்றும் சிலர் கருதுகின்றனர். பினாவிஸின் எழுத்து நடை (style) மேற்கண்ட வரிகளில் காணப்படவில்லை என்பது ஆய்வாளர் சிலரின் எண்ணங்களாகும்.[45]

---

41. Ibid.
42. Matt. 1:2-17.
43. Luke, 3:23-38.
44. Matt; 2:13-23.
45. This insert apparently by some Christian editor does not at all much the style of Flavis. - History of Religion. p. 328.

**“ஒரு மறைச் சொற்பொழிவாளர் உரோமை ஆட்சியாளர் களால் கொல்லப்பட்டார்”**, என்ற செய்தி சில அரபுக் குறிப்பு களில் காணப்படுகின்றன. ஆனால் அந்த சொற்பொழிவாளர் அருஞ்செயல்கள் (Miracles) எதையும் செய்யவில்லை என்றும், அவர் தெய்வத்தன்மையைக் கொண்டிருக்கவில்லையென்றும் அந்த அரபுக் குறிப்புகளில் காணப்படுகின்றன.[46]

## *சின்னப்பிளினி*

**சின்னப் பிளினி** (Pliny the younger) என்பார், ஆசியா மைனரிலுள்ள பித்தினியா (Bithynia) என்ற மாநிலத்தின் ஆளுநராக இருந்தார். இவர், கி.பி. 113ஆம் ஆண்டில் **பேரரசர் டிராசன்** (Trajan) என்பாருக்கு ஒரு மடல் எழுதினார் அம்மடலில், கிறித்துவம் என்ற புரட்சிகரமான குற்றம் சார்ந்த அமைப்புகள் (Criminal organisation), பேரரசருக்கும் அவர்தம் சமயத்துக்கும் எதிரான கருத்துக்களை பரப்பி வருவதாகவும், அக்குற்றப் பின்னணி கொண்ட குழுக்களை ஒறுப்பதா வேண்டாமா என்று விளக்கம் கேட்டுள்ளார். பேரரசர் அதற்கு பதிலளிக்கையில், கிறித்துவர்கள் மட்டில் நீக்குப் போக்கான (Moderation) அணுகுமுறையைக் கைக்கொள்ளவும், நாட்டின் ஒற்றுமையைக் குலைக்கும் வகையில் செயல்படும் ஓரிரு தலைவர் களை மட்டும் ஒறுத்தால் போதுமென்றும் கூறியுள்ளார். இச் செய்தியின் வழியாக இக்கால அளவுகளில், ஆசியாமைனரில் கிறித்துவ சமயம் பரவலாக அறியப்பட்டதை உணரலாம்.[47]

தாள்மடல் எனப்படும் தாள்மட் (Talmud) சமயத்தலைவர் களின் குறிப்புகளில், **ஈசா-பென்-பண்டிரா** (Jesus-Ben-Pandira) என்னும் சமய சொற்பொழிவாளர் பற்றிய குறிப்பு காணப்படு கிறது. இப்பெயருக்கு, பண்டிராவின் மகன் இயேசு என்பதே பொருளாகும். இந்த இயேசுவுக்கும், இயேசு கிறித்துவுக்கும் உள்ள தொடர்பு விளக்கப்படவில்லை.[48]

கி.பி. 150 ஆண்டுகளில், **பேரரசர் மார்க்கஸ் ஆரிலியஸ்** (Marcus Aurelius) மற்றும் உலூசியானுஸ் ஆகியோரது குறிப்பு

46. Ibid, pp. 328-329.
47. Ibid.
48. Ibid.

களில் (Peregrinus), ஆசியா மைனரிலுள்ள கிறித்துவர்களின் அன்றாட சமய வாழ்க்கை முறை விளக்கப்பட்டுள்ளது. கிறித்துவரல்லாத மற்றவர்கள் பதிவு செய்துள்ள குறிப்புகளில், கிறித்துவ சமயம் பற்றி அவர்களால் நுட்பமாகப் புரிந்து கொள்ளப்படவில்லை என்ற கருத்து தெளிவாகிறது. ஆதலால், முரண்பட்ட செய்திகளையே அவர்கள் கொடுத்துள்ளார்கள் எனலாம். மேற்கண்ட குறிப்புகளிலெல்லாம், கிறித்துவ சமயத்தின் நிறுவுநர் (Founder) பற்றிய செய்தியைக் குறிப்பிடவில்லை.[49]

## பொதுவுடைமையர் நோக்கு

கம்யூனிச ஆய்வாளர்கள் இயேசு கிறித்து பற்றி மாறு பாடான கருத்துக்களைக் கொண்டுள்ளனர். மார்க்சிய ஆய்வாளர்களில் சிலர், இயேசு கிறித்து வரலாற்று மாந்தர் அல்லர் (Jesus Christ was not a historical figure) என்றும், வேறு சிலர், இயேசு கிறித்து வாழ்ந்திருந்தது உண்மையென்றும், நூற் றாண்டுகள் செல்லச் செல்ல, இயேசுவைப் பற்றிப் பல்வேறான செய்திகள் இணைக்கப்பட்டன என்றும் கருதுகின்றனர். இக் கொள்கை வளர்ச்சி (evolution)யே பிற்காலக் கிறித்துவத்தின் சமய நம்பிக்கைகளாக உருவெடுத்தன என்கின்றனர். கி.பி. 800 ஆண்டுகள் வரையிலும், இயேசு கிறித்து சிலுவையில் கொல்லப் பட்டது போன்ற உருவப்படங்கள், அதாவது சிலுவையோடு கிறித்துவை இணைக்கும் நம்பிக்கைகள் இருந்ததற்கானச் சான்றுகள் இல்லை என்பதும் ஆய்வாளர்களின் கருத்துரை களாகும்.* இயேசு கிறித்துவின் நேரிடையான சமயக் கொள்கை விளக்கங்களுக்கும் இன்றுள்ள கிறித்துவ சமயக் கொள்கை களுக்கும் இடையில் பல கொள்கை விளக்கங்கள் கடந்த 20 நூற்றாண்டுகளில் புகுத்தப்பட்டுள்ளன என்பது மார்க்சிய ஆய்வாளர்களின் முடிவுகளாகும். கிறித்துவ சமயத்தின் பல்வேறு

49. These authors essentially did not write anything about the founder of the religion,. Jesus Christ. Neither Christian nor other sources contain indisputable information about him either.

* தமிழகத்தில் கி.பி. முதல் நூற்றாண்டிலேயே சிலுவையைத் தோமையார் அறிமுகம் செய்துவிட்டதாக செவிவழிச் செய்திகள் கூறுகின்றன.

நம்பிக்கைகளும் வணக்க முறைகளும் பல்வேறு நாடுகளில் அச்சமயம் பரவியபோது இணைக்கப்பட்டன என்பர்.

மார்க்சிய சிந்தனையாளர் **ஃபிராடரிக் ஏங்கல்ஸ்** (Frederick Engels) என்பார் தனது கிறித்துவ சமயத்தின் வரலாற்று மூலம் (Historical conditions of the origin of Christianity) என்ற நூலில் கிறித்துவ சமயம் வளர்ச்சியுற்றது பற்றிய அடிப்படைகளை விளக்குகிறார். கிறித்துவம் தோன்றிய காலத்தில் நடுத்தரைக் கடலைச் சுற்றிப் பரவியிருந்த உரோமரின் வல்லாட்சியினின்றும் ஒவ்வொரு நாட்டு இனக் குழுக்களும் விடுதலை பெற விரும்பினர். உரோமப் பேரரசை எதிர்த்து முழக்கமிட்ட குழுக்கள் எல்லாம் ஈவிரக்கமின்றி நசுக்கப்பட்டன. பேரரசை எதிர்க்கும் எண்ணமே துளிர்விடாத அளவுக்கு, பேரரசின் கொடுங்கோன்மை நீடித்தது. எவ்வகையில் விடுதலை பெறலாம் என்ற ஏக்கம் எல்லா நாட்டு மக்களிடையே வளர்ந்தது. ஏழைகளும் அடிமைகளும் செய்வதறியாது வாடினர். இச்சூழலில் தான் இசுராயேல் மக்களை உரோமப் பேரரசினின்றும் மீட்டெடுக்க மெசியா[50] என்ற மீட்பர் வருவார் என்ற நம்பிக்கை யூத மக்களிடையே நிலவிற்று. யூதர்கள் எதிர்ப்பார்த்த மெசியா என்ற மீட்பர், இசுராயேல் நாட்டில் ஒரு பேரரசை நிறுவுவார் என்றும், அப்பேரரசின் தாக்குதல்களால் உரோமப் பேரரசு வீழ்ந்துபடும் என்றும் யூதர்கள் நம்பினர்.

உரோமப் பேரரசின் பல்வேறு நாடுகளும், பல்வேறு இன மக்களும், பன்மொழிகளைப் பேசும் மக்களும், வணிகர்கள், ஏழைகள், அடிமைகள் போன்ற பொருளியல் கூறுகளால் பிளவுபட்ட பிரிவுகளும் வாழ்ந்திருந்தனர். இக்குழுவினரை ஒன்றுதிரட்டி, ஒரே தலைவனின் கீழ்க் கொண்டுவர எவராலும் இயலவில்லை. பல்வேறு இனமக்களை ஒன்று திரட்ட ஒரு மாபெரும் தலைவனோ அல்லது அமைப்போ தேவைப்பட்டது. அவ்வமைப்பு எல்லாப் பிரிவுகளாலும் ஏற்றுக் கொள்ளக் கூடிய அளவிலும் தேவைப்பட்டது.

இக்கால அளவுகளில்தான் கிறித்துவ சமயம் துளிர் விட்டது. இவ்வுலகில் காணப்படும் இன்னல்கள், யாவும் விண்ணக வாழ்வில் நீக்கப்படும் என்ற கொள்கை கிறித்துவ

50. மெய் + சேய் = மெய்செய் என்ற தமிழ்ச் சொல்லே மெசியா என்று கிரேக்க மொழியில் திரிந்தது - நூலாசிரியர்

சமயத்தில் வலியுறுத்தப்பட்டது. மக்களை மீட்க வந்த மீட்பர் என்னும் மெசியா, இயேசு கிறித்துவே என நம்பப்பட்டது. உரோமப் பேரரசின் பலநூறுவகையான சமயங்கள் இருந்தன. அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு குழுவினரால் பின்பற்றப்பட்டு வந்தன. அந்தந்த நாட்டு எல்லைகளைத் தாண்டி அத்தனித்தனிச் சமயங்கள் வெளியே செல்லவில்லை. அச்சமயங்களின் கொள்கைகளும், மற்ற சமயத்தினரால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. அனைவரும் ஏற்றுக்கொள்ளும் வகையிலான ஒரு சமயம் அக்காலத்தில் தோன்றவில்லை. அனைத்து நாட்டு மக்களாலும் குழுவினராலும் ஏற்றுக்கொள்ளக் கூடிய சமயம் ஒன்று அக்காலத்தில் தேவைப்பட்டது. அச்சமயம், குறுகிய நாட்டுக் கட்டுப்பாடுகளைக் கடந்து (Beyond the National Conditions), அனைத்து மொழி பேசும் பன்னாட்டு மக்களையும் கவரும் வகையில் அமைந்திருக்க வேண்டும் என்று எதிர் பார்க்கப்பட்டது.

உரோமப் பேரரசின் ஆதிக்கச் சிந்தனையாளர்கள், இவ்வாறான ஒரு சமயத்தை உருவாக்குவதன் வழியாக, பேரரசின் ஒற்றுமையைக் கட்டிக் காக்க முயற்சி செய்யலாம் என நம்பினர். உரோமப் பேரரசுக்குட்பட்ட நாடுகள் ஏற்றுக் கொள்ளும் வகையில் ஒரு சமயத்தையும் உருவாக்கினர். எண்ணற்ற முரண்பாடுகளைக் கொண்டிருந்த உள்ளூர் சமயக் கட்டுப்பாடுகளை உடைத்தெறிந்து உரோமா என்ற பெண் தெய்வத்தையும் ஜுபிடர் என்ற ஆண் தெய்வத்தையும் முன்னிலைப்படுத்திய சமயம் ஒன்றினை உருவாக்கினர். இச்சமயம், அடித்தட்டு மக்களையும், ஏழைகளையும், அடிமைகளையும் கவரவில்லை.

## கிழக்கிந்தியக் கடவுளர்கள்

உரோம நாட்டு மக்களை, பாரசீகக் கடவுளரான மித்திரனும் (Mithra)[51] இசிஸ் (Isis) என்ற பெண் தெய்வமும் கவர்ந்திருந்தனர். குறிப்பாக உரோமை நாட்டுப் படை வீரர்கள், மித்திரனைப் பெரிதும் விரும்பி வழிப்பட்டனர். (மித்திரன் என்பான் தமிழ்த் தெய்வமே என்பதும், அத்தெய்வத்தை

---

51. An Encyclopedia of Hindu Deities, p. 354.
Mitra: The one who is the friend. He was a most important deity during the early Vedic period, an Indo-Iranian deity. He was one of the Adityas, son of Kashyapa and Aditi, the Sun god.
- An Encyclopedia of Hindu Deities.

ஆரியரும் ஏற்றுக் கொண்டு வழிபட்டனர் என்பதும் வேறு செய்தியாகும்) தொன்மைக் காலத்து உரோமச் சமயம், நலிந்தோரையும் அடிமைகளையும் பொருட்படுத்தாமல், உயர்குடிய வகுப்பாரின் தேவைகளையும் நலன்களையும் மட்டுமே கருத்தில் கொண்டிருந்தது. இந்தியாவில் பிராமணர்கள் வகுத்த சூத்திரச் சாதியினர் எவ்வாறு கடவுள் வழிப்பாட்டிலிருந்து விலக்கி வைக்கப்பட்டார்களோ, அவ்வாறே உரோமப் பேரரசிலும் ஏழை எளியோர் ஒதுக்கி வைக்கப்பட்டிருந்தனர்.

மித்திரனைக் கதிரவனாக ஆரிய வேதம் கூறும். கதிரவன் தென் பயணத்தினின்றும் வடதிசைக்குத் திரும்பும் (டிசம்பர் 22) நாளில் மித்திரன் பிறந்ததாக பாரசீகத் தொன்மக் கதைகள் கூறுகின்றன. இந்நிகழ்வை யொட்டியே தைத்திங்களைத் தமிழர் ஆண்டின் தொடக்கமாகக் கொண்டிருந்தனர் என்று சொல்வாருமுளர். தைத்திங்களையொட்டிய உரோமானியத் திங்கள் திவே (Tebe) என்பதாகும். மித்திரன் பிறந்த நாளையே கிறித்து பிறந்த நாளாகப் பிற்காலத்தில் ஏற்படுத்திக் கொண்டனர் என்ற கருத்தும் உண்டு. பாரசீகக் கதைகளில் மித்திரன் இறந்துபட்டு, மீண்டும் உயிர் பெற்றெழுந்த செய்திகளும் உண்டு. இந்த மித்திரக் கடவுள் வணக்கம் ஐரோப்பாவில் பலராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்ததாக வரலாறுகள் கூறுகின்றன.

யூதர் சமயத்தில் பெண் தெய்வமோ, அத்தெய்வம் போன்ற தொரு பெண்ணோ அறியப்படவில்லை. அதுபோன்றே கி.பி. நான்காம் நூற்றாண்டு வரையில் கிறித்துவ சமயத்திலும் மறியன்னை (Mary) வணக்கமுறை நடைமுறையில் இல்லை

---

மெய் + திரை = மெய் என்பது உடல், திரை என்பது மூப்பு. மெய்த்திரை = முதிர்ந்த அகவை வரை தொடரும் நட்பு. மெய் = உண்மையான எனவும் பொருள் கொள்ளலாம். மூப்பு வரையில் தொட்ரும் உண்மையான நட்பு. மெய்த்திரை என்ற தமிழ்ச் சொல்லே மித்திர என்று வடமொழியில் திரிந்தது. மித்திர(வ) = நண்பன். மெய்த்திரை - மித்ர - மித்ரா (பார்சி மொழி).

மெய்த்திரையன் = உண்மையான நண்பன்.

விசுவ மெய்த்திரையன் → விசுவாமித்திரன். விசுவ = பெரிய, அகன்ற. விசும்பு - விசுவ என வடமொழியில் திரிந்தது. விசும்பு = பெரிய அல்லது அகன்ற வானம் மித்திரனின் தந்தை காசிபன் ஆவான். காசிபன் ஆவான் காசிபன் என்பது காயவன் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே என்க. காயவன் = வெப்பமானவன், சுடுபவன், சினம் கொள்பவன் என விரியும்.

எனலாம். இசிஸ் (Isis) என்ற எகிப்திய பெண் தெய்வ வணக்க முறை போன்றே, மறியன்னையை கிறித்துவம் முதன்மைப் படுத்தியதாகவும் சிலர் கருதுகின்றனர்.

மேற்கண்ட செய்திகளின் படி, உரோம நாட்டுக்கு உரிய தெய்வங்களைவிட கீழ்த்திசைத் தெய்வங்களே உரோமப் பேரரசில் பெரிதும் வணங்கப்பட்டன எனலாம். இருப்பினும் மித்திரன் மற்றும் இசிஸ் தெய்வங்களை மக்கள் அனைவரும் வணங்கியதாகவும் கூற இயலாது. எனவே மித்ரா தெய்வமும் கூட, உரோமப் பேரரசின் பொதுமைத் தெய்வமாக ஏற்றுக் கொள்ளப்படவில்லை.

## யூதக் குழுக்கள்

யூத சமயத்தினர் அக்கால அளவுகளில் பல்வேறு நம்பிக்கைக் குழுக்களாக (Sects)ப் பிரிந்திருந்தனர். நடுத்தரைக் கடலைச் சுற்றியிருந்த நாட்டு மக்களில் யூத இனமே பெரிதும் நசுக்கப்பட்ட இனமாக இருந்தது. குறிப்பாக, சிரிய - கிரேக்க - உரோமானிய ஆளுமைகள், யூத சமயத்தினரை ஏறக்குறைய அடிமைகளாகவே மாற்றியிருந்தன. யூத சமயத்தில் பிறக்க விருக்கும் மெசியா என்ற மீட்பர், மிகச் சிறந்த போர் மறவனாக வும், வாட்போர் வீறனாகவுமே பிறப்பார் என்றும், அரசியல் விடுதலையை அளிப்பார் என்றும் நம்பினர். இச்சூழல்களில் நடைபெற்ற யூதரின் புரட்சிகள் இரண்டும் ஆட்சியாளர் களால் நசுக்கப்பட்டதால், மெசியா என்னும் மீட்பர், அரசியல் விடுதலையைக் காட்டிலும், ஆன்மீக விடுதலையை அளிப்பார் என்று **எசனியர்** (Essenes) என்ற குழு நம்பியது. இக்குழுவினர் அடிமை முறையை முற்றிலும் புறக்கணித்து, மக்கள் அனை வரும் சமம் என்ற கொள்கையைக் கொண்டிருந்தனர்.

**நசரேன்** (Nazaranes) என்ற குழு மிகவும் ஒழுக்கமான வாழ்க்கை முறையைக் கைக்கொண்டிருந்த யூத இனமாகும். இவர்கள் உடலிலுள்ள மயிரை மழிப்பதில்லை, மது அருந்துவ தில்லை, நீத்தாரின் உடல்களைத் தொடுவதில்லை. இயேசுவே நசரேன் என்ற பெயரால் அழைக்கப்பட்டார். மறைத் தொண்டர்பால் நசரேனாகவே அறியப்பட்டார். இசுலாமியச் சமய நூலான திருக்குர்ஆன், இயேசுவின் தொண்டர்களை நசரேன் என்ற சொல்லால் குறிப்பிடுகின்றது.

**ஆனால் இயேசுவின் தொண்டர்களோ தங்களை நம்பிக்கையாளர்கள் (believers) என்றும் உடன் பிறப்புகள் (brethern) என்றும் அழைத்துக் கொண்டனர். கிறித்துவர்கள் (Christians) என்ற பெயர். உண்மையில் இயேசுவின் தொண்டர்களுக்கு எதிரானவர்கள் வைத்த நக்கலான (derogatory form) பெயரே எனலாம். நாளடைவில் இப்பெயரே நின்று நிலைத்து விட்டது.**

இயேசுவின் மறைவுக்குப் பின்னர், கிறித்துவ சமயம் உண்மையில் பாலத்தீனத்தில் தோன்றவில்லை. பாலத்தீனத்துக்கு வெளியே திசைப்புறம் (diaspora) சென்ற யூதர்களால், குறிப்பாக சிரிய நாட்டில் தான் உருவெடுத்தது. திசைப்புறம் சென்ற யூதர்கள், கிரேக்கப் பண்பாட்டிலும் கல்வியிலும் ஈடுபாடு கொண்டவர்களாகவே இருந்தனர். இவர்களில் சிறப்பானவர், கிறித்துவ சமய வளர்ச்சியின் தந்தை என அறியப்பட்ட அலெக்சாந்திரிய நகரத்து ஃபிலோ என்பவரேயாவார்.[52] இவரே கிறித்துவக் கொள்கைகளுக்கு விளக்கங்கள் கொடுத்த முதல் சமயத் தலைவராவார். இவரிடம் கிரேக்கப் பண்பாட்டுத் தாக்கங்கள் பெருமளவில் இருந்தன. கடவுளுக்கும் மக்களுக்கும் இடையே ஒரு தூதுவர் அல்லது தூய இணைப்பாளர் (Holy mediator between the God and the material word - the divine logos) இருப்பது பற்றிய சிந்தனைகளைத் தெளிவாக்கினார். இவ்வகையிலான கிரேக்க மெய்யியல் கொள்கையைத் தழுவியதாகவே இயேசு கிறித்து, மெய்யான கடவுளின் மகன் என்ற கொள்கை (Christ the son of God) கிறித்துவத்தின் அடிப்படையான மெய்யியல் கொள்கையாக உருவெடுத்தது.

தொடக்கத்தில் யூத சமயக் கொள்கைகள் கிறித்துவத்தில் இணைக்கப்படவில்லை யோவான் எழுதியதாகக் கருதப்படும் வெளிப்பாடு (Revelation), யூதரின் புரட்சிகரமான கொள்கைகளையோ, பிற்காலத்துக் கிறித்துவக் கொள்கைகளையோ எதிரொலிக்கவில்லை வெளிப்பாடு, மூவொரு கடவுட் கொள்கையையோ, தூய ஆவி பற்றியோ, சகிப்புத்தன்மை, மாந்தநேயம், மன்னிக்கும் மனப்பான்மை பற்றியோ வெளிப்படுத்தவில்லை. பிற்காலத்தில் யூத சமயத்தின் பல்வேறு கோட்பாடுகள் கிறித்துவத்தில் இணைக்கப்பட்டன. யூதக் கடவுளான

---

52. The New American Bible, B.D.A.C., p. 7.

எகோவா (Yahweh) கிறித்துவத்தில் தந்தைக் கடவுளாக (father god)வும், இயேசு கிறித்து அவரது மகனாகவும் அறியப்பட்டனர். எகோவாவின் செயல்களை விளக்கும் பழைய ஏற்பாட்டு நூலின் பகுதிகள் அனைத்தும் கிறித்துவத்தில் இணைக்கப் பட்டன. யூத சமயத்தின் பல்வேறு சடங்கு முறைகளும் அவ்வாறே இணைந்தன. பாஸ்குத் திருவிழா என அறியப்படும் (Pass over) நிகழ்வு, ஈஸ்டர் விழாவாகக் கிறித்துவத்தில் உணரப்பட்டது. சாபாத் என்ற ஓய்வு நாளும், சுன்னத் சடங்குகளும் கூட, தொடக்ககாலக் கிறித்துவத்தில் சிறப்புற்றிருந்தன. பிற்காலத்தில் அவை கைவிடப்பட்டன.[53]

இவ்வாறு யூத மெய்யியலை அடிப்படையாகக் கொண்டும், சில கிழக்கிந்திய கடவுள் வணக்க முறைகளைத் தழுவியும் கிறித்துவம் உருவானது. எதிர்பார்க்கப்பட்டதைவிட வளர்ச்சி யுற்ற கிறித்துவ சமயத்தில், பன்னாட்டு வணக்க முறைகளும், நம்பிக்கைகளும் இடம்பெற்றிருந்ததால், அச்சமயம் மேலும் பல நாட்டு மக்களைக் கவர்ந்தது. குறிப்பாக, மித்திரன் - தமுழ் அடோனிஸ் - அட்டிஸ் போன்ற கடவுளர்களின் நிழல்கள் கிறித்துவத்தில் படிந்துள்ளன என்பது ஆய்வாளர்களின் முடிபு களாகும். **பன்னாட்டு மக்களின் எதிர்பார்ப்புகளை ஈடுசெய் யும் வகையில், மறியன்னை வணக்க முறை கிறித்துவத்தில் பரவலாக உணரப்பட்டது.**

## *குறுக்கம் என்னும் சிலுவை*

குறுக்கம் என்ற சிலுவை, இயேசுவைக் கொலை செய்யப் பயன்படுத்தப்பட்ட பொறியாகும். சிலுவா என்ற சொல், சிரிய மொழிக்குரியது என்பர். அதுவே தமிழில் சிலுவை என்று சொல்லப்பட்டது. சிலுவை என்ற சொல்லுக்குத் தமிழில் பொருளில்லை. பாரசீக நாட்டில் குற்றவாளிகளை ஒறுக்க இம்முறை பயன்படுத்தப்பட்டதாகவும், இதனை கிரேக்கர்களும் அவர்தம் வழியில் உரோமானியரும் பபன்படுத்தியதாகவும் கூறுவர். அக்காலச் சிலுவைப் பொறி T என்ற ஆங்கில எழுத்து போன்றே அமைந்திருந்தது. + என்ற கூட்டல் குறி போன்ற எழுத்து, தமிழிலும், சிந்துவெளித் தமிழிலும் க என்ற உயிர்மெய் எழுத்தையே குறித்தது. குறுக்கம் என்ற சிலுவைக்குறி உலகின்

53. History of Religion, pp. 334-335.

பலவேறு நாடுகளிலும் அறியப்பட்டு, உணரப்பட்டு, மிக உயர்ந்த பொருளைத் தரும் குறியீடாக அது அமைந்திருந்தது எனலாம். குறிப்பாக, சீனா, இந்தியா, ஆப்பிரிக்கா, அமெரிக்கா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளில் இயற்கையின்பாற்பட்ட (Totemic) குறியீடாகவும், நெருப்பை உணர்த்தும் அடையாள மாகவும் சிலுவை அறியப்பட்டுள்ளதாக ஆய்வாளர்கள் கருது கின்றனர்.[54] எகிப்து நாட்டில், சிலுவைக்குறி, சமயச் சின்னமாக அறியப்பட்டுள்ளதை, கிறித்துவுக்குப் பல ஆயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட ஆவணங்கள் விளக்குகின்றன. தொடக்க காலக் கிறித்துவர்கள், சிலுவையைச் சமயச் சின்னமாகக் கருதவில்லை. கிறித்துவர்களின் கல்லறைகளில், தற்காலத்தில் காணப்படும் சிலுவைக் குறிகள், தொடக்ககாலக் கிறித்துவக் கல்லறைகளில் காணப்படவில்லை. சிலுவைக்குப் பதிலாக ஆட்டுக்குட்டி, மீன், ஆட்டிடையன் போன்ற உருவங்களே கிறித்துவக் கல்லறைகளில் காணப்பட்டன. கி.பி. 800 - 900 ஆண்டுகளிலேயே, சிலுவை யில் அறையப்பட்ட இயேசுவின் படங்கள் வரையப்பட்டன.

கன்னி மறியாள் தூய ஆவியால் கருவுற்ற செய்தி, யூத சமயத் துக்கு முற்றிலும் புதுமையானது. அதுபோன்ற செய்திகள் யூத சமயத்தில் சொல்லப்படவில்லை. ஆனால் தமிழகத்தின் தொன்மக்கதைகள், தேவமாந்தர்கள் தமிழ்ப் பெண்களைப் புணர்ந்த கதை குமரிக் கண்டத்திலேயே அறியப்பட்டிருந்ததாக விவிலியத்தின் பழைய ஏற்பாட்டு நூலில் காணலாம். (மேலும் விளக்கங்களுக்கு ஆசிரியரின் எபிரேயத்தின் தாய்மொழி தமிழே என்ற நூலைக் காண்க)

---

54. Ibid., pp. 335-336.

Cross: The cross as a religious symbol existed in almost every country - Ancient China, Ancient India, Africa, America. Even among the Australians the totemic vaninga is some times made in the form of a large cross. Various hypotheses about the original religious significance of the Cross. Some maintain that it is a symbol of fire (perhaps at first a wooden steel formerly used for kindling fire). Others claim that it was a solar sign or symbol of fertility etc. The various interpretations of the Swastika (also a fom of cross) are just as numerous. Among the N.A. Indians the symbol of the four corners of the world is also related to the worship of four elements.

- History of Religion.

## யூதர் - புறவினத்தார் மோதல்

இவ்வாறு கிறித்துவ சமயம், யூத மற்றும் கிழக்கித்திய நாடுகளின் கலவைச் சமயமாகவே உருப்பெற்றது என்பது ஆய்வாளர்களின் முடிபுகளாகும். இயேசு தன்னிலே ஒரு யூதராக இருந்தாலும், யூத சமயத்தினர் இயேசுவைக் கொலை செய்ய எடுத்த முயற்சிகளால், தொடக்ககாலக் கிறித்துவர்களில் யூதரல்லாதார், யூதரை வெறுத்தனர். இதனால், யூதருக்கு எதிரான கிறித்துவர்களின் கைகள் ஓங்கியிருந்தன.

மத்தேயுவின் நற்செய்தியில், யூத சார்பு செய்திகள் காணப் படுவதாகவும், புறவினத்தாரிடம் சமயத்தைப் பரப்புதல் ஊக்குவிக்கப்படவில்லை என்பதாகவும் ஆய்வாளர்கள் கருது கின்றனர். மத்தேயு தன்னிலே யூதேயனாக இருந்தார். யூதா என்ற பன்னிரு தொண்டர்களில் ஒருவன், இயேசுவைக் காட்டிக் கொடுத்ததாகக் கூறப்படும் செய்தியும், யூத இன மக்கள் மீது மற்றவர் கொண்டிருந்த வெறுப்பின் கரணியமாகவே, அச்செய்தி விரிவுபடுத்தப்பட்டதாகவும் கூறுவர். இயேசுவின் தலைமைத் தொண்டரான பேதுருவை (Peter) யூத இனத்தின் மறைத்தொண்டராகவும், பாலை (Paul) புறவினத்தாரின் மறைத் தொண்டராகவும் குறிப்பிடுவர். இவ்வாறான (Judaen Versus pagans) இரு இனத்தாரின் போர்க்களமாகவே தொடக்ககாலக் கிறித்துவம் காட்சியளிக்கின்றது.

மத்தேயு நற்செய்தியில், இயேசு கூறும் அறிவுரையில், தனது தொண்டர்களைப் புறவினத்தாரிடம் செல்லாதிருக்கும் படியும், இசுராயல் இனத்தின் கடைமாந்தன் வரையில் செல்லும் படியும் கூறுவதாக அறியலாம்[55] என்றும், மேலும் புறவினத் தாரை நாய்கள் என்று விளிப்பதாகவும்[56] சொல்லப்படும் செய்திகள், யூதர் - யூதரல்லாதார் போராட்டத்தின் வெளிப் பாடுகளே என்பது, ஆய்வாளர்களின் கருத்தாகும். அதே வேளையில் நூற்றுவர் தலைவனொருவனை (Centurion) நோக்கி

---

55. "Do not visit pagan territory and do not enter a Samaritan town. Go instead after the lost sheep of the house of Israel".
 - Mathew 10:5-6.
56. "My mission is only to the lost sheep of the house of Israel. It is not right to take the food of sons and daughters and throw it to the dogs".
 - Mathew 15:24, 26.

இயேசு சொன்ன செய்தி, புறவினத்தாரையும் அரவணைத்தே சொல்லப்பட்டதை அறியலாம்.[57] மத்தேயு நற்செய்தியின் இறுதிப் பகுதியில், இயேசு தனது தொண்டர்களை நோக்கி, "உலகெங்கும் சென்று[58] நற்செய்தியை அறிவித்து, அவர்களுக்குத் தந்தை மகன் தூய ஆவியின் பெயரால் திருமுழுக்கு அளியுங்கள்", என்ற செய்தி குறிப்பாக நோக்கத்தக்கது எனலாம்.

கிறித்துவத்தின் மையக் கருத்தாக, மாந்தன் கடவுளுக்கெதிராகச் செய்த பாவமும் (Sui), அப்பாவத்தினின்றும் மாந்த இனத்தை மீட்டெடுப்பதற்கான வழியும் (Salvation), வலியுறுத்திச் சொல்லப்பட்டுள்ளன. **இவ்வுலகில் காணப்படும். இன்னல்கள், இடுக்கண்கள் யாவும், முதல் மாந்தன் ஆதாம் செய்த பாவத்தின் தொடர்ச்சிகளாகும். இவ்வுலகில் காணப்படும் ஏற்றத்தாழ்வுகள், வறுமை, நோய்கள், வறட்சி, செழுமை போன்ற எண்ணற்ற முரண்பாடுகள் பாவத்தின் விளைவுகளே. இவை என்றும் தொடரும் நிலைகளுமல்ல. தற்காலிகமானவைகளே. இவ்வின்னல்களை மீட்டெடுக்கப் பிறந்து, வாழ்ந்து, மாந்தவினத்துக்காக தன்னுயிரையும் கொடுத்து. மீட்பை அளித்தவர் இயேசு கிறித்துவே என்பது தான் கிறித்துவத்தின் அடிப்படைக் கொள்கையாகும்**. காரல் மார்க்ஸ் - ஏங்கல்ஸ் போன்றவர்கள், இம்மையக் கருத்தினைப் பற்றி விளக்குகின்றனர். இவர்களது கருத்தினைத் திருச்சபை ஏற்றுக் கொள்ள வில்லையாயினும், கிறித்துவம் பற்றிப் பல்வேறு பார்வைகளில் இவர்கள் சிந்தித்துள்ளனர் என அறியலாம்.[59]



57. Ibid, 8:10-13.
58. Ibid, 28:19.
59. Karl Marx and Frederick Engels collected Works, Russian Edition, Vol. 19, p. 314, 1974.
59. "Christianity touched a string that was meant to find response in countless number of hearts. To all complaints about hard times and general and physical and moral poverty the christian awarness of sinfulness replied: yes, this is the way it is and can not be otherwise; you are to blame for the world's depravity all of you are to blame, and you and your own depravity! where could any one be found to deny that?"

- Karl Marks and Frederick Engels.

## கிறித்துவம் – ஏழை எளியோரின் சமயம்

கிறித்துவின் மீட்புக் கொள்கை, இடுக்கண் இன்னல் களிடையே வாழ்ந்துவந்த ஏழை, எளிய, வறிய, அடிமை மக்களைக் கவர்ந்தது. இன, மொழி, எல்லை வேறுபாடின்றி, அடித்தட்டு மக்களால் கிறித்து மீட்பராக ஏற்றுக் கொள்ளப் பட்டார். அதுவரையில் குறுகிய எல்லைகளில் அறியப்பட்ட குழுக்களுக்கான சிறு சிறு சமய வழிபாட்டு முறைகள் கொடுக் காத புதுச் செய்தியை கிறித்துவம் கொடுத்தது. குறிப்பாக அக்காலத்துச் சமயங்கள் எவையும் அடித்தட்டு மக்களைக் கவரவில்லை. அச்சமயக் கொள்கைகள் யாவும் மேல்தட்டு, செல்வச் செழிப்புள்ள, சமயக் குருமார்களின் நலன்களைக் காப்பனவாகவே அமைந்திருந்தன. யூத சமயமும் கூட, பிற்காலக் குருமார்கள் அளித்த, புதிய விளக்கங்களால், ஏழைகளை விட்டு விலகிப்போயிருந்தது. கிரேக்க, உரோமச்சமயங்கள் வறியார்களைக் கண்டுகொள்ளவேயில்லை. இவைகளெல்லாம் அரசாங்கச் சமயங்களாகவே (Government sponsored and aristocratic in nature) அறியப்பட்டிருந்தன. தங்களின் நலன்களைப் புறக்கணித்த இச்சமயங்களை, ஏழை எளிய மக்கள் கண்டு கொள்ளவேயில்லை.

கிறித்துவம் ஏழை எளியவர்களை அரவணைத்தது. அவர் களைப் புகழ்ந்து பேசியது. மாறாகச் செல்வர்களையும் வணிகர் களையும் இடித்துரைத்தது. செல்வர்களைப் பற்றிய செய்தி யில், **"மகிழ்வில் வாழும் மக்களே, சிரித்து மகிழும் செல்வர் களே! நீங்கள் அழுகின்ற காலம் வரும்"**, என்றும்,[60] **"இன்னல் களையும் இடுக்கண்களையும் சுமந்துநிற்பவர்களே! உங்க ளுக்கு அமைதி காத்திருக்கிறது**. என்றும்,[61] **"முதலாமவனாகக்**

60. "But woe unto you that are rich! For ye have received your consolation. Woe unto you that are full, for ye shall hunger" - Luke, 6:24-25.

**கருதப்படும் செல்வன் கடையனாகவும் ஏழைக் கடையன் முதல்வனாக உயர்த்தப் பெறுவான்"**, என்றும்[62] கிறித்துவம் அறிவித்த நற்செய்தி, மக்களைச் சிந்திக்க வைத்து, கிறித்துவத் தின் பால் அவர்களை ஈர்த்தது. இவ்வாறு வறியவர்களும் அடிமைகளும் பெருமளவில் இணைந்ததால், **தொடக்ககாலக் கிறித்துவம், அடிமைகளின் சமயம் என்றுகூட அழைக்கப் பட்டது.** கி.பி. முதல் மூன்று நூற்றாண்டுகளில் உரோமப் பேரரசின் அனைத்து நாடுகளிலும் கிறித்துவம் பரவியிருந்தது.

## கிறித்துவத்துக்கு எதிரான நடவடிக்கைகள்

கிறித்துவ சமயத்துக்கு எதிரான நடவடிக்கைகளில் உரோமப் பேரரசு முதல் இருநூற்றாண்டுகள் ஈடுப்பட்டது. நீரோ (Nero) என்ற உரோமப் பேரரசன், கிறித்துவர்களுக் கெதிரான அடக்குமுறைகளைக் கையாண்டான். என்றாலும் நீரோவை மிகவும் கொடியவன் என்ற கருத்தை வரலாற்றாசிரி யர்களில் சிலர் ஏற்றுக்கொள்ளவில்லை. உரோம் நகரம் பற்றி எரிந்த போது நீரோ மன்னன் பிடில் வாசித்துக் கொண்டிருந் தான் என்ற செய்திகூட மிகைப்படுத்தப்பட்ட வொன்றாகவே ஆய்வாளர்கள் கருதுகின்றனர். **கிறித்துவ சமயத்தின் பெருமை களை உயர்த்தவும், கிறித்துவசமயத் தலைவர்களை பிற் காலக் கிறித்துவர்களுக்குப் புனிதர்களாக அடையாளம் காட்டவும் இந்த உத்தி பயன்படுத்தப்பட்டது என்பாருமுளர். தொமிசியன் மற்றும் திராஜன்** (Domitian and Trajan) காலத்திலும் கிறித்துவர்களுக்கெதிரான அடக்குமுறைகள் இருந்தன என்றும் வரலாறுகள் தெரிவிக்கின்றன. **பேரரசன் தெசியூஸ்** (Decius - 249-251 A.D) காலத்தில் ஒடுக்கப்பட்ட கிறித்துவம், அவனுக்குப் பின் வந்த **தியோக்லேசியன், மாக்சிமியன்** (Diocletian and Maximian) காலத்தில் *(கி.பி. 275 - 325)* பெருமளவில் நசுக்கப் பட்டதாகக் கூறலாம். **கிறித்துவம் தடைசெய்யப்பட்டதற்கான அடிப்படைக் கரணியம் அரசியலே என்பதும் சமய நோக் கல்ல என்பதும் வரலாற்றாசிரியர்களின் கருத்துரைகளாகும்.**

---

61. "Come unto me, all ye that labour and are heavy laden and I will give you rest". - Matt., 11:28.
62. "So the last shall be first and the first last: for many be called, but few chosen". - Matt. 20:16.

**ஒரு மாபெரும் மக்கள் கூட்டம், ஒரு தலைமையின்கீழ் ஒன்று சேர்வதென்பது ஆட்சியாளர்களை அச்சுறுத்தும் என்ற அடிப்படையில், நாடாண்ட மன்னர்கள் கிறித்துவத்தின் பால் அச்சவுணர்வு கொண்டனர் என்பதே உண்மைநிலை யாகும் என ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.**

இந்த அடிப்படையில்தான் திராஜன் என்ற பேரரசனும், தனது ஆசியா மைனரிலிருந்த பித்தினியா நகரத்து ஆளுநன் பிளினி என்பானுக்கு அறிவுரைகள் வழங்கியதாக ஏற்கனவே குறிப்பிடப்பட்டுள்ளதை நோக்குக. கி.பி. 300களில் உரோமையை ஆண்ட **பேரரசன் கான்ஸ்டண்டைன்** (Constantine) தொடக்கத்தில் கிறித்துவர்கள்பால் ஐயமும் அச்சமும் கொண்டு, அவர்களை ஒதுக்கி வைத்திருந்தான். **நாளடைவில் கிறித்துவர்களின் எண்ணிக்கையானது பல்கிப் பெருகவே, கிறித்துவர்களை எதிர்ப்பதைவிட, அவர்களைத் தனது பக்கம் ஏன் இழுத்துக் கொள்ளக் கூடாது என எண்ணினான். இவ்வெண்ணம் அரசியல் அடிப்படையில் எடுக்கப்பட்டதே.** கி.பி. 313ஆம் ஆண்டில் மிலான் (Milan) நகரில் கூட்டப்பட்ட மாநாட்டில், கிறித்துவர்கள் மீதான தடையை நீக்குவதெனவும், கிறித்துவ சமயத்தை உரோமப் பேரரசின் சமயமாக ஏற்றுக் கொள்வதெனவும் (Official state religion) முடிவு செய்யப்பட்டதாக வரலாறு கூறுகிறது.[63] ஆனாலும் கான்ஸ்டண்டைன் கிறித்துவனாக மாறவில்லை என்பதும் நோக்கத்தக்கது. கான்ஸ்டண்டைனுக்குப் பிறகு வந்த மன்னர்களும் மிலான் ஒப்பந்தத்தை நடைமுறைப்படுத்திவந்ததால், பெரும் எண்ணிக்கையிலான கிறித்துவ சமயத்தாரின் பேருதவி பேரரசுக்குத் தொடர்ந்து கிடைக்க வழிவகை செய்யப்பட்டது.

கிறித்துவ சமயம் அரசின் சமயமாக ஏற்றுக் கொள்ளப் பட்டதால், ஒரு புதிய திருப்பத்தை அச்சமயம் சந்தித்தது. இது வரையில் ஏழை எளியோர் அடிமைகள் மட்டுமே ஏற்றிருந்த அச்சமயத்தில், ஏராளமான மேட்டுக் குடியினரும் குறிப்பாகப் பெண்களும் இணைந்தனர். **பிரபுக்கள் குடும்பத்துப் பெண்கள் கிறித்துவ சமயத்தில் சேர்வது பெருமையாகவும்**, **நாகரிக மாகவும் கருதப்பட்டது**. மேட்டுக்குடி கிறித்துவத்தில் இணைந்ததும், நடுத்தட்டு மக்களும், அடிமைகளின் உரிமையாளர்களும் கும்பல் கும்பலாக (en masse) கிறித்துவத்தில் இணைந்தனர்.

---

63. History of Religion, p. 353.

இவ்வாறான இணைப்பை **மொந்தானுஸ்** (Montanus of Phrygia) என்பார்[64] கடுமையாக எதிர்த்தார் (கி.பி. 170) இவருடைய கொள்கையைப் பின்பற்றியவர்கள் **மொந்தானியர்கள்** (Montanist) எனப்பட்டனர். **கிறித்துவத்தில் தகுதியில்லாதவர்களெல்லாம் சேர்த்துக் கொள்ளப்படுவதாக மொந்தானூஸ் சாடினார். தொனாத்தூஸ்** (கி.பி. 400) என்ற போட்டி ஆயர் (Bishop of carthage) புதிய சிந்தனைகளுடன் புறப்பட்டார்.[65] ஆப்பிரிக்கப் பகுதிகளில் வலுவூன்றிய இக்குழு, திருச்சபையில் திருச்சடங்குகளை (Sacrements), தகுதியற்ற பாதிரிமார்கள் கடந்த காலத்தில் நிறைவேற்றியிருப்பதால், அத்தகையச் சடங்கில் கலந்து கொண்டவர்களுக்கு மீண்டும் புதுச்சடங்குகள் செய்யப்படவேண்டும் என்றார். அகஸ்தின் மன்னர் மற்றும் கத்தோலிக்கத் திருச்சபை, மேற்கண்ட இருவரது கொள்கைகளையும், அவர்தம் வழி நடந்தோரையும் நசித்துவிட்டனர். கி.பி. 5, 6 நூற்றாண்டுகளுக்குப் பிறகு இவ்வியக்கங்கள் காணாமற் போயின.

### கலை - பண்பாட்டு அழிவுகள்

கிறித்துவம் ஐரோப்பாவில் பரவத்தொடங்கிய கால அளவுகளில், அந்தந்த வட்டாரங்களில் அதுவரையில் வணங்கப்பட்டு வந்த தெய்வங்கள் மறக்கப்பட்டன. அத்தெய்வங்களுக்கான கோயில்கள் இடிக்கப்பட்டன அல்லது தேவாலயங்களாக மாற்றம் பெற்றன. **அதுநாள்வரையில் கடைப்பிடிக்கப்பட்டு வந்த மக்களாட்சிக் கொள்கை, இலக்கியங்கள், சமயநூல்கள், வானவியல், வரலாற்று நூல்கள் யாவும் சாத்தானின் கொள்கையை அடிப்படையாகக் கொண்டவையென்றும் அவைகள் யாவும் அழிக்கப்பட வேண்டியவையென்றும் புதிய சிந்தனைகள் தோன்றின.** இவற்றை கிறித்துவத்தின் புதிய அலை (Democratic revolutionary spirit) என்று இலெனின் (Lenin) குறிப்பிடுகிறார்.[66] **கிறித்துவத்தின் சமயச் சார்புடைய**

---

64. Cambridge Encyclopedia, p. 744.
65. Ibid, p. 353.
66. The State and Revolution, V.I. Lenin, Collected Works, Vol. 25., Progress Publishers, Moscow, 1977, p. 425.
Cambridge Encyclopedia, p. 744.

**புதிய மெய்யியல் கொள்கை தொன்மைக் காலந்தொட்டு பேணப்பட்டுவந்த இலக்கியம் மற்றும் கலை பண்பாட்டுக் கொள்கைகளுக்கு முரண்பட்டு நின்றது.**

அருஞ்செயல்களில் (Miracles) நம்பிக்கை, வருங்காலத்தைப் பற்றி தெய்வீக அருள்பார்வையில் முன்னுரைப்பது, வட்டார வழக்குகளை புறந்தள்ளுவது, எக்கொள்கைகளையும் சமய நோக்கில் அணுகுவது, உலகில் நடைபெறும் புதிய நிகழ்வு களைக் கிறித்துவ சமய நோக்குக்கு எதிரானவைகளாகக் கருதுவது, கிறித்துவ சமயத்தின் கொள்கைகளை அலசி ஆராய் பவர்களை கிறித்துவத்துக்கு பகைவர்களாகக் கருதுவது போன்ற புதிய கொள்கைகளால், சிந்தனையளார்களின் கருத் துக்கள் வெளி வராமல் தடுக்கப்பட்டன.

இதனடிப்படைகளில் புகழ்பெற்ற இலக்கியப் படைப் பாளர்கள் கலைஞர்கள் அறிவியலாளர்கள் பலர் கொல்லப் பட்டனர். **கி.பி. 415ஆம் ஆண்டில் அக்காலத்தின் அறிவியல், கல்வி மற்றும் பல்கலையில் மையமாக விளங்கிய அலெக் சாந்திரியா நகரத்தின் பெரும் நூல்நிலையம் தீவைத்துக் கொளுத்தப்பட்டது.[66] விலைமதிக்க இயலாத எண்ணற்ற வரலாற்று, வானியல், கணித மற்றும் மெய்யியல் நூல்களும் அழிக்கப்பட்டன.** இந்நிகழ்வுகளுக்குப் பின்னணியில் இருந்த துறவிகளும் அத்துறவிகளின் தலைவரான சிரில் (Kyril or cyril) என்பாரும், மிகச்சிறந்த வானவியல், கணித மெய்யியல் அறிஞரான இப் பாட்டியா (Hypatia) என்ற பெண்மணியைக் கொலை செய்தனர். கி.பி. 410, கி.பி. 455 ஆண்டுகளில் நிகழ்வுற்ற இக்கொடுஞ் செயல்கள், சமயத்தின் பெயரால் நியாயப்படுத்தப் பட்டன.[67]

**வாண்டல்** (Vandal) என்ற பெண் தெய்வம், ஸ்காண்டி நேவிய நாடுகளில் வணங்கப்பட்ட ஃப்ரேயா (Freyy'a) என்ற தெய்வமாகும். இதனை வணங்கியவர்கள் வாண்டல்கள் எனப் பட்டனர். இந்த வாண்டல் இனம் ஒட்டு மொத்தமாகக் கிறித்துவ சமயத்தில் இணைந்தது. பின்னர் உரோமை நகரின் பண்பாட்டுச் சின்னங்களைச் சூறையாடி அழித்தது. அது முதல் பொதுச் சொத்துக்களைச் சூறையாடி அழிப்பது Vandalism என்று வழக்கில் வந்தது.[68]

---

67. Ibid, p. 353.
68. The Oxford Dictionary of Current English, p. 1017.

## படிப்படியான வளர்ச்சி

இவர்களைத் தொடர்ந்து கிரேக்கர்களும், செர்மானியர் களும், ஸ்லாவ் இனத்தாரும், கோத்துகளும் (Goths), கி.பி. 500களில் கிறித்துவத்தை ஏற்றனர். கி.பி. 600 - 900 ஆண்டுகளில் பிரெஞ்சுக்காரர்களும், செர்மானியப் பழங்குடியினரும் (Alamanni, Bavarans, Frisians, Anglo - saxons etc) கிறித்துவ ராயினர் கி.பி. 1000 ஆண்டுகளில் ஐரோப்பா முழுதும் கிறித்துவ சமயத்துக்கு மாறியிருந்தது.[69] கிழக்கே, காகசஸ் (அர்மீனியா, ஜியார்ஜியா போன்ற சோவியத்தின் பகுதிகளில் கி.பி. 400 களிலேயே கிறித்துவம் அறியப்பட்டிருந்தது. பாரசிகச் சமயமான சோராஸ்டிரியத்துடன் மோதி வெற்றிபெற கிறித்துவம் எடுத்துக் கொண்ட முயற்சிகள் முழுவெற்றியைத் தரவில்லை. கி.பி. 700 களுக்குப் பிறகு கீழை நாடுகளில் கிறித்துவம் பரவ இருந்ததை, ஏறக்குறைய இசுலாம் தடுத்து நிறுத்திவிட்டது என்றே கூறலாம்.[70]

கிறித்துவ சமயத்தில் அந்ததந்த வட்டாரக் கிறித்துவர் களின் தலைவர்களாக பிஷப் (Bishop) எனப்படும் ஆயர்கள் தங்களைத் தாமே தலைவர்களாக அறிவித்துக் கொண்டனர். இவர்களின் கீழ் குருமார்களும் (Priests), இளங்குருமார்களும் (Decons), சமயச் சடங்கில் உதவி செய்பவர்களும் (Catechists) என, இயற்கையாகவே ஒரு சமய ஆளுமை வட்டம் உருப் பெற்றது. கி.பி. 500 ஆண்டுகள் வரையில் இவ்வாறான பிஷப்பு கள், கிறித்துவம் பரவிய நாடுகளில் ஆட்சி செய்து வந்தனர். இவர்கள், வட்டார அளவில் (Diocease) சமயத்தலைவர்களாக வும், சமயம் சார்ந்த சொத்துக்களைக் கையாள உரிமை பெற்றவர்களாகவுமிருந்தனர். இன்றுவரையில் பிஷப்புகளின் இந்த ஆளுமை எல்லைகளில் மாற்றமில்லை என்றே கூறலாம்.

## மெய்யியல் கொள்கையில் முரண்பாடுகள்

இந்த பிஷப்புக்களையெல்லாம் ஒருங்கிணைத்து கட்டுப் படுத்தும் அதிகார மையம் அப்போது உருவெடுக்கவில்லை. ஏனைய பிஷப்புகளைப் போன்றே, உரோமை நகரிலும் ஒரு பிஷப் இருந்தார். உரோமப் பேரரசில், உரோமை நகரப்

---

69. History of Religion, p. 355.
70. Ibid, p. 356.

பிஷப்பைப் போன்றே கான்ஸ்டாண்டி நோபிள், அந்தியோக், அலெக்சாந்திரியா, எருசலேம் போன்ற பகுதிகளும் பிஷப்புகள் மிகுந்த செல்வாக்குடன் இருந்தனர். **உரோமப் பேரரசின் ஆளுமையும் வல்லாண்மையும், உரோமை நகரின் பிஷப்பை மற்ற வட்டாரப் பகுதிகளில் பிஷப்புகளுக்குத் தலைமையாக உயர்த்தியது**. பேரரசின் இம்முடிவை மற்ற பிஷப்புகள் ஏற்றுக் கொள்வதைத் தவிர (அந்தியோக்பிஷப்பைத் தவிர) வேறு வழி யில்லாமற் போயிற்று. இந்த ஆளுமை வளர்ச்சியின் முதிர்ச்சி யாக உரோமை நகரத்து பிஷப், போப் (Pope) என்ற தலைமைப் பதவிக்கு உயர்த்தப்பட்டார். போப் என்பதற்கு அப்பா என்பதே பொருளாகும். இக்கால அளவுகளில் உரோமப் பேரரசும் வீழத் தொடங்கியது (கி.பி. 476). பேரரசின் வீழ்ச்சிக்குப் பிறகு, போப்பாண்டவரின் சமய மற்றும் அரசியல் சார்ந்த செல்வாக்கு, எல்லையில்லாமல் விரிந்து போயிற்று. உலகக் கிறித்துவர்களின் தலைவராகப் போப்பாண்டவர் ஏற்றுக் கொள்ளப்பட்டார். ஆனாலும் அந்தியோக் போன்ற கீழை நாட்டு பிஷப்புகள் உரோம் தலைமையில் ஆளுமைக்குக் கட்டுப்பட மறுத்து வந்த னர். இவர்களை இணைக்கும் முயற்சிகள் பலவாறும் தோல்வி யுற்றன. இறுதியில் கி.பி. 1054ஆம் ஆண்டில்,

1. மேற்கைத் தலைமையிடமாக; கொண்ட உரோமன் கத்தோலிக்கத் திருச்சபையும் (Roman Caltolic Church)
2. கிரிஸ் நாட்டைத் தலைமையிடமாகக் கொண்ட கிரேக்கப் பழமைத் திருச்சபையும் (Greek - Orthodox Church)

பிரிந்து போயின.[71] இவை கிறித்துவ மெய்யியல் கொள்கை களிலும் முரண்பட்டன.

1. தூய ஆவி எனப்படுபவர், தந்தை (Father) - மகன் (Son) என்ற இரு உறவுகளின் வெளிப்பாட்டில் உணரப்பட்டவர் என்று கத்தோலிக்கத் திருச்சபை கூற, தூய ஆவி தந்தையிடமிருந்து மட்டுமே வெளிப்படுவதாகவும், மகனுக்கும் தூய ஆவிக்கும் தொடர்பில்லை என்று பழமைத் திருச்சபை கூறியது.
2. தூயவர்களின் (Saints) பணியை கத்தோலிக்கத் திருச்சபை ஏற்றுக் கொள்ள பழமைத் திருச்சபை மறுத்தது.
3. வினைகள் எனப்படும் பாவங்களை (Sins), திருச்சபைக்கு நன்கொடைகள் அளிப்பதின் வாயிலாகக் கழுவிக் கொள்ள லாம் என்பதை, பழமைத் திருச்சபை ஏற்றுக் கொள்ளவில்லை.

---

71. Ibid.

4. இடைப்பட்ட ஒறுப்பு இடம் (Purgatory) என்பது, குறைந்த அளவில் வினைகளை (Sins)ச் செய்தவர்கள், நரகத்துக்குச் செல்லாமலும், மோட்சம் என்ற விண்ணகத்துக்கும் போக இயலாமல், தங்கள் வினைகளுக்கான ஒறுப்பிடம் ஒன்றில், தங்கள் ஒறுப்புக்காலம் வரையில் துன்புற்றுப் பின்னர் விண்ணகம் செல்வர் என்பது திருச்சபையின் நம்பிக்கை. இவ்வொறுப்புக் காலத்தை அவ்வாறு இறந்தவர்களின் உறவினர்கள், திருச்சபைக்கு நன்கொடை அளிப்பதின் மூலம் குறைத்துக் கொள்ளலாம் என்ற கத்தோலிக்கத் திருச்சபையின் கருத்தை, பழமைத் திருச்சபை ஏற்றுக் கொள்ளவில்லை. இவ்வாறான ஒறுப்பிடம் (Purgatory) என்று ஒன்று இல்லை என்றும் சிலர் வாதிட்டனர்.

இவ்விடம் பற்றி நற்செய்தியில் எங்கும் கூறப்படவில்லை என்று பழமைத் திருச்சபை விளக்கமளித்தது. எனவே போப் பாண்டவரின் அதிகாரத்தைப் பயன்படுத்தி, இடை ஒறுப்பிடம் (Purgatory) என்பது ஏற்றுக் கொள்ளப்பட வேண்டிய மெய்யியல் கொள்கையே என்று, பிளாரன்ஸ் நகரத்துப் பேரவை கி.பி. 1431ஆம் ஆண்டில் முடிவெடுத்தது.

5. இயேசுவின் தாய் மறியன்னை, கன்னிமை கெடாமல் இயேசுவை ஈன்றெடுத்தாள் என்ற கொள்கையை ஏற்றுக் கொண்டே ஆகவேண்டும் என்று கத்தோலிக்கத் திருச்சபை கி.பி. 1854ஆம் ஆண்டில் முடிவெடுத்ததை, பல பிற திருச் சபைகள் ஏற்றுக் கொள்ளவில்லை.

6. போப்பாண்டவர் சமயக் கொள்கைகளில் முடிவெடுக்கும் போது, தவறான முடிவுகளை மேற்கொள்ளமாட்டார் என்று, ஒவ்வொரு கிறித்துவனும் நம்ப வேண்டும் என்ற கொள்கை, கி.பி. 1870ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டது. இதனையும் மற்ற திருச்சபைகள் ஏற்றுக் கொள்ளவில்லை.[71]

மேற்கண்ட செய்திகள் சில எடுத்துக்காட்டுகளே எனலாம். கொள்கை முடிவுகள் ஒருபுறமிருக்க, தனித்திருச்சபைகளுக்கும், பிரிந்து சென்ற திருச்சபைகளுக்கும் ஏராளமான அசையும், அசையாத செல்வங்கள் குவிந்து கிடந்தன. இச் செல்வங்களை யெல்லாம், போப்பாண்டவரிடம் ஒப்படைக்கப் பலர் விரும்ப வில்லை. தொன்றுதொட்டுப் பயன்படுத்தி வரும் வருமானங் களை இழக்க பழமைத் திருச்சபையும், பிரிந்து சென்ற திருச்

72. Ibid, pp. 357-358.

சபைகளும் விரும்பவில்லை என்ற உலகியல் கரணியமும், அரசியல் கரணியங்களுமே திருச்சபைகள் பிளவுபட்டதற்கான அடிப்படைகள் என்பது வரலாற்றாசிரியர்களின் கருத்துரை களாகும். **சொத்திலும் வருமானத்திலும் பங்கு போட்டுக் கொள்வதை விரும்பாத திருச்சபைகள், கொள்கை முரண் பாடுகள் என்ற முகமூடிகளை அணிந்து கொண்டன என்ப தும் சமய ஆய்வாளர்களின் முடிபுகளாகும்.**

## *கிறித்துவத்துக்கு எதிரான அறிவியல்*

இடைக்காலக் கிறித்துவம் ஐரோப்பாவில் அறிவியலுக்கும் ஆன்மீகத்துக்குமிடையே பெரும் போரே நிகழ்வுற்றது என லாம். அறிவியல் கண்டுபிடிப்புகள் யாவும் சமய நோக்கில் ஆய்வு செய்யப்பட்டன. விவிலியத்தில் சொல்லப்படாத அறிவியல் கருத்துகள் தடைசெய்யப்பட்டன. அறிவியலாளர்களால், சமயத் தலைமைக்கு விளக்கம் கொடுக்க இயலவில்லை. அறிவியல் சிந்தனைகளைப் புரிந்து கொள்ளும் அறிவுத்திறன் சமயத் தலைமைக்கு அறவே இல்லை. புதிய சிந்தனையாளர்கள் சிறை யிலடைக்கப்பட்டனர். தாங்கள் சொன்ன கருத்துக்களைத் திரும்பப் பெற்றுக் கொள்ளுமாறு வலியுறுத்தப்பட்டனர். ஏற்றுக் கொண்டவர்கள் விடுவிக்கப்பட்டனர். மறுத்தவர்கள் கொலை செய்யப்பட்டனர்.

இங்கிலாந்தைச் சார்ந்த தத்துவயியலாளரும் அறிவியல் அறிஞருமான **உரோஜர் பேகன்** (Roger Bacon, 13th C.A.D.,) பல்லாண்டுகள், துறவிகளின் கட்டுப்பாட்டிலிருந்த சிறைக்குள் வாடினார். **கோப்பர் நிகசின்** (Copernicus) கண்டுபிடிப்புகள் தடைசெய்யப்பட்டன. இத்தாலிய அறிவியலாளர் **ஜியார் டோனா புருனோ** (Giordano Bruno) மற்றும் **உலூசிலியோ வானினி** (Lucilio Vanini) ஆகிய இருவரும், உலகமானது கதிரவனைச் சுற்றி வரவில்லை என்று கூறுமாறு வற்புறுத்தப் பட்டனர். கலிலியோவும் அவ்வாறே ஒறுக்கப்பட்டார். முதலிருவரும் தூக்கிலிடப்பட்டனர், **கலிலியோ** இருட்டறை யில் அடைக்கப்பட்டுப் பிறகு விடுவிக்கப்பட்டார். மிகச்சிறந்த வானியல் அறிஞரான கலிலியோ, தொடர்ந்து பன்னாட்கள் இருட்டில் அடைக்கப்பட்டிருந்ததால், அவர் வெளியே வந்த போது அவரது கண்பார்வை மங்கிப் போயிற்று. இறுதியில் பார்வையை இழந்தார். கி.பி. 1559ஆம் ஆண்டில் திருச்சபை

யானது தடைசெய்யப்பட்ட அறிவியல் நூல்களின் பட்டிய லொன்றை (Index librorum prohibitorum) வெளியிட்டது. அறிவிய லாளர்கள், மந்திரவாதிகள் என்றும், பேய்களின் உதவியால் தந்திரங்களைச் செய்பவர்கள் என்றும் புனித ஆணையத் தினால் (Holy Inquisition) கருதப்பட்டனர்.

கிறித்துவம் தனது சமயத்துக்காக உயிர் துறந்தவர்களை (Martyrs)ப் புனிதர்கள் (Saints) எனப் போற்றுகிறது. உலகெங்கும் கிறித்துவத்துக்காக உயிர் துறந்தவர்கள் பல்லாயிரக்கணக் கானோர் ஆவர். இப்புனிதர்களின் எண்ணிக்கையைக் காட் டிலும், கிறித்துவம் கொன்று குவித்த அறிவியலாரின் எண் ணிக்கைக் கூடுதலானது என்பது ஆய்வாளர்களின் முடிபு களாகும். உலகின் எந்தச் சமயமும், இவ்வளவு எண்ணிக்கை யிலான அறிவியல் அறிஞர்களைக் கொன்று குவிக்கவில்லை என்பது, மாந்த நேய அடிப்படையில் தொடங்கப்பட்ட கிறித்து வத்துக்கு ஒரு கரும்புள்ளியேயாகும்.

இடைக்கால ஐரோப்பாவில் எழுந்த புதிய சிந்தனைகள், உரோமன் கத்தோலிக்கத் திருச்சபைக்கு எதிரான அலைகளை உருவாக்கின. போப்பாண்டவரின் தலைமையை ஏற்க மறுத்தவர்களின் பட்டியல் மிக நீளமானது. இவைகளை உரு வாக்கியவர்களை சீர்திருத்தச் சபையினர் (Protestants) என்று பொதுவாக அழைத்தனர். அவைகளில் குறிப்பாகச் சொல்லப் படும் சில திருச்சபைகளாவன: மார்ட்டின் உலூத்தர் (Martyn Luther) தலைமையிலான உலூத்தரன் திருச்சபை, செர்மனி - ஸ்காண்டி நேவிய நாடுகளில் வளர்ச்சியுற்றது. கால்வின் (Calvin) என்பார் உருவாக்கிய கால்வினியத் திருச்சபை, சுவிட்சர்லாந்து நெதர்லாந்து போன்ற நாடுகளிலும், பிரெஸ்பெட்டிரியன் சபை ஸ்காட்லாந்திலும், ஆங்கிளிக்கன் சபை இங்கிலாந்திலும் பரவத் தொடங்கின.

இதுவரையில் எதிர்க் கேள்வி கேட்க ஆளில்லாதிருந்த உரோமன் கத்தோலிக்கத் திருச்சபையின் தலைமையை, மேற் கண்ட சீர்திருத்தச் சபைகள் அசைத்துவிட்டன. ஐரோப்பா வில் ஏற்பட்ட இச்சமய சீர்திருத்தங்கள், ஐரோப்பிய அரசியல் மற்றும் பொருளியல் கூறுகளையும் மாற்றியமைத்தன.



## கிறித்துவத்தின் திருச்சபைகள்

கி.பி. 14ஆம் நூற்றாண்டில், ஐரோப்பாவில் ஏற்பட்ட சமயச் சீர்திருத்தங்கள், கிறித்துவ சமயத்திலும், பொருளியல் மற்றும் அரசியல் துறைகளிலும் பெரிய மாற்றங்களைத் தோற்றுவித்தன. போப்பாண்டவரின் ஆளுமைக்குப் பெரும் அறை கூவல் விடப்பட்டது.

### *மார்ட்டின் உலூத்தர்*

### (Martyn Luther)

### *கி.பி. 1483–1546*

போப்பாண்டவரின் ஆளுமையை முதன்முதலில் எதிர்த்துப் போர்க்குரல் கொடுத்தவர் இயற்கையிலேயே அறிவாளியான உலூத்தர், இளமையில் தூய அகஸ்தீன் குருமடத்தில் படித்துப் பட்டம் பெற்றார். கி.பி. 1507ஆம் ஆண்டில் கிறித்துவக் குருவாக உயர்த்தப்பட்டார். இவர் கி.பி. 1510-11 ஆண்டுகளில் உரோமை நகருக்குச் சென்றார். அங்கு அப்போது வழங்கப் பட்ட வினை மன்னிப்புச் சீட்டுகளின் சீர்கேடுகளைக் கண்ணுற்று, அதற்கு எதிராகப் பேசினார். கி.பி. 1517ஆம் ஆண்டில், உரோமன் கத்தோலிக்கத் திருச்சபைக்கு எதிரான கொள்கை விளக்கங்கள் அடங்கிய அறிக்கையை, விட்டன்பர்க் (Wittenberg) தேவாலயக் கதவில் ஒட்டினார். இதனால் உரோமைக்கு வருமாறு ஆணையிடப்பட்டார். போப்பாண்டவரைச் சந்திக்க மறுக்கவே, கிறித்துவ சமயத்திலிருந்து வெளியேற்றப்பட்டார். போப்பாண்டவரின் ஆணையைப் பொதுவிடத்தில் எரித்தார். உரோமத் தலைமையை மிகக் கடுமையாக எதிர்த்தார். உலூத்தருடைய கொள்கைகள் அடங்கிய நூல்களை அழிக்கு

மாறு உரோமையிலிருந்து ஆணை பிறந்தது.[72] மறுபடியும் தன்னிலை விளக்கம் அளிக்க வருமாறு கேட்டுக் கொண்டதை யும் உலூத்தர் ஏற்கவில்லை. கி.பி. 1525ஆம் ஆண்டில், குரு வாகப் பட்டம் பெற்றிருந்த உலூத்தர், கத்தரினாவான்போரா என்ற கிறித்துவப் பெண் துறவியை (nun) மணந்து கொண்டார். விவிலியத்தை செர்மன் மொழியில் எழுதினார். **செர்மானிய இலக்கிய உலகில் உலூத்தரின் மொழி மாற்ற விவிலியம் மிகச் சிறந்த இலக்கியமாக இன்றும் கருதப்படுகின்றது**.

தொடக்கத்தில் செர்மனியில் பரவிய அவர்தம் சமயம், பிறகு ஐரோப்பிய நாடுகளிலும் அமெரிக்கா, ஆப்பிரிக்கா, ஆசியா போன்ற நாடுகளிலும் பரவியது. இன்று, சீர்திருத்தத் திருச்சபைகளில் உலூத்தரின் சமயப் பிரிவே எங்கும் பரவலாக அறியப்படுகின்றது.

## *ஜான் கால்வின்*
## (John Calvin, 1509-64)

பிரான்ஸ் நாட்டிலுள்ள நோயோன் (Noyon) நகரில் பிறந்தவர். பாரீஸ் நகரில் இலத்தீன் பயின்றார். பின்னர் ஆர்லியன்ஸ் நகரில் சட்டம் கற்றார். பின்னர் அவருக்குக் கிறித்துவ மெய்யியல் கொள்கைகளில் ஆர்வம் பிறந்து, அவற்றைக் கற்றுத் தெளிந்தார். கற்றதின் விளைவாகப் புதிய சிந்தனைகள் தோன்றின. கிறித்துவத்தில் புதிய சிந்தனைகள் பற்றி மக்களிடையே எடுத்துரைத்தார். இவரது கருத்துக்களுக்கு எதிர்ப்புகள் வலுக்கவே, ஒறுப்புக்கு அஞ்சி, பிரான்சைவிட்டு வெளியேறினார். பாசல் நகரில் (Basel) தனது புதிய சிந்தனை களை (Christiane religions institutio) வெளியிட்டார். கி.பி. 1536இல், ஜெனிவா நகரில் இவரது சிந்தனைகளுக்கு நல்ல வரவேற்புக் கிடைத்தது. அங்கு அவருக்கு **பாரல்** (Guillaume Farel) என்ற நல்லிணக்க நண்பர் கிடைத்தார். இருப்பினும் இவரது கொள்கைகளுக்கு அங்கும் எதிர்ப்பு வலுக்கவே, கி.பி. 1538இல், அங்கிருந்து வெளியேற்றப்பட்டார். பின்னர் ஸ்ட்ராஸ்பர்க்

---

72. Martin Luther: His doctrine is based on the Augsberg Confussion (1530), the Apology (1531), two catechisms and the formula of concord. It emphasizes justification by faith alone, the importance of scripture and the priesthood of all believers. Three sacrements are recognised: Baptism, Eucharist and Penance. - Cambridge Encyclopedia.p. 674.

நகரில் குடியேறினார். அங்குப் புதிய ஏற்பாட்டு நூல் பற்றிய விளக்கவுரை எழுதினார். கி.பி. 1541இல் திருமணம் செய்து கொண்டார். சின்னாட்களில், ஜெனிவா நகரத்து மக்கள் கால்வினைத் திரும்பவும் அழைத்தனர். கி.பி. 1555 ஆண்டு களில், ஜெனிவா நகரத்தின் முழு நம்பிக்கையையும் பெற்றார். சீர்திருத்தச் செம்மல் (Father figure of Reformed Theology) என்று போற்றப்பட்டார். இவருடைய விளக்கவுரைகள் மற்றும் பழைய புதிய ஏற்பாட்டு நூல்களின் ஆய்வுகள், கி.பி. 1617ஆம் ஆண்டில் தொகுக்கப்பட்டு வெளியிடப்பட்டன.[73]

**நற்செய்தி (Gospel)யில் கூறப்படாத எக்கொள்கையையும் சீர்திருத்தக்காரர்கள் ஏற்கவில்லை**. திருச்சபைக்கு அளிக்கப் படும் நன்கொடைகளால், பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன என்ற விளக்கத்தையும் ஏற்கவில்லை. இறைவன் மீது கொள்ளும் நம்பிக்கையே (Faith) அனைத்திற்கும் அடித்தளமானது என் பதை உறுதி செய்தனர். ஏழு அருங்கொடைகள் (Sacrements) பற்றிய திருச்சபையின் கொள்கையைச் சீர்திருத்தச் சபையார் ஏற்றுக் கொள்ளவில்லை. எல்லாவற்றிற்கும் மேலாக, போப் பாண்டவரின் மேலாண்மையை திட்டவட்டமாக மறுத்தனர். சமயக் குருக்களை மையப்படுத்தியிருந்த நடைமுறையை விடுத்து, தனியொரு கிறித்துவனைச் சீர்திருத்தச் சபைகள் மையப்படுத்தின. சமயத் தலைமையை கூட்டு ஆளுமையின் கீழ்க்கொண்டு வந்தனர். செர்மனியில், உலூத்தரன் சபை, சமயத் தலைமையை மன்னர் களிடம் கொடுத்தது. கால்வினியச் சபை கூட்டுத் தலைமையிடம் கொடுத்தது. இங்கிலாந்தில் சமயம், மன்னர் கைக்கு மாறியது.

## ஐரோப்பாவில் கத்தோலிக்கத் திருச்சபை

பிரிந்து சென்ற சீர்திருத்தச் சபைகளின் அதிரடித் தாக்குதல் களுக்குள்ளான கத்தோலிக்கத் திருச்சபை, மேலும் பிரிவுகள் தோன்றாதவாறு எதிர்த்தாக்குதல்களைத் தொடுத்தது. எதிர்ப் பலைகளை ஓரளவுக்குக் கட்டுப்படுத்தியது. இயேசு அவை என்ற அமைப்பு, கத்தோலிக்கத் திருச்சபையின் ஒருமைப்பாட்டை நிலைநிறுத்தப் பெரும் பணியாற்றியது. அதற்கான விளைவு களும் நன்றாகவே அமைந்தன. ஏறக்குறைய கி.பி. 16ஆம் நூற் றாண்டுக்குப் பிறகு பிரிவினைகளை ஓரளவுக்குக் கத்தோலிக்கத் திருச்சபை தடுத்து நிறுத்திவிட்டது என்றே கூறலாம். கி.பி. 1870

73. Ibid, p. 202.



5

இல் சில சிறிய குழுக்கள் தெற்கு செர்மனியிலும், சுவிட்சர் லாந்திலும் பிரிந்து போயின. போப் பாண்டவருக்குத் தவறு செய்யும் வாய்ப்பேயில்லை என்ற புதிய ஆணையை இவர்கள் ஏற்க மறுத்தனர். கி.பி. 1920ஆம் ஆண்டில் செக்கஸ்லாவோக்கியா வில் சிலர் போப்பாண்டவரின் ஆளுமையினின்றும் பிரிந்து போயினர். இதற்கு முழுமையானது அரசியல் கரணியமேயாகும். புதிதாக உருப்பெற்ற நாட்டுத் தலைமைக்கும் போப்பாண்ட வருக்குமிடையே ஏற்பட்ட கருத்து வேறுபாடுகளே இதற்குக் கரணியமாகும். தனியுரிமை கொண்ட செக் திருச்சபை தோற்றுவிக்கப்பட்டது. இத்திருச் சபைக்கும் கத்தோலிக்கத் திருச்சபைக்கும் கொள்கையளவில் எவ்விதமான முரண்பாடும் இல்லை எனலாம்.

**கத்தோலிக்கத் திருச்சபை ஐரோப்பாவின் தென்பகுதி களில் பரவலாக வேரூன்றியது. போர்த்துக்கல், ஸ்பெயின், இத்தாலி, அயர்லாந்து, பெல்ஜியம், ஆஸ்திரியா, போலந்து, பிரான்ஸ் போன்ற நாடுகளில் முழுமையாகவும், அங்கேரி, செக்கஸ்ல வோக்கியா, யூகோஸ்லாவியா, செர்மனி, வடக்கு அல்பேனியா, இங்கிலாந்து, சுவிட்சர்லாந்து போன்ற நாடு களில் பகுதி மக்களாகவும் வாழ்கின்றனர். சிதைந்து போன சோவியத் யூனியனில் வாழ்ந்திருந்த இலித்துவேனியர்கள், இலாத்தீவினியர்கள் போன்றோர் கத்தோலிக்கத் திருச்சபை யின் உறுப்பினர்களாவர்.**

ஐரோப்பாவுக்கு வெளியே இலத்தீன் அமெரிக்க நாடுகள், அமெரிக்க ஐக்கிய நாடுகள், கனடா போன்ற மேலை நாடு களிலும், ஆப்பிரிக்கா ஆசியா போன்ற நாடுகளிலும் பரவலாக அறியப்பட்டுள்ளது.

கிரேக்கத்தின் பழமைத் திருச்சபை (Greek Orthodox Church), பைசாண்டியம் உள்ளிட்ட கிழக்கு மற்றும் தென்கிழக்கு ஐரோப்பாவில் பரவலாக வேரூன்றியுள்ளது. இத்திருச்சபையில் கிரேக்கர்கள், பல்கேரியர்கள், செர்பியர்கள், மாசிடோனியர்கள், உருமேனியர்கள் பரவலாக இணைந்துள்ளனர். உருசிய நாட்டில் கி.பி. 988 முதல் கிறித்துவம் நிலைபெறத் தொடங்கியது. இளவரசர் விளாடிமிர் இந்தத் திருச்சபைக்குத் (உருசிய பழமைத் திருச்சபை - Russian Orthodox Church) தனது பேராதரவை நல்கி னார். இத்திருச்சபையில் உருசிய நாட்டின் பல்வேறு இனத்தவர் இணைந்திருந்தனர். உருசிய நாட்டின் சார் (Tsar) மன்னரை

இத்திருச்சபை சார்ந்திருந்தது. கி.பி. 1589ஆம் ஆண்டில், இத்திருச்சபையினின்றும் சிலர் விலகிச் செல்ல முயன்றனர். ஆனால் இம்முயற்சி வெற்றி பெறவில்லை. மாபீட்டர் (Peter the great), கி.பி. 1721ஆம் ஆண்டில், உருசியத் திருச்சபையைத் தனது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்து, தானே அதன் தலைவரு மானார். அச்சமயத் தலைவர்கள், நீண்ட சட்டை (அங்கி - Cassocks) அணியமட்டும் அனுமதிக்கப்பட்டனர்.

## உருசிய பழமைத் திருச்சபை

உருசிய பழமைத் திருச்சபையை எதிர்த்துச் சில குருமார்கள் கிளர்ச்சி செய்தனர். சமயத்தின் உயர் பொறுப்பிலிருந்தவர்களை எதிர்த்தனர். இக்கால அளவுகளில் **நிக்கான்** (Nikon) என்ற சமயத் தலைவர், சமய நூல்களை புதுப்பித்தும், வேறு சில மாற்றங்களையும் செயல்படுத்த முனைந்தார். பழம்பெரும் நம்பிக்கையாளர்களுக்கும் நிக்கானியர்களுக்கும் இடையே முரண்பாடுகள் தோன்றின. பழமைவாதிகள், மெய்யியல் கொள்கைகளில் வேறுபடவில்லை. மாறாக, சமயச் சடங்குகள் மற்றும் நடைமுறைகளில் மாறுபட்டனர். குறுக்கத்தின் (சிலுவையின்) அமைப்பு T போன்று இருக்க வேண்டும், + போல் இருக்கக் கூடாது என்றனர். அல்லேலூயா என்ற சொல்லை, மூன்று முறைக்குப் பதில் இருமுறையே கூற வேண்டும் என்றனர். இயேசு என்ற பெயரை உருசிய மொழியில் ஈசுஸ் (Iisus) என அழைத்தனர். அச்சொல்லை இசுஸ் (Isus) என்று சுருக்கிக் கூற வேண்டும் என்றனர்.[74]

இந்தப் பழமையானவர்களிலும் கூட ஒற்றுமையாக இல்லை. இரு குழுக்களாகப் பிரிந்துபோன இவர்கள், கிறுக்குத் தனமான கொள்கைகளை அறிவித்துக் கொண்டேயிருந்தனர். தொழிலாளர், வேளாண்மை செய்வோர், அரசு அலுவலர்கள் போன்ற பிரிவினரை மென்மேலும் குழப்பிக் கொண்டிருந்த தால், உருசிய பழமைத் திருச்சபையும், உருசிய அரசும், இவர் களைக் கடுமையாக ஒறுத்தது. இவர்கள் வோல்கா மற்றும் சைபீரியப் பகுதிகளுக்கு ஓடிப்போனார்கள். 1905ஆம் ஆண்டில் பழமையாளர்களையும் அரசு ஒருவகையில் ஏற்றுக் கொண்டு சட்டமியற்றியது.



74. History of Religion, p. 365.

## கிறித்துவத் தொழிலாளர் இயக்கங்கள்

கி.பி. 15ஆம் நூற்றாண்டுகள் வரையில் திருச்சபையானது முதலாளித்துவ தனியுடைமைக் கொள்கையைப் பின்பற்றி வந்தது. இடைக்காலத்துக்குப் பிறகு ஏற்பட்ட தொழிற்புரட்சி, தொழிலாளர் என்ற புதிய குடியமைப்பை உருவாக்கியது. மாறி வந்த சமூகக் கொள்கைகள், **முற்காலத்து (feudal system) முறைமைகளை மாற்றும் சூழ்நிலையைத் தோற்றுவித்தன. நிகரமைக் கொள்கை (Socialism), பொதுவுடமை (Communism) போன்ற புதிய சிந்தனைகள் தோன்றும் நிலைகள் உருவாயின.** திருச்சபையும் தனது பழைய கோட்பாடுகளைக் களைந்து, புதிய உலகிற்கான சிந்தனைகளைக் கைக்கொள்ளத் தொடங்கியது. கி.பி. 19ஆம் நூற்றாண்டில், நிகரமைக் கொள்கைகளைக் கொண்ட உழைப்பாளர் வகுப்புகள் தோன்றின. கிறித்துவத் தொழிலாளர்கள், இக்குழுக்களால் கவரப்பட்ட நிலையில், திருச்சபையே முன்னின்று, கிறித்துவத் தொழிலாளர் இயக்கங் களைத் தோற்றுவித்தது. கி.பி. 1840ஆம் ஆண்டில் பிரான்ஸ் நாட்டில் இத்தகைய இயக்கம் தோற்றுவிக்கப்பட்டது. தொடர்ந்து 1880இல் பெல்ஜியத்திலும், கிறித்துவத் தொழி லாளர் கூட்டமைப்புத் தோற்றுவிக்கப்பட்டது. இத்தகைய தொழிலாளர் கூட்டமைப்புகள் பிற்காலத்தில் அரசியல் இயக்கங் களாகவும் உருவெடுத்தன. பெல்ஜியம், இத்தாலி, செர்மனி போன்ற நாடுகளில் கிறித்துவ அரசியல் இயக்கங்கள் தோன் றின. இதனைத் தொடர்ந்து கத்தோலிக்க இளைஞர் இயக்கங் களும் மகளிர் இயக்கங்களும், விளையாட்டு ஆணையங்களும் கத்தோலிக்கத் திருச்சபையினரால் தோற்றுவிக்கப்பட்டன.[75]

75. Ibid.

இடைக்காலத்தில் அறிவியலாளரை மந்திரவாதிகள் எனக் கூறிய கத்தோலிக்கத் திருச்சபை, கி.பி. 20ஆம் நூற்றாண்டில், தனது அறிவியல் தொடர்பான அணுகுமுறையை முற்றிலும் மாற்றிக் கொண்டது. 1910ஆம் ஆண்டில் அமெரிக்காவில் கிறித்துவ அறிவியல் கழகம் தோற்றுவிக்கப்பட்டு, அறிவியலையும் விவிலியத்தையும் இணைக்கும் முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டன. கிறித்துவ மெய்யியலாளர்கள், தற்காலத்திற்கேற்ற புதிய சிந்தனைகளை உருவாக்க முற்பட்டனர். சோவியத் யூனியன் போன்ற பொதுவுடமை நாடுகளில் கூட, கிறித்துவம் பொதுவுடைமைக் கொள்கையோடு அணுகிச் செயல்பட்டது, திருச்சபையின் புதிய கண்ணோட்டத்தைக் காட்டுவதாகவே அமைந்தது எனலாம்.



## கிறித்துப் பிறப்பாண்டுகளில் இந்தியச் சமயங்கள்

இந்தியச் சமயங்கள் கி.மு.வில் தொடங்கி, கி.பி. அளவில் பெரிதும் வளர்ச்சியுற்றன. இன்று இந்தியாவில் அறியப்படும் பிராம்மண (இந்து) சமயம், புத்த சமண சமயங்கள், இசுலாம், கிறித்துவம், பார்சி, சீக்கியம் போன்ற அனைத்து சமயங்களும் கி.மு. 1000 ஆண்டுகட்குப் பிறகு அறியப்பட்டவைகளே. இந்தியாவின் தொன்மைச் சமயமாக அறியப்படுவது தமிழ்ச் சமயமே. அது இந்தியாவுக்கு மட்டுமின்றி, மேற்கூறப்பட்ட சமயங்கள் அனைத்திற்கும் மூத்ததாகவும் முன்னோடியாகவும் விளங்குகின்றது. இந்திய, மேற்காசிய, மேலை நாட்டுச் சமயங்கள் யாவும் தமிழ்ச் சமயம் என்ற வேரில் தோன்றியவைகளே. அவ்வகையில் மேற்கண்ட சமயங்களுக்கெல்லாம் மூலமாக அமைந்திருந்த தமிழ்ச்சமயம் பற்றிய உண்மைகள், தற்போது ஒவ்வொன்றாக வெளிவரத் தொடங்கியுள்ளன. தமிழ்ச் சமயம் வேறு, பிராமண சமயம் என்ற இந்து சமயம் வேறு என்ற அடிப் படையை இன்றும் கூடப் படித்தவர்களாலும் உணர்ந்து கொள்ள முடியவில்லை. உலகின் முதல் சமயம் தமிழ்ச் சமயமே என்ற உண்மையை, உலகச் சமயங்களின் வரலாற்றை உன்னிப் பார்த்து உணர்ந்தோரால் புரிந்துகொள்ள இயலும்.

### ஆரிய சமயம்

ஆரியர்களின் நாடு எதுவென்பதில் பலரும் முரண்படுகின் றனர். சைபீரியப் பகுதிகள், நடு ஆசியப் பகுதிகள், டான்யூப் ஆற்றினையடுத்த நடு ஐரோப்பியப் பகுதிகள் பாஸ்டிக் கடற் கரைப் பகுதிகள் என்று பல்வேறு பகுதிகள் ஆரியர்களின்

தொன்மைக்கால வாழிடங்களாகச் சொல்லப்படுகின்றன.[76] எவ் வகையிலும், ஆரியர்கள் இந்தியாவின் தொன்மைக் குடிகள் அல்லர் என்பது தெளிவு. சிந்துவெளி நாகரிகம் அழிவுறத் தொடங்கிய காலத்தில் இந்தியாவுக்குள் ஆரியர்களின் வருகை நிகழ்வுற்றது என்பதும் தெளிவு. ஆரியர்கள், சிந்துவெளியில் வாழ்ந்திருந்த தமிழர்களைப் போரில் புறங்கண்டு, வட இந்தியப் பகுதிகளைப் பிடித்துக் கொண்டனர் என்று சென்ற நூற்றாண் டில் சொல்லப்பட்ட செய்தி முற்றிலும் தவறானது என்பது தற்போது ஏற்கப்பட்டுள்ளது. ஏனெனில், ஆரியர்கள் போரிடும் அளவிற்கு வலிமை வாய்ந்த போர்ப்படை எதனையும் பெற் றிருக்கவில்லை என்பதும், போரிடும் ஆற்றலும் தகுதியும் கூட அவர்களுக்கு இருந்ததில்லை என்பதும் இன்று மெய்பிக்கப் பட்டுவிட்டது.[77] **ஆடு மாடுகளை மேய்த்து வந்த சிறு சிறு குழுக்கள், வலிமை வாய்ந்த நாகரிக முதிர்ச்சி பெற்ற, போர் நுணுக்கங்களை அறிந்து முறையான போர்ப்படையைக் கொண்டிருந்த சிந்துவெளிப் பேரரசை வென்று வீழ்த்தினர் என்பது, ஆரியச் சார்புடையோர் கொடுத்த கற்பனைச் செய்திகளாகும்.**

ஆரிய என்ற சொல்லுக்குப் பெருமை, நிறைவு என்பதே பொருளாகும். ஆர் என்ற வேர்ச்சொல் தமிழில் காணப்படுவ தால், ஆரியர் என்ற சொல்லும் தமிழ்ச் சொல்லே என அறிக.[78] நாடோடியான கொச்சை மொழியைப் பேசிவந்த ஆரியர், சிந்துவெளித் தமிழின் கலப்பால் புதிய மொழியை உருவாக்கிக் கொண்டனர். அதுவே செம்மைப் படுத்தப்பட்ட மொழி என்னும் பொருள் கொண்ட சமற்கிருதம் என்ற சொல்லாகும். இப்புதிய மொழியையும் சிந்துவெளித் தமிழரே உருவாக்கிக் கொடுத் திருக்க வேண்டும். இம்மொழியிலேயே ஆரியர்களின் வேத நூல் சொல்லப்பட்டது, எழுதப்படவில்லை. ஆரிய வேதமான இரிக்கு வேதம் சொல்லும் செய்திகள், அக்காலத்தில் சிந்து வெளிப்பகுதிகளில் வாழ்ந்திருந்த தமிழரின் நாகரிக வாழ்க்கை முறையை விளக்குவதாகவே உள்ளன. இதனைத் தொகுத்தவர்

---

76. இந்திய வரலாறு, டாக்டர் ந. சுப்பிரமணியன், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை-98, 1989, ப. 27.

77. ரிக் வேத சம்ஹிதை, சுவாமி சிவத்தியாநாநந்த மகரிஷி, சாது அச்சுக்கூடம், இராயப்பேட்டை, சென்னை, 1937.

78. பூம்பொழில் ஆர்கைப் புள்ளொலி சிறப்ப - மணிமேகலை.7:119.

களில் பலருடைய பெயர்கள், தமிழ்ப் பெயர்களாகவே உள்ளன.[79] அவ்வகையில், **இரிக்கு வேதம் என்பது,[80] ஆரியரின் சமயநூல் என்பதைவிட, சிந்துவெளித் தமிழர்களின் வாழ்க்கை முறைமைகளை விளக்கும் இலக்கிய நூல் என்பதே சிறப்பான சிந்தனையாகும்.**[81]

இரிக்குவேதம், கி.மு. 1500-1000 ஆண்டுகளில் இயற்றப் பட்டிருக்க வேண்டும் என்பது பெரும்பாலான வரலாற்றாய் வாளர்களின் கருத்துரைகள் ஆகும். அவ்வேதத்தில் கூறப்படும் அக்கினி, சோமன், அசுவினி, இந்திரன், வாயு, வருணன் ஆகியோர், தமிழ்ப் பின்னணிகளைக் கொண்ட, தமிழரின் வணக்கத்துக்குரியவர்களே. விஷ்ணு என்னும் கடவுள், இரிக்கு வேதத்தில் சொல்லப்படவில்லை. பிரம்மாவைப் பற்றியும் இரிக்கு வேதம் தெளிவுபடுத்தவில்லை. வேதம் ஒன்றே என்றும் அது பின்னர் நான்காகப் பிரிக்கப்பட்டது என்றும் தேவநேயப் பாவாணர் கருதுகிறார்.[82]

தமிழகத்தின் நான்கு நிலங்களுக்கும் உரிய வழிபாட்டு முறைகள் நான்காக இருந்தனவென்றும், அந்நான் மறையை யொட்டியே பின்னர் ஆரிய வேதம் நான்காகப் பிரிக்கப்பட்டது என்பதும், கடைக்கழக இலக்கியங்கள் கூறும் நான்மறை,[83] தமிழ் மறைகளே என்பதும் தெளிவு. குறிஞ்சிநிலச் சேயோனுக்கும், முல்லைநில மாலுக்கும், மருதநில இந்திரனுக்கும், நெய்தல் நில வாரணனுக்கும் கடைப்பிடிக்கப்பட்டுவந்த மறைகளே நான்மறைகளாகும். இந்நான் மறைகளையும் அறிந்தோர் தமிழ கத்தில் பார்ப்பார்[84] என்ற வகுப்பாரே. இவர் கணியர்களின் பிரிவுகளிலொருவராவர்.

---

79. கண்ணுவன், கணாதன், பிரஸ்கண்ணுவன் என, கணியன் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபுப் பெயர்களை நோக்குக. எபிரேயத்தின் தாய்மொழி தமிழே, ம.சோ. விக்டர்.

80. உருக்கு என்பது உருக வைத்தல் இளகவைத்தல் என்றும் (to convince) பொருள்படும். வித்து என்ற தமிழ் மூலச் சொல்லே வேதம் எனத் திரிந்தது. எபிரேயத்தின் தாய்மொழி தமிழே, ம.சோ. விக்டர்.

81. மேலதே.

82. தமிழர் வரலாறு, ஞா. தேவ நேயப் பாவாணர்.

83. நான்மறை யந்தணர் நவின்ற வோதையும் - சிலப்பதிகாரம் 13:141.

84. மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிட - சிலப்பதிகாரம்.1:52.

ஆரிய வேதம் தோன்றிய காலத்துக்குப் பலநூறு ஆண்டு கட்குப் பிறகே பிராமணங்கள், உபநிடதங்கள், ஆரண்யகங்கள், போன்ற இலக்கியங்கள் படைக்கப்பட்டன. இவை, ஜைன புத்தக் கதைகளுக்கும் நூல்களுக்கும் மாற்றாக இயற்றப் பெற்றவைகளே.[85] புத்தசாதகக் கதைகள் போன்றே, ஆரியரின் கொள்கைகளை வலியுறுத்த பிராமணங்கள் தோன்றின.

ஆரிய சமயத்தில் இருவகையான நிலைகள் உள்ளனவாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். சமயச் சடங்குகளை சிறப்பாகச் செய்வதின்மூலம் தெய்வங்களைத் தமது வழிக்குக் கொண்டு வரலாம் என்றதொரு நிலை. இதன் வெளிப்பாடே ஓமங்கள் யாகங்கள் போன்ற சடங்குகளாகும். மற்றொன்று அறிவு வழி யால் இறைவனை அறியலாம் என்பதாகும். இவை முறையே கர்ம மார்க்கம், ஞான மார்க்கம் எனப்பட்டன.[86] இவைகளில், கர்ம மார்க்கம் என்பது வெற்றுச் சடங்குகளைக் கொண்டும், ஞான மார்க்கம் என்பது, எவராலும் புரிந்துகொள்ள இயலாத, ஏற்கப்படாத கொள்கைகளாகவும் விளங்கின. இவ்விரு மார்க்கங்களின் கொள்கை விளக்கங்கள் பெரும்பாலானவர் களால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. கர்ம மார்க்கத்தின் பொருளற்ற சடங்குகளைச் செய்விக்க ஏராளமான செல்வம் தேவைப்பட்டதால், வறியார் இச்சடங்குகளைப் பற்றி எண்ணியதேயில்லை. இவ்விரு மார்க்கங்களும், அவைகளின் பொருளற்ற நடைமுறைகளுமே, ஜைன-புத்த சமயங்கள் தோன்றுவதற்குக் கரணியங்களாய் அமைந்திருந்தன.

ஆரிய சமயத்தின் தொடக்க காலத்தில், ஆன்மா, அவதாரம், மறுபிறப்பு, சாதிக்கட்டுப்பாடு, முக்தியடைதல் போன்ற கொள்கைகள் எதுவும் கடைப்பிடிக்கப் படவில்லை. அவ்வாறு சொல்லப்பட்ட செய்திகள் எல்லாம், கி.பி. இரண் டாம் நூற்றாண்டிற்குப் பிறகே, ஆரிய சமயத்தில் இணைக்கப் பட்டன. இறந்தபின் உயிர் எங்கே போகிறது, ஆன்மா என்ற ஒன்று எங்குள்ளது போன்ற சிக்கலான கொள்கைகளைப் பற்றி ஆரியர்கள் சிந்திக்கவில்லை. அவர்களுக்கு அவ்வாறான சமயக் கொள்கையும் இருந்ததில்லை. மோட்சம், நரகம், தீவினை,

---

85. ரிக்வேத ஸம்ஹிதை, முன்னுரை.

86. மேலதே, முன்னுரை.

மறுபிறப்பு, அவதாரங்கள் போன்ற நம்பிக்கைகள், மிகவும் பிற்காலத்தில் இணைக்கப்பட்டவைகளே. வேதங்கள் சொல் லாத சாதிவகுப்பு முறையை, கி.மு. 1000 ஆண்டுகட்குப் பிறகே, ஆரியர்கள் தங்களைக் குமுகாயத்தில் நிலை நிறுத்திக் கொள்ள ஏற்படுத்திக் கொண்டனர். இரிக்கு வேதத்தில் சொல்லப்படும் புருஷ சூக்தம் என்ற ஞாலப் படைப்பு, சாதிமுறைகள், மனுநீதிச் சட்ட வடிவங்கள் போன்றவை, கி.பி. இரண்டாம் நூற் றாண்டுக்குப்பிறகு எழுதப்பட்டு, இரிக்குவேதத்தில் திணிக்கப் பட்டதாக, டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் கருதுகிறார். இதனை மெய்ப்பிக்கப் பல்வேறு சான்றுகளையும் காட்டுகிறார்.[87]

ஆரிய வேதம், சிவன் - விஷ்ணு - பிரம்மா என்ற முத்தெய்வங்கள் பற்றிய எந்த அறிவிப்பையும் தெரிவிக்க வில்லை. ஆக்கல், அழித்தல், காத்தல் என்ற மூன்று தெய்வங் களின் தொழில் பற்றியும் கூறப்படவில்லை. பார்வதி, சரசுவதி, இலக்குமி போன்ற பெண் தெய்வங்கள் வேதத்தில் காணப்பட வில்லை. சுப்பிரமணியன், விநாயகர் போன்ற கடவுளர்களும் அறியப்படவில்லை. ஆரியர்கள், கொல்லாமை என்ற கொள்கை பற்றி எதையுமே அறியாதவர்கள். உயிர்களைக் கொன்று உணவாகக் கொள்வது, அவ்வாறே உயிர்களைப் பலியிட்டு சடங்குகளையும் வேள்விகளையும் செய்வது போன்ற மறக் கோட்பாட்டில் வாழ்ந்திருந்தவர்கள். கொல்லமை, இறைச்சி யுண்ணாமை, மதுவருந்தாமை போன்ற அறக் கொள்கைகள் (அகிம்சை) பற்றி ஆரியர்களுக்கு எதுவும் தெரியாது. இக் கொள்கை, முற்றிலும் நாகரிகப் பண்பாட்டில் வளர்ந்த சிந்தனையாளர்களிடையே வேரூன்றியிருந்ததாகும். இக் கொள்கைக்கு உரிமையாளர்களாகத் தமிழ்க் கணியர்கள் விளங்கினர்.[88] எவ்வுயிரையும் தம்முயிர்போல் எண்ணி, யாதும் ஊரே என்றும் யாவரும் கேளிர் என்றும் கருதிய உயர்ந்த மாண்பைப் பெற்றிருந்தவர்கள் தமிழ்க் கணியர்களே.

எனவேதான் ஆரியச் சமயம் பற்றிய ஆவ்வுகளில் அச்சமயம் உயர்ந்த மெய்யியல் கொள்கையைக் கொண்டிருந்ததாக அறிய இயலவில்லை என்று ஆய்வாளர்கள் கருதும் நிலை தோன்றியது. மொத்தத்தில் ஆரிய சமயமென்பது நாகரிகமற்ற நாடோடி

---

87. சூத்திரன் யார்? டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்.

88. வள்ளுவத்தின் வீழ்ச்சி, வெங்காலூர் குணா.

வாழ்க்கை முறைகளை எதிரொலிப்பதாகவே அமைந்திருந்தது என்பதை அறியலாம் எவ்வகையிலான கொள்கைப்பிடிப்பும் இல்லாத அச்சமயத்தை, சடங்குகள் மற்றும் ஆரவார ஒலி மந்திரங்களால் தாங்கிப் பிடிக்க நினைத்த ஆரியர்களின் முயற்சி, கி.மு. 700 ஆண்டுகளில் எடுபடவில்லை என்பது, அடுத்து நிகழ்வுற்ற வரலாறுகள் வாயிலாக அறியலாம்.

## இந்து என்ற சொல்லின் பொருள் யாது?

இந்து சமயம் என்ற பெயர் எக்காலத்தில் அறிமுகப் படுத்தப்பட்டது என்பதை அறிய இயலவில்லையாயினும், ஆரியர்களே, ‘இந்து’ என்ற சொல்லைப் பயன்படுத்தியதற்கானச் சான்றுகள் இல்லை. கிறித்துவன் (Christian) என்ற சொல்லை அச்சமயத்தை எதிர்த்தவர்கள் பயன்படுத்தியது போல, இந்து என்ற சொல்லை, அச்சமயத்துக்கு எதிரானவர்களே பயன்படுத் தினர் என்பது தெளிவு. ஆரிய வேதங்களிலும், வடநாட்டுப் பிற சமய இலக்கியங்களிலும், தமிழகத்தின் கடைக்கழக இலக்கியங் களிலும், இந்து என்ற சொல், எங்கும் பயன்படுத்தப்படவே யில்லை. இந்தியாவெங்கும் கண்டுபிடிக்கப்பட்ட கல்வெட்டு களில் ஒன்றில் கூட இந்து என்ற சொல் காணப்படவில்லை.

பிராமண சமயம் எனப்பட்ட ஆரிய சமயம், தமிழ்ச் சமயத்தின் பெரும் பகுதிகளைத் தன்னுள்ளே வாங்கிக் கொண்டு, பிராமணர்களே கடவுள் படைப்பில் உயர்ந்தவர்கள், மற்றவ ரெல்லாம் பிராமணர்களுக்கு ஊழியம் செய்யப் பிறந்தவர்கள் என்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்டு, பலநூறு ஆண்டுகளில் பல்வேறு இந்திப் பண்புகளை ஈர்த்துக் கொண்டு வளர்ச்சியடைந்தது எனக் கூறலாம். பிராமண சமயம் என்று அறியப்பட்ட ஆரிய சமயம், முழுக்க முழுக்கத் தமிழ்ச் சமயத் தினின்றும் தோன்றியதே என்பதைப் பல்வேறு ஆய்வுகளால் நிறுவலாம். ஆனால், அது தன்னிலே உருவான சமயம் போன்ற தொரு தோற்றத்தை மிகவும் தந்திரமாக பிராமணர்கள் வெளிப் படுத்தினர்.

சிந்து என்பது, வடமேற்கு இந்தியப் பகுதிகளைக் குறித்த சொல்லாகும். அது பொதுவாக நீரைக் குறித்தும், சிறப்பாக ஆற்றைக் குறித்தும் சொல்லப்பட்ட தமிழ்ச் சொல்லாகும். தமிழ்ப் பேரரசு கோலோச்சிய அப்பகுதி, தமிழ்ப் பெயராலேயே

சிந்துவெளி என அழைக்கப்பட்டது. சிந்து என்ற தமிழ்ச் சொல், இந்தூ (Indu - u) என்று பாரசீக மொழியில் சொல்லப் பட்டுள்ளது.[89] மேலும் ஹிந்தூ என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. பாரசீக மொழியின் இலக்கிய ஆவணங்கள் சிந்து என்ற சொல்லைச் சுட்டுகின்றன. எபிரேய மொழியின் பழைய ஏற்பாட்டு நூலில் ஒட்டு (Hoddu) என்ற சொல்லால், சிந்துப் பகுதி குறிக்கப்பட்டுள்ளது.[90] இன்றும் கூட இசுரேலிய அரசு, ஒட்டு என்ற பெயரலேயே இந்தியாவைக் குறிப்பிடுகின்றது. இச்சொல்லுக்கான விளக்கம், எந்த விடத்திலும் அறியப்பட வில்லை. இது ஓடு (ruṇ) என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாக இருக்கலாம். ஏனெனில், நகர் (nagar) என்ற சொல், ஆற்றைக் குறித்து எபிரேய மொழியில் சொல்லப்பட்டுள்ளதை நோக்கும் போது, அதே பொருளைக் கொண்ட (to move or to run) ஓடு என்ற தமிழ்ச் சொல், ஆற்றைக் குறித்ததே என அறியலாம். ஓடு என்ற தமிழ்ச் சொல்லே, ஓடு - ஒட்டு என்று திரிபுபட்டது என்க.

சிந்தும் தன்மை கொண்ட நீரைச் சிந்து எனத் தமிழர்கள் உரைத்தனர். விண்துளி என்ற தமிழ்ச் சொல், வானினின்றும் இறங்கும் நீர்த்துளியைக் குறித்தது. விண்துளி - விந்துளி - விந்து என்றவாறும் சொல்லப்பட்டது. விந்து - நீர்த்துளி. விந்து என்ற தமிழ்ச்சொல், பிந்த் (Bindh) என்று வடமொழியில் கூறப்பட் டுள்ளதை, செர்மானிய அறிஞர் மாக்ஸ் முல்லர் சுட்டிக் காட்டி, இந்திரன் (Indra) என்று பெயருக்கு வேர்ச்சொல், பிந்த் என்ற சமற்கிருதச் சொல்லே எனக் காட்டுகிறார். பிந்த் என்பது விந்து என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே என்பதை மாக்ஸ் முல்லர் (Max Muller) அறியவில்லை. இந்திரன் என்ற சொல்லுக்கு மழை என்ற பொருளே வடமொழியில் சொல்லப்பட்டுள்ளது.[91] விந்து - விந்திரன் - இந்திரன் என்றவாறு நீண்ட தமிழ்ச் சொல்லே, இந்திரா என்று வடமொழியிலும் கூறப்பட்டுள்ளது. விண்துளி என்ற தமிழ் மூலச் சொல்லே, விந்து எனவும், அது சிந்துளியாக நகர்ந்து செல்லும் போது சிந்து எனவும் கூறப்

---

89. India: Hoddu (Hebrew) of old Persian Indu-u or Hi-in-du-is, mentioned as the eastern limit of the Empire of Ahasuerus.
 - The Dictionary of the Bible. p. 387.

90. Esther, 1:1.

91. இந்திரா - மாதளி. மாதளி என்பதும் தமிழ்ச் சொல்லே. மாதளி = மாமழை எனப்படும்.

பட்டது. விந்து - சிந்து - இந்து என்றவாறு பாரசிக மொழியிலும் திரிபுபட்டது. எனவே, இந்து என்ற சொல், ஒரு நாட்டைக் குறித்துச் சொல்லப்பட்டுப் பின்னர் அந்நாட்டு மக்களின் சமயத்தையும் குறித்தது. கி.பி. 700 ஆண்டுகளுக்குப் பிறகு பாரசீகத்தை வென்ற இசுலாமியர், இந்தியாவிலிருந்த பிராமணர் களை சிலை வழி பாட்டாளர்களாகக் (Statue worshippers)க் கருதினர். இசுலாத்துக்கு எதிரான இச்சிலை வழிபாடு செய்த பிராமணர்களை அச்சமயத்தினர் வெறுத்தனர். தங்கள் சமயத் தின் பகைவர்களாகவும் கருதினர். பிராமணர்கள் பின்பற்றிய சமயத்தை, இந்து சமயம் என்று குறித்தது, பாரசீக இசுலாமியர் களே என்பது தெளிவு. இச்சமயத் தலைவர்களான பிராமணர் களைத் திருடர்கள் என்றும் கூறினர். இந்து என்றால் திருடன் என்று இசுலாமியர்கள் குறிப்பிட்டது, சமயப் பகைமை கரணியமாகவேயன்றி, இந்து என்ற சொல்லுக்குத் திருடர் என்ற பொருளில்லை என்பதை நோக்குக.

பாரசீக இசுலாமியர்கள் எழுதிவைத்த குறிப்புகளினின்றும், இந்து என்ற சொல் இந்தியாவில் பின்பற்றப்பட்டுவந்த பிராமண சமயமே என்பது தெளிவாகிறது. இசுலாமியர் பதிவு செய்த இந்து என்ற சொல்லை, மேலை நாட்டு ஐரோப்பியர் களும் பின்பற்றினர். கி.பி. 700 ஆண்டுகட்குப் பிறகு இந்தியாவை வெற்றி கொண்ட பாரசீக இசுலாமிய மன்னர்கள், தங்களது ஆட்சியை ஏறக்குறைய 1000 ஆண்டுகள் வரையில் இந்தியாவில் நிலைநிறுத்திக் கொண்டனர். இக்கால அளவுகளில் குறிக்கப் பட்ட அரசாங்கப் பதிவுகள் யாவும் இந்து என்ற சொல்லையே குறிப்பிடுகின்றன. இசுலாமியருக்குப் பிறகு ஆட்சிப் பொறுப் பேற்ற ஆங்கிலேயர்களும் இந்து என்ற சொல்லையே பயன் படுத்தினர். எனவே, இந்து என்ற சொல், பிராமண சமயத்தின் பகைவர்களான இசுலாமியர்களால் குறிக்கப்பட்ட பெயரே என்பதும், இசுலாமியருக்கு முன்பு பிராமண சமயத்தை இந்து சமயம் என்று எவரும் குறிப்பிட வில்லையென்பது தெளிவு. இவ்வாறு, தமிழ்ச் சமயம் பிராமண சமயமாகி, பிராமண சமயம் இந்து சமயம் என்ற பெயரைப் பெற்றது. இன்று தமிழ்நாட்டில் பின்பற்றப்படும் இந்து சமயம் பிராமண சமயமேயன்றி, தமிழ்ச் சமயமன்று என்பதை யுணர்தல் வேண்டும்.

பிராமண சமயத்தின் பல்வேறு மெய்யியல் கூறுகள், கிறித்து பிறப்பாண்டுகளுக்குப்பிறகே அச்சமயத்தில் இணைக்கப் பட்டுள்ளன என்பதை வரலாறு கூறுகிறது. ஒரு கடவுள் மூன்று

நிலைகளில் செயல்படுவது (ஆக்கல், அழித்தல் காத்தல்), அம்மூன்று கடவுள்களும் ஒரே தெய்வமாயிருப்பது, மக்களை நல்வழிப்படுத்த, கடவுள் மனிதனாய்ப் பிறப்பது (அவதாரங்கள்), தீமையை ஒறுத்து நல்லவர்களைக் காப்பது, மாந்தனின் வினைகளுக்கேற்ப அவனுக்கு மோட்சமோ நரகமோ அளிப்பது அல்லது இழிபிறவியாக மறுபிறப்பெடுப்பது, இறுதியில் முக்தி பெறுவது போன்ற கொள்கைகள் கிறித்து பிறப்பாண்டுகளுக்கு முன்பு பிராமண சமயத்தில் சொல்லப்படவில்லை. இந்தியாவில் கிறித்துவம் கி.பி. 52 ஆண்டுகளுக்குப் பிறகு புனித தோமையார் என்ற இயேசுவின் பன்னிரு தொண்டர்களில் ஒருவரால் அறிமுகம் செய்யப்பட்டது. கிறித்துவின் மறையுண்மைகளை தோமையார் (St. Thomas) முதலில் பாரசீகத்திலும், அடுத்து மேற்குக் கடற்கரைப் பகுதிகளிலும், இறுதியாகத் தமிழகத்திலும் பரப்பியதாகச் சொல்லப்படுகின்றன.[92] தோமையாருடைய கிறித்துவ சமயத்தின் மெய்யியல் கொள்கைகள் பிராமண சமயத்தாரால் உள்வாங்கப்பட்டிருக்கக் கூடும் என்று எண்ண இடமுண்டு.[93]

தமிழகம் உலகிற்கு இடைக்காலத்தில் அளித்த பெருங்கொடை "பக்தி மார்க்கம்" என்ற சமய நெறியாகும். ஆழ்வார்களும் நாயன்மார்களும் அளித்த இச் சிந்தனைகளையே பிராமண சமயம் ஏற்றுக் கொண்டு, தனது கொடையாக அளித்தது போன்ற தோற்றத்தை உருவாக்கியது. எனினும் பல மேலை நாட்டு அறிஞர்கள், பக்திமார்க்கத்தின் தாயகம் தமிழகமே என்று தெளிவாகக் கருதுகின்றனர். டாக்டர் ஆல்பர்ட் ஸ்விட் சர் (Dr. Albert Sweitchezer) தனது (Indian Thoughts and its development) நூலில், பக்திமார்க்கம் தமிழகத்தின் அருட்கொடையே என்பார்.[93]

---

92. First International Conference on the History of Early Christianity in India, Problems and Perspectives, Dr.G. John Samuel, 2005, p. 3.

93. If self surrender to God is the basic principle of Bhakti, then, as Dr. Albert Sweitchezer has well observed that it was alien to the Aryans of India. Talking about its origin in his 'India thought and its development', he observed, "many scholars have expressed the opinion, for which there are good grounds, that the Bhakthi from the pity within Hinduism had its home in Southern Indian and spread thence to the north". Ibid, p. 57.

பிராமண சமயத்தின் தாக்கங்கள், கடைக்கழகக் காலத்திலேயே தமிழகத்தில் உணரப்பட்டுள்ளன என்றாலும், அவை முழுமையாக ஏற்றுக் கொள்ளப்படவில்லை. பிராமண சமயம், தமிழ்ச்சமயத்தைத் தன்வயமாக்கிக் கொண்டிருந்த அக்காலத்தில், பிராமண சமயத்துக்குக் கடும் போட்டியாளர்களாக, சமண சமய மற்றும் புத்த சமயத்தினர் தமிழகத்தில் விளங்கினர். இன்னும் சொல்லப்போனால், கி.பி. 300 - 600 ஆண்டுகளில், தமிழகத்தின் தனிப்பெரும் சமயமாகச் சமணமே இருந்தது என்பதற்கானச் சான்றுகள் உள்ளன. அக்காலத்தில் பிராமணர்களால் சமணர்களைக் கட்டுப்படுத்த இயலவில்லை என்பதோடு, பிராமணர்கள் ஒதுக்கப்பட்டதாகக் கூடச் செய்திகள் கூறுகின்றன. தமிழகத்தின் மன்னர்களான பாண்டியர்களும் சேரர்களும் கூடச் சமணர்களாயிருந்தனர் என்பதை அறியமுடிகின்றது.

## பிராமண மெய்யியல்

கி.பி. 200 ஆண்டுகளில் கேரளத்தில், தோமையார் விதைத்த கிறித்துவம் வளர்ந்திருந்தது. அக்கால அளவுகளில் சிரிய (Syria) நாட்டினின்றும் ஏறக்குறைய 700 கிறித்துவர்கள் கேரளத்தில் குடியேறியதாகச் சொல்லப்படுகின்றது. இவர்கள் அனைவரும் எர்ணா குளத்தை அடுத்த அங்க மலை (Angamaly) என்ற ஊரில் குடியமர்ந்தனர். கி.பி. 800 ஆண்டுகளில் இக் கிறித்துவர்களின் எண்ணிக்கை 60000யும் விஞ்சியிருந்ததாகச் சொல்லப்படுகின்றது. இங்கு ஓர் ஆயரும் (Bishop) இருந்தார் என அறிகிறோம். எனவே, மிகவும் சரியான அடித்தளத்தில் நிலைபெற்றிருந்த கிறித்துவத்துக்கு, அங்கமலை எனும் ஊர் தலைமையிடமாக அமைந்திருந்தது. இந்த அங்க மலைக்கு 3 கி.மீ. தொலைவிலுள்ள ஊர்தான் காலடி (Kaladi) எனப்படுவதாகும். காலடியில் தான், பிராமண சமயத்தின் சிவ நெறிக்குப் புத்துயிர் ஊட்டிய ஆதி சங்கரர் தோன்றினார். இவர் பிறப்பால் ஒரு பிராமணரே. தனது இளமைக் காலத்தில், ஆதிசங்கரர் அங்கமலைக் கிறித்துவர்களோடு தொடர்பு கொண்டிருக்க வாய்ப்புகள் உண்டு. அங்கமலையில் வாழ்ந்த கிறித்துவர்கள், சமயத்தால் வேறுபட்டிருந்தாலும், பிராமண வாழ்க்கை முறைகளையே கைக்கொண்டிருந்தனர். (விளக்கம் உள்ளே காண்க). எனவே, ஆதி சங்கரருக்கும் அங்கமலைக் கிறித்துவர்களுக்கும் இடையே இருந்த தொடர்புகள் பிற்காலத்தில் ஆதிசங்கரரின் அத்வைதக்

கொள்கையில் வெளிப்பட்டுள்ளதைக் காணலாம். இந்தியச் சூழலுக்கேற்ற பிராமண நெறியைத் தனது புதிய சமய சிந்தனைகளில் ஆதிசங்கரர் வெளிப் படுத்தினார் என அறியமுடிகிறது. ஆதிசங்கரருக்கும், அங்க மலைக் கிறித்துவர்களுக்கும் இருந்த தொடர்புகள் பற்றிக் குறிப்பிட நேரிடையானச் சான்றுகள் இல்லை. என்றாலும் கூட, அத்வைதக் கொள்கையில் காணப்படும் கிறித்துவ மெய்யியலின் நிழல்கள் மறைக்க முடியாதவை.

ஆதிசங்கரரின் அத்வைதம் (Non - dualism), மாயை (Maya) போன்ற கருத்துரைகள், படைத்தவனும் படைக்கப்பட்டவைகளும் ஒன்றே என்றும், படைத்தவனின் சாயலை அவன் படைப்புகளில் காணலாம் என்றும் விளக்குகின்றன. பரமாத்மாவும் ஜீவாத்மாவும் ஒன்றே என்று தெளிக.[94] கடவுள் தனது சாயலாக மாந்தனைப் படைத்தார் என்ற விவிலியச் செய்தியை ஒப்புநோக்குக.

வைணவத்தைக் கற்பித்த இராமானுசர், விசிட்டாத்துவைதம் என்ற கொள்கையைக் கொடுத்தார். விசிட்டம் (Visishta) என்ற வடசொல்லுக்கு முதன்மை அல்லது மேன்மை (Superiority) என்பது பொருளாகும். உயர்வு என்றும் பொருள்படும். விசி என்ற தமிழ்ச் சொல்லுக்கு உயர்ந்த மேடை என்று பொருள் கொள்ளலாம். விசிட்டம் என்பது தமிழ்ச் சொல்லே. அது விசிஷ்ட்ட என்று வடமொழியில் திரிந்துள்ளது. நாராயணனைக் (உலகின் முதல்வனை) கடவுளாகவும் அவனே முழுமுதற் கடவுளாகவும் சொல்லப்பட்டு, படைத்தவனின் சாயலில், படைப்புகள் உள்ளனவென்று, அத்வைதக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டு இராமானுசர் விளக்குகிறார். படைப்புகளுக்கு இரட்சண்யம் அல்லது முக்தி அல்லது வீடுபேறு, மாந்தன் தன்னை முழுதும் இறைவனிடம் ஒப்படைத்துவிடுதல் (Total surrender or Prapatti) என்ற கொள்கையில் விளக்கப்படுகிறது. இவ்வாறான இரட்சண்யத்துக்கு இறையருளும் தேவை என்பதையும் விசிட்டாத்வைதம் விளக்குகின்றது. மாந்த குலத்துக்கான விடுதலை (Salvation) இயேசு கிறித்துவின் வழி

---

94. Winslow - A Comprehensive Tamil - English Dictionary Asian Educational Services, Chennai, 2001, p. 23.
94. Advaita: Unity, Oneness, the existance of but one principle in the universe, the deity as indivisible and inseparable from creation, so that every thing is a part of god - Winslow.

யாகவே வந்துள்ளது என்ற கிறித்துவ மெய்யியல் கொள்கையை இங்கு ஒப்பு நோக்குக. மேலும் சில வைணவக் குறிப்புகள், ஸ்ரீ வாசனபூஷனா போன்றோர் அறிமுகம் செய்த 'புருஷ காரா' என்ற கொள்கை, மாந்தனின் பாவங்களை மன்னித்தருளும் நீதி தேவனாக நாராயணனைப் பார்க்கின்றது.[95] இதுவும் கிறித்துவ மெய்யியல் கூறே என்பது தெளிவு. இக்கருத்தையே டாக்டர் ஆல்பர் சுவிட்சர் போன்றோர் வலியுறுத்துகின்றனர்.

களப்பிரர்கள் ஆட்சிக்கு முன்பு கிளைக்கத் தொடங்கிய பிராமணர்களின் சமய மேலாண்மை, களப்பிரர் காலத்தில் நசுக்கப்பட்டதாகக் கருதலாம். பிராமணர்களின் சமயம் தவிர மற்ற சமயங்களான சமணம், புத்தம் ஆகியவை பெரிதும் வளர்ந்தன. கேரளத்தில் கிறித்துவமும் கூட எதிர்ப்புகளின்றி வளர்ந்தது எனலாம். களப்பிரர்களுக்கும் பிராமணர்களுக்கும் இடையே நிலவிய பகைமை உணர்வு, புறச் சமயங்கள் தமிழகத் தில் வளர வாய்ப்பளித்தது. எனவே களப்பிரர்கள் பிராமணர் களோ அல்லது பிராமணர் சார்புடையவர்களோ எனக் கருத இடமில்லை. வேள்விக்குடிச் செப்பேடு பிராமணர்களுக்குக் கிடைத்துவந்த உதவிகளை (Endowments)த் தடைசெய்த செய்தி யை விளக்குகின்றது. களப்பிரர்கள் யாவர் என்ற கேள்விக்கு இதுவரையில் விடையளிக்கப்படாவிட்டாலும், பிராமணரல் லாத, கரிய நிறமுடைய பிற இனத்தைச் சார்ந்த வடவர்களே என எண்ண இடமுண்டு. களப்பிறர் என்ற தமிழ்ச் சொல்லுக்கு கரிய நிறம் கொண்ட பிற இனத்தவர் என்றவாறு பொருள் கொள்ளலாம். இவர்கள் குசராத்துப் பகுதியைச் சார்ந்தவர் களாக இருக்கலாம் என்பதும் சிலரது கருத்துரைகளாகும்.

### திருமூலர் - திருமந்திரம்

களப்பிரர் ஆட்சிக்கால இறுதியில், திருமூலர் என்ற சிவ நெறியாளர் தோன்றி, சைவ சித்தாந்தம் என்ற கொள்கைக்கு அடித்தளமிட்டார். கடைக்கழக நூல்களின் இலக்கிய நடை,

---

95. Some of the Vaishnavite Texts like the Sri Vachanabhushana (a Rashya or esoteric text) even introduced the Purushakara pleading to the impartial deity to be merciful too the sinning mortal reminding us strongly of certain Christian doctrines. - History of Tamil nad, Dr. N. Subramaniyan, p. 380.

பொருள் திணிப்பு, தமிழ்ச் சொல்லாட்சி ஆகியவைகளுக்கு முற்றிலும் மாறுபட்டு திருமந்திரம் விளங்குகிறது. வெண்பாவுக் குரிய தளையுடன், கட்டளைக் கலிப்பா வகையில், ஒவ்வொரு அடியிலும் உள்ள ஒற்றெழுத்துக்களை நீக்கி, எழுத்துக்களை எண்ண அவை 12 அல்லது 13 எழுத்துக்கள் வரும்படி அமைத்து இயற்றப்பட்டுள்ளது.

கிறித்துவர் கொள்கைகளோடு தொடர்புடைய பல திருமந்திரப் பாடல்கள், அதுவரையில் சொல்லப்படாத புதிய மெய்யியல் உண்மைகளை விளக்குகின்றன.

1. ஒன்றவன் தானே இரண்டவன் இன்னருள்
   நின்றனன் மூன்றினுள்..................
   – திருமந்திரம், கடவுள் வாழ்த்து முதல் பாடல்.[96]

2. முன்னையொப் பாயுள்ள மூவர்க்கு மூத்தவன்
   – ஆறாம் பாடல்.[97]

3. பிறப்பிலி பிஞ்ஞகன் பேரரு ளாளன்
   இறப்பிலி யாவர்க்கும் இன்பம் அருளும்
   துறப்பிலி தன்னைத் தொழுமின் தொழுதலால்
   மறப்பிலி மாயா விருத்தமும் ஆமே – 25ஆம் பாடல்.[98]

4. திரைபசு பாவச் செழுங்கடல் நீந்தி – 49:3.[99]

5. ஆதிப் பிரானும் அணிமணி வண்ணனும்
   ஆதிக் கமலத் தலர்மிசை யானுஞ்
   சோதிக்கில் மூன்றுந் தொடர்ச்சியில் ஒன்றெனார்
   பேதித் துலகம் பிணங்குகின் றார்களே – 52[100]

*விளக்கம்:* மூவரும் தொழில் பற்றி முறையே முப்பெயர் பெற் றனர். அஃதல்லாது பொருளால் மூவரல்லர். மூவரும் ஒருவரே.

கிறித்துவ சமயம், தந்தை படைப்புத் தொழிலையும், மகன் மீட்புத் தொழிலையும், தூய ஆவி வாழ்வியல் உறுதிப்பாட்டை யும் செய்பவர்களாகக் கூறினாலும், மூவரும் ஒருவரே என்ற

---

96. திருமந்திரம் கடவுள் வாழ்த்துப் பாடல்கள்.
97. மேலதே.
98. மேலதே.
99. மேலதே.
100. மேலதே.

மெய்யியல் கோட்பாடு, திருமந்திரத்தில் எதிரொலிப்பதைக் காணலாம். சைவசித்தாந்தம் என்ற கோட்பாட்டுக்கு வித்திட்டவர் திருமூலரே எனலாம். பிற்காலத்தில் மெய்கண்டார் இதனை விரிவுபடுத்தினார். சிவஞான போதம் என்னும் சிவநெறி விளக்க நூலை இவரே எழுதினார்.

திருமந்திரத்தில் மூவொரு கடவுட்கொள்கை அறியப் படுவது போல், சிவஞான போதம் என்னும் நூலிலும் மேலும் அறியப்படுவதாக, **டாக்டர் தெய்வநாயகம்** கருதுகிறார்.[101] திருக்குறளில் சொல்லப்பட்டுள்ள செய்திகள், கிறித்துவ மெய் யியல் கருத்துக்களே என்பதும் அவரது ஆய்வுகளாகும்.[102] பக்தி இயக்கம் என்ற தமிழகத்தின் சமய அலைகள், களப்பிரர்கள் காலத்திலேயே தொடங்கப்பட்டுவிட்டதாகவும் சிலர் கூறுவர்.

வைணவக் குரவர்களான பேயாழ்வார், பூதத்தாழ்வார், பொய்கையாழ்வார் போன்றோரும், சைவநெறியாளர்களான திருமூலர், காரைக்கால் அம்மையார் போன்றோரும் இந்த சமய இயக்கங்களைத் தொடங்கியவர்களாவர். கி.பி. 700களில் இவ்வியக்கம் பரவலாக அறியப்பட்டது. திருநாவுக்கரசர், சம்பந்தர் போன்றோரின் பணிகள் சிறப்பானவைகளாகும். இவர் களுக்கு மன்னர்களின் உதவிகளும் அரவணைப்பும் இருந்தன வென்பது இவர்கள் பணிகளில் வெற்றிபெற வழிவகுத்தன.

சைவசித்தாந்தம் என்பது உண்மையில் வட இந்தியாவில் தோன்றியது என்றும் இராசேந்திர சோழனின் வடபுலப் படை யெடுப்பால், அச்சிந்தனைகள் தமிழகத்துக்குள் கொண்டு வரப் பட்டன என்றும் சிலர் கருதுவது,[103] தவறான கண்ணோட்ட மெனலாம். இந்த சமய இயக்கங்கள் யாவும் பிராமணர்களின் சாதியக் கோட்பாடுகளை மாற்றமுயலவில்லை என்றும் வர்ணாசிரம தர்மம் இக்காலத்தில் வளர்ச்சியுற்றது எனவும் அறியலாம். இராமானுசர், இறைவன் முன்னால் மக்கள் அனை வரும் சமம் என்பது பற்றிக் கூறினாரேயன்றி, மக்களிடையே இருந்த சாதி வேறுபாட்டைக் களைய முன் வரவில்லை[104]

---

101. Creeds and Doctrine of Trinity in St. Thomas Dravidian Christianity, Dr. M. Deivanayagam and Dr. D. Devakala, Meipporul Publishers, Chennai, p. 15.

102. Ibid, 30-52.

103. History of Tamilnad, Dr. N.S., p. 383.

அத்வைதம், விசிட்டாத்வைதம் கூறும் கோட் பாடுகள், சாதிய முறைக்குச் சாவுமணியடிக்கவில்லை. ஆரிய (பிராமண) சமயக் கோட்பாடுகளும் சமய மறுமலர்ச்சிக் கோட்பாடுகளும், கிறித்து பிறப்பாண்டுகளுக்குப் பிறகே அறியப்பட்டன என்பதால், கிறித்துவத்துக்கும் இக்கோட்பாடுகளுக்கும் தொடர்புண்டு என்பது, டாக்டர் தெய்வ நாயகம் போன்றோரின் கூற்றுகளாகும்.

## ஆசீவகம்

ஆஜீவகா (Ajeevaka) என்ற வடமொழியில் உரைக்கப் படும் ஓரினம், உண்மையில் தமிழ்க் கணியர்களே என்ற செய்தி வியப்பைத் தருவதாக இருக்கலாம். பல வரலாற்றறிஞர்களும் ஆசீவகர் சைன சமயத்தினரே என்று தவறாகக் குறிப்பிட்டு விட்டனர். **வரலாற்றறிஞர் குணா**, ஆசீவகர் சைனரே என்று முதலில் முடிவு செய்து, பின்னர் தனது கருத்தை மாற்றிக் கொண்டதாகக் குறிப்பிடுகிறார்.[105] சிந்துவெளிப் பண்பாட்டுக் காலத்திலேயே வடநாட்டில் தமிழ் ஐந்திரப் பள்ளிகளை நடத்தி வந்த தமிழ்க் கணியர்கள், சிந்துவெளி நாகரிக ஆட்சி வீழ்ந்த பிறகும் வடபுலத்தில் வாழ்ந்திருந்து, தமது கல்வி மற்றும் குமுகாயப் பணிகளைத் தொடர்ந்து செய்து வந்தனர். ஆசீவகம் என்பதைச் சமயம் என்று சொல்லுவதைவிட கல்விப் பணியோடு தொடர்புடைய குமுகாயச் சீர்திருத்த இயக்கம் என்று அழைப்பதே சிறப்பானதாகவிருக்கும். கி.மு. 3000 ஆண்டு களில் தமிழகத்தில் முகிழ்த்திருந்த உலகளாவிய மாந்த நேயக் கோட்பாட்டுச் சிந்தனைகளை, செயல்வடிவில் நிகழ்த்திக் காட்டியவர்களே இந்த ஆசீவகர்களாவர்.

ஆசீவகம் என்ற பெயர் கி.மு. 1000 ஆண்டுகளில், பிராமணர் களால் சூட்டப்பெற்றது என அறியலாம். கிறித்துவன் என்றும், இந்து என்றும் அந்தந்த சமயத்தின் எதிர்ப்பாளர்கள் சூட்டிய பெயர்கள், நின்று நிலைத்துவிட்டதைப் போன்று, ஆசீவகம் என்ற பெயரும் அதன் எதிர்ப்பாளர்களாகிய பிராமணர்களால் சூட்டப் பெற்ற நையாண்டிப் பெயராகும். (Mockery name) சீவகம் என்பது வாழ்வது என்றும் ஆசீவகம் என்பது இறப்பது என்றும் பொதுவாகப் பொருள் கொள்ளப்பட்டாலும் வாழ்

---

104. Ibid.

105. வள்ளுவத்தின் வீழ்ச்சி, வெங்காலூர் குணா, முன்னுரை.

கின்ற கொள்கையைக் கொண்டவர்கள் (பிராமணர்கள்) சீவகர் என்றும் தகுதியற்று இறந்துபடும் கொள்கையைக் கொண்டவர்கள் ஆசீவகர் என்றும் பொருள் கொள்ளப்பட்டிருக்கலாம்.

இக்காலத்திலும் கூடப் புரிந்து கொள்ளவியலாத பல சிந்தனைகளை கி.மு. 3000 ஆண்டுகளில் சிந்தித்தவர்கள் தமிழ்க் கணியர்களாவர். அச்சிந்தனைகளின் தொடர்ச்சியாக, எழுத்துச் சீர்த்திருத்தம்,[106] பகுத்தறிவுக் கொள்கை,[107] அணுவியல் கோட்பாடு,[108] வானவியல் கணக்கு,[109] வாழ்வியல் நெறிமுறைகள் என, பல்வேறு துறைகளிலும் சிறந்தவர்களாகக் கணியர்கள் விளங்கினர். கி.மு. 1800 ஆண்டுகளில், தமிழ் வரிவடிவத்தில் சீர்திருத்தம் செய்தவர்களும், பிராமி என்ற எழுத்து முறையைத் தமிழில் அறிமுகம் செய்தவர்களும் கணியர்களே இவர்களின் எழுத்துச் சீர்த்திருத்த முறைகளையொட்டியே, மேலை நாட்டில் ஃபோனீசியர்கள் (Phoenicians) எழுத்துச் சீர்திருத்தம் செய்திருக்க வேண்டும். தொல்தமிழ் எழுத்து முறைகளில் சாயல், ஃபோனிசிய வரிவடிவங்களில் காணப்படுவதாக ஆய்வாளர்கள் கருதும் வேளையில், ஃபோனிசியர்கள் இப்புதிய முறையைக் கண்டுபிடிக்கவில்லையென்றும், ஏதோவொரு கிழக்கிந்திய பழம்பெரும் முறையை இவர்கள் மூலமாகக் கொண்டிருக்க வேண்டுமென்றும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.[110]

மூடநம்பிக்கைகளைத் தகர்த்தெறிந்து, பகுத்தறிவுக் கண்கொண்டு உலகவியலைக் கண்ட கணியர்கள், படைத்தவனைப் பண்பில்லாதவன் என்று ஒரு சூழலில் வசைபாடும் நிலையையும் காணலாம். ஆசீவகர் என்ற கணியக் குழுவினர் கண்டறிந்த அணுவியல் கோட்பாடு, இன்று மெய்ப்பிக்கப்பட்டுள்ளதைக் காணும்போது, 3000 ஆண்டுகட்கு முன்பு, தமது நுண்ணிய அறிவாற்றலால் அணுக்கொள்கையை அவர்கள் வகுத்தனர் என்ற செய்தி வியப்படைய வைக்கின்றது. அக்கால அளவுகளில், அணுவைப் பிளக்க இயலாது என அன்று அறிவித்தனர். 20ஆம் நூற்றாண்டு அறிவியல் அணுவைப் பிளந்து காட்டியது.

---

106. Indus Script Among Dravidian Speakers.

107. புறநானூறு, 194.

108. வள்ளுவத்தின் வீழ்ச்சி, ப. 11.

109. வானியலின் மூலவர் தமிழரே, ம.சோ. விக்டர்.

110. Facts about Lebanon, Lonely Planet.

வானியலைப் பொறுத்தவரை, கி.மு. 1000 ஆண்டுகளில், ஏறக்குறைய அனைத்து விண்மீன் கூட்டங்களையும் கண்டறிந்து, அவைகளின் இயக்கங்களை உற்றுநோக்கி, பெயர்களையும் பதிவு செய்துள்ளனர். தமிழ்க்கணியர் கொடுத்த விண்மீன்களுக்கான பெயர் பட்டியலே, திரிபுபட்டுக் கிரேக்கத்தில் சொல்லப்பட்டுள்ளன என்பதை அறியலாம். தாலமி என்ற கிரேக்க வானவியலாளர் சூட்டியதாகக் கூறப்படும் 1000க்கு மேற்பட்ட விண்மீன் கூட்டங்களின் பெயர்கள், தமிழ் மூலத்தைக் கொண்டவைகளே.[111]

நாடு, மொழி, இனம் என்ற குறுகிய எல்லைகளைத் தாண்டி, யாதும் ஊரே யாவரும் கேளிர் என்ற, உலக மாந்த நேயக் கோட்பாட்டை உருவாக்கியவர்கள் தமிழ்க் கணியர்களே. இப்பரந்த நோக்கு, பிராமணர்களால் எதிர்க்கப்பட்டு, நான்கு வகையான சாதி முறைகளை அறிமுகப்படுத்தப்பட்ட காலத்தில், அச்சாதிய முறைகளைக் கடுமையாகச் சாடியவர்களும் தமிழ்க் கணியர்களே.

மேற்கண்ட சிறப்பான உலகியல் பண்புகளை உயர்த்திப் பிடித்தவர்கள் ஆசீவகர்கள் என்று அழைக்கப்பட்ட தமிழ்க் கணியர்களே. ஆசீவகர்கள் சமண சமயத்தினரே என்று வரலாற்றில் தவறாகக் குறிப்பிடப்பட்டுள்ள செய்திகளை, பேராசிரியர் **முனைவர் க. நெடுஞ்செழியன்** போன்ற தமிழறிஞர்கள் சுட்டிக்காட்டி,[113] ஆசீவகர்கள் தமிழ்க் கணியர்களே என மெய்ப்பித்துள்ளனர்.

## ஆசீவகர்களின் சமயக் கொள்கை

தமிழகத்தில் தெய்வ நம்பிக்கையுடையோர் இருந்தது போலவே, கடவுள் மறுப்புக் கொள்கையுடையோரும் வாழ்ந்திருந்தனர். கணியர்களின் ஒரு பிரிவினரான பார்ப்பார், சமயக் கடமைகளை ஆற்றிய அதே வேளையில், கணியரில் மற்றொரு பிரிவினர் கடவுள் மறுப்புக் கொள்கையையும் கொண்டிருந்

111. வானவியலின் மூலவர் தமிழரே, ம.சோ. விக்டர்.

112. இந்தியப் பண்பாட்டில் தமிழும் தமிழகமும், பேராசிரியர் க. நெடுஞ்செழியன், மனிதம் பதிப்பகம், திருச்சி, 1989.

113. தமிழ் இலக்கியத்தில் உலகாய்தம், பேரா.க. நெடுஞ்செழியன், மனிதம் பதிப்பகம், திருச்சி, 1990.

தனர். மோட்சம், நரகம், வினைகள் (பாவங்கள்) போன்ற நம்பிக்கைகள் எதுவும் அக்காலத்தில் இல்லை. கடவுள் நம்பிக்கை கொண்டிருந்த தமிழ்ச் சமயமும் கூட, மேற்கண்ட நம்பிக்கைகள் பற்றி அறிந்திருக்கவில்லை. கி.மு. 1000 ஆண்டு களில் உலகிலிருந்த சமயங்கள் எவையும் மோட்சம் நரகம் பற்றிய செய்திகளைக் கூறவேயில்லை. தமிழ்ச் சமயமும் கூட இவ்வுலகின் பாற்பட்டு உலகியலை முன்னிறுத்தியே பின்பற்றப் பட்டது. மேற்கில் தோன்றிய யூத சமயம் ஒரு கடவுட் கொள்கை யைக் கொண்டிருந்தாலும், மோட்சம் நரகம் பற்றியெல்லாம் எதுவும் கூறவில்லை. **மோசே (Moses) எனப்படும் யூத சமயத்தின் தலைவன் கொடுத்தச் சமயச் சட்டங்களில், ஆசீவகக் கொள்கையின் தாக்கங்கள் பரவலாகக் காணப்படுகின்றன**.

தொல்தமிழரிடையே ஒரு கடவுள் கொள்கையே இருந்தது என்பதைப் பல்வேறு சான்றுகளால் நிறுவ இயலும். விவிலியத் தின் பழைய ஏற்பாட்டு நூலில் காணப்பெறும் **ஆதியாகமம் முதல் பதினோரு அதிகாரங்கள் ஒரு கடவுட் கொள்கையை விளக்குவதாகும்**. இவ்வதிகாரங்களில் கூறப்பட்டுள்ள செய்தி கள் நிகழ்வுற்ற இடம் குமரிக்கண்டமே என்பதற்கானச் சான்று களும் அந்த அதிகாரங்களிலேயே காணப்படுகின்றன.[114] அந்த வகையில், தொல்தமிழரின் ஒரு கடவுட் கொள்கையையே, மோசே செயல்படுத்தினார் என்பதை துணிந்து கூறலாம். (மேலும் விளக்கங்களுக்கு ஆசிரியரின், எபிரேயத்தின் தாய்மொழி தமிழே! என்ற நூலைக் காண்க). எனவே, ஆசீவகர்களின் சமயக் கொள்கை குமுகாயம் சார்ந்ததாகவே இருந்தது எனவும், மோட்சம் நரகம் போன்ற நம்பிக்கைகள் அக்காலத்தில் சிந்திக்கப் படவில்லை எனவும் அறியலாம். இந்தியச் சமயங்களில் மேற் கண்ட நம்பிக்கைகள், தோமையாரின் வருகைக்குப் பிறகே இணைக்கப்பட்டன என்ற கருத்தில் உண்மையுண்டு எனலாம்.

## புத்த சமணச் சமயங்கள்

கி.மு. 600-500 ஆண்டுகள் உலகச் சமய வரலாற்றில் மிகவும் சிறப்பான ஆண்டுகளாகும். பிற்காலச் சமயங்களில் வரலாற்றில் பெரும் மாறுதல்களை உருவாக்கிய சமயத் தலைவர்கள் தோன்றிய காலம் அதுவாகும். **யூத சமயத்துக்குப் புதிய எழுச்சி**

---

114. எபிரேயத்தின் தாய்மொழி தமிழே, ம.சோ. விக்டர்.

**யைக் கொடுத்த இசையா என்ற இறைவாக்கினர், சீனத்தின் கன்பூசியஸ் உலூட்சு, கிரேக்கத்தின் சோலன் போன்றோர் வாழ்ந்த காலமது. இந்தியாவில் சமண சமயத்தைப் பரப்பிய மகாவீரரும், புத்தசமய நிறுவுநர் புத்தரும் அக்காலத்தே வாழ்ந்திருந்தனர்.** பிராமண சமயம் தனது கொள்கைகள் பல வற்றை விட்டுக் கொடுத்து, புதிய உத்திகளைக் கைக்கொண்ட காலமது. புத்த சமயத்தின் தோற்றமும் வளர்ச்சியும் சமய மாற்றத் தையும், ஆட்சி மாற்றங்களையும் ஏற்படுத்தியது. இந்தியாவின் வரலாறு கூட, அக்கால அளவுகளிலிருந்தே முறையாகத் தொடங்குகிறது எனலாம். ஏனெனில் இக்காலத்திலிருந்தே, இந்திய வரலாறும் தெளிவாக அறியப்படுகின்றது.

ஆசீவகர் எனப்பட்ட ஆசிரியர் மரபினர் வட இந்தியா வெங்கும் ஐந்திரப் பள்ளிகளை நடத்தி வந்த அக்காலத்தில், கல்வி என்ற செல்வம் அவர்களின் கட்டுப்பாட்டில் தான் இருந்தது. ஆரியப் பிராமணர்களும் கூட அந்த ஐந்திரப் பள்ளி களில்தான் கல்வி கற்றனர் என்பதற்கானச் சான்றுகள் கிடைக் கின்றன. ஆசீவகம் என்பது கொல்லாமை, புலால் உண்ணாமை, மதுவருந்தாமை போன்ற நன்னெறிகளைப் பரப்பி வந்த இயக்க மாகும். உண்மையில், சமண புத்த சமயங்களுக்கான அடிப் படைக் கொள்கைகள், ஆசீவகத்திடமிருந்தே பெறப்பட்டன எனலாம். சமணமும் புத்தமும் ஏறக்குறைய ஒரு கொடியில் பூத்த இருமலர்களே.

ஆசீவகக் கொள்கை அக்கால அளவுகளில் மேலோங்கி இருந்த நிலையில் 62 வகையான சமயக் கோட்பாடுகள் கடைப்பிடிக்கப்பட்டும் வந்தன எனச் செய்திகள் கூறுகின்றன. வளர்ந்து வந்த புதிய வாழ்க்கை முறைமைகளில், செல்வர் - வறியர் ஏற்றத்தாழ்வுகள் முன் எப்போதுமில்லாத அளவில் தோன்றின. வறியர்களின் வாழ்க்கை இன்னல்களும் இடுக்கண் களும் நிறைந்ததாக இருந்தன. போர், பசி, வறுமை, நோய்கள், வறட்சி, வெள்ளம் போன்ற இயற்கையின் இடர்ப்பாடுகளால் ஏழைகள் மிகவும் அல்லலுற்றனர். இவர்களின் இடுக்கண் களைத் துடைக்கவும், இவர்களுக்கு நல்வாழ்வு கொடுக்கவும் அப்போதிருந்த சமயங்கள் எந்தக் கொள்கையையும் கொண் டிருக்கவில்லை. பிராமண சமயம் செல்வர்களை மட்டுமே நாடி நின்றது. வேள்விகளும் யாகங்களும் செல்வர்களாலேயே நிகழ்த்தப் பெற்றன. இவை மூலம் செல்வர்கள் தாம் நினைத்

ததை ஈடேற்றிக் கொள்ள முனைந்தனர். ஏழைகளின் எதிர் பார்ப்புகள் அனைத்தும் எட்டாக் கனிகளாகவே இருந்தன. வேள்விகள் செய்து தாம் விரும்பியதைப் பெற வறுமை அவர்களுக்குத் தடையாய் இருந்தது. இந்நிலையில் வேள்விக்கு மாற்றாக எந்தவொன்றும் கண்டுபிடிக்கப்படவில்லை. எனவே, பிராமணர்கள் மீது இயற்கையான வெறுப்பு மக்களிடையே தோன்றியது.

வாழ்க்கைத் துன்பங்களிலிருந்து ஏழைகளை மீட்டெடுக்க அரசாங்கத்திலும் எந்தத் திட்டங்களும் இல்லை. சமயங்களும் அக்கறை காட்டவில்லை. இந்தச் சூழலில், இன்னல்களினின் றும் இடுக்கண்களினின்றும் மக்களைக் காக்க வழியொன்று தேவைப்பட்டது. அதற்கான விடையை யாராலும் கொடுக்க இயலவில்லை. இவ்வுலகிற்குத் தேவையான அவ்விடையே கிடைக்காத போது, மறுஉலகிற்கான வழிகளைத் தேட எவரும் சிந்திக்கவில்லை. அப்போதிருந்த சூழ்நிலையில் மோட்சம் வீடுபேறு போன்ற சிந்தனைகள் தோன்றவுமில்லை. கிறித்து வுக்கு முற்பட்ட காலங்களில், உலகின் எந்த சமயமும் மோட்சப் பற்றிய தெளிவான கொள்கையைக் கொண்டிருக்கவில்லை.

இந்தச் சூழலில்தான் புத்தர் மேற்கண்ட வினாக்களுக்கு விடை காண முற்பட்டார். மகாவீரரும் புத்தரும் அளித்த விடைகள், மக்களால் ஏற்றுக் கொள்ளக் கூடியனவாக இருந்தன மக்களுக்குத் தேவைப்பட்ட அவ்விடையைக் கொடுக்க புத்தர் பல ஆண்டுகள் அலைய வேண்டியிருந்தது. இறுதியில் கயா என்னுமிடத்தில் புத்தர் அறிவொளியைப் பெற்றார். ஆசையே அனைத்து இன்னல்களுக்கும் கரணியமென்றும், இன்பத்தை யடைய விரும்புவோர் ஆசையைத் துறக்க வேண்டுமென்று கூறினார். தூய அறிவு, தூய துணிவு, தூய சொற்பேசுதல், தூய திட்டம், தூய வாழ்க்கை நெறி, தூய எண்ணம், தன் முயற்சி, தூய ஒழுக்கம் போன்ற எட்டு வகையான தூய நெறிகளை எடுத்துரைத்தார். வேள்விகள், உடலை வருத்தும் தவமுறை களினால் எப்பயனும் இல்லை எனக் கூறினார். வறட்டுக் கோட்பாட்டுக் கொள்கைகளை வானளாவ அடுக்கிக் கூறு வதை வெறுத்தார். புத்தர் கடவுள் கொள்கையை ஏற்றுக் கொள்ளவில்லை. கடவுள் இருக்கிறாரா இல்லையா என்ற ஆராய்ச்சியில் ஈடுபடத் தேவையுமில்லை என்றார். நிர்வாண

நிலை என்பது பற்றற்ற நிலையில் இறத்தல் என்பதே பொரு ளாகும்.* ஆனால், பின்னர் வந்தவர்கள் அச்சொல்லுக்கு வீடு பேறு என்று பொருளுரைத்தனர். கடவுள், மோட்சம் இவை களை ஏற்றுக் கொள்ளாத புத்தர், இறந்த பின்பு வீடு பேறடை தல் பற்றிக் கூறினார் என்பது தவறான செய்தியாகும்.

புத்தருடைய கொள்கைகள் அன்பின் அடிப்படையிலும், மாந்தநேயத்தின் அடிப்படையிலும் சொல்லப்பட்டன. இன்னா செய்யாமை (அகிம்சை) என்ற ஆசீவகத்தின் கொள்கையைப் புத்தர் செயல்படுத்தினார் எனலாம். புத்தரும் கூட, ஆசீவக ஆசிரியரிடம் கல்வி கற்றதாகச் செவி வழிச் செய்திகள் கூறு கின்றன. புத்தரின் தாய்மொழியான பாலி மொழியையும் ஆசீவகர்களே செம்மைப்படுத்திக் கொடுத்தனர் என்றும் கூறப் படுகின்றன.

புத்தர் மறைவுக்குப் பின்னர் ஒரு மாநாடும், 100 ஆண்டு கட்குப் பின்னர் இரண்டாவது மாநாடும், புத்த சமயத்தினரால் கூட்டப்பட்டன என்று செவி வழிச் செய்திகள் கூறுகின்றன. மூன்றாவது மாநாடு அசோகர் காலத்திலும் நான்காவது மாநாடு கனிஷ்கர் காலத்திலும் நிகழ்வுற்றன. இரண்டாவது மாநாட்டில் புத்த சமயத்தில் சில கருத்து வேறுபாடுகள் தோன்றின. கி.பி. முதல் நூற்றாண்டில் புத்த சமயம் இரு பிரிவுகளாகப் பிளவு பட்டது. ஹீனாயானம், மகாயானம் என்று பிளவுபட்ட புத்த சமயத்தில் ஹீனாயானப் பிரிவினர் புத்தரின் கொள்கைகளை அப்படியே கடைப்பிடிப்பவராயினர். மகாயானப் பிரிவினர் புத்தரின் பல கொள்கைகளில் வேறுபட்டனர்.

மகாயானப் பிரிவை தோற்றுவித்த நாகார்ஜுனா என்ற தென்னிந்தியப் பிராமணர், புத்த சமயத்தில் சேர்ந்து பிட்சுவாக விளங்கினார். பிராமணக் கொள்கைத் தாக்கங்களைக் கொண் டிருந்த நாகார்ஜுனா, கடவுள் இல்லாத சமயத்தை மக்கள் ஏற்கமாட்டார்கள் எனக் கூறி, புத்தரையே கடவுளாகப் போற்றினார்.[115] உலகில் தோன்றிய பல தெய்வங்களில் புத்தரும் ஒருவர் என்று கருதப்பட்டார். மேலும் பல்வேறு வணக்கத்துக்

115. Ibid, 312.

* Nirvana: That is why the Buddhists usually do not speak about the death of the founder of their religion, but about his attaing Nirvana.

குரிய புத்தர்களும் அறியப்பட்டனர். அவர்களில் பலர், பிராமணக் கடவுளர்களாக இருந்தனர். ஆதி புத்தர் எனப்படு பவரே இவ்வுலகைப் படைத்தவராகக் கருதப்பட்டார். மோட்சம் என்ற வீடுபேறு ஏற்றுக் கொள்ளப்பட்டது. இக்கொள்கை புத்தரின் கொள்கைகளுக்கு மாறுபாடானது. புண்ணியவான்கள் மோட்சத்திலுள்ள அழகிய பூங்காக்களில் மகிழ்ச்சியுடன் வலம் வருவர் என்றும் நம்பப்பட்டது. மோட்சத்துக்குத் தலைவராக அமிதாப புத்தர் விளங்கினார்.

பாவம் (Sin) என்ற வினை ஏற்றுக் கொள்ளப்பட்டது. பாவம் செய்தவர்கள் நரகத்துக்குச் செல்வர் என்று சொல்லப் பட்டது. பாவம் செய்தவர்கள் நரகத்தில் பல்வேறு கொடூர மான இன்னல்களுக்கு ஆளாக்கப்படுவர் என்பதை விளக்கும் கதைகளும் கட்டுரைக்கப்பட்டன. மகாயான புத்த சமயம் கி.பி. முதல் நூற்றாண்டின் இறுதியில் தொடங்கப் பெற்றது.[116] புத்தர் சொல்லாத மோட்சம், நரகம் போன்ற செய்திகள் மகாயான புத்த சமயத்தில் எவ்வாறு இடம் பெற்றன என்ற கேள்விக்கு விடையாக, கி.பி. முதல் நூற்றாண்டில் இந்தியாவில் பரப்பப்பட்ட கிறித்துவ சமயமே எனக் கூறப்படுகிறது.[117] கிறித்துவ சமயத்தை முதலில் ஏற்றுக் கொண்ட இந்தியர்கள்,

---

116. Nagarjuna: The founder of the Mahayana doctrine was a prominent Buddhist clergyman named Nagarjuna (first century), born in South India into the Brahmanic caste. - History of Religion.

117. Early Christianity in India, A Survey, V. Gnanasikhamani and T. Dayanandan Francis, 2005, p. 56.

117. 1. The idea of a suffering saviour was attested in Buddhism not until after the beginning of the Christian era. The suffering Bodhisattvas so closely remembers the Christian conception of the God who gives in his life as a ransom for many that cannot dismiss the possibility that the doctrine was borrowed by Buddhism from Christianity.

- A.L. Basham, "The Wonder that was India", p. 278.

2. Transmigration fo the soul and idea of incarnation in Buddhism (Mahayanam) are only latter developments; their religion can be easily alluded to ancient Christianity in India at different stages.

- T.S. Berry, "Christianity and Buddhism".

கேரளத்து நம்பூதிரிப் பிராமணர்களே என்பது செவிவழிச் செய்திகளாகும். பிராமணர்களைக் கவர்ந்த கிறித்துவ சமயத்தின் தாக்கம், பிராமணரான நாகார்ஜுனாவையும் கவர்ந்திருக்கலாம். முதன்முதலில் மோட்சம் நரகம் பற்றிச் சொல்லப்பட்ட இந்திய சமயம், நாகார்ஜுனா தலைமையில் பிரிந்த மகாயானச் சமயமே எனலாம்.

மகாயானப் புத்த சமயமும், பிராமண சமயமும் கி.பி. முதல் நூற்றாண்டு முதல் பல்வேறு கொள்கைகளில் ஒத்துப் போயின. தங்களுடைய முதல் எதிரியாக எண்ணிக் கொண்டிருந்த புத்த சமயத்தையும், புத்தரையும் பிராமணர்கள் ஏற்றுக் கொண்டனர். **பிற்காலத்தில் புத்தர், திருமாலின் அவதாரங்களில் ஒருவ ராகக் கருதப்பட்டார். அதற்குப் பதிலாக, பிராமணர்களின் மறுபிறவிக் கொள்கையைப் புத்த சமயத்தினரும் ஏற்றுக் கொண்டனர்**. மகாயானப் பிரிவினருடன் உறவாடிய பிராமண சமயத்தார், தங்களுடைய கொள்கைகளிலும் பல மாற்றங் களைச் செய்து கொண்டனர். மோட்சம், நரகம், மறு பிறவி போன்ற நம்பிக்கைகள் பிராமண சமயத்தில் சொல்லப்பட்டன.

சமண சமயத்தின் இரு பிரிவுகளான சுவதேம்பரர், திகம்பரர் இரண்டும் கி.பி. 80ஆம் ஆண்டில் தனிக்கொள்கை களை ஏற்படுத்திக் கொண்டன. திகம்பரர் பிரிவு அம்மணத்தை ஏற்றுக் கொண்டு, உலகிலேயே பாவம் செய்யத் தூண்டுதலாக உள்ளவர்கள் பெண்களே என்றும் கருதினர். **ஏவாள் பற்றிய கிறித்துவச் சிந்தனைகளை நோக்குக**. பிராமணர்களுக்கு எதிரான கொள்கைகளைக் கொண்ட புத்தமும் சமணமும், கி.பி. முதல் நூற்றாண்டில், தனது மூலவழிகளை மாற்றிக் கொண்டு, புதுக் கொள்கைகளை ஏற்றுக் கொண்டன. அப்புதுக் கொள்கைகளில் கிறித்துவத்தின் தாக்கங்கள் மிகுந்திருந்தன என்பது ஆய்வாளர்களின் முடிபுகளாகும்.

இக்கொள்கைகள் யாவும் கிறித்து பிறப்பாண்டுகளுக்கு முன்னதாக இந்தியாவில் சொல்லப்படவில்லை என்பதைச் சுட்டிக்காட்டும் சில ஆய்வாளர்கள், கிறித்துவ சமயம் இந்தியா வில் அறியப்பட்ட பிறகே, இவை போன்ற நம்பிக்கைகளை இந்தியச் சமயத்தாரும் ஏற்றுக் கொண்டனர் என்று முடிவு செய்கின்றனர். கிறித்துவம் இந்தியச் சமயங்களின் மெய்யியல் கொள்கைகளில் பெரும் தாக்கங்களை ஏற்படுத்தியது எனக் கூறும் டாக்டர் தெய்வ நாயகம் போன்ற ஆய்வாளர்களின்

முடிபுகள் பற்றி எதிர்காலத் தமிழக ஆய்வாளர்கள் முனைப் புடன் பணியாற்றி உண்மைகளை வெளிக் கொணர்வர் என்பது உறுதி. **கிறித்துவ மெய்யியல் கூறுகள் காணப்படும் இடங் களாகச் சொல்லப்படுவன:**

1. **புத்த சமயம் (மகாயானம்)**
2. **பிராமண சமயம் (கி.பி. 2ஆம் நூற்றாண்டு)**
3. **திருக்குறள்**
4. **திருமந்திரம்**
5. **அத்வைதக் கொள்கைகள்**
6. **விசிட்டாத்வைதக் கொள்கைகள்**
7. **சைவ சித்தாந்தக் கொள்கைகள்**
8. **சிவஞான போதம்**
9. **ஆதி சங்கரருக்குப் பிறகு வளர்ந்த பிராமண சிவநெறி**
10. **இராமானுசருக்குப் பிறகு வளர்ந்த பிராமண மாலியநெறி.**

## இந்தியச் சமயங்களில் கிறித்துவத்தின் தாக்கங்கள்

கி.மு. 10000 ஆண்டுகளில் குமரிக் கண்டத்தில் அறியப்பட் டிருந்த தமிழ்ச் சமயமே இன்றைய ஆசிய - ஐரோப்பிய சமயங் களுக்கெல்லாம் மூலமானதும் முதன்மையானதும் என பல்வேறு சான்றுகளால் நிறுவ இயலும். தமிழகத்தில் பிறந்த, தோன்றிய சமயம் மேலை நாடுகளில் பரவியதும், அங்கு தோன்றிய பல்வேறு வளர்ச்சிகளின் அடிப்படையில் பல்வேறு சமயங்களாக முகிழ்த்ததும், அச்சமயங்கள் மீண்டும் தமிழகத் துக்கு வேறு பெயர்களில் அறிமுகமானதும் வரலாற்றுச் சுழற்சியே எனலாம். இந்தியாவில் அறியப்பட்ட, தோன்றிய சமயங்கள் தொன்மைக் காலத்தில் தமிழ்ச் சமயமும், வரலாற் றுக்குச் சிறிது முற்பட்ட காலங்களில் ஆசீவகம், பிராமணம், சமயம், புத்தம் ஆகும் இவைகளில் கி.மு. 1000 ஆண்டுகளில் அறியப்பட்ட ஆசீவகம் கிறித்து பிறப்பாண்டுகளில் மற்ற சமயங் களோடு பின்னிப் பிணைந்து மறைந்து போயிற்று. சுருங்கக் கூறின், பிராமண சமண புத்த சமயங்கள், ஆசீவகத்தின் கொள்கைகளை ஏற்றுக் கொண்டு தோன்றியவைகளே.

பிராமண சமயம் என்பது, கி.பி. 8ஆம் நூற்றாண்டுக்குப் பிறகே அறியப்பட்டாலும், கி.மு. 1000 ஆண்டுகளில் ஆரிய (வேத) சமயமாகத் தோன்றியது. ஆரிய சமயமும் சரி, அதன்வழி

வந்த பிராமண சமயமும் சரி, இந்திய எல்லையைத் தாண்டி வேறெங்கும் எடுத்துச் செல்லப்படவில்லை. பிராமண சமயத்தின் கொள்கைகள், தமிழ்ச் சமயம், பார்சிச் சமயம், சமணச் சமயம், புத்த சமயம் ஆகியவைகளின் கூட்டுக் குழம்பாக சமைக்கப் பட்டவைகளே. பிராமணர்களின் சிந்தனைகள் தன்னிச்சை யாக என்றும் புதிதாக மலர்ந்ததில்லை. நாகரிகமற்ற நாடோடி களாக இந்தியாவுக்குள் நுழைந்த ஆரியர்கள், இடைக் காலத் தில் பல்வகையிலும் தம்மை நிலைநிறுத்திக் கொண்டு, உலகி லுள்ள அனைவரையும் நாகரிகமற்ற நாடோடிக் கும்பல்களாக (Barbarians)க் கருதினர்.

பிராமண சமயம், தென்னிந்தியாவில் இடைக்காலத்தில் (கி.பி. 1000) பரவிய காலத்தும் அதற்கு முன்பும், கடல்கடந்து செல்வது சமயத்துக்கு எதிரானது என்ற கருத்தைக் கொண் டிருந்தது. பிராமணர்களல்லாதவரையும் கடல் கடந்து செல்ல பிராமண சமயம் அனுமதிக்கவில்லை. இவ்வாறு, உலக நாடு களைக் காணவும், பரந்து விரிந்த பட்டறிவைப் பெறவும் வாய்ப்பளித்தால், பிராமணர்களின் செல்வாக்கு குறைந்து விடும் என்பதை பிராமணர்கள் நன்கறிந்திருந்தனர். இந்தியாவில் பிறந்த புத்த சமயம் இலங்கை, சீனா, சப்பான் போன்ற நாடு களில் பரப்பப்படுவதற்கான முயற்சிகளைக் கண்டபிறகும், பிராமணர் தம் சமயத்தைக் கடல் கடந்து எடுத்துச் செல்ல முன்வரவில்லை. உலகின் இடைக்காலச் சமயங்களிலெல்லாம், பயணக் கட்டுரைகளும், பயணிகள் பற்றிய செய்திகளும் உள்ளன. **யுவான்சுவாங், பாகியான், இபின்பதுதா, மார்க்கோ போலோ** போன்றோரின் பயணக் குறிப்புகள் போன்று, பிராமணர்களில் யாரும் வெளிநாடுகளுக்குச் செல்ல முயற்சிக்கவில்லை.

பிராமணர்கள், தாங்கள் அனைத்தையும் கற்றுவிட்ட தாகவும், தாங்கள் கற்பிக்கப் பிறந்தவர்களேயன்றி கற்கப் பிறந்தவர்கள் அல்லர் என்றும் கருதிக் கொண்டனர். ஆனால் பிராமணர் அல்லாதவர்கள் எல்லோரும் தங்களிடம் கற்றால் போதும் என்றும், வேறெங்கும் சென்று எதையும் கற்கக் கூடாது என்றும் தடைவிதித்தனர். இவ்வாறு ஒரு குறுகிய வட்டத் துக்குள் இந்திய மக்களை இறுகக் கட்டிப் போட்டனர்.

இசுலாமிய **அறிஞர் அல்பெருனி** இவ்வாறு கூறுகிறார். "பிராமணர்கள், உலகில் இந்தியா என்ற நாடு மட்டுமே இருப்பது போன்றும், பிற நாடுகளில் வாழ்பவர் எல்லாம்

அறிவற்ற காட்டுமிராண்டிகள் என்றும், அறிவியல் கணிதம் ஆன்மீகம் போன்றவைகள் பற்றி வெளிநாட்டினருக்கு எதுவுமே தெரியாது என்றும் கருதினர். உலகின் பலநாடுகளில் வளர்ந்து விட்ட அறிவியல் பற்றியும், குறிப்பாகப் பாரசீக நாட்டின் கல்வி பற்றியும் பிராமணர்களிடம் யாராவது எடுத்துரைத்தால், அவர்களைப் பொய்யர்கள் என்று கூற முற்பட்டனர். இவர்கள் பல நாடுகளுக்குச் சென்று பயணங்கள் மேற்கொண்டால் தங்களது தவறான எண்ணங்களைப் பற்றி உணர்ந்து கொள் வர். ஆனால் இவர்களின் முன்னோர், இப்படியொரு பிற் போக்கான எண்ணங்களைக் கொண்டிருக்கவில்லை".

பிராமண அல்லது ஆரிய இலக்கியங்கள் யாவும் அவர் களது கண்டுபிடிப்புகள் அல்ல. அவை எங்கு கடன் பெறப் பட்டன என்பதைத் தெரிந்து கொள்ளப்படாத வகையில், மூலங்கள் அழிக்கப்பட்டு, மொழிபெயர்க்கப்பட்டவை. பிராமணர்களின் இலக்கியங்களாக அறிமுகம் செய்யப்பட்டன என்பதை பல்வேறு மேலை நாட்டவரும் ஏற்றுக் கொள்கின் றனர். இவை முற்றிலும் பிராமணர்களின் வருகைக்கு முன் பிருந்த இந்தியக் குடிகளிடமிருந்தே கடன் பெறப்பட்டன. தங்கள் பகைவர்களின் இலக்கியங்களைக் கூட பிராமணர்கள் எடுத்துக் கொள்ளத் தவறியதில்லை. எடுத்துக்காட்டாக, இராமாயணம் மகாபாரதம் போன்ற தொன்மக் கதைகள், பலவுள்ளன. இராமாயணம் மட்டும் நாற்பத்திரண்டு வகையில் சொல்லப்பட்டுள்ளது. ஒவ்வொரு பிராமண ஆசிரியரும், இவ்வாறான இலக்கியங்களைப் படி எடுக்கும் போது, தத்தம் காலத்திய செய்திகளையெல்லாம், அவைகளில் திணித்துள் ளனர். பிராமண ஆசிரியர்கள், பல்வேறு அறிவியல், கணிதம், சமயம், வானவியல் போன்ற செய்திகளை, தாங்கள் எங்கிருந்து எடுத்தோம் என்பதை திறமையாக மறைத்து விட்டனர். இது போன்றே, கிறித்துவ மெய்யியலைத் தழுவிய பிராமணக் கொள்கைகளும், இடைக்காலத்தில் பிராமண சமயத்தில் இடைச் செருகலாகத் திணிக்கப்பட்டன என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

ஒரு மகாபாரதக் கதையில் (பல்வேறு கதைகள் உள்ளன), வெள்ளைக்காரர்கள் நாட்டில் (White Country) நடந்த சமய நிகழ்ச்சி பற்றிய செய்தியொன்று கூறப்பட்டுள்ளது. மக்கள் கூட்டமாக நின்று இறைவனை வழிபட்டனர். ஒரு பேரொளி

தோன்றியது போன்று உணரப்பட்டது. எல்லோரும் கூக்குர லிட்டுக் கடவுளை வாழ்த்தினர். மக்கள் தம்மை மறந்த நிலையில் (unconscious state), ஒருவர் மட்டும் உரத்த குரலில், "வெற்றி பெற்றவரே! தாமரை போன்ற கண்களைக் கொண்டவரே! உலகைப் படைத்த ஒப்பற்ற பெரும் பொருளே! உம்மை வணங்குகிறோம்! ஆண்டவரின் தலைமகனை வணங்குகிறோம்" என்று வாழ்த்தினார். தொடர்ந்து வீசிய மெல்லிய தென்றலில், விண்ணகத்தின் நறுமலர்களின் மணம் எங்கும் பரவியது. தொடர்ந்து நோயாளிகள் அனைவரும் தாங்கள் நலம் பெற் றுள்ளதை உணர்ந்தனர். இந்நிகழ்ச்சி, ஒரு கிறித்துவ வழிபாட்டு நிகழ்ச்சியே என, தாமஸ் என்ற வரலாற்றாசிரியர் குறிப்பிடுகின் றார். மணீசிய (Manicheans)க் கிறித்துவக் குழுவினர் நடத்திய வழிபாட்டு நிகழ்ச்சியே மகாபாரதக் கதையில் இடம் பெற்றுள் ளதாகவும் குறிப்பிடுகின்றார். இச்செய்தியின் மூலம், கி.மு. 1000 ஆண்டுகளில் நிகழ்வுற்றதாகக் கருதப்படும் மகாபாரதத்தில், கி.பி. மூன்றாம் நூற்றாண்டின் நிகழ்ச்சிகள், இடைச் செருக லாகச் சேர்க்கப்பட்டுள்ள செய்தி வெளிப்படுகின்றது.

ஆதிசங்கரருக்கு முன்பு புத்த சமயம் இந்தியாவெங்கும் தனது வேர்களைப் பதித்திருந்தது. புத்த சமயம் கடவுளைப் பற்றி அறிந்து கொள்வதில் விருப்பம் காட்டவில்லை (Buddhism is non-theistic if not atheistic). இவ்வுலகைக் கடவுள் தான் படைத்தார் என்பதை புத்தர் ஏற்றுக் கொள்ளவில்லை. (இது ஆசீவகக் கொள்கையின் தாக்கம்). இயற்கையின் சட்டமே உயர்வானதென்றும், ஒவ்வொருவரும் அதற்குக் கடமைப் பட்டவர்கள் என்றும் புத்தர் கருதினார். மாந்தன் செய்யும் ஒவ்வொரு தீவினைக்கும் கழிவு செய்யப்பட வேண்டுமென்றும், அதற்காக அவன் ஒவ்வொரு முறையும் பிறந்து தன்னை ஈடேற்றிக் கொள்ள வேண்டுமென்றும், அதற்காக நல்வினை களையே அவன் நாடவேண்டும் என்றும் புத்தர் கூறினார். இவ்வுலக வாழ்க்கையானது எண்ணவியலாத அழிவுகளின் பெருக்கத்தைக் கொண்டுள்ளதாகவும் (expanse of annihilation) கருதினார். இது வறட்டுத் தனமான கொள்கையென்று ஆதிசங்கரர், புத்த சமயத்தைச் சாடினார். புத்த சமயமென்பது கொள்கைக் குழப்பம் கொண்ட சிந்தனைகளின் விளைவே என்பது சங்கரரின் நிலைப்பாடாகும். (It was this dry philosophy that Sankara successfully challenged.)

நம்பூதிரிப் பிராமணக் குடும்பத்தில் பிறந்த ஆதிசங்கரர், நம்பூதிரிகள் நடத்திய சமயப் பள்ளியில் கல்வி கற்றார். நம்பூதிரிகள் சிவநெறியைச் சார்ந்தவர்கள் என்பதும், சேர மன்னர்களும் சிவ பற்றாளர்கள் என்பதும், சங்கரரின் சமயம் சிவநெறியைச் சார்ந்ததே என்பதற்கான கருதுகோளாகும். சிவநெறியென்பது, தமிழரின் பழமையான நெறியென்பதுடன், ஆதிசங்கரர் காலத்து சிவநெறியில் ஆரியக் கலப்பு அருகியே காணப்பட்டது எனலாம். காலடிக்கு 2கல் தொலைவிலிருந்த அங்க மலை, கிறித்துவத்துக்கு மாறிய நம்பூதிரிகள் வாழ்ந்த கிறித்துவ ஊர் என்பது தெளிவு. எனவே, கிறித்துவத்துக்கு மாறிய நம்பூதிரிகள் தொடர்பும் சங்கரருக்கு இருந்தது எனலாம். ஆதிசங்கரருக்கு, இராமானுசரைவிட கிறித்துவம் பற்றித் தெளி வாகத் தெரிந்திருந்தது.

ஆதிசங்கரரின் சிந்தனைகள், முன்னெப்போதுமில்லாத, அதுவரையில் எவராலும் சொல்லப்படாத புதிய மெய்யியல் கோட்பாடுகளைக் கொண்டிருந்தாலும், அது முழுக்க முழுக்க சிவநெறியைச் சாராமலும், கிறித்துவ நெறியைச் சாராமலும், கலப்புற்றிருந்ததால், இரண்டு சமயங்களிலுமிருந்த நம்பூதிரிகள் சங்கரரின் கோட்பாடுகளை ஏற்கவில்லை. கிறித்துவம் சார்ந் திருந்ததாக பிராமண நம்பூதிரிகளும், ஆரியம் சார்ந்திருந்த தாக கிறித்துவ நம்பூதிரிகளும் சங்கரரின் கொள்கைகளைப் பார்த்தனர். இதன் விளைவாக ஆதிசங்கரர் நம்பூதிரிப் பிராமணர்களின் சினத்துக்கு ஆளானதோடு, பிராமண சமூகத் தினின்றும் விலக்கி வைக்கப்பட்டார்.

ஆதிசங்கரரின் கொள்கைப்படி, இறைவன் உருவமற்றவர் (Nirguna Brahmam - God without attributes) என்றும், முழுமுதற் கடவுளான ஈசுவரன் அல்லது பகவத் என்பரே இவ்வுலகைப் படைத்தவர் என்றும் அறியப்பட்டது. எல்லாவற்றிற்கும் முதல்வனான இறைவனே (பகவத்), மாந்தர்களுக்காகச் சமயத் தைத் தோற்றுவித்தான். அவனே படைத்தவன், காப்பவன், அழிப்பவன் என்ற முப்பணிகளையும் செய்பவன். மாந்தனுள் மறைந்துள்ள ஆன்மாவைக் கட்டுப்படுத்தி (Control), இயக்கி (direct), வழிகாட்டி (guide), ஆள்பவன் (rule) அவனே என்பது சங்கரரின் கொள்கை. வாழ்வின் வினைகளுக்கேற்ப, மறுபிறவி களை அளிப்பவனும் அவனே. நல்லவர்களுக்குப் பெருவாழ் வினையும், தீயவர்களுக்கு ஒறுப்பினையும் (Punishment) இறைவன்

அளிக்கின்றான். அறிவு வழியில் மீட்பைப் பெற (Salvation) முயன்றோருள் சங்கரரே முதன்மையானவராக (ardent protagonist)க் காட்சியளிக்கின்றார். அறிவின் வழியே தன்னையே அறிந்து கொள்வதே மீட்பைப் பெற சிறந்த வழியாகும். ஈடுபாடு (Devotion), திருவழிப் பயணங்கள் (Pilgrimages) இன்னும் மற்ற மற்ற முயற்சிகள் யாவும் தெய்வீக அறிவைப் பெறுவதற்கான படிக்கற்களே என்பது சங்கரரின் கருத்தாகும். தன்னையும் தன் ஆன்மாவையும் நன்கு அறிந்து கொண்டவனால்தான் உலகி லுள்ள ஆன்மாக்களோடு உறவு கொள்ள இயலும். இந்த அடிப் படையில், சிவநெறியை சங்கரர் ஒழுங்குபடுத்தினார்.

வடஇந்தியப் பகுதிகளில் சிவனை அழிக்கும் கடவுளாக வும், அச்சத்திற்குரிய கடவுளாகவும் பிராமணர்கள் அறிவித் திருந்தனர். தமிழகத்தில் தொன்மைக் காலத்திலிருந்து சிவனே முழுமுதற் கடவுளாகப் போற்றப்பட்டான். பிராமணர்கள் கூறியவாறு தமிழகத்தில் அச்சத்திற்குரிய கடவுளாகச் சிவன் அறியப்படவில்லை. திருமூலர் அன்பே சிவம் என்ற தமிழ் நெறியை சிவனியத்தில் புகுத்தினார். ஆதிசங்கரர், சிவநெறியை பிராமணச் சமயமாக்கி, அன்பும் அருளும் கொண்டவனாகச் சிவனைப் போற்றினார். இறைவனை அச்சக்கண் கொண்டு அணுகுவதை சங்கரர் தவிர்த்தார். துவ என்பது இரண்டாகும். அ-துவ என்பதற்கு இரண்டல்ல, அது ஒன்றே என்பது வட மொழிப் பொருளாகும். வடசொல்லான அத்துவ என்பதற்கு ஒன்றானவன் (Monoism) இறைவன் என்பது பொருள். பரமாத்மா வும் (God) சிவாத்மாவும் (human) ஒன்றே என்பதுதான் அத்துவைதக் கொள்கை எனலாம். இறைவன் அன்புருவானவன் இரக்கச் சிந்தனையுள்ளவன் (God of Love, Mercy and Grace) என்ற அத்வைதக் கொள்கை, கிறித்துவ மெய்யியலின் அடிப் படையில் எழுந்ததே என்பர்.

இராமானுசர் அத்துவைதக் கொள்கைக்கு மூலமான ஒன்றை எதிர்த்தார். இறைவன், உடல், ஆன்மா ஆகியவை தனித் தனியானவையல்ல என்றும், இம்மூன்றும் ஒன்றை யொன்று சார்ந்திருப்பதாகவும் இராமானுசர் கருதினார். ஆன்மா உடலையும், ஆன்மாவையும் உடலையும் இறைவனே ஆள்வ தாக வும், இறைவனின்றி ஆன்மாவும் உடலும் செயல்படா வென்றும் கூறிய இராமானுசரது கொள்கையே விசிட்டாத்து வைதம் ஆகும். இதுவும் கூட கிறித்துவ மெய்யியலைத் தழுவி

யதே என்பர். அத்வைதம் தன்னையே அறிந்து கொள்வதின் வழியே இறைவனை அடையலாம் என்ற கொள்கைக்கு மாறாக தன்னை இறைவனுக்கு முழுவதுமாக அளித்தலே (Self surrender) மீட்புக்கு (Salvation) வழியென்று விசிட்டாத்துவைதம் கூறியது. அத்வைதம், ஞான மார்க்கத்தின் துணை கொண்டு பற்றுதலைக் காண்கிறது. அத்வைதம் முற்றிலும் அறிவு மற்றும் வேதங்களைக் கற்பதைச் சார்ந்து காணப்படுவதால், சூத்திரர்கள் என்று கருதப்பட்ட நான்காம் குடிமக்கள், அத்வைதக் கொள்கை வழியே இறைவனை வழிபடுவது தடுக்கப்பட்டது. ஆனால் விசிட்டாத்துவைதம், கடையனுக்கும் மீட்பினை உறுதி செய்கிறது. தன்னையே இறைவனுக்குக் கையளிக்க (Self surrender) வேதக் கல்வியோ, அறிவு சார்ந்த வழியோ தேவை யில்லை என்று கருதியது. மகாவிஷ்ணுவின் அன்பும் அருளும், பெரும் சாதிக்காரன் தொடங்கி கடைய்ன் வரையில் தடை யின்றிப் பாய்ந்தோடும் என்றும், ஆண்டவன் முன் அனைவரும் சமம் என்று இராமானுசர் கூறினார். வைணவ சமயத்தின் பல பெரியார்கள் பிராமண வகுப்பைச் சார்ந்தவர்கள் அல்லர் என்பதும் குறிப்பிடத்தக்கது. இராமானுசரின் கொள்கை சிவ நெறியாளர்களால் கடுமையாகத் தாக்கப்பட்டது. இராமானு சருக்கு நஞ்சளிக்கவும் அவர்கள் முயற்சித்தனர் என்று கூறப் படுகின்றது. கடவுள் தம் மக்களை அழிவினின்றும் மீட்டெடுக்க (பாவத்தினின்றும் மீட்டெடுப்பதாகக் கிறித்துவம் கூறுகிறது) பல்வேறு பிறப்புகளை மேற்கொண்டார் என்றும், அப்பிறப்பு களில் சில விலங்குகளின் சேர்க்கை இருந்ததால், இறைவன் தனது அருட்கொடையை மாந்தன் விலங்குகள் என்ற பாகு பாடுகள் இல்லாமல் அளிக்கும் செய்தி உறுதிப்படுத்தப்பட்ட தாகவும், வைணவ மெய்யியலார் கருதுகின்றனர். சிவநெறியும், வைணவ நெறியும் உயிர்ப்பலிகள் கொடுப்பதைத் தடை செய்தன. பற்றாளன் (பக்தன்) தன் அன்பிற்கடையாளமாக, மலர்கள் போன்ற ஏழைகளும் பெறக்கூடிய பொருட்களைக் காணிக்கை யாகக் கொடுக்கும் நடைமுறை தோன்றியது. ஏனெனில், இறைவனே பல்வேறு பிறப்புகளில், தானே பலிப்பொருளா னார் (கிருஷ்ணாவதாரம்) என்பதால், விலங்கு மற்றும் மாந்தப் பலிகள் தேவையில்லையெனக் கருதப்பட்டது. இந்நடை முறை, முற்றிலும் கிறித்துவ மெய்யியலைத் தழுவியதே என்பதும் ஆய்வாளர்களின் கருத்துரைகளாகும்.

இராமானுசரின் கொள்கைக்கு அடிப்படையாக, கிறித்துவ மெய்யியல் காட்டப்படுவது, இராமானுசரின் வழிவழி சிந்தனை யாளர்களுக்கும் ஏற்புடையதாகவே உணரப்படுகின்றது. இராமானுசரின் விசிட்டாத்துவைதக் கொள்கைகளை, அவரது தொண்டர் இராமானந்தர் வடஇந்தியப் பகுதிகளில் பரப்பி னார். இராமானந்தரின் தொண்டர் கபீர், இந்திய நாட்டில் தோன்றிய மிகச் சிறந்த மாந்தநேயப் பண்பாளர் களில் ஒருவ ராகக் கருதப்படுகின்றார். இந்து - இசுலாமிய ஒற்றுமையை வலியுறுத்திய கபீர், அக்காலச் சூழலில் இருந்த சமய வன்முறைப் போக்குகளைத் தணித்தார். கபீரின் தொண்டரான நானக், இந்து - இசுலாமிய ஒற்றுமையைக் கருத்தில் கொண்டு, சீக்கிய சமயத்தைத் தோற்றுவித்தார். பஞ்சாப் என்ற மறவர்கள் வாழ்ந் திருந்த மாநிலத்தை அமைதி வழிக்குத் திருப்பினார். வட மாநிலங்களில் வாழ்ந்திருந்த மாதவர், சைதன்யம், வல்லவா, நாராயணர் போன்ற பெரியார்கள், கபீரின் மாந்தநேயக் கொள்கைகளின் தூய தொண்டர்களாக விளங்கினர் எனலாம்.



## உலகின் முதல் சமயம் – தமிழ்ச் சமயமே

உலகில் தோன்றிய முதலினம் தமிழினமே என்றும், அத்தமிழினம் குமரிக்கண்டத்தில் வாழ்ந்திருந்தனர் என்றும், கி.மு. 20,000 ஆண்டுகட்குப் பிறகு ஏற்பட்ட பல்வேறு கடற் கோள்களால் குமரிக்கண்டம் சிறிது சிறிதாக அழிந்துபட்டது என்றும், இன்றுள்ள தமிழகம், தமிழர்களின் பிற்காலக் குடியேற்ற நாடே என்றும் அறியக் கிடக்கின்றது. குமரிக் கண்டம் பற்றிய செய்திகளைப் பல்வேறு இலக்கியங்கள் வாயி லாக அறிந்து கொண்டாலும், விவிலியத்தின் பழைய ஏற்பாட்டு நூலில், ஆதியாகமத்தில் சொல்லப்படும் முதல் பதினொரு அதிகாரங்கள், குமரிக்கண்டம் பற்றிய செய்திகளை உறுதிப் படுத்துகின்றன.[118] விவிலியத்தில் குமரிக்கண்டம் பற்றிய செய்தி கூறப்பட்டுள்ளனவா என்று பலரும் வியக்கக் கூடும்.

விவிலிய ஆய்வாளர்கள், ஆதாம் முதல் நோவா வரையில் வாழ்ந்திருந்த பத்து தலைமுறையினர் பற்றிய செய்திகள் தொடர்பாக விரிவான ஆய்வுகளைக் கடந்த காலத்தில் மேற் கொண்டனர். ஆனால், அப்பதினோரு அதிகாரங்களில் குறிப் பிடப்படும் செய்திகள் நிகழ்வுற்ற நாடு எதுவென அவர்களால் அடையாளம் காண இயலவில்லை. ஆனால், அந்நாடு பாலத் தீனம் அல்ல என்பதைத் தெளிவுபடுத்தியுள்ளனர். இறைவன் இவ்வுலகினைப் படைத்த செய்தியுடன் தொடங்கும் விவிலியம், படைப்புத் தொழில் பற்றிக் குழப்பமில்லாத செய்திகளைத் தருகிறது. இப்படைப்பு நிகழ்வுற்ற செய்திகளை, பாபிலோனிய

118. Gen. 1 to 11 chapters. Ibid, p. 57.

இலக்கியங்களும் சுட்டுகின்றன.[119] பாபிலோனியர்களுக்குத் தெரிந் திருந்த அச்செய்தி எங்கிருந்து பெறப்பட்டது என அறிய இயலவில்லை.

இருப்பினும் பாபிலோனியர் தமிழரே என்ற செய்தி, இன்று உறுதிப்படுத்தப்பட்டுள்ளது.[120] மேலை நாட்டு அறிஞர்களும் இக்கருத்தினை ஏற்றுக் கொண்டுள்ளனர். ஆனாலும் பாபி லோனில் தமிழர் வாழ்ந்திருந்ததாகக் கூறப்படும் செய்திக்கான வரலாற்றுப் பின்னணியை அவர்களால் கூற இயலவில்லை. பாபிலோனில் குடியேறிய தமிழரே, விவிலியத்தின் முதல் பதினோரு அதிகாரங்கள் பற்றிய நிகழ்வுகளைப் பதிவு செய் துள்ளனர். ஆதாம் ஏவாள் பற்றிய செய்திகள் ஏற்கனவே குமரிக் கண்டத்தில் அறியப்பட்டிருக்க வேண்டும். அச்செய்திகளைப் பற்றிச் சொல்ல, உயிரோடு எவரும் பிழைத்திருக்கவில்லையாத லால், தொல் தமிழரிடையே அச்செய்தி மறைந்து போயிற்று. உயிர் தப்பிப் பிழைத்த தமிழர்கள் பாபிலோனில் குடியேறிய காலத்தில், ஆதாம் - ஏவாள் பற்றிய நிகழ்வுகளைச் செவிவழிச் செய்திகளாக தமது அடுத்த தலைமுறையினருக்கு அவர்கள் அறிவித்ததின் வாயிலாக பாபிலோன் தொன்மக் கதைகளில் இச்செய்திகள் இடம்பெற்றன. பாபிலோனியக் கதையின் நிகழ்வு களையே விவிலியத்தின் பழைய ஏற்பாடு பதிவு செய்துள்ளது.

படைப்பு நிகழ்வு தொடங்கி, நோவா காலம் வரையிலான காலத்தில் (ஏறக்குறைய 10000 ஆண்டுகள்) நடைபெற்ற செய்திகள், சுருக்கமாக விவிலியத்தில் கூறப்பட்டுள்ளன. அந்த 11 அதிகாரங்களில் கூறப்பட்டுள்ள இடப்பெயர்கள், விலங்குப் பெயர்கள், மரம் செடி கொடி பழம் போன்ற பெயர்கள், ஆறுகள், சமவெளிகள், தோட்டங்கள், இவற்றிற்கு மேலாக

---

119. The Biblical legend about the world flood almost totally repeats the Babylonian myth about the flood. The Noah who saves himself from the flood in an arc is the Babylonian Utnapishtin. But the Biblical story lacks the logical consistancy of the Babylonian myth in which Ea, despite the Supreme God Enlil, rescues his favourite. Utnapishtim and thus saves all of mankind from perishing. In the Bible one and the same Almighty God is responsible for both killing and rescusing people. - History of Religion.p. 237.

120. History of Tamilnad, Dr. N.S., p. 20.

மாந்தப் பெயர்கள் யாவும் தமிழ் மூலத்தையே கொண்டுள்ளன என்பதை, சொல்லாய்வுகள் வழியே விளக்கியுள்ளோம்.[121]

ஆதாம் ஏவாளைப் படைத்த இறைவன் ஒருவனே என்பது தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளதால், குமரிக் கண்டத்தில் ஒரு கடவுள் வணக்க முறையே இருந்தது என்பது தெளிவாகிறது. **ஒரு கடவுள் வணக்க முறை என்பது. முதிர்ந்த சிந்தனை களின் மெய்யியல் கொள்கையாகும்**. ஆதாம் ஏவாள் காலத்தில் (20000 கி.மு. எனக் கொள்ளலாம்) தமிழரின் மெய்யியல் கொள்கை சிறப்பானதொன்றாக இருந்தது. படைப்புத் தொழிலை இறைவன் மேற்கொண்ட போது கொடுக்கப்படும் விளக்கங்களும் குழப்பமில்லாமல் காணப்படுகின்றன. கி.மு. 20000 ஆண்டுகட்கு முற்பட்ட தொன்மக் கதையோடு, கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் சொல்லப்பட்ட ஆரிய வேதத்தின் படைப்புக் கதையைக் காணும் போது, (புருஷ சூக்தம் சொல்லும் படைப்புக் கதை) 100 விழுக்காடு நம்ப இயலாத, இயற்கைக்கு மாறுபட்டதாக உள்ளது.[122] இதன் வழியே பிற்கால ஆரியர் சிந்தனையைக் காட்டிலும், தொன்மைக் காலத் தமிழர் சிந்தனைகள் எவ்வளவு தெளிவாக இருந்தன என்பதை அறியலாம்.

ஆடு மாடு மேய்த்தல், வேளாண்மை ஆகிய தொழில்கள், முழுவளர்ச்சியுற்ற மக்கள் குமுகாயத்தின் தொழில்களே. இத்தொழில்கள் மேற்கொள்ளப்பட்ட கால அளவுகளில், உயர்ந்த பண்பாடும் நகரிய நாகரிகமும் வளர்ச்சியுற்றிருந்ததைக் காணலாம். ஆதாம் ஏவாள் இணையின் மக்கள் இருவரும் முறையே வேளாண்மை, கால்நடைகளை வளர்த்தல் என்ற தொழில்களைச் செய்து வந்ததாக விவிலியம் கூறுவதிலிருந்து, ஆதாம் ஏவாள் காலம் மிக உயர்ந்த பண்பாட்டுக் காலம் என்பதில் ஐயமில்லை. மேலும் கலை, கைத்தொழில், இசை, வீடுகட்டுதல், கூடாரம் அமைத்தல், மிகச் சிறந்த மரக்கலங் களைக் கட்டுதல், மீன்பிடித்தல், பொன் வெள்ளியால் கலை நயமிக்க அணிகலன்களைச் செய்தல் போன்ற நாகரிக முதிர்ச்சி பெற்ற பண்பாட்டு வாழ்க்கை முறையை, விவிலியத்தின் முதல் 11 அதிகாரங்கள் விளக்குகின்றன.

---

121. எபிரேயத்தின் தாய்மொழி தமிழே நூலைப் பார்க்கவும்.

122. சூத்திரன் யார்? பி.ஆர். அம்பேத்கர். ப.

இறுதியில் ஏற்பட்ட கடற்கோள், எஞ்சியிருந்த குமரிக் கண்டத்தை அழித்த போது, மரக்கலங்களைக் கொண்டிருந்த மீனவர் இனத்தின் மக்களில் பலர், வெள்ளப் பாழினின்றும் தப்பித்துச் சென்றனர். அவ்வாறு தப்பித்துச் சென்றவருள் ஒருவ னாகவே நோவா என்பவன் விவிலியத்தில் சொல்லப்படுகின் றான். நோவா என்பது, நாவாய் என்ற தமிழ்ப் பெயரின் திரிபே. நோவா போன்று மற்றும் பலரும் தப்பிச் சென்று, மேலை நாடு களில் குடியேறினர். நோவா, பாபிலோனில் குடியேறியதாக விவிலியம் கூறுகிறது.[123] நோவாவின் மரபார் விட்டுச் சென்ற குமரிக் கண்டத்து நிகழ்வுகளே, விவிலியத்தில் முதல் 11 அதிகாரங் களில் கூறப்பட்டுள்ள செய்திகளாகக் கொள்ளலாம்.

**எனவே, ஒரு கடவுட் கொள்கை, நோவா என்ற தமிழ னால் பாபிலோனுக்கு எடுத்துச் செல்லப்பட்டது என்பது ஏற்றுக் கொள்ளக் கூடிய உண்மைச் செய்தியாகும்.** தொடக் கத்தில் ஒரு கடவுள் கொள்கை பின்பற்றப்பட்ட பாபிலோனில் பிற்காலத்தில் எவ்வாறு பல கடவுள் வணக்க முறைகள் தோன் றின என்பது பற்றி வரலாற்றில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளன. இந்த வகையிலான ஒரு கடவுள் கொள்கையைத் தான் மீண்டும் மோசே என்பான் நிலைநாட்டி, தனது புதிய சமயத்தைத் தோற்றுவித்தான். எனவே, மோசே வலியுறுத்திய ஒரு கடவுள் கொள்கை, தொல் தமிழர் கொள்கையே என்பது தெளிவு.

குமரிக் கண்டத்தில் அறியப்பட்ட ஒரு கடவுள் கொள்கை, வெள்ளப் பாழினால் சிதறிப் போன தமிழர்களின் புதிய சூழல் களினால், நான்கு நிலப் பிரிவுகளின் அடிப்படையில் சேயோன், மாயோன் இந்திரன், வாரணன் என்ற நிலத்திற்கான கடவுள் வழிபாட்டு முறைகள் அறிமுகமாயின. தொல்காப்பியம் கூறும் மேற்கண்ட கடவுளர்கள், தனித்தனி நிலக் கடவுளர்களாயிருந் தாலும், அனைத்து நிலப்பிரிவின் தமிழர்களாலும் வணங்கப் பெற்றனர் எனலாம். வெள்ளப் பாழிற்குப் பிறகு சிந்துவெளி யில் குடியேறிய ஒரு பிரிவினர், தங்கள் தாய்க் கண்டத்திற்கு மாறான புதிய சூழலை அங்கு கண்டனர். எங்கும் பரந்து விரிந் திருந்த பாலை என்ற புதிய நிலப்பிரிவுக்கேற்ற புதிய தெய்வத்தை அங்கு படைத்துக் கொண்டனர். தமிழர்கள் அதுவரையில் அறிந்திராத பெண் தெய்வம் சிந்துவெளியில்தான் முதன் முதலில் வணங்கப்பட்டிருக்க வேண்டும்.

---

123. Gen. 10:1.

சிந்துவெளித் தமிழரோடு தொடர்பு கொண்டிருந்த தமிழகத்துத் தமிழரும் பாலை என்ற நிலப்பகுதியை (தமிழகத்தில் காணப்படாதிருந்தும்) நான்கு நிலத்தோடு ஐந்தாவது நிலமாகச் சேர்த்துக் கொண்டனர். உண்மையில், நானிலங்களில் குறிஞ்சியும் முல்லையும் வறட்சியில் மயங்கிய பகுதியையே பாலை எனப்பட்டது. பாலை நிலத்துக்கு கொற்றவை தெய்வமாக்கப்பட்டாள். கொல்+அவ்வை = கொல்லும் தன்மை கொண்ட பெரியவள் அல்லது உயர்ந்தவள் என்பதே இச்சொல்லின் பொருளாகும். கொல்+அவ்வை = கொல்லவ்வை → கொற்றவை[124] என நீண்டது எனக் கொள்க.

தொல் தமிழர் பெண் தெய்வத்தை அறியாதிருந்ததினாலும், பாபிலோன் தமிழர்கள் பெண் தெய்வம் பற்றிய சிந்தனையில்லாதிருந்ததினாலும், மோசே தொடங்கிய யூத சமயத்திலும், தமிழ் மரபையொட்டி, பெண் தெய்வம் சொல்லப்படவில்லை. மோசே காலத்திலேயே, பாபிலோனிலும் எகிப்திலும் பெண் தெய்வங்கள் வணங்கப் பெற்றனர் என்றாலும் மோசே பெண் தெய்வம் எதனையும் ஏற்கவில்லை. கி.மு. 1000 ஆண்டுகளில் தோன்றிய பிராமணர் வேதங்களிலும் பெண் தெய்வங்கள் கூறப்பட்டனர். பின்னர் தோன்றிய சமண புத்த சமயங்கள், ஆண் தெய்வத்தையே குறிப்பிடாதபோது, பெண் தெய்வம் பற்றிய கேள்வியே எழவில்லை எனலாம்.

யூத சமயமென்பது, தொல்தமிழர் வகுத்துக் கொடுத்த மெய்யியல் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டதே என்பதை, பல்லாற்றானும் நிறுவ இயலும். யூத சமயத்தில் தோன்றிய இயேசுவும் ஒரு கடவுள் கொள்கையை வலியுறுத்தியவராவர்.



124. சிலப்பதிகாரம் 20:36

# விவிலியத்தின் மூன்று தெய்வ நிலைப்பாடுகள் (Trinity)

விவிலியம் என்பது படைப்புக் காலம் தொடங்கி, ஆதாம், அபிறகாம் மோசே, இசையா போன்ற இறைத் தூதர்களை உள்ளடக்கிச் சொல்லப்பட்டு, இயேசுவின் பிறப்பு வரை யிலான கால அளவினில் சொல்லப்படுவதாகும். இது பழைய ஏற்பாடு எனப்படும். பழைய ஏற்பாட்டின் நிகழ்வுகள் அனைத் தும் கிறித்துவ சமயத்தால் ஏற்றுக் கொள்ளப் பட்டவைகளே. இயேசுவின் பிறப்பு, கொள்கை விளக்கம், இறப்பு, உயிர்ப்பு, உயிர்ப்புக்குப் பின்னர் வரும் மறைத் தொண்டர்களின் செயல் பாடுகளை உள்ளடக்கியது புதிய ஏற்பாடு எனப்படும்.

பழைய ஏற்பாட்டில் சொல்லப்பட்டுள்ள எகோவா[125] என்ற இறைவனை இயேசுவும் ஏற்றுக் கொண்டு, அவ்விறை வனைத் தனது தந்தை என்று இயேசுவே குறிப்பிடுகின்றார். இயேசு, தந்தையிடமிருந்து[126] வந்த மகன் என்றும், இறைவன் என்றும் கிறித்துவம் கூறுகிறது. பழைய ஏற்பாட்டின் இறைவனைத் தந்தையாகவும், புதிய ஏற்பாட்டின் இயேசுவை மகனாகவும் கிறித்துவம் ஏற்றுக் கொண்டுள்ளது. இயேசு, தன்னைத் தந்தையாகிய கடவுளின் மகன் என்று சொன்னதாக புதிய ஏற்பாட்டுச் சமய நூலில் காணப்படுகின்றது. இயேசு, தன்னைக் கடவுளின் மகன்[127] என்று சொன்னது போல், தானும் கடவுள்தான் என்று நேரிடையாகச் சொல்லவில்லை. இயேசு வின் கொள்கைகளையும், தூய வாழ்க்கையையும், அவருடைய அருஞ்செயல்களையும் (Miracles) கண்ட மக்கள், இயேசுவைக்

125. Exodus, 3:13-15.

126. Luke, 10:21; Matt. 11:25-27.

127. Matt. 6:5-8; 7:11; 10:29-31.

கடவுளாகவே எண்ணினர்.[128] ஒருமுறை இயேசு தனது தொண்டர்களைப் பார்த்து, "மக்கள் என்னைப் பற்றி என்ன கூறுகிறார்கள்" என்று கேட்க, தலைத்தொண்டனான பேதுரு, "சிலர் தங்களை இறைத்தூதர் என்று கூறுகிறார்கள்" என்றார். "நீ என்னைப் பற்றி என்ன நினைக்கிறாய்?" என்று கேட்க, பேதுரு, "எல்லாம் வல்ல இறைவனாகிய தந்தையின் மகனும் இறைவனுமாயிருக்கிறீர்கள்" என்று பதிலிறுத்ததாக விவிலியம் கூறுகிறது.[129]

தூய ஆவி என்ற கொள்கை, யூத சமயம் அதுவரையில் கேள்விப்படாத புதிய அறிமுகமாகும். தூய ஆவியானவர், திருமுழுக்கு யோவானிடம் இயேசு வந்து நீர்முழுக்கு பெற்ற போது, இயேசுவின் மேல் நிழலிட்டதாக விவிலியம் கூறுகிறது.[130] இயேசுவின் உயிர்ப்புக்குப் பிறகு, இயேசுவின் தொண்டர்கள் அச்சத்திலிருந்தமையால், தம் தலைவனுக்கு ஏற்பட்ட இடர்ப் பாடு தமக்கும் தோன்றுமென எண்ணி, அறைக்குள்ளே முடங்கிக் கிடந்தனர். அவ்வேளையில் தூய ஆவியானவர், தொண்டர்கள் ஒவ்வொருவர் மேலும் இறங்கி வந்ததாக விவிலியம் கூறுகிறது. இந்நிகழ்வுக்குப் பின்னர், தொண்டர்கள் அச்சம் தெளிந்து, புதி ய ஆற்றலைப் பெற்றுக் கொண்டு, இயேசுவின் நற்செய்திகளை அறிவிக்கப் புறப்பட்டதாக விவிலியம் கூறுகிறது.[131] இந்நிகழ்வு களின் வழியாக, தூய ஆவியானவர் அச்சத்தை நீக்கி ஆற்றலைத் தருபவர் என்று நம்பப்படுகிறது.

இம்மூன்று நிலைகளையும் கருத்தில் கொண்டு, எகோவா - தந்தையாகவும், இயேசு - மகனாகவும் சொல்லப்படுகின்றனர். தந்தைக்கும் மகனுக்கும் இடையே நிலவும் அன்புப் பரிமாற்றமே தூய ஆவியானவர் என்று கிறித்துவம் விளக்குகிறது.[132] இம் மூவரும் மூன்று பண்புகளைக் கொண்டிருந்தாலும், இம்மூவரும் ஒருவரே என்றும், ஒரு கடவுளே என்றும் கிறித்துவம் கூறுகிறது. கிறித்துவத்தின் தலையாய நம்பிக்கையே இதுதான்

---

128. John, 1:14, 18; 10:30.

129. Luke, 9:20.

130. Matt. 3:13-17; Mark, 1:9-11; Luke, 3:12, 13.

131. Acts, 2:14-21.

132. Dictionary of the Bible, p. 899.

என்பதால், மூவொரு கடவுட் கொள்கையை கிறித்துவம் உயிர் மூச்சாகவே கொண்டுள்ளது எனலாம். இடைக்காலத்தில் இம்மூவருடைய பண்புகள் பற்றியும் பலவாறான விளக்கங்கள் அளிக்கப்பட்டன என்றாலும் அவையெல்லாம் புறந்தள்ளப் பட்டன.

கிறித்துப் பிறப்பாண்டுகளுக்குப் பிறகு தோன்றிய இக் கொள்கையை, தூய தோமையார் என்ற இயேசுவின் மறைத் தொண்டர், மற்றும் அவருக்குப் பின் வந்த கிறித்துவ மறைத் தொண்டர்கள் தென்னிந்தியாவிலும், முன்னதாக ஆப்கானிஸ் தான் பஞ்சாபிலும் பரப்பினர் என்று சொல்லப்படுகின்றது. இக்கொள்கையே, கி.பி. ஐந்தாம் நூற்றாண்டுக்குப் பிறகு இந்தியச் சமயங்களில் ஏற்கப்பட்டுள்ளதென்பது, டாக்டர் மு. தெய்வ நாயகம் போன்றோரின் முடிபுகளாகும்.

இயேசு கிறித்து அறிவித்த சமயக் கொள்கைகளில் பல யூதர் சமயம் சார்ந்தவைகளும், சில யூத சமயத்தின் மறக் கொள்கை களுக்குப் புறம்பான அறக்கொள்கைகளும் இடம்பெற் றுள்ளன. இயேசு கிறித்துவின் அறக்கொள்கைகள் யாவும் அன்பு, மாந்தநேயம் ஆகியவைகளோடு தொடர்புடையவை. இவ்வகையில், ஆசீவகக் கொள்கையின் கடவுள் மறுப்புக் கொள்கை தவிர்த்த ஏனைய கொள்கைகள் கிறித்துவத்தோடு தொடர்பு கொண்டவை. பிளவுபடாத புத்த சமயக் கொள்கை களும் அவ்வாறே. இந்தியச் சமயங்களில், ஆரிய சமயம் தவிர்த்த பிற சமயங்களில், கிறித்துவ சமயத்தோடு ஒத்த கொள்கைகள் காணப்படுகின்றன. பிற்கால பிராமணச் சமயமும் கிறித்துவ நெறிகளுடன் தொடர்பு கொண்டதுவே. அடியிற் கண்டவாறு தமிழ்ச் சமயத்தின் வளர்ச்சியை (Evolution) விளக்கலாம்.

*தமிழ்ச் சமயம் - கி.மு. 20000*
*(ஒரு கடவுட் கொள்கையைக் கொண்ட*
*குமரிக் கண்டத்துத் தமிழர் சமயம்)*



*பாபிலோனிய சமயம் - கி.மு. 10000*
*(தமிழரின் மேலை நாட்டுச் சமயம்*
*- ஒரு கடவுள் கொள்கை)*



சுமேரியச் சமயம் - கி.மு. 4000
(சுமேரியர் தமிழரே என்றாலும்,
பல கடவுள் வழிபாட்டுக் கொள்கை)



யூத சமயம் - கி.மு. 1200
(சுமேரியர் - பாபிலோனியர் வழிவந்த
ஒரு கடவுள் கொள்கை கொண்ட சமயம்)



கிறித்துவ சமயம்
(யூத - பாபிலோனிய, ஒரு கடவுள் கொள்கை
கொண்ட சமயம்)



மூவொரு கடவுள், மோட்சம், நரகம், பாவம்
போன்ற கொள்கை விளக்கங்கள் கொண்ட
கிறித்துவ சமயம்



மகாயானம் - கி.பி. 100
மோட்சம், நரகம், பாவம், புத்தரைக் கடவுளாகக்
கொண்ட மகாசமயம்



திருமூலரின் சிவநெறிக் கோட்பாடு - கி.பி. 400-500



ஆதிசங்கரரின் அத்வைதம் - கி.பி. 700-800



இராமானுசரின் விசிட்டாத்வைதம் - கி.பி. 1000-1100



சிவஞான போதம் - கி.பி. 1100-1200



சைவ சித்தாந்தம் - கி.பி. 1200

குமரிக் கண்டத்துத் தமிழர் சமயம், மேலை நாடுகளுக்கு எடுத்துச் செல்லப்பட்டு, பல்வேறு நிலைகளில் வளர்ந்து, மாற்றம் பெற்று, மீண்டும் கி.பி. முதல் நூற்றாண்டில் தமிழகத்திற்கே திரும்பி வந்துள்ளதை, மேற்கண்ட செய்தியால் அறியலாம். எனவே, கிறித்துவத்துவத்தின் தாக்கம் இன்றைய இந்தியச் சமயங்களில் காணப்பட்டாலும், தொல்தமிழ்ச் சமயத்தின் தாக்கம் கிறித்துவ சமயத்திலுள்ளதை அறியலாம். எனவே, தமிழர் சமயமே, சமயம் பற்றிய தமிழரின் சிந்தனைகளே, இன்று உலகளாவி நிற்பதைக் காணலாம். இசுலாம் சமயமும் கூட, தமிழ்ச் சமய வழியில், யூத சமயக் கருத்துக்களை உள்ளடக்கிய, அறவழிச் சமயமே என அறியலாம். இசுலாம் அறிவித்த ஒரு கடவுள் கொள்கையும், அன்பின் சமய நெறிகளும், ஏற்கனவே தமிழர் வகுத்துக் கொடுத்த உயர்வான நெறிகளே எனவும் அறியலாம். இன்று, சீன - ஆப்பிரிக்க நாடுகள் தவிர்த்த உலக நாடுகளின் சமயங்கள் அனைத்தும் தமிழர் சமயத்தினின்றும் பிறந்தவைகளே என்பது தெளிவு.



II

# தோமையார் காலத் தமிழகம்

## (கி.பி. முதல் நூற்றாண்டு)

கடைச்சங்க காலம் என அழைக்கப்படும் கி.பி. முதல் நூற்றாண்டு, தமிழக வரலாற்றில் மிகச் சிறப்பாக அறியப்பட்ட காலமாகும். பொதுவாக, கடைச்சங்க காலத்தை கி.மு. 300 முதல் கி.பி. 300 வரை என்று குறிப்பிடுவர். வரலாறு அறியப்பட்ட அக்காலம், தமிழர் நாகரிகத்தின் பொற்காலமாகும். வெளி நாட்டுப் படை எடுப்புகளின்றி, தமிழகத்தை மூவேந்தர்கள் ஆண்டு கொண்டிருந்த காலமது. கி.மு. 200 ஆண்டுகளில், வட இந்தியாவை ஆண்டு கொண்டிருந்த மோரியர்களால் கூட, தமிழகத்தை வெற்றி கொள்ள இயலவில்லை. தமிழகத்தின் வடவெல்லையான வேங்கடத்திலேயே மோரியப் படைகள் தடுத்து நிறுத்தப்பட்டன. மோரியர்களின் படை எடுப்பைப் பற்றி அகநானூறு சுட்டுகிறது. பேரரசர் அசோகனுடைய கல்வெட்டு தமிழ்நாட்டின் சத்திய புத்திரர்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றது. மெகஸ்தனிஸ் எழுதிய இண்டிகா நூலில் பாண்டிய நாட்டைப் பற்றியச் செய்திகள் காணப்படுகின்றன. சாணக்கியரின் அர்த்த சாஸ்திரம், தமிழ்நாட்டின் வணிக நிலை பற்றிக் குறிப்பிடுகின்றது. மேற்கண்ட செய்திகள் யாவும் கி.மு. 300 ஆண்டுகட்குப் பிற்பட்ட தமிழகத்தின் வரலாற்றைக் குறிப் பிடுகின்றன.

இவையன்றி, தமிழகத்தின் கடைச்சங்க இலக்கியங்கள், தமிழர்தம் நாகரிக வாழ்வைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. மூவேந்தர்களின் ஆட்சி முறைகள், உள்நாட்டு வெளிநாட்டு வணிகம், தொழில்கள், வேளாண்மை, ஊர்ப்புற நகர்புற வாழ்க்கை முறைகள், மக்களின் செல்வ நிலை, குமுகாய வாழ்க்கை, சமயங்கள், வ்ழிபாட்டு முறைகள் என தமிழ்

நாட்டின் பல்வேறு நிலைகளை அவ்விலக்கியங்கள் படம் பிடித்துக் காட்டுகின்றன. கடைச்சங்க காலத்தில், மேலை நாட்டு வணிகர்களின் வருகை, தமிழ்நாட்டில் அவர்கள் வணிகம் மேற் கொண்டது. தமிழ்நாட்டு வணிகர்கள் மேலை நாடுகளுக்குப் பயணம் மேற்கொண்டது. வணிகப் பொருட்கள், அதன் விலை மதிப்புகள், தொலை வழிக் கடற்செலவுகள் என, தமிழகத்தின் வணிக முறைமைகள் பற்றிய செய்திகளை எரிதிரைக் கடல் (Erithriyan Sea) நூல் விளக்குகின்றது. அதுவரையில் அறியப் படாத வரலாற்றுக் குறிப்புகள், கடைச்சங்க காலத்திற்குப் பிறகு வெளிச்சத்துக்கு வந்துள்ளன.

கடைச்சங்க காலத்து மன்னர்களின் கால அளவுகளை, சேரன் செங்குட்டுவனின் ஆட்சிக் காலத்தை மையமாகக் கொண்டு, முன்னும் பின்னுமாகக் கணித்துள்ளனர். சிலப்பதி காரம், இலங்கை மன்னன் முதலாம் கயவாகு என்பான், கண்ணகிக்குச் சிலை எடுத்த விழாவில் கலந்து கொண்டதைப் பற்றிய செய்தியைக் குறிப்பிடுகின்றது. இலங்கை நாட்டின் மகா வம்சம் என்ற நூல், கயவாகுவின் காலம் பற்றிய செய்திகளைத் தெளிவுபடுத்துகிறது. மகாவம்ச நூலைத் தொகுத்த கெய்ஜர் (Geiger) என்பார், முதலாம் கயவாகுவின் ஆட்சிக் காலம் கி.பி. 173-191 எனக் குறித்துள்ளார். இதனை அடிப்படையாகக் கொண்டு, சேரன் செங்குட்டுவனின் காலம் கி.பி. 175-200 என்ற அளவில் அறியப்படுகின்றது.

## சேர மன்னர் மரபு

பாண்டிய சோழ மன்னர்களைப் பொருத்தவரை, சேரநாடு தொலைவில், மலைநாட்டிலிருந்ததால், சேய்+அரன் - சேயரன் - சேரன் என்ற அளவில் தொலைவு கருதி சொல்லப்பட்டிருக்க வேண்டும். தமிழகத்தின் மூன்று மன்னர் மரபுகளில், சேர மரபு முதன்மையாகச் சொல்லப்பட்டாலும், பாண்டியரே தொல் தமிழ் மரபினர் என்பது தெளிவு. பாண்டிய, சோழ மன்னர் களைக் காட்டிலும் சேர மன்னர்கள் பற்றிய பதிவுகள் தெளி வாக உள்ளன. தமிழ் இலக்கியமான பதிற்றுப்பத்து, சேரர் களைப் பற்றிய செய்திகளைக் குறிப்பிடுகின்றது. பதிற்றுப்பத்து நூலில், முதல் பத்தும் கடைசிப் பத்தும் கிடைக்கவில்லை. மீதம் உள்ள எட்டு பத்துகளில், எட்டு சேரமன்னர்கள் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

**குமட்டூர் கண்ணனார் - இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்** பற்றியும், **பாலைக் கௌதமனார் - பல்யானைச் செல்கெழு குட்டுவன்** பற்றியும், **காப்பியாற்றுக் காப்பியனார் - களங் காய்க் கண்ணி நார்முடிச் சேரல்** பற்றியும், **பரணர் - கடல் பிறக் கோட்டிய குட்டுவன்** பற்றியும், **காக்கை பாடினியார் நச்செள்ளையார் - ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்** பற்றியும், **கபிலர் - செல்வக் கடுங்கோ வாழியாதன்** பற்றியும், **அரிசில்கிழார் - தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும் பொறை** பற்றியும், **பெருங்குன்றூர்க்கிழார் - குடக்கோ இளஞ்சேரல் இரும்பொறை** பற்றியும், பதிற்றுப்பத்தில் பாடி வைத்துள்ளனர்.[134]

செங்குட்டுவன் காலத்தில் பரணர் வாழ்ந்திருந்தார் என அறியலாம். கபிலரும் இவர்கள் காலத்தவரே. எனவே பரணர் காலத்தை கி.பி. 100-180 எனவும், கபிலர் காலத்தை, கி.பி. 140-200 எனவும் குறித்துள்ளனர். சேரன் செங்குட்டுவனின் காலத்தை, கி.பி. 135-190 என வரலாற்றறிஞர்கள் நிறுவுகின்றனர். இக் காலமே இளங்கோவடிகளின் காலமுமாகும்.

மேற்கண்ட கணிப்புகளின்படி குறிக்கப்படும் சேர மன்னர் களின் கால அளவுகள்[135]

1. உதயன் சேரல் - கி.பி. 27
2. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் - கி.பி. 27-85
3. பல்யானைச் செல்கெழு குட்டுவன் - கி.பி. 85-110
4. நார்முடிச் சேரல் - கி.பி. 110-135
5. செங்குட்டுவன் - கி.பி. 135-190

மேற்கண்ட கணிப்பின்படி, தோமையார் மேற்குக் கடற்கரையில் வந்து இறங்கிய காலத்தில் (கி.பி. 52), சேர நாட்டை ஆண்டு கொண்டிருந்தவன், இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன் என்பவனே என அறியலாம். இக்கணக்கில் 20 ஆண்டுகள் வரையில் நெகிழ்வுகள் தெரிவதால், பல்யானைச் செல்கெழு குட்டுவனின் காலமும் தோமையாரின் காலத்தோடு தொடர்புடையதாக இருக்க வாய்ப்புகளுண்டு.

---

133. அகநானூறு, 25:7-11.

134. பதிற்றுப்பத்து மூலமும் பழைய உரையும், டாக்டர் உ.வே. சாமி நாதையர், டாக்டர் உ.வே.சா. நூல் நிலையம், சென்னை, 1994, ப. xii-xvi.

135. History of Tamil nad, Dr. N.S., p. 60.

## *சோழர்கள்*[136]

சோழர்களின் காலத்தைச் சரியாகக் கணிக்க இயல வில்லை யென்றாலும், இமயவரம்பன் நற்சோணை என்ற சோழ இளவரசியை மணந்து கொண்ட செய்தி விளக்கப்பட்டுள்ளது. சோழர்களின் மரபு வழிப்பட்டியல் சொல்வது:

உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னி
*(கி.பி. 25-50)*




சேரர்கள், சோழர்கள் பட்டியலில் சில முரண்பாடுகள் உள்ளன வென்றாலும், தோமையார் காலத்தில் வாழ்ந்திருந்த சோழ மன்னர்கள் கரிகாற் பெருவளத்தான் அல்லது மணக்கிள்ளி ஆகியவர்களில் ஒருவராகவோ அல்லது இருவருமாகவோ இருந்திருக்க வேண்டும். அக்காலச் சோழர்கள் உறையூரைத் தலைநகராகக் கொண்டிருந்தனர்.

### பாண்டியர்கள்

குமரிக் கண்டத்துத் தென்மதுரையைத் தலைநகராகக் கொண்டு, தமிழினத்தின் முதல் மன்னர் மரபைத் தோற்று வித்தவர்கள் பாண்டியர்களே. தமிழை வளர்க்க மூன்று கழகங் களையும் கண்டவர்களும் பாண்டிய மன்னர்களே. ஆனால், கி.மு. 300 - கி.பி. 300 ஆண்டுகளில் ஆண்டிருந்த மன்னர்களின் கால அளவுகளைத் தெளிவாகக் குறிக்க இயலவில்லை. தோமையார் காலத்தில், பல்யாக சாலை முதுகுடுமிப் பெரு வழுதி என்பான் மன்னனாக இருந்திருக்க வாய்ப்புண்டு.



---

136. Ibid.

## சேரநாடு கிறித்துவத்தின் விளைநிலம்

சேரநாட்டின் மேற்குக் கரையிலிருந்த கொடுங்கல்லூர் (Kodungallur) என அழைக்கப்பட்ட கிராங்கனூரில்தான் புனித தோமையார் தமது காலடிகளைப் பதித்தார். இவ்வூர், முசிறி, மகாதேவ புரம், மகாதேவப் பட்டிணம், முயிறிக்கோடு (முசிறிக்கோடு என்ற சொல்லின் திரிபு), மாகோதைப் பட்டம், திருவஞ்சிக்குளம் என்றவாறு பல பெயர்களால் முற்காலத்தில் அழைக்கப்பட்டது.[137] தொன்மைக் காலம் தொட்டு, கி.பி. 14ஆம் நூற்றாண்டு வரை சிறப்புற்றிருந்த கொடுங்கல்லூர், அதன்பிறகு தனது சிறப்பை இழந்தது. தோமையார் அவ்வூருக்கு வருகை தந்த காலத்தில், இந்திய நாட்டின் மிகச் சிறந்த துறைமுகப் பட்டிணமாக கொடுங்கல்லூர் விளங்கியது. தற்போது, பண்டைப் பொலிவை இழந்துபோய், சில மீனவக் குடிசைகளை மட்டுமே பெற்றுக் கொண்டு, ஒரு சிற்றூராகக் காட்சியளிக்கின்றது. அங்கு ஏற்கனவே உயர்ந்து நின்ற மாடமாளிகைகள் யாவும் மண் மேடாய்ப் போயின. இயற்கையில் ஏற்பட்ட கடல் சீற்றமே கொடுங்கல்லூரை அழித்ததாக, வரலாற்றறிஞர்கள் கூறுகின்றனர்.

### கொடுங்கல்லூர்த் துறைமுகம்

எகிப்து, கிரேக்கம், உரோமை போன்ற மேலை நாடு களையும், சீனம் போன்ற கிழக்கு நாடுகளையும் இணைத்த உலகின் தலைசிறந்த துறைமுகநகரமாகக் கொடுங்கல்லூர், கி.பி. முதல் நூற்றாண்டில் விளங்கியது. தொடர்ந்து பத்து நூற் றாண்டுகள் வரை அதன் சிறப்பு குறையவில்லை. **இந்தியாவின் செல்வங்கள் அனைத்தும் வணிகப் பொருட்களாக கொட்டிக் குவிக்கப்பட்டிருந்த துறைமுகம் (Primum Emporium Indial) என்று பிளினி கூறுகிறார்**. இசுரேலிய மன்னன் சாலமனின் மரக்கலங்களும், ஃபோனீசியர்களின் மரக்கலங்களும் கூட்டாகப்

பொருட்களை இங்கிருந்து ஏற்றிச் சென்றன. **இப்பலோஸ்** (Hippalos) என்ற கிரேக்க மீகாமன் அக்காலத்திய கொலம்பசாகக் கருதப்படுபவன். இவனே இந்தியாவின் பருவ காலங்களை அறிந்து அதற்கேற்றவாறு கடலோடும் ஆற்றல் பெற்றிருந்தவ னாவான். இவனுக்கு இத்துறைமுகத்தின் அனைத்து இடங்களும் அத்துப்படியாயிருந்தன. தோமையார் கி.பி. 52ஆம் ஆண்டில், இத்துறைமுகத்தில் இறங்கி, தான் கொண்டு வந்திருந்த சிலுவை யைக் கடற்கரையில் நட்டார் என்று செவிவழிச் செய்திகள் கூறுகின்றன. தோமையாரைத் தொடர்ந்து, எருசலேம் நகரத்து யூதர்கள், அவ்வூர்த் தேவாலயம் உரோமர்களால் தீக்கிரை யாக்கப்பட்ட பின்பு, கும்பல் கும்பலாக இங்கு வந்து குடியேறி னர் (கி.பி. 69). கொடுங்கல்லூரில் யூதர்களுக்கென தனியான குடியிருப்பு பிற்காலத்தில் உருவானது. கீழைநாடுகளுடன் வணிகம் செய்யவந்த உரோமர்கள் தங்களுக்கென ஒரு கோட்டையையும், அகஸ்துஸ் கோயிலையும் இங்கே கட்டிக் கொண்டு வாழ்ந்திருந்தனர். கானா நகரத்துத் தோமை என்பார் (Thomas of Cana), தனது தாய்நாடான சிரிய நாட்டினின்றும் பெரும் மக்கள் கூட்டம் ஒன்றை அழைத்துக் கொண்டு (700 பேருக்கும் குறையாத அளவில்), கொடுங்கல்லூரில் குடியேறி னார். சேரர்களின் துறைமுக நகராக விளங்கிய இவ்வூரில், மன்னனின் அரண்மனையும் அலுவலகமும் இருந்ததாகச் செய்திகள் கூறுகின்றன.[138]

சேரமான் பெருமாள் பாங்கா ரவி வர்மா (கி.பி. 6ஆம் நூற் றாண்டு), முதன்முதலில் இசுலாத்துக்கு மாறி ஹஜ் பயணம் மேற் கொண்டார். மெக்காவிலிருந்து திரும்பிய முதல் இசுலாமியர் களுக்கான பள்ளிவாசல் (Mosque) கொடுங்கல் லூரில் கட்டப் பெற்றது. பிற்காலத்தில் இந்தியாவிற்கு வாணிகம் செய்ய வந்த போர்த்துக்கீசியர்களும் (கி.பி. 1341ல் புதுப்பிக்கப்பட்ட) கொடுங் கல்லூர்த் துறைமுகத்தில் தான் முதலில் தங்கள் வணிக நடவடிக்கைகளை மேற்கொண்டனர். முதன்முதலில் உரோமன் கத்தோலிக்க கிறித்துவச் சமயத்தில் பேராயர் (Arch - Bishop) கொடுங்கல்லூரில்தான் தனது தலைமையிடத்தை அமைத்துக் கொண்டார். பின்னர் கோவாவுக்கு மாற்றம் செய்யப்பட்டது.

---

137. History of Kerala, K.P. Padmanabha Menon, Vol. I, Ernakulam, 1924, p. 313.

138. History of Early Christianity in India, p. 8.

தற்போது பாலைவனம் போல் காட்சியளிக்கும் கொடுங் கல்லூர், விடுதலை பெற்ற இந்தியாவின் கேரளமாநிலம், திருச்சூர் மாவட்டத்தில் ஒரு வட்டமாக (Taluk) உள்ளது. சோழர்களின் கடற்கரை நகரான பூம்புகார், பிற்காலத்தில் தனது பொலிவை யிழந்தது போல், சேரர்களின் துறைமுக நகரான முசிறி எனப் பட்ட கொடுங்கல்லூரும் தனது முற்காலப் பெருமைகளை இழந்துவிட்டது.

## சேரநாட்டின் செல்வச் செழிப்பு

தோமையார் தமிழகம் வந்தபோது, தமிழகத்தின் வாழ்க்கைத் தரம் மிகவும் உயர்ந்து காணப்பட்டது. வறுமையில் வாடும் மக்கள் என்ற நிலை அங்கு காணப்படவில்லை. மக்கள் தன்னிறைவுடன் வாழ்ந்தனர். இவ்வுலகின் உயர்நிலையான இன்பங்கள் அனைத்தையும் அவர்கள் பெற்றிருந்தனர். அளவு கடந்த செல்வச் செழிப்பு, மக்களின் ஒழுக்க நிலையைச் சீர் குலைக்கும் என்ற பொதுவான கோட்பாடு, அக்காலத்துத் தமிழக மக்களுக்கே சொல்லப்பட்டது எனலாம். விஞ்சிய செல்வத்தின் விளைவாக, பாலியல் பிறழல்கள் பெரிதும் உணரப் பட்டன. இதன் அடிப்படையிலேயே, மக்களின் ஒழுக்க நெறி களை மீண்டும் நிலைநாட்ட, திருக்குறளும் நாலடியாரும் எழுதப் பெற்றன. தமிழக மக்களின் உயர்வான வாழ்க்கை நிலையை, சிலப்பதிகாரம் படம்பிடித்துக் காட்டுகிறது எனலாம்.

குறிப்பாகச் சேரநாடு, உலக வணிகத்தின் உச்சாணிக் கொம்பில் அப்போதிருந்தது. பன்னாட்டு வணிகர்களும், கீழை மேலைநாட்டு பண்ணியங்களின் சந்தையாகவும் சேரநாடு திகழ்ந்தது. சீனத்துக் காண்டன் நகர வணிகர்கள், முசிறியைத் தாண்டி மேலை நாடுகளுக்குச் செல்லத் துணியவில்லை. எனவே, தங்கள் பண்ணியங்களை முசிறித் துறைமுகத்தில் கொட்டிக் குவித்தனர். அதுபோலவே, மேலை நாட்டு வணிகர்களும் சீனா போன்ற நாடுகளுக்குச் செல்வதைத் தவிர்த்தனர். மேலை - கீழை நாட்டுப் பொருட்களின் சந்தைப் பேட்டையாக முசிறி விளங்கியது என்பது மிகையான செய்தியன்று. உரோம் நகரின் பொன்னும், காண்டன் நகரத்துப் பீங்கான் கலங்களும், முசிறி யில் பரிமாறிக் கொள்ளப்பட்டன. இவ்விரு நாடுகளுக்கும் நடுநாயகமாகத் தமிழகம் விளங்கியது எனலாம்.

முசிறியில் உலகப் பொருட்களின் மிகப்பெரும் சந்தை கூடியிருந்தது. ஃபோனிசியர்களும், எகிப்தியர்களும், கிரேக்கர்களும் உரோமர்களும், தங்கள் நாட்டுப் பொருட்களை இங்கே இறக்கி, கீழை நாட்டுப் பொருட்களைத் தங்கள் மரக்கலங்களில் ஏற்றிச் சென்றனர்.[139] சேரநாட்டின் மிகப்பெரும் நகரங்களாக பாலதேவப்பட்டிணம் மற்றும் மரிச்சிப்பட்டிணம் ஆகியவை விளங்கியது பற்றிய செய்தியை, கி.பி. 550 ஆண்டுகளில் வாழ்ந்திருந்த வராகமிகிரர் என்னும் வானியல் அறிஞர் குறிப்பிடுகின்றார்.[140] மரிச்சிப்பட்டணம் என்பது முசிறியைக் குறித்ததே என அறியலாம். முயிறிக் கோடு என்ற பெயராலும் இவ்வூர் அழைக்கப்பட்டது. இது முசிறிக் கோடு என்ற பெயரின் திரிபே.

மிளகு, இலவங்கம், கிராம்பு, இஞ்சி முதலான நறுமணப் பொருட்கள் மேலை நாடுகளுக்கு ஏற்றுமதியாயின. உலகிலேயே இந்நறுமணப் பொருட்கள் யாவும் சேரநாட்டில் தான் விளைகின்றன என மேலைநாட்டார் கருதினர். இந்நறுமணப் பொருட்கள், ஐரோப்பியச் செல்வத்தை முற்றிலுமாகத் தமிழகத்துக்குள் கரந்து கொண்டிருந்தன. கோடிக்கணக்கான உரோமப் பொன் நாணயங்கள், தமிழகத்திலிருந்து வாங்கப்பட்ட "தேவையில்லாத" பொருட்களுக்குச் செலவு செய்யப்பட்டதாக, முதலாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த பிளினி கருதுகிறார்.[141]

கிறித்துவர்களைப் பொருத்தவரை, முசிறித் துறைமுகம், தோமையாரின் வருகையால் சிறப்புற்றது. கிறித்துவச் சமயத்தின் செவிவழிச் செய்திகளின்படி, இத்துறைமுகத்துக்கு அருகில் இருந்த பல இயற்கையான குடாப்பகுதிகள், சில நிலத்திட்டுக்களை (தீவுகளை) உருவாக்கியிருந்தனவென்றும், அத்தீவுகளில் ஒன்றான மலங்கரை (மலங்கரா) என்ற தீவில்தான் தோமையார் தனது பாதங்களைப் பதித்தார் என்றும் கூறப்படுகின்றது. முதல்முதலில் தோமையாரால் சமயமாற்றம் பெற்ற தமிழர்கள், தங்களை மலங்கராத்தோமை கிறித்துவர்கள் என அழைத்துக்

---

139. History of Kerala, Vol. I, 1924, p. 297.
140. The Travancore State Manual, V. Nagam Aiya, Vol. I, Trivandrum, 1906, pp. 231-232.
141. The Travancore State Manual, T.K. Velu Pillai, Vol. II, Trivandrum, 1940, p. 10.

கொள்வதில் பெருமை கொள்கின்றனர்.[142] தற்காலத்தில் அச்சபைக்கு "சிரிய - மலங்கரா கத்தோலிக்கத் திருச்சபை" (The Syro - Malankara Catholic Church) என்ற பழம்பெரும் பெயர் விளங்கி வருவதைக் காணலாம்.[143]

கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் தமிழ்ப் புலவர்களான கபிலரும் பரணரும் சேர நாட்டைப் பற்றியும், சேர மன்னர் களை விரித்தும் புகழ்ந்தும் பாடியுள்ளனர்.[144] முசிறித் துறை முகம் பற்றியும் அகநானூற்றில் பரணர் விளக்குகிறார்.[145] மீனவப் பெண்கள் மீனுக்கு மாற்றாக நெல்லைப் பெற்றுக் கொண்ட தையும், மூடை மூடையாக மிளகுப் பொதிகள் சந்தைக்கு வருவது பற்றியும், மரக்கலங்களிலிருந்து வந்த வெளிநாட்டுப் பொற்காசுகள் பற்றியும், அவை முசிறித்துறைமுகச் சந்தைப் பொருட்களுக்கு விலையாகக் கொடுத்தல் பற்றியும் புறநானூறு விளக்குகின்றது. மேலைக் கடலின் இசையொத்த ஒலியைத் தரும் அலைகள் நில்லாமல் என்றும் ஆரவாரம் செய்து கொண்டிருப்பதைப் போல், சேரமன்னன் தன்னைக் காண வந்தார்க்கெல்லாம், தொடர்ந்து மலைச் செல்வங்களையும் கடற்செல்வங்களையும் அள்ளிக் கொடுத்துக் கொண்டிருந்தான் என்று பரணர் மேலும் கூறுகிறார்.[146] இவ்வாறு வயல்வளங் களும், மலைவளங்களும், கடல்வளங்களும் காணப்பெற்ற சேரநாட்டில்தான், தோமையார் தனது சமயப் பணியைத் தொடங்கினார்.



---

142. According to Col. Yule of England, Collections given by George Menachery, Early Christianity in India, 2005, p. 7.

143. Message given in the Early Christianity in India.

144. பதிற்றுப்பத்து, ஐந்தாம் பத்து.

145. அகநானூறு, 148.

146. புறநானூறு, 343.

## தோமையார் உண்மையில் இந்தியாவுக்கு வந்தாரா?

தோமையார் கேரளத்தில் தனது பாதங்களைப் பதித்து, தமிழகத்தில் மறைப்பணியாற்றி, மைலாப்பூரில் மறைந்தார் என்ற செய்திகள், தமிழகத்தின் வரலாற்றிலோ, சங்க இலக்கியங்களிலோ காணப்படவில்லையென அறியலாம். தமிழகத்தில் எந்தக் குறிப்பும் காணப்படாத நிலையில், தோமையாரின் தமிழக வருகை கற்பனையானது என்பதும் சிலரது கூற்றாகும். தோமையாரின் காலம், ஏறக்குறைய கடைச்சங்கம் பொலிவுற்றிருந்த காலமாகும். அக்கால மன்னர்களுடனும், மக்களுடனும், சமயத் தலைவர்களுடனும், புலவர்களுடனும் தோமையார் தொடர்பு கொண்டிருந்தார் எனச் செவிவழிச் செய்திகள் கூறுகின்றன. இருப்பினும் சிலப்பதிகாரம் உள்ளிட்ட எந்த இலக்கியங்களிலும் தோமையார் பற்றிய செய்தி காணப்படவில்லை. சிலப்பதிகாரத்தில் காணப்படும் சில செய்திகள், தொடக்க காலக் கிறித்துவத்தோடு தொடர்பு கொண்டவைகளாக உள்ளன என்று சில ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

பள்ளிகள் என்ற சொல், தோமையார் காலத்துக் கிறித்துவர்களையே குறித்ததாக கேரளத்தின் செவி வழிச் செய்திகள் கூறுகின்றன. கேரளக் கிறித்துவர்களுக்கு அளிக்கப்பட்ட பல சலுகைகள் (72 எனக் கூறப்படுகின்றது), கி.பி. முதல் நூற்றாண்டு முதல் ஒன்பதாம் நூற்றாண்டுகள் வரையில், செப்பேடுகளில் பதிவு செய்யப்பட்டுள்ளன. அச்செப்பேடுகள், **கி.பி. முதல் நூற்றாண்டுக் கிறித்துவர்களை, பள்ளியர் (Palliyars) என்றும், கிறித்துவ ஆலயங்களைப் பள்ளி என்றும் குறிப்பிடுகின்றன. இதனடிப்படையில், பள்ளியோகம் (Palliyogam), பள்ளிக்கூடம் (Pallikkoodam) போன்ற சொற்கள், அச்செப்பேடு**

**களில் காணப்படுகின்றன.**[147] தொடக்கத்தில் கிறித்துவர்களைக் குறித்துச் சொல்லப்பட்ட பள்ளி (Palli) என்ற சொல், பிற் காலத்தில் சமணர்களுக்கும் சொல்லப்பட்டு, இடைக்காலத்தில் இசுலாமியருக்கும் பொதுவானது. எ.கா. பள்ளிவாசல் (Mosque). தற்காலத்தில் தமிழகத்தின் மரபுகளில் (சாதி) ஒன்றான வன்னியர் அல்லது படையாச்சி என்ற இனம், தொடக்க காலத்தில் பள்ளி என்ற பெயரால் அழைக்கப்பட்டு வந்துள்ளது. சில வரலாற்றாசிரியர்கள், வன்னியர் இனம் இடைக்காலத்தில் சமணர்களாக இருந்தவர்கள் என்றும், அவர்களை மாணிக்க வாசகரும் திருநாவுக்கரசரும் சைவர்களாக மாற்றினர் என்றும், அதன் பொருட்டே வன்னியர் இனம் பள்ளிகள் என அழைக்கப் பட்டதாகவும் கருதுகின்றனர். ஆனால், சமணர்களுக்கு முன்பே கிறித்துவர்களைப் பள்ளிகள் என அழைத்தனர் என்பதற்கான செய்திகள் தெரிகின்றன. மயிலையை அடுத்துள்ள பகுதிகளில் தோமையார் காலத்துக்குப் பிறகு கணிசமான அளவில் கிறித்துவர்கள் இருந்தனர் என்ற செய்தியால், வன்னியர் இனம் தொடக்கத்தில் கிறித்துவர்களாயிருந்து சைவக் குரவர்களால் சமய மாற்றம் செய்யப்பட்டிருக்க வேண்டும் என்ற கருத் தினையும் உறுதிப்படுத்துகின்றது. தோமையாருக்குப் பிறகு சரியான சமய வழிகாட்டுதல் இல்லாததால், பல கிறித்துவர்கள், சேரநாட்டுக்கு இடம்பெயர்ந்து போனதாகவும் கூறப்படுகின்றது. கி.பி. 1940ஆம் ஆண்டு, கொச்சி அரண்மனையில் கிடைத்த ஆவணத்தின்படி, **கி.பி. 317ஆம் ஆண்டில் கிராங்கனூரில் பள்ளிவாணர் (Pallivanar) என்ற மன்னர் ஆண்டுவந்ததாக அறியலாம்**. இந்தப் பள்ளிவாணருடைய வெண்கலச் சிலை யொன்றும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. அச்சிலையில் பள்ளி வாணர் சிலுவையொன்றை அணிந்தவாறு காட்சி தருகின்றார். இவருடைய முழுப்பெயர், பள்ளி பாணப் பெருமாள் என்று சொல்லப்படுகின்றது. இச்சிலை நீலம்பேரூரில் (Neelamperur) உள்ள ஓர் இந்துக் கோவிலில் கண்டெடுக்கப்பட்டுள்ள தகவலை, **டாக்டர் பிளாசிட் போத்திபரா** (Dr. Placid Podipara) என்பார் தெரிவிக்கின்றார்.[148]

---

147. Cultural Symbiosis in Kerala, M.G.S. Narayanan, Kerala Historical Society, Trivandrum, 1972, p. 36.
148. Early Christianity in India, Photos in between the pages, 48-49.

தோமையார் காலத்தில் கிறித்துவ சமயத்துக்கு மாறியவர்களாகக் கருதப்படும் வேளாளர் மரபைச் சார்ந்தவர்கள், பூம்புகாரில் வாழ்ந்து வந்ததாகத் தெரிகின்றது. கி.பி. 293ஆம் ஆண்டில், இக்கிறித்துவர்களை அரசு அச்சுறுத்தியதாகச் செய்திகள் கூறுகின்றன. இதன் விளைவாக, 72 குடும்பங்கள், மரக்கலங்கள் வழியே குமரிமுனையைச் சுற்றிக் கொண்டு **குறைக்கேணி** (Korakkeni) என்று முற்காலத்தில் அழைக்கப்பட்ட, கொல்லம் என்ற நகரில் குடியேறினர்.[149] இக்குடும்பத்தார்களில் எஞ்சியிருந்த கிறித்துவர்கள் பூம்புகாரிலேயே வாழ்ந்திருந்ததாகவும், கி.பி. 315ஆம் ஆண்டில், அக்கிறித்துவர்களில் 116 பேரை மாணிக்கவாசகர் (இவர் வேறு மாணிக்கவாசகராக இருக்க வேண்டும்) என்னும் சைவப் பெரியார், சிவநெறிக்கு மாற்றியதாகச் செய்திகள் கூறுகின்றன. இவர் கொல்லத்துக்கும் வந்து 4 குடும்பத்தினரையும், கொல்லத்தில் வாழ்ந்திருந்த பழைய கிறித்துவர்களில் 20 குடும்பத்தினரையும் சிவநெறிக்குத் திருப்பியதாக, ஓலைச் செய்திகள் கூறுகின்றன.[150] இந்த மாணிக்க வாசகர் யார் எனத் தெரியவில்லை. பிற்காலத்து மாணிக்க வாசகர் கி.பி. 10ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு வாழ்ந்திருந்தவர். இவர் தோமையாரைப் போன்றே அருஞ்செயல்களை (Miracles) நிகழ்த்திக் காட்டினார் என்பதால், இவரை மந்திரவாதி (Sorcerer) என்று கிறித்துவச் செய்திகள் குறிப்பிடுகின்றன.[151] மேற்கண்ட கிறித்துவர்கள் அனைவரும் தோமையார் வழிக் கிறித்துவர்கள் என்று அறியப்படுவதால், தோமையாரின் தமிழ்நாட்டு வருகை உறுதிப்படுகின்றது.

தோமையார் சேரநாட்டில் சமயப் பணியாற்றிய போது, சேர மன்னரையும் அவர்கள் அவையிலிருந்த சமயக் குருக்களையும் கிறித்துவத்துக்கு மாற்றியதாகச் செவி வழிச் செய்திகள் கூறுகின்றன. கி.பி. முதல் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த சேர மன்னர்கள் பற்றி ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம். இவர்களில் கி.பி. 180களில் வாழ்ந்திருந்த சேரன் செங்குட்டுவன் சமண

149. From the palm leaf manuscript entitled, "Keralathil Margam Vazhiyute Avastha", from the aboved said magazine, p. 79.

150. Ibid, G.M. Moraes, A History of Christians in India, Vol. I, Bombay, Manaktalas, 1964.

151. Ibid, Ittup, History of the Malabar Syrian Christian Church, p. 79.

சமயத்தினன் என்று செய்திகள் கூறுகின்றன. சேரர்களில், செங்குட்டுவனுக்கு முன்போ அல்லது பின்போ கிறித்துவ மன்னர்கள் இருந்திருக்க வேண்டும் என எண்ண இடமுண்டு. இல்லாவிடில் சேரரின் ஆட்சிக்குட்பட்ட குறுநில மன்னர்களில் சிலர் கிறித்துவர்களாயிருந்திருக்க வேண்டும். அவ்வகையில் **கி.பி. 40-55 ஆண்டுகளில் இருந்த சேரன் குருவர்மன் I என்ற வியாக்ர சேனன் கிறித்துவனே என்று கூறப்படுகின்றது. இவன் தோமையாரால் கிறித்துவ சமயத்துக்கு மாற்றம் செய்யப்பட்டவன் எனக் கருத இடமுண்டு.[152] இவன் ஒரு குறுநில மன்னனாக இருக்க வேண்டும்.**

மேலும், *1. தரிசப்பள்ளி* (Tharisappalli) *பாலையூர் பாறைக் கல்வெட்டுகளும்* (Rock edicts),[153] *செப்பேடுகளும்,*[154] *2. இரம்பன் பாட்டு* (Ramban songs), *மார்க்கம் களிபாட்டுக்கள்* (Margam Kali songs), *பள்ளி பாட்டுக்கள்* (Palli songs), மேலும் பல தொன்மை யான இசைப்பாடல்களும், தோமையாரின் கிறித்துவர்கள் பற்றிய செய்தியை விளக்குகின்றன.[155]

மலபார் மரபு (Malabar traditions), தோமையரின் மறை பரப்புப் பணிகள் பற்றி ஆழமாகக் கூறுகின்றது.[156] அவர் கொடுங்கல்லூரில் தரையிறங்கியது பற்றியும், அவ்வூர் இந்தியக் கிறித்துவர்களுக்கோர் உயரிய நகரம் என்பது பற்றியும், சேர

---

152. The Chera King Kuru Varman I also known as Vyakra senan who ruled Kerala from 40 A.D to 55 A.A. was certainly Christian - M.M. Ninan.

152. Ibid, p. 73.

153. An English translation of the song of Thomas Ramban sent by T.K. Joseph 6-3-1926 to Fr. Hosten S.J., may be seen in the "Indian Church History Classics, Vol. I", The Nazranies, Ed. G. Menachery, Ollur, 1998, pp. 520-525.

154. P.U. Lucas, Kottayam, 1910. A reprint, Ed. J. Vellain, is available (1980). In his Anthropology of the Syrian Christians L.K. Anantha Krishna Ayyar has given English translations of many songs which is available in the ICHC, Vol. I, The Nazranics, pp 500-506.

155. St. Thomas Christian Encylopaedia, Ed. G. Menachery, 1973; History of Christianity in India, Ed. A.M. Mundadan, 1984.

156. The Jesuits in Malabar, D. Ferroli, Bangalore, 1939, p. 58.

மன்னர்களின் தலைநகரான அங்கு **அள்ளல் பெரும் கோவிலகம்** (Allal Perum Kovilakam) எனும் அரண்மனை இருந்தது பற்றியும், அது கொடுங்கல்லூரின் எல்லையை ஒட்டிய **திருவஞ்சிக்குளம்** (Thiruvanchikulam) எனும் பகுதியில் இருந்தது பற்றியும், மலபார் மரபுகள் வெளிப்படுத்துகின்றன.[157] தோமையாரின் வருகை, கி.பி. 52இல் நிகழ்வுற்ற செய்தியும், சேரநாட்டில் ஏழு தேவாலயங் களைக் கட்டிய செய்தியும், திருமயிலையில் மறைவுற்ற செய்தி யும், மலபார் மரபுவழிச் செய்திகளாக அறியப்படுகின்றன.[158] தோமையாரின் வருகை உண்மையானதாகவும், சேர நாட்டின் நம்பூதிரிகள் என்ற பிராமணர் குடும்பத்தில் சிலவற்றைக் கிறித்துவத்துக்கு அவர் மாற்றியதாகவும் சொல்லப்படும் செய்திகள் சரியானவையே. இன்றும் கூட, சிரியன் கிறித்துவப் பெண்கள், குறிப்பாகக் குன்னங்குளத்துப் பெண்டிர், தங்களது அன்றாட வாழ்வில் அணியும் ஆடைகள், பெருங் குடைகளை (huge umberllas)ப் பயன்படுத்துதல், பிராமணப் பழக்க வழக்கங் களைக் கைக்கொண்டிருத்தல் போன்ற நம்பூதிரிப் பிராமணர் களின் நாகரிகத்தை வெளிப்படுத்துவதாக உள்ளனர்.[159]

**கிறித்துவர்களுக்குப் பள்ளிகள் என்ற பெயர் இருந்த தைப் போன்றே, கூத்துக்காரர் என்ற அடைமொழியும் இருந் துள்ளது**. தொடக்ககாலக் கிறித்துவர்கள், தங்கள் சமய நெறி களை விளக்க, இயேசுகிறித்துவின் வாழ்க்கையை மற்றவர்கள் எளிதில் புரிந்து கொள்ளும் வண்ணம் நாடகமாக அல்லது கூத்தாக நடித்துக் காட்டியிருக்க வேண்டும். இவர்களில் பழைய கூத்துக்காரர் (Syro Malabar Catholics) என்றும், புதிய கூத்துக் காரர் (non-catholic Syrians of Kerala) என்றும் இருபிரிவினர் இருந்தனர். இவர்களுடன் இலத்தீன் கத்தோலிக்கக் கிறித்துவர் என்ற பிரிவும் இருந்தது. இவர்கள் அனைவரும் மார்தோமா (Mar Thoma) என்ற அடைச் சொல்லை இணைத்துக் கொள் கின்றனர். இதற்கு தோமாவின் வழிவந்தவர்கள் என்பதே பொரு ளாகும். இவர்களின் முன்னோர் தோமையார் கையால் திரு முழுக்குப் பெற்றவர்கள் என்பதால், பெருமையும் செருக்கும் கொள்கின்றனர்.[160]

---

157. Ibid, Introductory, p. 11.
158. Ibid, p. 58.
159. The History of India, Nagam Aiya, The Travancore State Manual, Trivandram, Vol. II, p. 115, 1906.

கேரளத்தில் காயம்குளம் என்ற ஊரிலுள்ள தேவாலயத்தையும் அதன் முன் வரலாறுகளையும் அடியிற் கண்டவாறு ஆய்வாளர்கள் அளிக்கின்றனர்.

**ஒல்லூர் தேவாலயம்** - *1718 கி.பி.*

திருச்சூருக்கு அருகிலுள்ள இத்தேவாலயத்துக்கு ஏராளமான சொத்துக்கள் உள்ளன. இது கி.பி. 1718ஆம் ஆண்டில் கட்டப் பெற்றது. இதற்கு முன்பாக இப்பகுதி மக்கள்,



**பழுவில் தேவாலயம்** - *960 கி.பி.*

என்ற தேவாலயத்தில் தங்கள் சமயக் கடமைகளை மேற்கொண்டனர், இதற்கு முன்பு



**இனம்மாவு தேவாலயம்** - *500 கி.பி.*



**புதுக்காடு தேவாலயம்** - *400 கி.பி.*



**மட்டம் தேவாலயம்** - *140 கி.பி.*



**பாலையூர் தேவாலயம்** - *70 கி.பி.*

என்ற தோமையார் கட்டிய தேவாலயத்தின் கால எல்லையைத் தொட்டு நிற்கின்றது.[161]

தோமையாரின் வருகை பற்றிய குறிப்புகளாவன:

*கி.பி. 50* : தோமையார் அரேபியாவிலிருந்து சிலைத் திங்களில் (மார்கழி - டிசம்பர்) இதே ஆண்டில் மலையங்கரைத் தீவில் (Maliankara), கரையிறங்கினார். இத் தீவு கொடுங்கல்லூரின் ஒரு நிலப்பகுதியாகும்.[162]

*கி.பி. 51* : அதே ஆண்டில், சென்னையை அடுத்த திருமயிலைக்குப் பயணமானார். அங்கிருந்து சீன

160. Christianity in Malabar to the St. Thomas Christians, Orientalia Christiana, Vol. II, 1926, p. 27.

161. Early Christianity in India, St. Thomas in India, p. 27.

162. History of Christianity, pp. 30-32.

நாட்டுக்குச் சென்றார். மீண்டும் மயிலை திரும்பி னார். திருவஞ்சிக் குளத்திலிருந்து (தற்காலக் கிராங் கனூர்) சேர மன்னரின் அழைப்பை ஏற்று, சேர நாட்டுக்குத் திரும்பினார். அங்கு ஏழு தேவாலயங் களை ஏற்படுத்தினார். சேரமன்னரையும், 3000 தமிழர்களையும், 40 யூதர்களையும் கிறித்துவத் துக்கு மாற்றினார்.[163]

கி.பி. 59 : அதே ஆண்டில் கன்னித் திங்களில் (செப்தம்பர்) மயிலை திரும்பினார். மயிலையில் கைது செய்யப் பட்டார். அப்பகுதி மன்னரின் (தொண்டை நாட் டையும் ஆண்ட சோழனாக இருக்க வேண்டும்) தம்பி இறந்துபட்டான். அவனை தோமையார் உயிர்ப்பித்தார். இதனால் மகிழ்வுற்ற மன்னன் உள் ளிட்ட 700 பேர் அடங்கிய பெருங்கூட்டத்தினரை கிறித்துவத்துக்குத் தோமையார் மாற்றினார். இரண்டரை ஆண்டுகள் திருமயிலையில் இருந்தார்.

கி.பி. 62 : மலையாத்தூர் வழியே சேரநாட்டுக்குத் திரும்பி னார். திருவஞ்சிக் குளத்தில் ஓராண்டும், கோட்டக் காயலில் ஓராண்டும் தங்கினார். சாயலில் (Chayal) ஐந்தாண்டுகள் மறைப்பணி செய்த பின்னர், அம் மக்களிடமிருந்து விடைபெற்றார். தன்னை அவர் களால் மீண்டும் காண இயலாது என அறிவித்து விட்டுப் பிரிந்தார்.

கி.பி. 69 : பாண்டிய, சோழ நாடுகளில் பயணம் மேற்கொண் டார். தமிழ்நாட்டுப் பணிகளைப் பற்றிய பாட லொன்றின் வழியாகச் சில செய்திகள் அறியக் கிடக்கின்றன.

1. நீத்தார் 19 பேரை உயிர்ப்பித்தார்.
2. 260 மனநோயாளிகளைக் குணப்படுத்தினார்.
3. ஏறக்குறைய 17750 பேரை சமய மாற்றம் செய்தார். இவர்களில் 6850 பேர் பிராமணர்கள் என்றும், 3750 பேர் வணிகர்கள் என்றும், 4250 பேர் தொழிலாளர் இனத்தைச் சார்ந்தவர் என்றும் கூறப்படுகின்றது.

---

163. Cradle of Christianity in India, George Menachery Kodungallur, Last Chapter 2000.

4. கெப்பா அல்லது செப்பா (Cepa) என்பவரும், பால் (Paul) என்பவரும் ஆயர்களாகத் திருநிலைப்படுத்தப்பட்டனர். முன்னவர், திருவஞ்சிக் குளத்தின் சேரர் மரபைச் சார்ந்தவர் என்றும் கருதப்படுகின்றது. செப்பா என்பார், தோமையார் இறந்த போது, அவருக்கான இறுதிச் சடங்குகளைச் செய்தவராகக் கருதப்படுகின்றார்.

கி.பி. 72 : இவ்வாண்டின் கற்கடகத்திங்கள் (ஜூலை) மூன்றாம் நாளில், தோமையார், மயிலாப்பூரில் நல்லடக்கம் செய்யப்பட்டார்.[164]

மேற்கண்ட செய்திகள், தோமையாரைப் பற்றிக் கூறப்படும் பல்வேறு தொகுப்புகளில் ஒரு சிலவே எனலாம். இச்செய்திகளை மேலும் வலுப்படுத்தும் வகையில், மேலை நாட்டுக் குறிப்புகளும் ஆவணங்களும், தோமையாரின் இந்திய வருகையை உறுதி செய்கின்றன. அவைகளில் சிலவற்றை அடியிற் காணலாம்.



164. History of Christianity in India, Vol. I, pp. 71-78.

# தோமையார் பற்றிய ஆவணச் சான்றுகள்

## *தோமையாரின் செயல்பாடுகள்*
## (The Acts of Judas Thomas)

*இந்நூல் கி.பி. 180-230 ஆண்டுகளில் எழுதப்பட்டிருக்க வேண்டும் என ஆய்வாளர்கள் கருதுகின்றனர். சிரிய மொழியில்* (Syriae Text) *எழுதப்பட்ட இந்நூல், இன்று பல மொழிகளில் மாற்றம் செய்யப்பட்டுள்ளது.*[165] *இதனை எழுதிய ஆசிரியர் யார் எனத் தெரியவில்லை. தோமையாரின் பணிகள், இயேசு வுடன் தொண்டாற்றியது, பாரசீக அரசன்* **கொண்ட போரஸ்** *என்பானைக் கிறித்துவ சமயத்தில் சேர்த்தது, சேர நாட்டை அடைந்தது, தமிழகத்தில் சமயப் பணியாற்றியது. மயிலாப்பூரில் இறந்தது போன்ற செய்திகள் இந்நூலில் கூறப்பட்டுள்ளன. இந்நூல் சிரியன் கிறித்துவத் தலைமையிடமான அந்தியோக் நகரில் பாதுகாக்கப்பட்டு வருகின்றது. தோமையாரைப் பற்றிய செய்திகளுக்கு அடிப்படையான, சிறந்த, வரலாற்றுச் செய்தி களாக இந்நூல் கருதப்படுகின்றது.*

---

165. 1. Apocryphal Acts of the Apostles, Ed. Dr. Wright, London, 1871.
2. Acta Martyrum et sanctorum, Leipsic, Paris, 1892.
3. India and the Apostle Thomas, A.E. Medlycott, London, 1905.
4. The Apostles in India, A.C. Perumalils. J., Jafna, 1952.
5. St. Thomas Christian Encyclopedia, Ed. George Menachery, Trichur, 1973.

## அலெக்சாந்திரிய நகரத்துக் கிளமெண்ட் (Clement of Alexandria)

கிரேக்க நாட்டின் ஏதென்ஸ் நகரில் கி.பி. 150இல் பிறந்த **கிளமெண்ட்**, கிறித்துவ சமயத்தில் இணைந்தார். இவரே தொடக்ககாலத்தின் கிறித்துவ சமய வரலாற்றின் தந்தை எனப் படுபவராவார். பாரசீகத்தில் தோமையார் என்ற நூலை எழுதியவர். எகிப்து நாட்டின் அலெக்சாந்திரியாவில் சமயப் பணியாற்றியவர். தோமையார் பற்றிய பயனுள்ள செய்திகளை, கிளமெண்ட் கொடுத்துள்ளார்.[166] இவர் பாரசீகத்துக்கும் இந்தியாவுக்குமுள்ள புவியியல் கூறுகள் பற்றித் தெளிவாக அறிந்திருக்கவில்லை எனலாம்.

### மறைப் பணியாளர்களின் மெய்யியல் கொள்கைகள் (Doctrine of the Apostles)

கி.பி. 3ஆம் நூற்றாண்டின் ஆவணமான இக்குறிப்புகள், சிரியன் கிறித்துவத் திருச்சபையினரிடம் உள்ளன. கிறித்துவத்தின் தொடக்ககாலக் கொள்கைகள், வழிபாட்டு முறைகளை இக் குறிப்புகள் விளக்குகின்றன. சிரியா நாட்டில் தோமையாரால் திருநிலைப்படுத்தப்பட்ட சமயத் தலைவர்கள் பற்றியும், தோமையாரின் இந்தியப் பயணங்கள் குறித்தும், இந்த ஆவணங்கள் விளக்குகின்றன. இக்குறிப்புகளைத் தழுவிப் பல்வேறு நூல்கள் வெளிவந்துள்ளன.

## ஓரிகன் (Origen)

கி.பி. 184-254 ஆண்டுகளில் வாழ்ந்திருந்ததாகக் கருதப்படும் **ஓரிகன்**, அலெக்சாந்திரிய நகரத்து கிரேக்கர். கிளமெண்டுக்குப் பிறகு தோன்றிய மெய்யியல் விளக்கவுரையாளர். இயேசுவின் மறைத் தொண்டர்கள், இயேசுவின் மறைவுக்குப் பிறகு, தாங்கள் எங்கு சென்று பணியாற்ற வேண்டும் என்பதை, குலுக்குச் சீட்டுப் போட்டுத் தெரிந்து கொண்டனர் என்ற செய்தியை, ஓரிகன் விளக்கமாகக் கூறுகிறார். இச்செய்தியின் படி, தோமையார் பாரசீகத்துக்குச் செல்ல வேண்டுமென திருவுளச் சீட்டு கூறியதால், அதன்படியே பாரசீகத்துக்குப்

166. St. Thomas Apostolate in Parthia, Ed. Menachery, p. 201.

பயணமானதாக, ஓரிகன் எழுதியிருக்கும் கையெழுத்துப் படியை ஈசிபியஸ் (Eusebius) என்பார் பாதுகாத்து வைத்திருந்த தாக, சிரியன் திருச்சபை தெரிவிக்கின்றது.[168] பாரசீகம் என்பது இந்தியாவே என்று மேலை நாட்டவர் பலரும் கருதி, சேர நாட்டுச் செய்திகளை, பாரசீகத்தில் நடந்தவை போன்றும் குறித்துள்ளனர். புவியியல் தொடர்பான அடிப்படையான சில தவறுகள் இக்குறிப்புகளில் உள்ளன.

**5. சாசரியா நகரத்து ஈசுபியஸ்** (Eusebius of Cacsarea)

ஓரிகனின் குறிப்புகளை வைத்திருந்த வரலாற்றாசிரியர். கிரேக்கரான இவர் *10*க்கும் மேற்பட்ட சமயத் தொடர்பான நூல்களின் ஆசிரியர் (Author of 10 Ecclesiastical history books). தோமையார், பாரசீக நாட்டிற்குச் சென்றதைத் தமது குறிப்பு களில் உறுதிப்படுத்துகின்றார்.[169]

## *4. எபிரெம்* (Ephrem)

கிறித்துவச் சமயப் பற்றுள்ள ஏராளமான பாடல்களை இயற்றியவர். எடிசா (Edessa) நகரத்து வணிகனொருவன், தோமையாரின் எலும்புகளை, திருமயிலையிலிருந்து எடிசா நகருக்கு எடுத்து வந்ததைப் பற்றி, பாடல் ஒன்றின் வழியாக விளக்குகிறார். இப்பாடலின் ஆங்கில மொழிபெயர்ப்பு:

Thomas, whence thy lineage,
That so illustrious thou shouldst become?
A merchant thy bones conveys;
A Pontiff assigns thee a feast
A king a shrine errects

---

167. 1. Scriptorum Veterum Nova Collectio, Cardinal Moi, Rome, 1838.
2. Ancient Syriac Documents, W. Cureton, London, 1864.

168. St. Thomas and India, The clergy monthly, 1952. Did St. Thomas really come to India? Ed. Menachery.

169. 1. Christianity in Malabar, J.C. Panjikaran.
2. Thomas Christians of the Syro - Malabar Rite, Orientalia Christiana, VI 2 (23), Roma, 1926, p. 99. for the reference to Pantaenus' Indian visit.

The bones the merchant hath brought
Over them an outward watch he kept,
They from within guard over him keep
Since in divers trades he embarked
Nothing so priceless did he aquire.[170]

மேற்கண்ட பாடலில், தோமையாரின் எலும்புகள் மயிலையி னின்றும் சில எடுத்து வரப்பட்ட செய்தியைக் காணலாம். எபிரெம் கி.பி. 4ஆம் நூற்றாண்டில் எடிசா நகரில் வாழ்ந் திருந்தவராவார்.

**7. கிரிகரி (Gregory of Nazianzus)**

*கி.பி. 330இல் பிறந்த கிரிகரி, கி.பி. 372ஆம் ஆண்டில் ஆயர் பொறுப்பேற்றார். கி.பி. 379 இல் கான்ஸ்டாண்டி நோபிள் நகரத்து ஆயரானார். கிரேக்கர்களால் மெய்யியல் அறிஞராகப் போற்றப்பட்ட கிரிகரி தமது செய்தியில்,*

| | | |
|---|---|---|
| பேதுரு (Peter) | - | யூதேயாவிலும், |
| பால் (Paul) | - | புறவினத்தாரிடையேயும், |
| உலூக்கா (Luke) | - | அகய்யா (Achaia) விலும், |
| ஆந்திரே (Andre) | - | எபிருசிலும் (Epirus), |
| யோவான் (John) | - | எபேசிலும் (Ephesus), |
| தோமையார் (Thomas) | - | இந்தியாவிலும், |
| மார்க் (Mark) | - | இத்தாலியிலும் |

சமயப் பணிகளாற்றினர் என்று குறிப்பிடுகின்றார்.[171]

---

170. Two Medievel Merchant Guilds of South India, Meera Abraham, Manohar Publication, 1988, p. 15.
From Medlycott, "Apostle Thomas," pp. 27-28. Medlycott bases his translation on, "The Breviary according to the Rite of the Church of Antioch of the Syrians" (Mosul, 1886-1896), Vol. VI, p. 635, and Mon. Lamy, "S. Ephraemi Syri Hymni Sermones" (Mechinlae, 1902) Vol. IV Col. 702. Lamy bases his translation on manuscripts held in the British Museum and believed to be of the eighth or ninth century - Meera Abraham.

171. St. Thomas in India, Perumalil, 1952, pp. 43-44.

## மிலான் நகரத்து அம்புரோஸ்
## (Ambrose of Milan)

தூய அம்புரோஸ் கி.பி. 397ஆம் ஆண்டில் மிலான் நகரத்தில் பிறந்தவர். கிரேக்க இலத்தீன் மொழிகளில் மிகுந்த தேர்ச்சி பெற்றவர். இவர் மற்றவர்களை விட, ஏராளமான இந்தியச் செய்திகளைத் தருகிறார். ஆசீவகர்களின் வழிவந்த சமணர்கள் (Gymnosophists of India), இந்தியப் பெருங்கடல், சிந்து கங்கையாற்றுச் சமவெளிகள், சேரநாட்டுக் கடற்கரை, இலங்கை ஆகியவை பற்றிய குறிப்புகளைத் தருகிறார். இந்தியாவில் தோமையாரின் பணிகளை விளக்குகிறார்.[172] புவியியல் தொடர்பாக, மற்றவர்களை விட சரியான தகவல்களை அம்புரோஸ் அளித்துள்ளார் என்க. மேலும் தோமையார் இந்தியாவில் சமயப் பணியாற்றியது பற்றி, பல்வேறு கிறித்துவ சமயத் தலைவர்கள் சான்றுரைத்துள்ளனர். அப்பட்டியல் மிகப் பெரிது என்பதால் சுருக்கம் கருதி விடப்படுகின்றது.[173]



---

172. 1. History of Christianity - Source Materials, M.K. George, CLS, Madras, 1982.
   2. The Jesuits in Malabar, D. Ferroli, Bangalore, Vol. I, p. 71ff, 1939.
   3. The Anglican Church in Travancore, Cochin and Kottayam, p. 27, 1920.

173. Early Christianity in India, F.I.C. Magazine, pp. 23-24, 2005.

173. 1. St. Jerome - 342-420 A.D.
   2. St. Gaudentius - 427 A.D.
   3. St. Paulinus of Nola - 431 A.D.
   4. St. Gregory of Tours - 594 A.D.
   5. St. Isidore of Serville in Spain - 639 A.D.
   6. St. Bede the Venerable - 673-735 A.D.
   7. In addition to these, many breviaries, martyrologies, liturgical books and Calenders of Syria, Alexandria, Greece and Rome.

## தூய தோமையார் (Saint Thomas)

அரமாயிக் மொழியில் தியோம (Teoma) என்ற சொல்லுக்கு இரண்டு அல்லது இரட்டை (Twin) என்பது பொருளாகும். இச்சொல், கிரேக்க மொழியில் தோமாஸ் (Thomaas) என்றும், ஆங்கிலத்தில் தாமஸ் (Thomas) என்றும் வழங்கப்படுகின்றன. தியோம என்ற அரமாயிக் சொல்லுக்குச் சரியான திதிமஸ் (Didymns) என்ற கிரேக்கச் சொல்லுக்கும் இரட்டை என்பதே பொருளாகும். துமி என்ற தமிழ் மூலச் சொல்லினின்றும் திரிந்ததே தியோம என்ற அரமாயிக் சொல்லாகும். துமி என்பதற்கு இரண்டு, இரண்டாகப் பிரித்தல் என்று தமிழில் பொருளுண்டு. துமி என்ற தமிழ் மூலச்சொல்.

துமி - துமா (எபிரேயம்) - தோமா (கிரேக்கம்) - தாமஸ் (ஆங்கிலம்). மேலும் விளக்கங்களுக்கு ஆசிரியரின் எபிரேயத்தின் தாய்மொழி தமிழே என்னும் சொல்லாய்வு நூலைக் காண்க.

தூயதோமையார், இயேசு கிறித்து தேர்வு செய்து கொண்ட பன்னிரு தொண்டர்களில் ஒருவர் என்பதை புதிய ஏற்பாட்டு விவிலியம் விளக்குகின்றது.[174] இயேசு மறைவுற்ற மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்த செய்தியை, ஏனைய தொண்டர்கள் தோமையாரிடம் கூறினர். ஆனால், தோமையார் இச்செய்தியை நம்பவில்லை. பின்னர் ஒரு நாளில், தொண்டர்கள் கூடியிருந்த அறையில், இயேசு தோன்றியதாகவும், இயேசு தோமையாரை அழைத்து, என் விலாக் காயத்தில் உன் விரலை நுழைத்துப் பார் எனக் கூறியதாகவும், அவ்வாறே தோமையார் செய்தார் எனவும், ஐயம் தெளிந்த தோமையார், இப்போது இயேசுவின் உயிர்ப்பை நம்புகிறேன் எனக் கூறியதாகவும் விவிலியம் கூறுகிறது.[175] இந்நிகழ்வின் அடிப்படையிலேயே, தோமையாரை,

174. Matt. 10:3; MK. 3:18; LK. 6:15; AA. 1:13.

175. Jn. 20:24-29.

ஐயங்கொண்ட தோமையார் (Doubting Thomas) என்ற அடை மொழியால் அழைக்கின்றனர். இயேசுவின் விலாக்காயத்தில் தனது வலது கை ஆட்காட்டி விரலை நுழைத்துப் பார்த்த தோமையாரின் அவ்விரல், அவரது வாழ்நாள் வரையிலும் சிவந்தே காணப்பட்டதாக செவி வழிச் செய்திகள் கூறுகின்றன. இயேசு கிறித்துவை, "என் ஆண்டவரே! என் தேவனே" (My Lord and my God) என்று வெளிப்படையாகச் சொல்லி, இயேசுவின் இறைத் தன்மையை வெளியிட்ட முதல் தொண்டன் தோமை யாரே எனக் கூறி விவிலியம் புகழ்கின்றது.[176]

இயேசுவின் உயிர்ப்புக்குப் பிறகு, அவரது தொண்டர்கள் எருசலேம் நகரில் கூடி, இயேசுவின் சமயத்தையும் கொள்கை களையும் உலகெங்கும் எடுத்துச் செல்ல வேண்டி ஆய்வுகள் செய்தனர். அப்போது தங்களுக்குள் சீட்டுப் போட்டுத் தாங்கள் செல்ல வேண்டிய நாடுகளைத் தெரிவு செய்து கொண்டனர். திருவுளச்சீட்டு, தோமையாரை இந்தியா நோக்கிச் செல்லப் பணித்ததாக, சிரியமொழி ஆவணமான தோமையாரின் செயல்பாடுகள் (Acts of Judas Thomas) என்ற மூன்றாம் நூற் றாண்டுச் செய்திகள் கூறுகின்றன. தோமையார் ஒரு யூதராய் இருந்ததாலும், அறமாயிக் தவிர வேறு எந்த மொழியும் தோமையாருக்குத் தெரியாது என்பதாலும், அவருக்குச் சிறிது தயக்கம் ஏற்பட்டதாகவும் சொல்லப்படுகின்றது. இருந்தாலும், இறைவன் திருவுளச் சீட்டு மூலமாக அளித்த ஆணையை தோமையார் ஏற்றுக் கொண்டு இந்தியா நோக்கிப் பயண மானார். தூய ஆவியானவர் தோமையாருக்கு வழிகாட்டினார் என சொல்லப்படுகின்றது.[177]

## அக்காலத்திய தரை மற்றும் கடல் வழிகள்

இந்தியாவின் மேற்குக் கடற்கரைத் துறைமுக நகரான முசிறிக்கும் எகிப்து மற்றும் அரேபிய நாடுகளுக்குமிடையே யான கடல் வணிகம், கி.மு. 1500 ஆண்டுகட்கு முன்பே அறியப் பட்டுள்ளது.[178] சிந்துவெளித் துறைமுக நகரான உலைத்தளம் என்ற லோத்தள் (Lothal) - முசிறியுடனும் ஏடன் துறைமுகத்

176. Ibid.

177. Acts. 1:26; 2:47.

178. Facts about Lebanon.

துடனும் வணிகத் தொழிலில், கி.மு. 7500 ஆண்டுகளில் ஈடு பட்டிருந்ததாக, இன்று மெய்ப்பிக்கப்பட்டுவிட்டது.[179] பாபி லோனிலிருந்து (ஈராக்) சிந்துவெளிக்கு (பார்த்தியா வழியாக - ஈரான்) தரைவழியாகவும் வணிகம் நடைபெற்றதும் இன்று உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. எனவே, இந்தியாவுக்கும் மேலை நாடுகளுக்கும் இடையே தரை மற்றும் கடல்வழிகள் ஏற்கனவே கண்டறியப்பட்டிருந்தன. அரப்பா நாகரிகம் சிறப்புற்றிருந்த (கி.மு. 2000) காலத்தில் பாரசீக வளைகுடாவுக்கும், சிந்து வெளிக்குமிடையில் வணிகம் நடைபெற்ற செய்திகளை எஸ். இரெத்தினாகர் (S. Ratnagar) விளக்குகிறார்.[180] சாதகக் கதைகள் (Jataka) கதைகளும் இச்செய்திகளை உறுதிப்படுத்து கின்றன.[181] பாவெரு (Baveru) என்பது பாபிலோனைக் குறித்த இந்தியர்களின் சொல்லாகும். பாவெரு சாதகக் கதைகள் பல்வேறு செய்திகளைத் தருகின்றன. திசாகாக்கா (Disakaka) என்ற பறவை, கடலோடிகளுக்குத் தரையைக் கண்டுபிடிக்கப் பயன்படுத்தப்பட்ட செய்தி இக்கதைகளில் சொல்லப்பட் டுள்ளன. திசைக் காக்கை என்பது தமிழ்ச் சொற்களே என்பதும், பறவைகளைக் கடலோடிகள் பயன்படுத்தியது தமிழர் முறையே என்றும் வெள்ளப்பாழினின்றும் தப்பித்தத் தமிழன் நோவா இம்முறையையே கையாண்டான் என்பதும், திவ்விய பிரபந்தம் உள்ளிட்ட தமிழ் இலக்கியங்கள் இச்செய்தியை உறுதிப்படுத்துகின்றன என்பதும், தமிழர் வரலாற்றில் காணப் படும் செய்திகளாகும். இவ்வாறான சாதகக் கதைகளில் ஏராள மான தமிழர் பற்றிய செய்திகள் அடங்கியுள்ளன.

தமிழர்கள் தொன்மைக் காலத்தில் கண்டுபிடித்திருந்த தரை மற்றும் கடல்வழிகள் பிற்காலத்தில் (கி.மு. 500) எல்லோ ராலும் பயன்படுத்தப்பட்டு வந்தன. பாபிலோனுக்கும் சிந்து வெளிக்கும் இருந்த தரைவழியை அலெக்சாந்தர் (கி.மு. 300) தேர்ந்தெடுத்தார். இவ்வழி ஏற்கனவே பயன்பாட்டிலிருந்ததே. திரும்பிச் செல்கையில், கடல்வழியாக அலெக்சாந்தர் பாபி

179. Lothal, Dr. S.R. Rao.

180. Encounters: The Westerly trade of the Harappa Civilization, S. Ratnagar, Delhi, 1981.

181. Jatakatthavannana, Ed. V. Fausboll and trans. T.W. Rhys Davids, Text, Vol. III, London, 1883, Baveru Jataka, pp. 126-128.

லோன் சென்றார். இதற்கு அவர் ஃபோனீசியக் கப்பல்களையே பயன்படுத்தினார்.[182] அலெக்சாந்தர் காலத்துக்குப் பிறகு ஏற்பட்ட அரசியல் மாற்றங்கள், தரை மற்றும் கடல்வழிகளில் பெரும் போக்குவரத்தை ஏற்படுத்தின. குசராத்தின் கட்ச் கத்தியாவாருக்கும் பாரசீக வளைகுடாவுக்குமிடையே, ஆரவார மான கப்பற்போக்குவரத்து நடைபெற்றது.[183]

கி.பி. முதல் நூற்றாண்டில் பலராலும் அறியப்பட்டிருந்த இந்த வழிகளிலேயே தோமையார் பயணம் மேற்கொண்டார். தமது பயணத்தைத் தரைவழியே தொடங்கிய தோமையார், பாரசீகத்தை அடைந்தார் (?) தோமையார் பாரசீகம் வந்தது பற்றிய செவி வழிச் செய்திகள் பல நம்பகத் தன்மையுடையன வாகவும், சில கதைகளாகவும் உள்ளன. சிரிய ஆவணங்களின் அடிப்படையில், அப்பன் (Habban) என்ற வணிகன் ஒருவன் தோமையாரை இந்தியாவுக்கு அழைத்து வந்தான் என அறிய முடிகிறது. இவன் தமிழ் வணிகனே என்பதும், இவனது பெயர் அப்பன் என்று சொல்லப்பட்டுள்ளதால், சேர நாட்டினின்றும் மேலை நாடுகளில் வணிகம் செய்யச் சென்றவனை தோமையார் தேர்ந்தெடுத்தார் என்றும் அறியலாம். இவ்வணிகன் தமிழனா யிருந்ததால், (பாரசீகம் வழியே) தமிழ் நாட்டுக்குச் செல்வதே தோமையாரின் நோக்கமாயிருந்தது எனவும் கருதலாம்.

## கொண்ட போரஸ்

கி.பி. முதல் நூற்றாண்டில், **கொண்ட போரஸ்** (Gondophares) என்ற மன்னன், பாரசீகத்தை ஆண்டிருந்ததாக (Acts of Juda Thoma) வழியாக அறியலாம். கொண்ட போரஸ் என்பது இந்தியச் சொல்லை, கிரேக்க ஒலிப்பில் மாற்றிக் கொண்ட சொல்லாகும். இதன் உண்மையான, சரியான பாரசீக ஒலிப்பு "விந்த பரணா" (Vindapharna) என்பதாகும். இச்சொல் லுக்கு வெற்றிவேந்தன் என்பதே பொருளாகும். கிரேக்கர்கள், இந்தியப்

---

182. The Commerce and Navigation of the Erythraen sea and Arriyan's Account of the Voyages of Nearkhos, Trans. J.W. Mc Crindle, London, 1879, Arrian, Indika, xxvii:i.

183. The Greeks in Bactria and India, W.W. Tarn, Cambridge, 1951, p. 93;261; pp. 481-485.

பெயர்களைத் தம் மனம் போன போக்கில் திரித்துக் கொண் டனர்.[184] விந்தன் + பரணன் என்ற இரு தமிழ்ச் சொற்களின் கூட்டாகவே "விந்தப் பரண" என்ற பெயர் உள்ளது. விந்தன் என்பது வேந்தன் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே. விந்தன் - வேந்தன் ஆகிய இரு சொற்களும் மழையைக் குறித்தனவே. விந்து என்பது சிந்து என்பதும் மழை நீரைக் குறித்த தமிழ்ச் சொற்களே. விண் + துளி = விந்துளி - விந்து எனவும், சிந்து + துளி = சிந்துளி - சிந்து எனவும் ஏற்கனவே சொல்லப்பட் டுள்ளது. விந்து - விந்தன் - வேந்தன் - வேந்திரன் - இந்திரன் என்று சொற் கள் நீண்டன. பர என்ற தமிழ் மூலச் சொல்லுக்கு விரிந்த, உயர்ந்த, படர்ந்த என்ற பொருளுண்டு. பர - பரண் என்பது உயர்ந்த இடத்தைக் குறிக்கும். பர + உலகம் = பரவுலகம் - பரலோகம் எனப்பட்டது. எனவே விந்தன் + பரணன் என்று கூறப்பட்ட "விந்தப் பரண" என்ற பெயரைத் தாங்கிய அம்மன்னன், சிந்துவெளித் தமிழ் மரபில் தோன்றியவனே. விந்தப்பரணன் என்பதே சரியான ஒலிப்பாகும் (கொண்ட போரஸ் சேர மன்னன் குட்டுவனே என்ற கருத்தும் உண்டு).

பாரசீக மன்னன் கி.பி. 19ஆம் ஆண்டில், சாகர்களை வென்று, தச்சிலை (Taxila) அல்லது தெற்சிலை எனும் சிந்து வெளிப் பகுதியை இணைத்துக் கொண்டான். அக்காலத்தில் சிந்து, கட்ச், கத்தியவார், தெற்கு மற்றும் மேற்கு பஞ்சாப், ஆப்கானிஸ்தானின் வடமேற்குப் பகுதி உள்ளிட்ட தெற்கு ஆப்கானிஸ்தானும், இன்றைய ஈரான் நாட்டின் பெரும் பகுதி களை உள்ளடக்கி, பாரசீகப் பேரரசு விளங்கிற்று என, சர். ஜான் மார்ஷல் குறிப்பிடுகின்றார்.[185] (கொண்ட போரஸ் கி.பி. 19-30 ஆண்டுகளில் மன்னனாயிருந்தான் என்றும், இவன் தோமையார் காலத்துக்கு முற்பட்டவன் என்ற கருத்தும் உண்டு).

---

184. Cambridge History of India, Marshall, p. 577.

The name appears, Gudnaphar, Gundafor, Gundaforus, Goundaphorus, Guduphara, Godapharna, Undopheros, Undapherros, and Gondopherrous which apparently represent local pronunciation of the Persian Vindhapharna, The Winner of Glory - Cambridge.

185. A Guide to Taxila, Sir John Marshall, Cambridge University Press, p. 30, 1960.

கி.பி. 50ஆம் ஆண்டில், கொண்ட போரஸ் என்ற விந்தப் பரணன் மேற்கண்ட பகுதிகளை உள்ளடக்கிய பாரசீகப் பகுதி களை ஆண்டுவந்தான் என்ற செய்தியை Acts of Thoma மட்டுமே கூறுகின்றது. இந்திய வரலாற்றில் கொண்ட போரஸ் என்ற மன்னன் பாரசீகத்தை ஆண்டது பற்றியோ, அவனது மரபு வழிப்பட்டியல் (வம்சாவழி) பற்றியோ எந்தச் செய்திகளு மில்லை. எனவே, Acts of Thoma கூறியது கற்பனைச் செய்தியே என, வரலாற்றறிஞர்கள் புறந்தள்ளினர்.

## நாணயங்கள்

கி.பி. 1930களில் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வுகள், சிந்துவெளி நாகரிகத்தை வெளிச்சத்திற்குக் கொண்டு வந்தன. இதுவரை அறியப்படாத புதிய வரலாற்றுச் செய்திகளை அவ்வகழ்வாய்வுகள் வெளிப்படுத்தின. சர் ஜான் மார்ஷல், கி.பி. 50 ஆண்டுகளில் வெளியிடப்பட்ட கொண்ட போரஸின் நாணயங்கள் பலவற்றைக் கண்டுபிடித்தார். இதன் பிறகு கொண்ட போரஸ் என்ற மன்னன் பாரசீகத்தை ஆண்டது உறுதிப்படுத்தப்பட்டது.[186] இந்த நாணயங்களின் புகைப் படங் களும் வெளியிடப்பட்டன. இதனடிப்படையில், கொண்ட போரசுடன் இணைத்துப் பேசப்பட்ட தோமையார் பற்றிய செய்திகளும் உண்மைச் செய்திகளே என்று ஏற்றுக் கொள்ளப் பட்டன. தோமையார் காலத்தில் உரோமை - பாலத்தீனம் - அரேபியா - இந்தியா, குறிப்பாகத் தமிழகம் ஆகியவற்றிற் கிடையே தடையற்ற வணிகமும் போக்குவரத்தும் இருந்தன என்பதை, பன்னாட்டுக் காசுகள் (Coins) பற்பல நாடுகளிலும் கிடைத்திருப்பதைக் கொண்டு அறியலாம். தோமையர் காலத்திய உரோமைக் காசுகள், கொண்ட போரஸ் ஆட்சிப் பகுதிகளிலும் தமிழகத்திலும் கிடைத்துள்ளன.

கி.மு. 30 முதல் கி.பி. 70 வரையிலான 100 ஆண்டுக்கால அளவிலான காசுகள் பொன்னாகவும் வெள்ளியாகவும் கேரளத் தில் கிடைத்துள்ளன. கி.பி. 1847ஆம் ஆண்டில் கோட்டயம் பகுதியில் கண்டெடுக்கப்பட்ட காசுகள்:

---

186. Photographs of the Coins, see:

1. A Guide to Taxila by John Marshall, Plate III:18.
2. India and Apostle Thomas, Medlycott, London.

| | | | |
|---|---|---|---|
| அகஸ்டஸ் | - கி.மு. 27 கி.பி. 14 | - | 10 காசுகள் |
| திபேரியஸ் | - கி.பி. 14-37 | - | 4 காசுகள் |
| கிளாடியஸ் | - கி.பி. 41-54 | - | 15 காசுகள் |
| நீரோ | - கி.பி. 54-68 | - | 13 காசுகள்[187] |

மேற்கண்ட காசுகள் தோமையார் காலத்தில் புழக்கத்திலிருந் தவை. தோமையார் கூட இக்காசுகளைப் பயன்படுத்தியிருக்க வேண்டும்.

## தோமையாரும் அப்பனும்

பாரசீகத்துக்குத் தோமையார் செல்ல ஆணை பிறந்த பிறகு, மொழி தெரியாத அந்நாட்டுக்கு எவ்வழியாகச் செல்வது என சிந்தித்துக் கொண்டிருந்தார். மறைத் தொண்டர் பால் என்ப வரைப் போல் முறையான தத்துவ ஆய்வறிவோ, கல்வியறிவோ தோமையாருக்கு இருந்ததில்லை. ஆண்டவரின் தூய ஆவியும், அவ்வாற்றல் தந்த எழுச்சியும் மட்டுமே தோமையாரிடம் குடி கொண்டிருந்தனவென்று சிரியக் குறிப்புகள் தெரிவிக்கின்றன. ஒரு நாள் எருசலேம் நகரத்துச் சந்தைப் பகுதியில் அப்பன் என்னும் இந்திய வணிகனை தோமையார் சந்தித்தார். ஏற்கனவே குறிப்பிட்டபடி, சிரியக் குறிப்புகள் அப்பனஸ் (Abbanes) என்றும்,[188] யூதக் குறிப்புகள் அப்பன் (Habban) என்றும் குறிப் பிடுவதால், அப்பன் என்பதே இவனது சரியான (தமிழ்ப்) பெயர் எனக் கொள்ளலாம். எனவே, தோமையாரை இந்தியாவுக்கு அழைத்து வந்தவன் ஒரு தமிழ் வணிகனே எனக் கருத இடமுண்டு.

## கட்டிடக் கலைஞர் தோமையார்

சிரியன் திருச்சபைக் குறிப்புகளில் காணப்படும் செய்தி:[189]

---

187. Early coins of Kerala, Dept. of Arch, Trivandrum, pubd. by P.L. Gupta, 1965.
Catalogue of Roman Gold Coins, Sathyamurthy, Trivandram, 1992.
188. Christianity in India and Pakistan, P. Thomas, George Allen and Union Ltd, London, 1954, p. 19.
189. Ibid, p. 19-20.

"எருசலேம் நகரத்துக் கடை வீதிகளில் தோமையார் வந்து கொண்டிருந்த போது, தற்செயலாக அப்பன் (Abbanes) என்ற இந்திய வணிகனைச் சந்தித்தார். அதற்கு முன்பு தோமையார் அவனைச் சந்தித்ததில்லை. அவனுடன் உரையாடிய போது, அப்பன் என்பான் பாரசீக மன்னன் கொண்ட போரஸ் என்பா னின் முகவர் (agent) என்றும், மன்னர் புதிதாகக் கட்டவிருக்கும் அரண்மனையை வடிவமைக்கும் பொறியாளர் ஒருவரைத் தேடி வந்ததாகவும், கூறினான். (அரண்மனைகளை உருவாக்கும் தொழில் நுட்பம் தெரிந்தவர்கள் ஃபோனீசியாவில் இருந்தனர் என்பது வரலாற்றுச் செய்தி. புகழ் மிக்க சாலமனின் கோவிலை யும் அரண்மனையையும் உருவாக்கியவர்கள் ஃபோனீசியக் கட்டிடக் கலைஞர்களே). அவ்வரண்மனை மேற்கத்தியக் கலை வடிவமைப்பில் இருக்க வேண்டும் என மன்னர் விரும்புவ தாக வும் கூறினான். (தோமையார் அடிப்படையில் கல்வியறிவு பெறாத மீனவர் ஆவார்) நல்லதொரு கட்டிடக் கலைஞன் இருந்தால் தெரிவிக்கும்படியும், அதற்கான நல்ல ஊதியத்தை மன்னர் தருவார் என்றும் கூறினான். அச்சமயத்தில் யூதர் ஒருவர் அவ்விடத்திற்கு வந்தார். அவர் தோமையாரைச் சுட்டி, இவரே நல்ல கட்டிடப் பொறியாளர் என்றும், மன்னரின் விருப்பத்தைத் தோமையார் நிறைவேற்றுவார் என்றும் கூறினார். திடீரென இடையில் வந்து தன்னைப் பற்றிக் கூறிய "அவரை", தன்னுடைய ஆண்டவரும் தலைவருமான இயேசுவே என்பதை தோமையார் அறிந்து கொண்டார். தலைவரின் விருப்பம், தான் பாரசீகத்துக்குச் செல்வதே என்பதைக் குறிப்பால் உணர்ந்த தோமையார், அப்பனுடன் பாரசீக நாட்டிற்கு வர ஒப்புதல் அளித்தார்".

"பாரசீகத்துக்கு (இந்தியாவுக்கு) வந்து சேர்ந்த தோமை யாரை, அப்பன் கொண்ட போரஸ் மன்னருக்கு அறிமுகம் செய்து வைத்தான். மன்னர், தோமையார் உண்மையில் கட்டிடக் கலைஞர் தாமா என ஐயுற்று, அது தொடர்பாகப் பல விளக்கங்களைக் கேட்டார். தோமையாரின் பதில் விளக் கங்கள் மன்னருக்கு மனநிறைவைத் தரவே, கட்டிடத்திற்கான வரைபடம் ஒன்றினை (Plan)க் கொடுக்குமாறு தோமை யாருக்கு ஆணையிட்டார். தோமையார் அளித்த அரண்மனை யின் வரைபடம் மன்னருக்கு மகிழ்ச்சியை அளித்தது. ஏனெனில், மன்னர் இதுவரையில் கண்டிராத புதிய தோற்றத்தில் அந்த அரண்மனையின் வரைபடம் இருந்தது. மன்னர் கட்டிடப்

பணிகளுக்குத் தேவையான தொகையை (Funds)க் கொடுக்க ஆணையிட்டார். மன்னர் வெளிநாட்டுப் பயணம் மேற்கொள்ள இருப்பதாகவும், தாம் திரும்பி வர ஆறுமாத காலமாகு மென்றும், அதற்குள் அரண்மனையைக் கட்டி முடித்து விட வேண்டும் என ஆணையிட்டார்".

"கட்டிடம் கட்ட மன்னர் கொடுத்த பணத்தையெல்லாம், வறியவர்களுக்கும், தேவைப்படுவோருக்கும் வாரி வழங்கிய தோமையார், மன்னரின் ஆணையை நிறைவேற்றவில்லை. மன்னர் கெடு விதித்த ஆறுமாத கால அளவுகளில், தோமையார் தனது சமயத்தையும், இயேசுவின் நற்செய்தியையும் மக்களி டையே பரப்புவதிலும் ஈடுபட்டார். வெளிநாட்டுப் பயணம் முடிந்து திரும்பி வந்த மன்னர், தோமையாரை அழைத்து, அரண்மனை எங்கே என்று கேட்டார்".

"நான் மன்னருக்காக நல்லதொரு அரண்மனையைக் கட்டி முடித்துவிட்டேன்" என்றார் தோமையார். மேலும், "மன்னர் அம்மாளிகையைப் பார்க்க இயலாது. அது இவ்வுலகில் இல்லை. விண்ணுலகில் உள்ளது" என்றார். சினம் கொண்ட மன்னன், தோமையாரைச் சிறையில் அடைத்தான். அன்றிரவு மன்னரின் தம்பி காடு (Gad) என்பான், திடீரென இறந்து பட்டான். விடியற்காலையில், தனது தம்பி விண்ணுலகில் ஓர் அரண்மனையிலிருப்பதையும், வானவர்கள் மன்னனின் வருகைக்காக மாளிகையை சீர் செய்து கொண்டிருப்பதையும் ஒரு காட்சியில் கண்டான். உடனடியாகத் தோமையாரை விடுவித்ததுடன், மன்னன் கிறித்துவ சமயத்திலும் இணைந்து கொண்டான்."[190]

மேற்சொல்லப்பட்ட கதையை வேறு கலை நயத்துடன் இன்றைய மலபார் கிறித்துவ மக்கள் கூறி வருகின்றனர். அரண்மனை கட்டக் கொடுத்த பணத்தை வறியார்க்கு செல விட்ட தோமையாரின் கதையையொட்டிய மாணிக்கவாசகரின் நரிகளைப் பரிகளாக்கிய கதையோடு ஒப்பிட்டுப் பார்ப்பது நல்லது. மாணிக்கவாசகர் பற்றிய கதையின் கரு, தோமையார் கதையில் இருப்பதாகவே தோன்றுகிறது. மேற்சொல்லப்பட்ட கதையின் நம்பகத் தன்மை ஒருபுறமிருந்தாலும், தோமையார்

190. Ibid.

பாரசீகம் மற்றும் வடமேற்கு இந்தியப் பகுதிகளில் சமயப் பணியாற்றினார் என்பது தெளிவாகின்றது. தென்னிந்தியாவுக்கு வருமுன்னர், கி.பி. 50ஆம் ஆண்டில், தோமையார் வட இந்தியாவிலிருந்தார் எனக் கருதலாம்.

தோமையார் காலத்தில் வட இந்தியப் பகுதிகளில் பிராமண சமயம், சமண மற்றும் புத்த சமயங்கள் வேரூன்றியிருந்தன. பாரசீகத்தில், தீயை வழிபடும் பார்சி சமயம் பின்பற்றப்பட்டது. கொண்ட போரஸ், பார்சி சமயத்தினின்றும் கிறித்துவ சமயத் துக்கு மாற்றப்பட்டான். மன்னன் வழியில் பெரும்பாலான மக்களும் கிறித்துவ சமயத்தை ஏற்றிருக்க வேண்டும். இன்றும் கூட, இந்திய - பாகிஸ்தான் - ஆப்கானிஸ்தான் பகுதிகளில் வாழும் சில மலைவாழ் மக்கள் மரபினர் (Tribes), தங்களை இசுரேல் நாட்டுடன் இணைத்துப் பேசி வருகின்றனர். இவர் களது முன்னோர்கள், தோமையாரால் சமய மாற்றம் செய்யப் பட்டவர்களாக இருந்திருக்க வேண்டும். கேரளத்தில் வாழ்ந் திருந்த தோமையார், தனது மக்களுக்கு, தனது வடநாட்டுச் செயல்பாடுகள் பற்றிச் சொல்லியிருக்க வேண்டும். கேரளத்தில் செவிவழிச் செய்திகளாக அறியப்படும் தோமையாரின் வட புலத்து மறைப்பணிகள் பற்றி, பிற்காலத்தில் வந்த இயேசு அவை (Jesuits)க் குருமார்கள் கேள்விப்பட்டனர். டெல்லியில் மொகலாயப் பேரரசர்களைச் சந்திக்கச் சென்ற ஓர் இயேசு அவைக் குழுவினர், இந்து குஷ் மலைகளில் தோமையாரின் கிறித்துவர்களைத் தேடிச் சென்றனர். இடைக்காலம் (கி.பி. 1000) வரையில் கிறித்துவர்களாயிருந்த அம்மக்கள், பல்வேறு சூழல்களாலும், மேய்ப்பர்கள் (சமயக் குருமார்கள்) இல்லாமை யாலும் தங்களது சமயத்தை விடுவாராயினர். ஆனால் இன்றும் சில கிறித்துவக் குழுக்கள் பாகிஸ்தானிலும் ஆப்கானிஸ் தானிலும் வாழ்ந்து வருகின்றனர். அவர்களின் முன்னோர்கள் அப்பகுதி மக்களே என்றும், எந்நாட்டினின்றும் குடிபெயர்ந்து தாங்கள் வரவில்லையென்றும் கூறுகின்றனர். வடக்கே சென்று தேடிய இயேசு அவையினர், கிறித்துவக் குழுக்கள் கிறித்துவர் எவரையும் காண இயலவில்லை என, அந்த அவையினரின் குறிப்புகள் தெரிவிக்கின்றன.[191]

---

191. Ibid.

## படிக்காத மேதை - தோமையார்

தோமையாரின் பண்பு நலன்கள் பற்றிய செய்திகள் எவையும் தெளிவாக்கப்படவில்லை. மறைப்பணியாளர் பால், எருசலேம் நகரத்தின் கமாலியேல் (Gamaliel) என்பாரின் மாணவர்.[192] மிகச்சிறந்த கல்வியாளராகக் கருதப்பட்ட கமாலியேலின் மாணவர் என்பதால், பால் எல்லாத்துறைகளிலும் தன்னிகரற்று விளங்கினார். தெளிவான சிந்தனை, ஆற்றொழுக்கான பேச்சு, நினைத்ததை விளக்கமாக எழுதும் ஆற்றல் என, தலைமைப் பண்புகளுக்குள்ள தகுதிகள் அனைத்தையுமே பால் பெற்றிருந்தார். ஆனால் தோமையாருக்கு பாலுக்கு இருந்த தகுதிகளில் ஒன்று கூட இல்லை. இந்தியாவில் அப்போதிருந்த பிராமணர்கள் கல்வியிலும், சொற்போர் செய்வதிலும் வல்லவர்கள் என்று கருதப்பட்டனர். இந்தப் பிராமணர்களுக்கும் ஈடான கல்வித் தகுதி தோமையாருக்கு இருந்ததில்லை. தோமையாருக்கு இருந்த ஒரே தகுதி, இயேசுவின் மீதிருந்த பற்றுதலும் அவரது கொள்கைகளுமே. இயேசுவின் நற்செய்தியை உலகெங்கும் அறிவிக்க வேண்டும் என்ற ஒப்பிட முடியாத வெறி தோமையாரிடம் இருந்தது. கல்வியறிவற்றவராயினும், படிக்காத மேதை என்று சொல்லுமளவில், வாழ்வியல், சமயவியல் போன்ற துறைகளில் அவருக்குப் பட்டறிவு இருந்தது.

மொழியின் அடிப்படையான இலக்கண விதிகள் எதையுமே அறியாத தோமையார், பார்சி முதல் தமிழ் வரையிலான இந்திய மொழிகளை விரைவில் கற்றுக் கொண்டார். பிற்றை நூற்றாண்டுகளில் தமிழகம் வந்த ஐரோப்பியர்களான இராபர்ட்-டி-நொபிலி, வீரமாமுனிவர், போப்பையர், கால்டுவெல் போன்றவர்கள், தமிழ்மொழிக்கு உயர்வினை அளித்தனர். இவர்களின் உள்ளங்களில் இயேசுவின் கொள்கைத்

---

192. Dictionary of the Bible, p. 296.

Gamaliel: A teacher of the Law called Gamaliel who lived about 100 A.D. In the Rabbinical sources he is given the honorific title of Rabban and is regarded as one of the great teachers of the law. He was the teacher of St. Paul (AA 22:3) who probably studied under him for the usual three or four years. Early Christian legend made Gamaliel a Christian.

- Dictionary of the Bible.

தீயே கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்தது. இவர்களுக்கு முன்னோடியாக இருந்தவர் தோமையாரே. வீரமாமுனிவருக்கு தெலுங்கு, கன்னடம், மலையாளம், இந்துஸ்தானி, சமஸ்கிருதம் ஆகிய மொழிகளும், தமிழில் பெரும்புலமையும், தனது அயராத உழைப்பால் கை கூடியிருந்தன. வீரமாமுனிவர் அளவுக்கு இல்லாவிடினும், இந்திய மொழிகளில் பல தோமையாருக்குத் தெரிந்திருந்தன. தோமையார், தான் கல்வியறிவற்றவர் என்ற தகுதியை பொய்யாக்கிக் காட்டினார் என்பதே சரியான கண்ணோட்டமாகும்.

தோமையார் வட இந்தியாவில் வாழ்ந்திருந்த காலங்களில், சேரநாட்டில் 70க்கும் குறையாத யூத குடும்பங்கள் வாழ்ந்திருந்தனர் என்று அறியப்படுகின்றது. தியஸ்பொரா (Diaspora) என்ற திசைப்புறம் நிகழ்ச்சி, கி.மு.வில் தொடங்கி, கி.பி. 70ஆம் ஆண்டில் பெருமளவு நிகழ்வுற்றன.[193] யூதர்கள் தங்கள் தாய்நாடான இசுரேல் நாட்டைவிட்டு, அலை அலையாக வெளிநாடுகளில் அடைக்கலமாயினர். உரோம அரசின் அடக்கு முறைகளும், முன்னதாக பாபிலோனியர்களின் அடிமைப்படுத்துதலும், யூத இனத்தைச் சின்னாபின்னமாக்கின. கி.மு. 250இல் தொடங்கிய திசைப்புறம் செல்லும் நிகழ்வுகளின் தொடர்ச்சியாக, ஒரு பெருங்குழு முசிறித் துறைமுகத்தையடைந்தது. உலக வரலாற்றில், யூத இனம் பல்வேறு நாடுகளுக்குச் சிதறிப் போன நிலையில், அந்தந்த நாடுகளிலும் இரண்டாம் நிலை மக்களாகவே யூதர் கருதப்பட்டு கொடுமைக்கு ஆளாயினர். செர்மனியில் இட்லர் நடத்திய வன்முறை மிகவும் கொடியது. இவ்வாறு உலக நாடுகள் எல்லாம் யூதரை வெறுத்த போது, தமிழகத்தின் ஒரு பகுதியான சேர நாட்டில், யூத மக்கள் அமைதியாக வாழ்ந்தனர். கி.மு. 250 முதல் கி.பி. 1948 வரையிலும், கொச்சியில் ஒரு தெரு முழுக்க யூத மக்கள் வாழ்ந்திருந்தனர். இவர்களின் உயிருக்கோ உடைமைக்கோ ஒரு தீங்கையும் தமிழகம் செய்யவில்லை என்பது, தமிழ் மக்களின் உயரிய விருந்தோம்பல் உணர்வினை வெளிப்படுத்தும். தமது இனத்தார் முசிறியில் வாழ்வதை அறிந்த தோமையார், தெற்கு நோக்கிப் பயணம் செய்ய எண்ணினார். யூதர்கள் பலரும் தமிழகத்தில் வாழ்ந்திருந்த செய்தி, தோமையாருக்குப் புதிய தெம்பினை அளித்திருக்க வேண்டும் எனக் கருதலாம்.

---

193. Ibid, p. 198.

## முசிறித் துறைமுகம்

கி.பி. முதல் நூற்றாண்டில், உலக வணிகச் சந்தையின் குறுக்குச் சாலையாக (Cross Road) முசிறித் துறைமுகம் விளங்கியது. எகிப்து தொடங்கி சீனம் வரையில் சென்ற நீண்ட கடல் வழியில், இடையில் நடுநாயகமாக முசிறித்துறைமுகம் விளங்கியது. இயற்கையில், ஒரு துறைமுகத்துக்கு தேவையான அனைத்து அமைவுகளும் முசிறித் துறைமுகத்தில் இடம் பெற்றிருந்தன. பெரியாறு கடலில் கலக்குமிடமான முசிறி, கழி முகங்களில் பல்வேறு உடைப்புகளைக் கொண்டிருந்தது. அக்கழிமுகப் பகுதியில் பல்வேறு நிலத்திட்டுகள் தீவுகள் போல் தனித்திருந்தன. அத்தீவுகள் மற்றும் அதனையொட்டிய நகர்ப் பகுதிகள் அனைத்தும் வெவ்வேறு பெயர்களால் அழைக்கப் பட்டன. மூன்று சிறிய நிலத்திட்டுக்களைப் பெற்றிருந்ததால், முச்சிறுப் பகுதிகள் (Three islands in the estuary) என அழைக்கப் பட்ட அவ்விடம், முச்சிறு - முச்சிறி - முசிறி எனத் திரிந்தது. (இன்னும் பல பெயர்க் கரணியங்களும் உள்ளன. உள்ளே மேலும் காண்க)

**கிராங்கனூர், முசிறி, முச்சிறி, மகோதய புரம், மகாதேவப் பட்டிணம், மாக்கோட்டைப் பட்டிணம், முசிறிக்கோடு, முயிறிக்கோடு, திருவஞ்சிக் குளம், ஜஸ்லி, ஜுங்கலே, சிங்கிலின்** என்றவாறெல்லாம் குறிப்பிட்டுள்ள கொடுங்கல்லூர் துறை முகம், முற்கால வரலாற்றாசிரியர்களால் பெரிதும் கவரப் பட்டிருந்தது.[194] இலங்கையைக் குறித்த சிங்களம் என்ற சொல்லும்கூட, முசிறியைக் குறித்தே பல மேலை நாட்டவரால் கூறப்பட்டுள்ளன. தற்போதைய ஆழிக்கோடு (Azicode) என்ற

---

194. Kodungallur was variously called Cranganore, Muzris, Muchiri, Mahodayapuram, Mahadevappattam, Muyrikkodu, Thiruvanchi Kulam etc.

Al Biruni (970 A.D) says as Jangli,

Benjamin of Tudela (1167 A.D) - Gingaleh

Friar Odoric (1287 A.D) - Cyngilin

Chinese Annals (1286 A.D) -Sherikali; Rashiduddin (1300) - Chinkli/Jinkali; Shemseddin Dirnishqui (1320) - Shinkli; Frair Jordanus (1328) - Singuyli; Abulfeda (1330) - Shenkala; Mrignolli (1349) - Cynkali;

Nicolo Conti (1444) - Columguria; Barbosa (1505) - Cranganore; Assemani (1510) - Chrongalor.

ஊர் கடற்கரையை ஒட்டியுள்ளது. இவ்விடமே தொன்மைக் கால முசிறி என்று கூறுகின்றனர்.

முசிறித் துறைமுகத்திற்கும் பாபிலோன் நகரத்திற்கும் இடையேயிருந்த வணிக உறவு இன்று மெய்ப்பிக்கப்பட்டுள்ள தால், தோமையார் காலத்துக்கு 2000 ஆண்டுகட்கு முன்னரே, மேலைநாட்டுடனான கடல்வழி அறியப்பட்டிருந்தது எனக் கருதலாம். கி.மு. 1400ஆம் ஆண்டு இத்திய (Hittite) மன்னர் களின் ஆப்பு எழுத்துத் தட்டுகளில் (Cunieform plates) முசிறி யுடன் நடைபெற்ற வணிகச் செய்திகள் உள்ளன.

இத்தியர் (Hittites) மொழிக்கும் சிந்துவெளி மொழிக்கும் உள்ள தொடர்பு பற்றிய செய்திகள் ஆசிரியரின் 'எபிரேயத்தின் தாய்மொழி தமிழே' என்ற நூலில் விளக்கப்பட்டுள்ளதைக் காண்க. கல்தேயத்தின் (Chaldea) முகையிர் நகரத்தின் நிலாக் கோட்டம், கி.மு. 600 ஆண்டுகளில், சேரநாட்டுத் தேக்கு மரங் களால் கட்டப் பெற்றது. கி.மு. 900 ஆண்டுகளில் கட்டப் பெற்ற சாலமனின் கோயில் மற்றும் அரண்மனைக்கான தேக்கு மற்றும் தேவதரு மரங்கள் சேர நாட்டினின்றும் சென்றன. ஊர் நகரத்தின் இடிபாடுகளில் கூட (கி.மு. 3000) சேரநாட்டுத் தேக்குமரத் துண்டுகள் காணப்படுகின்றன.[195]

---

Colonel Yule thinks that the name Shinkali or Shingala was probably formed from Thiruvanchkulam. He points out that the data to identify Cranganore with the Gingaleh of Rabbi Benjamin are too vague though the position that place seems to be in the vicinity of Malabar. K.P. Padmanabha Menon.

1. History of Kerala, K.P. Padmanabhan, p. 313.
2. Glossary of Anglo-Indian Colloquial words and Phrases by Yule-Burnell, p. 627, 1886.

195. The Travancore State Manual Vol II, T.K.Velu Pillai, Trivandrum, p. 9, 1940.

195. "According to Mr. Howitt the Assyriologist, teak wood which was found in the ruins of Ur must have been imported by sea from the Malabar Commerce by sea to so early a date as 3000 B.C. About 2000 B.C. cotton cloth from Malabar appears to have found its way to Egypt. The Phoenicians visited the coast of Malabar about 1000 B.C. in search of ivory, sandlewood and spices. About the same period King Solomon sent his commercial fleet to Tarshish and Ophir
- T.K. Velu Pillai.

## இந்தியாவிற்கான கடல்வழி

முசிறித் துறைமுகம் கி.பி. 3000 ஆண்டுகட்கு முன்பே பொலிவுற்றிருந்தது என்ற செய்தி அசிரிய நாட்டு ஆய்வாளர் **ஓவிட்** (Howitt) என்பவரால் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. அக்காலத்தில் கடலோடிகள், அரபியக் கடலைக் குறுக்காகக் கடந்தே பயணம் செய்திருக்கின்றனர். இவர்கள் தமிழ்க் கடலோடிகளே என்பதும், இந்தக் கடல்வழி தமிழர்களைத் தவிர மற்றவர்க்கு தெரிந்திருக்கவில்லையென்பதும் தெளிவு. கிறித்து பிறப்பாண்டுகளில் கூட, வெளிநாட்டவர் இந்தியாவை அடைய, ஏடன் துறைமுகத்திலிருந்து புறப்பட்டு கடற்கரையை ஒட்டியே தங்களது கடற்பயணத்தை தொடர்ந்து முசிறியை அடைந்தனர் என்ற செய்தியை, எரித்திரையன் கடல்வழிப் பயணச் செய்தி விளக்குகின்றது.

**யூடோக்சஸ்** (Eudoxus) என்ற மேலைநாட்டுக் கடற்பயணி (கி.பி. முதல் நூற்றாண்டு) அரேபியாவில் தனது கப்பலை நங்கூரமிட்டு இந்தியாவுக்கு வழி தெரியாமல் தவித்துக் கொண் டிருந்த போது, கிப்பலஸ் (Hippalus) என்ற இந்தியன், யூடோக்சசுக்கு உதவ முன்வந்தான். கிப்பலஸ் என்ற சொல், கப்பல் என்ற தமிழ்ச் சொல்லே. கப்பல்காரன் அல்லது கப்பலோட்டி என்ற சொல்லே, கிப்பலஸ் என்று திரிபுபட் டுள்ளது. தமிழர்கள் காற்றின் உதவி கொண்டும், அக் காற்று கள் வீசும் காலங்களைத் தெரிந்து கொண்டும் கடலோடினர். இக்காற்று கோடையில் தென்மேற்கிலும், மழைக்காலத்தில் வடகிழக்கிலிருந்து வீசியதைக் கொண்டு, தமிழ் நாட்டிலிருந்து மேற்கு நோக்கிச் செல்ல தை மாதத்தையும், மேலை நாட்டி லிருந்து இந்தியா வர ஆடி மாதத்தையும் தேர்வு செய்தனர். சரியான பருவ காலங்களில் இயக்கப்படும் மரக்கலம், முசிறி - ஏடன் இடையே அரபிக்கடலைக் குறுக்காகக் கடந்துச் செல்ல, 40 நாட்களை மட்டுமே எடுத்துக் கொண்டது. இந்தக் கடல் வழியை உரோமர்களும், அராபியர்களும் மற்றவரும் தமிழரிட மிருந்தே தெரிந்து கொண்டனர். கி.பி. 700 ஆண்டுகளுக்குப் பிறகு, இசுலாமியப் பேரரசு, மேற்கையும் கிழக்கையும் தடை செய்து போக்குவரத்தை நிறுத்திவிட்டதாலும் 500 ஆண்டு களாக கடற்செலவு மேற் கொள்ளப்படவில்லையாதலாலும்,

அடுத்தடுத்து வந்த பிற்காலத் தலைமுறையினர், கடல்வழியைத் தெரிந்து கொள்ள இயலாமற் போயினர். கி.பி. 15ஆம் நூற்றாண்டில் தான் வாஸ்கோடகாமா புதிய கடல்வழியைக் கண்டு பிடித்தார் என்க.

தோமையார் முசிறிக்கு வந்திறங்கியது பற்றிய செய்திகள் தெளிவாக இல்லை. ஒரு சாரார், எருசலேமிலிருந்து பாரசீகம் வழியாக வட இந்தியப் பகுதிகளுக்குத் தரைவழியே வந்து, கட்ச் பகுதியில் கப்பலேறி மேற்குக் கடற்கரையையொட்டியே பயணம் செய்து முசிறிக்கு வந்தார் என்பர். மற்ற சிலர், தோமையார் கடற்பயணமாகவே வந்தார் என்றும், எருசலேம் - ஏமன் துறைமுகம் - முசிறி என்ற கடல்வழியைச் சொல்கின்றனர். முசிறியினின்று வடஇந்தியாவுக்கு (Taxila)ச் சென்றார் என்றும் அங்கு ஓராண்டு தங்கியிருந்தார் என்றும் கூறப்படுகின்றது. இதனிடையே வட இந்தியாவினின்று, எபேசுஸ் நகரத்தில் (Ephesus) நோய்வாய்ப்பட்டு இறக்கும் தருவாயிலிருந்த இயேசுவின் அன்னை மறியாளை (Mary)ச் சந்திக்கச் சென்றார் என்ற செய்தியும் உண்டு.

இரண்டாம் முறையாக எருசலேமிலிருந்து முசிறிக்கு வந்த தோமையார், கிழக்குக் கடற்கரையிலிருந்த புகார் துறைமுகத்திலிருந்து, கங்கையின் கழிமுகப் பகுதியான வங்காளத்திற்குச் சென்று, அங்கிருந்து சீன நாட்டிற்கும் சென்று திரும்பியதாகச் சொல்லப்படுகின்றது. சீனாவிலிருந்து தமிழகம் திரும்பிய தோமையார் முறையான சமயப்பணியை அப்போதுதான் தமிழகத்தில் தொடங்கினார் என்று சொல்வாரும் உண்டு. இந்த இரண்டாவது வருகையின் போதுதான் ஏராளமான பிராமணர்களையும் தமிழர்களையும் தோமையார் கிறித்துவ சமயத்துக்கு மாற்றினார் என்று சொல்லப்படுகின்றது.

## முசிறியில் தோமையார்

தோமையார், முசிறித்துறைமுகத்துக்கு அருகிலிருந்த ஒரு சிறு நிலத்திட்டான மலையங்கரை என்ற தீவில்தான் முதலில் இறங்கி, ஓரிருநாள் தங்கியிருந்தார் என்பதால், தோமையாரின் வழிவந்த கேரளக் கிறித்துவர்கள், தங்களை மலங்கரா கிறித்துவர்கள் என்று கூறிக் கொள்வதில் பெருமைப்படுகின்றனர். தனது முதல் சமயப் பணியை, ஆயரூர் (Ayroor) என்ற ஆயர்

குலமக்கள் பெருமளவில் வாழ்ந்திருந்த ஊரில் தொடங்கிய தாகக் கருதலாம். இங்கு வேளிர் (Vel) குல மன்னர்கள் ஆண்டு வந்ததாகவும், வேளிர் நாடு என்பதே வேநாடு (Venad) என்று பிற்காலத்தில் திரிந்ததாகவும் ஆய்வாளர்கள் கூறுகின்றனர். பாலூர் (Plaur) என்ற ஊரும் தோமையாரின் முதல் பணியிட மாகக் கருதப்படுகிறது. தற்போது இவ்வூர் சாவுகட் (Chowghat) என்று அழைக்கப்படுகின்றது. இவ்வூரிலிருந்த அனைத்து நம்பூதிரி பிராமணர்களும், தோமையாரால் கிறித்துவ சமயத் துக்கு மாற்றப்பட்டதாகச் சொல்லப்படும் செய்திகள், உண்மையே என்பதற்கான பல சான்றுகள் உள்ளன. இன்றும் கூட, தொடக்க கால நம்பூதிரிக் கிறித்துவர்களுக்கும், நம்பூதிரிகளுக்கும் இடையே இருந்து வரும் வாழ்க்கைமுறை ஒற்றுமை (Brahmanical way of life) இவ்விரு மரபுகளுக்குமிடையேயுள்ள தொடர்பை வெளிப்படுத்தும்.

## தோமையாரும் பிராமணர்களும்

பிராமணர்களின் சமயமாற்றம் தொடர்பாகச் சொல்லப் பட்டு வரும் கதையாவது:[196] "ஒரு நாள் தோமையார் குளம் ஒன்றின் வழியே நடந்து சென்று கொண்டிருந்தபோது, சில பிராமணர்கள் நீராடிக் கொண்டிருந்தனர். வேதமந்திரங்களை முணுமுணுத்துக் கொண்டு, நீரை அள்ளி வானத்தை நோக்கி வீசிக் கொண்டிருந்தனர். தோமையார் இச்செயலைக் கண்டு வியந்து அருகிலிருந்தவர்களிடம் விளக்கம் கேட்டார். அவர்கள், வானத்தில் வீசப்படும் நீர், இறைவனுக்கு அளிக்கப்படும் திருக்கொடையெனவும், இறைவன் அந்நீரை ஏற்றுக் கொள் வார் எனவும் பதிலிறுத்தனர். தோமையார் பிராமணர்களை நோக்கி, "பிராமணர்களே! நீங்கள் கொடுக்கும் நீர்ப்பலியை இறைவன் ஏற்றுக் கொள்ளவில்லை. அப்படி அவர் ஏற்றுக் கொண்டால், நீங்கள் அள்ளி வீசும் நீர் மீண்டும் குளத்தில் விழாது" என்றார்.

குளத்திலிருந்த அனைவரின் கவனமும் தோமையார்பால் திரும்பியது. யார் இந்த மேற்கத்திய துறவியென ஒருவருக் கொருவர் வினவிக் கொண்டனர். அவர்களில் ஒரு பிராமணர், "தெளிக்கப்படும் நீர்த்துளி எவ்வாறு கீழே விழாமல் இருக்கும்?

---

196. Christianity in India and Pakistan, pp. 14-15.

உன்னால், அந்நீர்த்துளிகளை காற்றிலேயே (air) நிறுத்த வியலுமோ?" என்று கேட்டார். தோமையார், தனது தலைவனும் இறைவனுமான இயேசுவை எண்ணிக் கொண்டு இரு கைகளாலும் நீரை அள்ளி விண்ணில் இறைத்தார். அந்நீர்த் துளிகள் யாவும் கீழே இறங்காமல் அப்படியே நின்றன. காலைக் கதிரவனின் ஒளி, அந்நீர்த்துளிகளில் ஊடுறுவி, ஒவ்வொரு நீர்த் துளியையும் ஒரு வைரக்கல் போல் ஒளிரச் செய்தது.

### தோமையாரின் சமயப் பணி

இந்நிகழ்வுக்குப் பிறகு, பெரும்பாலான பிராமணர்கள் கிறித்துவத்தை ஏற்றுக் கொண்டனர் என்றும் சிலர் ஏற்றுக் கொள்ளவில்லையென்றும் செவிவழிச் செய்திகள் கூறுகின்றன. ஏற்றுக் கொள்ளாதவர்கள் பாலுரைவிட்டு அகன்றதுடன், அவ்வூருக்குச் சாபம் (ஊறுசொல்) கொடுத்தும் சென்றனர். பாலூர் அதுமுதல் சாபக்காடு என்று வழங்கப்பட்டது. சாபக்காடு (Sapakkad) என்ற பெயரே சாவுக்கட் (Chowghat) எனத் திரிந்ததாகவும் கூறுவர். கிறித்துவத்தை ஏற்ற நம்பூதிரிக் குடும்பங்களில் நான்கு பிற்காலத்தில் பல்கிப்பெருகியது. அவை இன்றும் பாலூர் பகுதியில் அடையாளங் காணப்பட்டு வருகின்றன. கள்ளி (Kalli), களியங்காவு (Kaliankavu), சங்கரபுரி (Sankarapuri), பகலோ மட்டம் (Pakalomattam) ஆகிய நான்கு இனங்களும் தோமையர் வழிக் கிறித்துவர்கள் என்றும், உயர்ந்த சாதிக் கிறித்துவர்கள் என்றும், போர்த்துக்கீசியர்கள் கேரளம் வரும் வரையில் மதிப்பு பெற்றிருந்தனர், என்றும் சொல்லப் படுகின்றது. கேரளக் கிறித்துவர்களில் ஆயர் (Bishop) பதவிக்கு, பகலோ மட்டம் மரபிலிருந்தே ஒருவர் தேர்வு செய்யப்பட்டார். (விளக்கம் உள்ளே).

தோமையார் சேரநாடு முழுதும் சமயப் பணியாற்றி ஏராளமானவர்களைக் கிறித்துவ மறைக்குத் திருப்பினார். தோமையார் ஏழு இடங்களில் திருச்சபைகளை நிறுவி அங்கு தேவாலயங்களையும் கட்டினார். கிராங்கனூர், கொல்லம், பரூர், நீராணம், காயில், பாலூர் என்னுமிடங்கள், இன்றும் அவரது புகழை விளக்கிக் கொண்டுள்ளன. தற்காலத்துப் பாலூர் (Palur) எனப்படும் ஊர், தொன்மைக் காலத்தில் பழுவூர் அல்லது பழூர் என்றே அழைக்கப்பட்டது. அப்பழூவூரிலிருந்த வேளிர் மரபினர், இடைக்காலச் சோழர்களிடம் திருமண உறவு

கொண்டதாக வரலாறு கூறுகின்றது. இராச இராசன் காலத்து பழுவேட்டரையர் என்பார் இப்பழூர்ப் பகுதியினின்றும் சோழ நாட்டில் குடியேறியதாகக் கருதுகின்றனர். தோமையார் கட்டிய தாகக் கருதப்படும் ஏழு தேவாலயங்களும் இன்று பாழடைந்து விட்டன; என்றாலும் அதன் சுவடுகள் இன்றும் காணப்படு கின்றன. சேர மன்னர் குடும்பத்தையும் கிறித்துவ சமயத்துக்கு தோமையார் மாற்றினார் என்றும், அம்மன்னர் குடும்பத்தில் ஒருவரையே சமயத் தலைவராக (Bishop)த் திரு நிலைப்படுத் தினார் என்றும் செவிவழிச் செய்திகள் கூறுகின்றன.[197]

இச்சூழலில், தோமையார் முற்றிலுமாகத் தமிழில் பேசவும் எழுதவும் தேர்ச்சி பெற்றிருந்தார் எனவும், இதனால் எந்த வொரு மாந்தனிடமும் நேரிடையாகப் பேச, சமய விளக்கங்கள் அளிக்க அவரால் முடிந்தது என்றும் கூறப்படுவது உண்மையே எனலாம். சேரநாட்டை விடுத்து அடுத்து பாண்டிய சோழ நாடு களில் தமது சமயப் பணிகளை மேற்கொண்டார். ஏராளமான மக்கள் தோமையாரைக் காணவும், அவர் கூறுவதைக் கேட் கவும், தோமையார் செல்லுமிடங்களில் எல்லாம் திரண்டனர். தமிழகத்தில் செல்வர்களாகவும் மன்னர்களாகவுமிருந்த பலர், தோமையாரை வெளிநாட்டுத் துறவியென்றும், இறைவனின் தூதர் என்றும் ஏற்றுக் கொண்டு, அவருக்குரிய சிறப்புகளை அளித்தனர் என்று செவி வழிச் செய்திகள் கூறுகின்றன. தமிழ் நாட்டின் பல பகுதிகளில் சமயத்தலைவர்களை (Bishops) உரு வாக்கினார் என்றும் சொல்லப்படுகின்றது. பால் (Paul) என்பாரை மயிலை ஆயராகப் பணித்தார் என்றும் ஒரு செய்தி யுண்டு. சேரநாட்டை விடுத்த தமிழகத்தில் 17750 பேருக்குத் திரு முழுக்கு அளித்து முடித்தார் எனவும் ஒரு செய்தி கூறுகின்றது.

### பகைவர்களான பிராமணர்கள்

தோமையார் காலத்தில் (கி.பி. முதல் நூற்றாண்டு கேரளத்தில் நம்பூதிரிகள் என்ற பிராணமர் வகுப்பார் இருந்தனரா என்பதில் கருத்து வேறுபாடுகள் உள்ளன. சில ஆய்வாளர்கள், கி.பி. முதல் நூற்றாண்டில் பிராமணர்கள் என்ற ஆரிய வகுப்பார் தமிழகத்தில் இருந்தனர் என்றும், நம்பூதிரி என்ற மரபினர்

197. Ibid, p. 18.

இன்றைய மும்பைப் பகுதியிலிருந்து, மேற்குக் கடற்கரை வழியே கேரளம் வந்தனர் என்றும் கருதுகின்றனர். நம்பூதிரிகளின் வருகை கி.பி. 400 ஆண்டுகட்குப் பிறகே நிகழ்வுற்றது என்பது பல ஆய்வாளர்களின் கருத்தாகும். நாம் ஏற்கனவே குறிப் பிட்டிருந்தபடி, கி.பி. முதல் நூற்றாண்டில் நம்பூதிரிகள் மிகக் குறைந்த எண்ணிக்கையிலும், கங்கைவெளி ஆரிய பிராமணர் அவர்களைக் காட்டிலும் பெரும் எண்ணிக்கையிலும் இருந் திருக்க வேண்டும். ஆரியர்களின் தமிழக வருகை பற்றித் தெளி வான வரலாறு இல்லாவிடினும், புத்த சமண எதிர்ப்புகள் மற்றும் மௌரியப் பேரரசர்கள் காட்டிய பிராமணர் எதிர்ப்பு ஆகிய கரணியங்களால், தங்கள் உயிருக்கு அஞ்சியே பிராமணர்கள் தமிழகம் வந்தனர் என்பது தெளிவு. தோமையார் காலத்து பிராமணர்கள் இவர்களே என்பதும் தெளிவு. மேலும் இப் பிராமணர்களின் செல்வாக்கு உயர்ந்த நிலையில் அக்காலத்தில் உணரப்படவில்லை. தமிழ்நாட்டு வள்ளுவ மரபைச் சார்ந்த பார்ப்பனரே, தமிழ்ச் சமயத்தின் தலைவர்களாயிருந்தனர். தமிழ்ப் பார்ப்பனர்கள், தோமையாரிடம் பகைமை பாராட்டியிருக்க வாய்ப்புகள் இல்லையெனலாம். தோமையார் காலத்திய ஆரிய பிராமணர்கள், தங்களது ஆரியதர்ம வேதத்தைத் தமிழகத்தில் பரப்ப முயன்று கொண்டிருந்த காலத்தில், தோமையாரின் அதிரடியான செயல்பாடுகள், ஆரிய பிராமணரின் எண்ணங் களில் மண்ணைப் போட்டிருக்க வேண்டும். தங்களது முதல் பகைவராக தோமையாரை அவர்கள் கருதியிருக்க வேண்டும்.

இப்பகைமையை வெளிக்காட்டும் மற்றொரு செவிவழிக் கதையாவது:[198] மயிலைப் பகுதியில் விதவைப் பெண் ணொருத்தி கள்ள உறவின் மூலம் ஒரு குழந்தையைப் பெற்றாள். தன் கள்ளக் காதலை ஊரார் அறியுமுன், அக்குழந்தையைக் கொன்று போட்டாள். இதுபற்றி செய்தியறிந்த ஆட்சிமன்ற நடுவர்கள், அப்பெண்ணை அழைத்து ஒறுக்க எண்ணினர். இதனைக் கேள்வியுற்ற பிராமணர்கள், இந்நல்வாய்ப்பை நழுவ விடாது, அவ்விதவைப் பெண்ணை அணுகி, தன்து கள்ளக் காதலன் தோமையாரே என நடுவர்களிடம் கூறுமாறு கெஞ்சிக் கேட்டுக் கொண்டனர். கையூட்டுப் பெற்றுக் கொண்ட அப்பெண்ணும், தனது தகாத ஒழுக்கத்துக்குக் கரணியமானவர்

198. Ibid, 17-18.

தோமையாரே எனக் கைகாட்டினாள். மேலை நாட்டிலிருந்து வந்த துறவியால், தான் கற்பழிக்கப்பட்டு, இறந்து போன குழந்தைக்குத் தாயானதாக நடுவர்களிடம் கூறினாள். தோமை யாரைக் கைதுசெய்த நடுவர்கள், தோமையாரிடம் விளக்கம் கேட்டனர். தோமையார் இறந்து போன குழந்தையை உயிர்ப் பித்து, அக்குழந்தையின் தந்தை யாரென அக்குழந்தையிடமே கேட்க, பேசும் அகவை பெற்றிராத அக் குழந்தை, பிராமணன் ஒருவனின் பெயரைக் கூறியதாக அச்செய்தி கூறுகிறது.

இவ்வாறு பிராமணர்களின் எதிர்ப்பைப் பெற்றிருந்த தோமையாரின் உயிருக்கு அச்சுறுத்தல் இருந்து கொண்டே யிருந்தது.

## தோமையாரின் இறப்பு[199]

கி.பி. 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த மலியக்கல் தாமஸ் (Maliakkal Thomas) என்பார், மலையாள மொழியில் இயற்றிய பாடல் தொகுப்பு ஒன்று தோமையாரின் இறப்பைப் பற்றிய செய்தியை விளக்குகிறது. இத்தொகுப்பில் தோமை யாரின் தமிழகப் பணிகள் பற்றியும், திருமயிலையில் அவர்தம் இறப்பைப் பற்றியும் விளக்குகிறார். மலியக்கல் தாமஸ், தம்மை தோமையார் கிறித்துவர்களின் 48ஆவது தலைமுறை என்று அப்பாடலில் கூறிக்கொள்கிறார்.

கி.பி. 72ஆம் ஆண்டு சூலைத்திங்கள் மூன்றாம் நாள் (அக்கால நாட்காட்டிக்குச் சரியான ஆங்கில நாட்காட்டியை ஆசிரியர் குறிப்பிடுகின்றார்) காலை வேளையில் தோமையார் மயிலை பகுதியொன்றில் நடந்து சென்று கொண்டிருந்தார். அவ்விடத்தில் பிராமணர்களின் கோயில் ஒன்று இருந்தது. கோயிலினுள் பிராமணர்கள் மந்திரமோதிக் கொண்டிருந் தனர். தோமையார் வீதி வழியே வந்து கொண்டிருப்பதை அறிந்த பிராமணர்கள் கோயிலைவிட்டு வெளியே வந்தனர். ஏற்கனவே யிருந்த பகைமையைக் கருத்தில் கொண்டு, எந்த மாந்தனும் இக்கோயில் தெய்வத்தை வந்து வணங்காமல் இவ்வீதி வழியே செல்லக் கூடாது என்றும், தோமையாரை நோக்கித் தமது தெய்வத்தை வணங்குமாறும் வற்புறுத்தினர். வணங்கியபின்பு நெய்சோற்றை (பிரசாதம்)த் தருவதாகவும் கூறினர்.

---

199. Ibid, p. 18.

தோமையார், ஒரு கவளம் சோற்றிற்காகப் பொய்யான தெய்வத்தைத் தாம் வழிபடப் போவதில்லையென்றும், தமது உயிரும் உள்ளமும் உண்மையான இறைவன் இயேசுவுக்கு மட்டுமே உரியது என்றும் மறுப்புரை கூறினார். இருப்பினும் அவர்கள் தொடர்ந்து வற்புறுத்தவே, தோமையார் அக் கோயிலுக்குள் நுழைந்த வேளை, ஒருருவம் அக்கோயிலை விட்டு பெருமுழக்கமிட்டுக் கொண்டு வெளியே ஓடியதாகவும், கோவில் தீப்பற்றி எரிந்து சாம்பலாயிற்று என்றும் மலியக்கல் தமது பாடலில் தெரிவிக்கின்றார். இதனால் சினமுற்ற பிராமணர்கள், தோமையார் மீது காட்டு விலங்குகளைப் போல் பாய்ந்தனர். அவர்களில் ஒருவன் நீண்ட ஈட்டி போன்ற சூல் கருவியைத் தோமையாரின் நெஞ்சில் பாய்ச்சினான். தோமையார் இக்கொடிய தாக்குதலால் நிலத்தில் சரிந்து வீழ்ந்தார். இது கண்ட பிராமணர்கள், சட்டத்தின் பிடிகளுக்கஞ்சி தப்பியோடினர்.

உயிருக்குப் போராடிக் கொண்டிருந்த தோமையார், மெல்ல எழுந்து முழந்தாளில் அமர்ந்து இறைவனை நோக்கி வேண்டினார். வானவர்கள் (Angels) இக்கொடிய செய்தியை, ஆயர் பாலுக்கும், மன்னருக்கும் தெரியப்படுத்தினர். அவ்விருவரும் வந்து பார்த்தபோது தோமையார் குருதி வெள்ளத்தில் கிடந்தார். நெஞ்சில் பாய்ந்திருந்த ஈட்டியை ஆயர் பால் உருவி எடுத்தார். தோமையாரை மருத்துவரிடம் கொண்டு செல்ல முயன்றபோது, தோமையார் அவர்களைத் தடுத்து எந்த மருத்துவமும் தமக்குத் தேவையில்லை யென்றும், தமது வாழ்வின் மிக உயர்ந்த மகிழ்வான நாள் வந்துவிட்டதென்றும் கூறினார். தம்மைச் சூழ்ந்து நின்று அழுது கொண்டிருந்த தம் மக்களுக்கு ஆறுதல் கூறினார். மூன்று நாழிகைகள்[200] உயிரோடிருந்து, கதிரவன் மறையுமுன்னதாக, தோமையார் இவ்வுலக வாழ்வை நீத்தார். தோமையாரின் உடல் மயிலையிலிருந்த தேவாலயத்திற்கருகே நல்லடக்கம் செய்யப்பட்டது. அந்நாள் முதற் கொண்டு, உலகக் கிறித்துவர்களுக்கு அவ்விடம் திருப் பயணத்திற்கேற்ற தூய ஆலயமாக மாறியது.

மேற்கண்ட கதையில் எந்தளவுக்கு வரலாற்று உண்மைகள் உள்ளன என்பதை அறிய இயலவில்லை. இருப்பினும், திரு

200. A Nazhikai is a time division of Tamil and Malayalam, equivalent to 24 minutes.

மயிலையில் தோமையார், பிராமணர்களால் கொலை செய்யப் பட்டார் என்ற மையக்கருத்து, செவிவழிச் செய்திகளாக 20 நூற்றாண்டுகளைக் கடந்தும் நின்று நிலைத்திருக்கின்றது.[201] கேரளத்தின் பல்வேறு இசை வடிவிலான நாடகங்கள், தெருக் கூத்துப் பாடல்கள், தெம்மாங்குப் பாடல்கள் என, தோமை யாரின் வாழ்க்கையை விளக்கும் பாடல்கள் இன்றும் உயிரோட்டமாக உள்ளன. கேரளத்திலுள்ள மலையாட்டூர் என்னுமிடத்தில் தோமையார் தனிமையிலிருந்து வேண்டுதல் செய்த இடமாகக் கருதப்பட்டு, அங்கு இன்று பேராலயம் ஒன்று காட்சியளிக்கின்றது. இங்கு ஈஸ்டர் (உயிர்ப்பு ஞாயிற்றுக்கு) விழாவுக்கு அடுத்த ஞாயிற்றுக் கிழமை பெருவிழா எடுக்கப் பட்டு வருகின்றது. கேரளத்திலுள்ள ஒவ்வொரு கிறித்துவனின் நாடி நரம்புகளிலும் தோமையார் என்ற உயிர் இன்றும் ஊசலாடிக் கொண்டிருப்பதைக் காணலாம். தொடக்க காலக் கிறித்துவம் பற்றிய உள் நாட்டு வெளிநாட்டு ஆவணங்கள், தோமையாரின் இந்தியப் பணிகள் குறித்து பெருவாரியான செய்திகளைத் தந்துள்ளன.

## தோமையாரின் மறைவுக்குப் பிறகு

கி.பி. 72ஆம் ஆண்டில் தோமையார் மறைவுற்றதாகச் சொல்லப்படுகின்றது. 20 ஆண்டுகள் சேர, சோழ, பாண்டிய நாடுகளில் மறைப்பணியாற்றிய தோமையார், சோழ, பாண்டிய நாடுகளில் எந்தெந்த இடங்களில் பணியாற்றினார் என்பதற் கானச் சான்றுகள் இல்லை. மயிலையைத் தலைமையிடமாகக்

---

201. Christianity in India and Pakistan, p. 28.

Maro Polo also mentions an interesting local tradition that St. Thomas was accidently killed by a hunter who was shooting peacocks in a wood where the saint was meditating Because of this accidental offence, "none of the poor man's tribe could ever enter the place where the Saint lay buried. nor could twenty men force them in nor ten hold them on account of that sacred body.

The story was probably invented by local Brahmins who did not wish to be known as the descendants of the murderers of a man held in great esteem throughout the land.

கொண்டு பணியாற்றிய செய்திகளின்படி, மயிலையைச் சுற்றி யுள்ள பகுதிகளில் கிறித்துவர்களின் எண்ணிக்கை பரவலாக உயர்ந்திருக்க வேண்டும். அக்காலத்தியச் செய்திகளின்படி, திருவஞ்சிக்குளம் - கரூர் - உறையூர், தொண்டி, மதுரை - கொற்கை - பூம்புகார் - காஞ்சி - மயிலை ஆகிய நகரங்களை, மிகவும் தரம் உயர்ந்த சாலைகள் இணைத்திருந்தன என அறிய லாம். வஞ்சிக்கும் (கொடுங்கல்லூர்) தொண்டிக்கும் நேரடியான சாலைப் போக்குவரத்து நடைமுறையில் இருந்தது. வஞ்சியில் இறக்கப்பட்ட வணிகப் பொருட்கள், தரைவழியாகத் தொண் டிக்கு எடுத்துச் செல்லப்பட்டன. இப்பெருவழிச் சாலை, கரூர்- உறையூர் என்ற இரு பெரு நகரங்களையும் இணைத் திருந்தது. எனவே, தோமையாரின் சுற்றுப் பயணங்கள், தமிழகத்தின் பெருவழிச் சாலைகள் வழியே நடைபெற்றன எனலாம்.[202]

தோமையாரின் பயணங்கள் தொட்ட பெருநகரங்களான கரூர், உறையூர், மதுரை, புகார், தொண்டி, காஞ்சி போன்ற பகுதிகளில் பெருமளவிலான கிறித்துவர்கள் வாழ்ந்திருக்க வேண்டும். நாகைக்கருகிலுள்ள மணிகிராமம் என்னும் ஊர் இன்றும் அதே பெயரால் அழைக்கப்படுகிறது. அக்கிராமத்தில் பெருமளவிலான கிறித்துவர்கள் வாழ்ந்திருந்தனர் என்ற செய்தி உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. (விளக்கம் உள்ளே). தோமையார் காலத்தில் தொண்டை நாடு என்ற தமிழகத்தின் வடபகுதி அறியப்பட்டதாகத் தகவல்கள் இல்லை. எனவே, மேற்குக் கரை - சேரநாடெனவும், கிழக்குக் கரை - சோழ நாடெனவும், தெற்குப் பகுதி பாண்டிய நாடெனவும் வழங்கப்பட்டன.

பாண்டிய சோழ மன்னர்கள் பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களில் காணப்பட்டாலும், தோமையார் காலத்தில் வாழ்ந்திருந்த மன்னர்கள் யாரென அறுதியிட்டுக் கூற இயல வில்லை. வரும் சேய்வழிப் பட்டியல் (வம்சாவளி என்று வட மொழியில் திரிந்தது) படி, ஒரு மன்னனின் பெயர் பல இடங்

202. Early coins of Kerala, P.L. Gupta, Curator, Pastna Museum, Trivandrum, Published by the Govt. of Kerala, 1995, Ref. taken from the Early Christianity of India, p. 29.

The Village of Iyyal is situated in the highway supposed to have existed connecting the ancient emporia of Tyndis (Thondi) and Muziris (Musiri) - P.L. Gupta.

களில் காணப்படுவதால், குறிப்பிட்ட ஒருவர் யாரெனக் கொள்ள இயலவில்லை. பாட்டன் பெயரைப் பெயரனுக்கு வைக்கும் நடைமுறையில் பல குழப்பங்கள் ஏற்படுகின்றன. இருப்பினும், உறையூரை ஆண்ட சோழன் கரிகாலனும், மதுரையை ஆண்ட பாண்டியன் பல்யாகசாலைப் பெரு வழுதியும், வஞ்சியை ஆண்ட இமயவரம்பனும் (குட்டுவனின் தந்தையல்லன்) தோமையார் காலத்து மன்னர்களாக இருந்திருக்க வாய்ப்புகள் உண்டு.

தமிழகத்தில் அக்காலத்தில் தமிழ்ச்சமயமே (சிவனியம் - மாலியம்) முதற்சமயமாயிருந்தது. எனினும் சமணமும் புத்தமும் பரவலாக அறியப்பட்டிருந்தன. பிராமண சமயம் தனது நிலையை நிறுத்திக் கொள்ள முயன்று கொண்டிருந்தது. தமிழ் மன்னர்கள் எவரும், எச்சமயத்தாரையும் பகைவராகக் கருதும் குறுகிய எண்ணங்கள் கொண்டவரல்லர். சங்க காலத்து மன்னர்கள், சமயக் காழ்ப்புணர்ச்சியுடன் நடந்து கொண் டனர் என்பதற்கு ஒரு சிறு சான்றுகூட இல்லை. மாறாக, தமிழ் மன்னர்களே மூன்று சமயங்களில் இணைந்திருந்தனர். சேர மன்னர்கள் சமணர்களாகவும், சோழர்கள் சிவநெறியாளர் களாகவும், பாண்டியர்கள் பிராமண சமயப் பற்றாளர்களாக வும் இருந்துள்ளனர்.

தோமையார் காலத்தில் சேரநாட்டில் வித்தூன்றப்பட்ட கிறித்துவம், மன்னர்களே அச்சமயத்தைத் தழுவியதாலும், பிற் காலத்துப் பிற சமயத்தைச் சார்ந்த மன்னர்கள் கிறித்துவத்துக்கு பாதுகாப்பளித்ததாலும், எந்தச் சிக்கலுமின்றி, வளர்ந்து வந்தது. தோமையார் காலத்திலேயே சேரமன்னர்களின் குடும்பத்தில், மன்னன் உட்பட பலரும் கிறித்துவத்தைத் தழுவினர் என்று சொல்லப்படுவதுபோல், சோழ பாண்டிய மன்னர்கள் கிறித்து வத்தில் சேர்ந்தது பற்றிச் செய்திகள் இல்லை. நல்ல தொடக் கத்தையும், அடித்தளத்தையும் தோமையார் சேரநாட்டில் பதிவு செய்துவிட்டார் என்பதால், தோமையாருக்குப் பிறகும் சேர நாட்டில் கிறித்துவம் வளர்ந்தது. அடுத்த 200 ஆண்டுகளில் சேர நாட்டில் குடியேறிய சிரிய நாட்டுக் கிறித்துவ வணிகர்கள், மன்னர்களின் நல்லாதரவைப் பெற்றனர். கிறித்துவ வணிகர் களையே நம்பி சேரநாட்டின் பொருளியல் கூறுகள் இருந்ததால், மன்னர்களால் கிறித்துவர்களைப் புறக்கணிக்க இயலவில்லை. மேலும் கிறித்துவர்களுக்கென தனியானதோர் போர்ப்படை

50,000 வீறர்களைக் கொண்டிருந்தது. (வீரர் என்பது வடசொல் கலந்தது. வீறம் என்பதே தமிழ்ச்சொல்லாகும்). இப்போர்ப் படை, அண்டை நாட்டுப் படையெடுப்புக் காலங்களில் மன்னருக்கு உற்ற துணையாய் இருந்தது. கிறித்துவ சமயம் அக் காலத்தில், யூத மற்றும் ஐரோப்பியப் பண்பாடுகளைக் கொண் டிருக்கவில்லை. இயேசுவை இறைவனாக ஏற்றுக் கொண்ட தமிழ் மரபுகளில் கிறித்துவம் கடைப் பிடிக்கப்பட்டது.

மாறாக, தோமையார் காலத்தில் சோழ பாண்டிய நாடு களில் கிறித்துவத்தில் இணைந்தவர்களுக்கு, அவர் மறைவுக்குப் பின் சரியான வழிகாட்டுதல்கள் இல்லாமற்போனது. தங்களுக் குள் அடிக்கடி போரிட்டுக் கொண்டிருந்த மூவேந்தர்களில், சேர மன்னர்களுக்குப் பாதுகாப்பாக ஒரு கிறித்துவப் படை இருந்தது.[203] சோழ பாண்டியர்களின் வெற்றியைத் தடுத்தது. கிறித்துவப் படையில்லாவிட்டால், சேரர்களை வெல்லுவது எளிதாக இருக்கும் என்ற எண்ணம் மற்ற மன்னர்களிடையே ஏற்பட்டது. இதன் விளைவாக, சோழ பாண்டிய நாடுகளி லிருந்த கிறித்துவர்களை சேரநாட்டின் ஒற்றர்களாக மற்றவர் கருதினர். ஆனால் சோழ பாண்டிய நாடுகளில் கிறித்துவப் படையேதும் அமைவுற்றிருக்கவில்லை. இவ்வாறான அரசியல் தோல்விகளால், சோழ பாண்டிய மன்னர்கள், கிறித்துவர்களை வெறுத்தனர். இதற்கு அடிப்படையான கரணியம் அரசியலே யன்றி சமயமன்று என்பதை நோக்க வேண்டும்.[204]

மேலும், நாட்டின் வணிகம் தழுவிய பொருளியல் ஏற்றத் தாழ்வுகள் சோழ பாண்டிய மன்னர்களை இடர்ப்படுத்தின. சங்கம் மருவிய காலங்களில், சேரநாட்டின் பொருளியல் வளம், மற்ற நாடுகளைவிட உயர்ந்திருந்தது. இதற்குக் கிறித்துவர்கள்

---

203. The Early Christianity in India and Pakistan, p. 29.
The needs of the times also imbuked warlike qualities in the Malabar Christians and they became well known as a military class able to give solid support to the Perumal (Chera King) in his campaigns against his enemies.

204. Hence the probabilities are that political motives rather than religious persecution were responsible for the disappearence of the Christian communities in the Chola and Pandya Kingdoms. - The Early Christianity in India and Pakistan. p. 29.

கரணியமாய் இருந்தனர். சோழ பாண்டிய நாட்டுக் கிறித்து வர்கள் வணிகத் தொழிலில் ஈடுபடவில்லை என்பதாலும், அவர் களால் அரசுக்கு எந்த வருவாயும் கிடைக்கவில்லை யென்ப தாலும், கிறித்துவ மக்களை வெறுத்தனர். தங்கள் நாட்டின் அரசியல் நடப்புகளை கிறித்துவர்கள் சேர நாட்டுக்கு அடிக்கடி தெரிவித்து வருகின்றனர் என்ற ஐயமும் மற்ற மன்னர்களிடையே இருந்தது.

இச்சூழலில், ஆயன் இல்லாத மந்தைகளாயிருந்த கிறித்துவ மக்களுக்கு, புத்த, சமண, பிராமண சமயங்களின் நெருக்கடிகள் தொடர்ந்து வந்தன. மன்னர்களின் அரவணைப்புகளில்லாத கிறித்துவ சமயம், தொடர்ந்து அச்சுறுத்தப்பட்டு வந்தது. இவ்வாறான பல்வேறு கரணியங்களால் கிறித்துவர்கள் தங்கள் சமயத்தில் தொடர்ந்து நிலைக்க வாய்ப்பில்லாமற் போனது. அச்சமுற்ற பலர், கிறித்துவத்தைத் துறந்தனர். துறக்க மன மில்லாதவர்கள், சேரநாட்டில் குடியேறினர். இவ்வாறான பெருங் கிறித்துவக் கூட்டமொன்று, மயிலையிலிருந்து சேர நாட்டுக்குக் குடிபெயர்ந்தது.[205]



205. "Keralathil Margam Vazhiyte Avastha", A Malayalam palm leaf manuscript.

A-D 293. The Vellala converts to Christianity in Kaviri poopattanam were persecuted by their King. So, 72 families embarked on a ship and came to Korakkeni (Kollam) where there were Christians at that time. Malayalam Palm Leaf Documents.

## தூயவர் பார்த்தலோமியூ
## (St. Barthalomoew)

பார் தால்மய் (Bar Talmai) என்று அறமாயிக் மொழியில் அழைக்கப்பட்ட தால்மய் என்பாரது மகன், இயேசுவின் பன்னிரு தொண்டர்களில் ஒருவராவார். இவரது உண்மை யான பெயர் யாதெனத் தெரியவில்லை. பார் தால்மய் என்றால், தால்மய் என்பவரது மகன் என்பதே பொருளாகும். விவிலியத் திலும் இவரைப் பற்றி விரிவான விளக்கங்கள் இல்லை.[206] நத்தானியேல் (Nathanel) என்பாரும் இவரும் ஒருவரே என்பது சிலரது கூற்றாகும்.[207] சிலர் இக்கூற்றை மறுக்கின்றனர். பர்த்தலோமியூவும் பிலிப்பும் இணைத்தே பேசப்படுகின்றனர். பிலிப் என்பாரே நத்தானியேலை அழைத்துவந்ததாக விவிலியம் கூறுவதால்,[208] நத்தானியேல் என்பார் பர்த்தலோமியூவே என்பது சிலரது கூற்று எனலாம்.

தோமையாருக்குப் பிறகு பர்த்தலோமியூ இந்தியாவிற்கு வந்ததாகச் சில செய்திகள் கூறுகின்றன. கி.பி. 55ஆம் ஆண்டில் பர்த்தலோமியூ மேற்குக் கடற்கரையில் நீண்டிருந்த பகுதியான கொங்கணத்தில் (Konkan) நற்செய்தியை அறிவித்தார் என்றும், கி.பி. 62ஆம் ஆண்டில் பம்பாயிலோ (Bombay) வேறெங்கோ கொலை செய்யப்பட்டார் என்றும் சிலர் கருதுகின்றனர்.[209] கிறித்துவ சமயப் பேரறிஞர் ஜெரோம் என்ற இரோணிமுஸ் தரும் தகவல்கள், பர்த்தலோமியூ இந்தியாவுக்கு வந்தார் என் பதை விளக்குகின்றன. அலெக்சாண்டிரிய நகரத்து மெய்யியல் அறிஞர் பாந்தேனஸ் (Pantaenus) என்பார், (கி.பி. மூன்றாம்

---

206. Mt. 10:3, Mk. 3;18; Lk. 6:14; AA. 1:13.

207. Jn. 21:1.

208. Jn. 1:47.

நூற்றாண்டு) இந்தியாவுக்குச் செல்லுமாறு பணிக்கப்பட்டார் என்றும், கொங்கணக் கரையில் பல கிறித்துவர்களைச் சந்தித்தார் என்றும், அப்போது அப்பகுதி கிறித்துவர்கள், தூய மத்தேயு எழுதிய நற்செய்தியின் எபிரேய மொழியின் படி (Copy) யொன்றினைக் கொடுத்தார்கள் என்றும், ஜெரோம்[210] கூறுகிறார். பாந்தேனஸ் என்பாரின் மிகச் சிறந்த அறிவு நுட்பத்தின் கரணியமாக, டெமட்ரியூஸ் (Demetrius) என்பவரால், இந்தியாவுக்கு அனுப்பப்பட்டதாகவும், இந்தியாவின் அப்போதைய தத்துவ இயல் மற்றும் மெய்யியல் அறிஞர்களாகக் கருதப்பட்ட பிராமணர்களிடம் இவர் நற்செய்தியை (Gospel) எடுத்துரைப்பார் என்று நம்பப்பட்டதாகவும், மேலும் ஜெரோம் கூறுகிறார்.[211]

பாந்தேனஸ் கொடுத்த தகவல்களின் அடிப்படையில் ஜெரோம் கொடுத்த செய்திகள் அமைந்துள்ளன. துளு நாட்டின் தெற்குக் கனரா பகுதியில் கல்லியன்பூர் (Kallianpur) எனும் ஊர் உள்ளது. இங்கு பர்த்தலோமியூ சமயப் பணியாற்றியதாகச் சொல்லப்படுகின்றது. தெற்குக் கனராப் பகுதியிலிருந்து பம்பாய் வரையிலுள்ள நீண்ட கடற்கரைப் பகுதிகளில் பெத்தல் (Bhethel) என்ற பெயர் பரவலாக அறியப்படுகின்றது. கல்லியன்பூருக்கு அருகிலுள்ள பர்க்குரு (Barkuru) என்ற ஊர், பர் + துலமி + ஊரு (Bar + Thulami + Ooru) என்ற சொற்களின் திரிபுச் சொல்லாகக் கருதப்படுகின்றது. தெற்குக் கனராவில் மிகவும் பெருமளவிலான எண்ணிக்கையில் கிறித்துவர்கள் வாழ்ந்து வருகின்றனர். இங்குள்ள கடற்கரை நகரான சுவர்னா (Swarna) என்ற ஊரில்

---

209.1. The Two Apostles in India, Rev. Henry Heras, Trichinopoly, 1844.

2. Kerala Historical Society, C.V. Cheriyan, CMS Press, 1973.

3. The Church History of Eusebius, Book V, Chpt X.

210. Jerome: Originally Eusebius Hieronymus (342-420 A.D.) the feast day 30 Sept. Christian ascetic and scholar, he was ordained in 379 A.D. and became secretary to Pope Damasus (366-84 A.D.) He moved to Bethelehem in 386 A.D. Where he wrote many letters and treatises commentaries on the Bible and notably made the first translation of the Bible from Hebrew into Latin.

- Cambridge Encyclopedia. p. 589.

211. Early Christianity in India, M.M. Ninan, p. 66.

தான் பர்த்தலோமியூ வந்திறங்கினார் என்றும் சொல்லப்படு கின்றது. இவர் பெத்தல் என்றே அப்பகுதி மக்களால் அழைக்கப் பட்டதால்தான் பர்க்குரு என்ற ஊர் இவர் பெயரில் அறியப் பட்டுள்ளதாகச் செய்திகள் கூறுகின்றன.

பர்த்தலோமியூ இந்தியாவிற்கு வந்தது உறுதி செய்யப் படாத நிலையில், மெசபத்தோமியா, பாரசீகம், எகிப்து, ஆர்மீனியா, இலிகோனியா, பிரிஜியா போன்ற நாடுகளிலும், கருங்கடலின் கடற்கரைப் பகுதிகளிலும் சமயப் பணியாற்றிய தாக உறுதி செய்யப்பட்டுள்ளது. இந்நிலையில், பர்த்தலோமியூ இந்தியாவுக்கு வந்தது உண்மையென்றால், மிகக் குறுகிய கால அளவுகளில்தான் இங்கிருந்திருக்க வேண்டும் எனக் கருதலாம்.

மேலும் சில ஆய்வாளர்கள், தோமையாரையே தவறுத லாக பர்த்தலோமியூ என்றழைத்துவிட்டனர் என்றும் கருது கின்றனர். இது உண்மையில் ஆய்வாளர்கள் செய்த குழப்பமே என்பதும் சிலரது கருத்தாகும். மார்தோமா (Mar Thoma) என்ற பெயரே, பார்தோல்மை (Bartolmai) என்று, சிந்துப் பகுதி மக்க ளால் அழைக்கப்படுகின்றது என்றும், சிந்துப் பகுதியில் மக்கள் தோமையாரால் திருமுழுக்குப் பெற்றவர்க்ள என்றும், சிந்துப் பகுதியில் பக்கீர் (Fakir) என்ற மரபினைச் சுட்டிக்காட்டி ஆய்வாளர்கள் விளக்குகின்றனர்.[212] எனவே, பர்த்தலோமியூ இந்தியாவுக்கு வந்தார் என்ற செய்திக்கு அடிப்படைச் சான்றுகள் இல்லாததாலும், மிகப் பரந்த அளவில் பயணம் மேற் கொண் டிருந்த பர்த்தலோமியூ இந்தியாவுக்கு வந்திருக்க இயலாது என்று கருதப்படுவதாலும், ஜெரோம் போன்றவர்கள் கொடுத்த செய்திகளுக்குச் சான்றுகள் இல்லையென்றே கருதலாம்.

பாந்தேனஸ் இந்தியாவிற்கு வந்த செய்தி பற்றி, இந்தியக் கிறித்துவச் செய்திகள் எவையும் குறிப்பிடவில்லை. மேலும் பர்த்தலோமியூ இந்தியாவில் சமயப் பணியாற்றியது பற்றிய செய்திகள் மற்ற இந்தியக் கிறித்துவக் குழுக்களால் சொல்லப் படவில்லை. ஆகவே பாந்தேனஸ் இந்தியாவுக்கு வந்ததே ஐயத்திற்கிடமாக உள்ளது. மேலும், பாந்தேனஸ் அரேபியா, நடு ஆசியா போன்ற நாடுகளுக்குச் சென்றதை, இந்திய நாடாக எண்ணினர் போலும். பிளினி போன்றவர்கள் கொடுத்துள்ள

---

212. A paper presented at a conference in sind by R.A. Trotter, 1947.

இந்தியாவின் புவியியல் தொடர்பான செய்திகளைப் போல், பாந்தேனஸ் செய்திகள் கூறப்படவில்லை.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டில், தோமையார் வழிக் கிறித்துவர்கள் தமிழ்நாட்டிலும், மேற்குக் கடற்கரைப் பகுதி களிலும் பரவலாக வாழ்ந்து வந்தனர் என்று சொல்லப்படும் செய்தியைவிட இந்தியாவின் வடபகுதியிலும், வடமேற்குப் பகுதியிலும், நடுப்பகுதியிலும் கிறித்துவர்கள் வாழ்ந்திருந்த தாகவும், தமது சமயத்தைச் சார்ந்த மக்கள் இந்தியாவில் எங்கெங்கு வாழ்கின்றார்கள் என்ற செய்தி கூட அவர்களுக்குத் தெரிந்திருக்கவில்லையென்பதாகவும், கி.பி. 522 ஆண்டுகளில் இந்தியாவில் சுற்றுப்பயணம் செய்த காஸ்மாஸ் (Cosmos of Alexandria) என்ற அனைத்துலக வணிகன் கூறுகிறான்.[213] மேலும், இலங்கையிலும் (Taprobane -Ceylon) அதற்கு மேலும் தொலை விலுள்ள இடங்களில் கூட கிறித்துவர்கள் வாழ்ந்திருந்ததாக காஸ்மாஸ் கூறுகிறான். மிளகு பெருமளவில் விளைந்த மாலத் தீவிலும் கிறித்துவர்கள் இருந்தனர். கல்லியானா (Kalliyana) என்ற தற்காலத்துக் கல்யாண் என்ற மேலைப் பகுதியில் கூட

---

213. Early Christianity in India and Pakistan, p. 26.
Cosmo of Alexandria, the international Voyager says, "the whole world filled with the doctrine of Christ which is being day by day propagated and the Gospel preached over the whole earth. This I have seen with my own eyes in many places and have heard narrated by others. I, as a witness of truth related. In the island of Taprobane (Ceylon) in further India, where the Indian Sea is, there the Chruch of Christians where Clergy and faithful are to be found; Whether also further beyond, I am not aware. Such also is the case in the land Male where the pepper grows. And in the place called Kalliana there a Bishop usually ordained in Persia as well as in the isle called the isle of Dioscroris (Socorta) in the same Indian Sea.

*Socorta: இது கிரேக்கச் சொல்லாகும். மேற்குக் கரைக்கு மேற்கேயிருந்த ஒரு தீவு. கடற்கரைக்கு சில காதங்கள் உள்ளே இத்தீவு இருந்திருக்க வேண்டும். செக்கரைத் தீவு (சிவந்த மண்ணைக் கொண்டிருந்த தீவு) என்ற தமிழ்ச்சொல்லே. சொகார்த்தா என்று கிரேக்கத்தில் திரிந்துள்ளது. தோமையார் முசிறிக்கு வரு முன்னர் சின்னாட்கள் இங்கே தங்கி ஓய்வெடுத்துக் கொண்டார். இத்தீவு ஏடன்துறைமுகத்துக்கு அருகில் இருந்ததாகவும் கூறப் படுகின்றது.

கிறித்துவர்கள் பெருமளவில் வாழ்ந்திருந்தனர். அரபிக் கடலில் தோமையார் ஓய்வெடுத்த தீவான "சுகாதாரத் தீவு" (Socorta)* என்ற நிலத்திட்டுப் பகுதியிலும் கிறித்துவம் தழைத்திருந்தது.

கி.பி.1498ஆம் ஆண்டில் இந்தியாவுக்கு வந்த வாஸ்கோடகாமா காலத்தில், இந்தியாவில் இரண்டு இலக்கத்திற்கும் மேலான (Above 2,00,000) கிறித்துவர்கள் இருந்தார்கள் என்ற செய்தி அறியக் கிடக்கின்றது.[214] இந்த எண்ணிக்கை 1000 ஆண்டுகளில் கிறித்துவத்துக்கு எதிராகத் தொடுக்கப்பட்ட இடையூறுகளையும் விஞ்சி நின்ற தொகையாகும். கி.பி. 6-10 நூற்றாண்டுகளில் கிறித்துவத்திலிருந்து பல்லாயிரம் பேர் விடுவிக்கப்பட்ட நிலையில், கி.பி. 300 ஆண்டுகளில் இந்தியக் கிறித்துவர்களின் எண்ணிக்கையும் ஏறக்குறைய இதே அளவில் இருந்திருக்க வேண்டும் எனலாம். இது தோமையாரின் சமயப் பணிகளுக்குக் கட்டியங்கூறும் எண்ணிக்கையே என்பதில் மாற்றுக் கருத்து இருக்க இயலாது.

இலாசர் என்பானை இயேசு உயிர்ப்பித்த போது, தோமையார் சொன்ன வரிகள், இயேசுவுக்காக இறந்துபடுதலே சிறந்தது[215] உயர்ந்தது என்பதை, மயிலையில் மெய்ப்பித்துக் காட்டினார். இயேசு ஒருமுறை தனது இறைத்தன்மையை தோமையாரிடம் கூறியதாக விவிலியம் விளக்குகின்றது. "நானே வழியும் உண்மையும் உயிருமாய் இருக்கிறேன். என்னை விடுத்து என் தந்தையிடம் ஒருவரும் செல்ல இயலாது" என்று தோமையாரைப் பார்த்து கூறுகிறார்.[216] இயேசுவின் வழியையே உண்மையென எண்ணி அவருக்காகவே உயிர்துறந்த தோமையார், உலக கிறித்துவ வரலாற்றில், தமக்கு ஒப்பாருமிக்காருமில்லாத இடத்திலுள்ளார் என்பதில் ஐயமில்லை.



---

214. Catholic Community in India, Ka.na. Subramaniyam, Macmillan, Chennai, 1970. p. 13 ff.
In 1498, Vasco da Gama arrived in Calicut; it was his first visit to India. He was met by local Christians who told him that there were over 200, 000 Christians in that region, when they were queotioned about their faith, all they could say, was that they bore the name, Christians of St. Thomas. - Ka.na. Subramaniyam.

215. Jn. 11:16.

216. Jn. 14:5.

## சேரநாட்டுச் சிரியன் திருச்சபை

தோமையாரின் சமயப் பணிகளால் திருமுழுக்குப் பெற்ற கிறித்துவர்கள், தோமா வழிகிறித்துவர்கள் என்றும், மேலை நாடான சிரிய நாட்டினின்று குடிபெயர்ந்து சேரநாட்டில் வாழத் தொடங்கிய கிறித்துவர்களை சிரியன் கிறித்துவர்கள் என்றும் பொதுவாக அழைக்கப்படுகின்றனர். தோமையாரின் கிறித்துவர்கள் தமிழர்கள். சிரியக் கிறித்துவர்கள் மேலை நாட்டவர். இவ்விரு கிறித்துவர்களும் இணைந்தே செயல்பட்டாலும், சிற்சில அமைவுகளில் வேறுபாடுகளைக் கொண்டுள்ளன. தோமா வழிக் கிறித்துவர்கள், மலங்கரா கத்தோலிக்கத் திருச்சபையினர் (Malankara Catholic Church) என்றும், சிரியன் வழிக்கிறித்துவர்கள், சிரியன் மலபார் திருச்சபையினர் (Syro-Malabar Church) என்றும் தற்காலத்தில் அழைக்கப்படுகின்றனர். இவர்களன்றியும், ஐரோப்பியர்களின் வருகையில் ஏற்பட்ட, புதிய அணுகுமுறைகளைக் கொண்ட ஐரோப்பிய கிறித்துவ (Roman Catholic)த் திருச்சபையும், பிற்காலத்தில் தோன்றிய சீர்திருத்தத் திருச்சபைகளும் (Protestant Churches) இன்று கேரளத்தில் உள்ளன. தமிழ்நாட்டில் முதலில் சொல்லப்பட்ட இரு திருச்சபைகளும் இல்லை.

சிரியன் கிறித்துவத் திருச்சபையினர் இன்று பரவலாகக் கேரளத்தில் அறியப்பட்டுள்ளனர். இவர்களது தலைமையிடம் கேரளத்தில் முதலில் அங்க மலையில் (Angamaly) தான் தொடங்கப் பெற்றது. வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட பாபிலோனிய - சுமேரிய நாகரிகத்தோடு தொடர்பு கொண்ட சிரிய நாடு, அக்காலத்தில் அசிரியா (Assyria) என்று அழைக்கப்பட்டது. நடுத்தரைக் கடலின் கிழக்குக் கரையில் அமைந்திருந்த அசிரிய நாடு, பிற்காலத்தில் ஆசியா மைனர் என்றும் அழைக்கப்பட்டது.

அசூர் (Ashur) என்ற நகரத்தின் சிறப்புக் கருதியும், அந்நகரமே அந்நாட்டின் தலைநகராயிருந்தமையாலும், நகரின் பெயரால் நாடும் அசிரியர் என அழைக்கப்பட்டது. அசிரியர்கள் யார்? அவர்களின் முன்னோர் யார்? என்ற கேள்விகளுக்கு ஐரோப்பிய ஆய்வு முறைகளால் விடையளிக்க இயலவில்லை. அசிரியர்களைப் போன்றே, பாபிலோனியர்கள் மற்றும் சுமேரியர்கள் பற்றிய வரலாறுகளும் தெளிவாக்கப்படவில்லை. தமிழ் வரலாறு கண்ணோட்டத்தில், இம்மூன்று இனத்தாரின் வரலாறும் விடுவிக்கப்பட்டுள்ளது. பாபிலோன் நாட்டில் கி.மு. 10000 ஆண்டுகட்கு முன்பு குடியேறியவர்கள் குமரிக் கண்டத்துத் தமிழர்களே என்பதையும் அவர்களின் தலைவனாக நோவா என்ற தமிழன் இருந்ததையும், தமிழின, தமிழ் மொழி, விவிலியச் செய்திகளின் வாயிலாக விடுவிக்கலாம் கி.மு. 5000 ஆண்டுகளில் யூப்ரடீஸ் பகுதியில் குடியேறியவர்கள் சிந்துவெளித் தமிழர்களே என்பதற்கான பல சான்றுகள் உள்ளன. அசிரியர்களும் சிந்துவெளியினின்று புறப்பட்டுச் சென்ற ஒரு தமிழ்க் குழுவினரே என்பதை, அசிரிய மொழிக்கும் சுமேரிய மொழிக்கும் உள்ள தொடர்பால் அறியலாம். இவ்வினத்தாருக்குப் பிறகு கடைசியில் குடியேறியவர்களே யூத இனத்தாராவர். இவர்களும் சிந்துவெளித் தமிழர்களே என பலகாலும் நிறுவ இயலும்.[217] (விளக்கம் ஆசிரியரின் எபிரேயத்தின் தாய்மொழி தமிழே என்ற நூலைக் காண்க)

எனவே, அசீரியர்கள் தமிழ் மரபில் வந்தவர்களே என்ற வரலாற்றுச் செய்தியின் அடிப்படையில் நோக்கும் போது, பல வியத்தகு உண்மைகள் வெளிவருகின்றன. கி.மு. 1363ஆம் ஆண்டில் அசீரியர்கள், தங்களது அரசைத் தோற்றுவித்தனர். இந்த ஆட்சி, கி.மு. 2350ஆம் ஆண்டில் பொலிவுற்றிருந்த சுமேரியர்களின் நாகரிகத்தின் தொடர்ச்சியே எனலாம்.[218] பாபிலோனிய மொழியும் (Akkadian) சுமேரிய மொழியும், அசீரிய மொழியும் ஒன்றுக்கொன்று தொடர்புடையன. இன்று இம்மொழிகள் அனைத்தையும் செமிட்டிக் (Semitic) என்ற மொழிக் குடும்பத்தில் இணைத்துள்ளனர். அசீரிய நாட்டிற்குத் தெற்கே அமைவுற்றிருந்த ஒரு சிறிய நாடுதான் ஃபோனீசியா

---

217. எபிரேயத்தின் தாய்மொழி தமிழே, ம.சோ. விக்டர்.

218. Dictionary of the Bible, p. 260.

ஆகும். **ஃபோனீசியர்களும் தமிழ் மரபினரே. இன்னும் சொல்லப் போனால், மோயீசனின் புதிய சமயத்தை ஏற்றுக் கொள்ளாத யூதர்கள் என்றும் கூறலாம்.** ஃபோனீசியர்கள், கி.மு. 2000 ஆண்டுகளிலேயே, கடலோடும் ஆற்றல் பெற்றிருந் தனர். இவர்களின் கடலறிவும் கடலோடிய ஆற்றலும், தமிழர் கைக்கொண்டிருந்தவைகளே என்பதை பல்வேறு சான்றுகளால் நிறுவ இயலும். கி.மு. 1500 ஆண்டுகளிலேயே ஃபோனீசியர் களும் அசீரியர்களும் சேர நாட்டுடன் வணிகம் செய்து வந்தனர்.[219] இவ்வணிக உறவு, அசீரியர் என்று சொல்லப்பட்ட சிரிய நாட்டவர்க்கும் சேரர்களுக்கும் இடையே வலுப்பெற்றது.

சிரிய - சேரநாட்டு வணிக உறவு பல ஆயிரம் ஆண்டு களாக நிகழ்வுற்றதின் அடிப்படையில், சேரநாட்டைத் தமது தாயகம் போன்றே சிரியர்கள் கருதினர். **ஃபோனீசியர்கள், தங்களது தாய்நாடு தமிழகமே என்பதை உணர்ந்திருந்தார் கள் என்ற செய்தியை மேலை நாட்டு ஆய்வாளர்கள் உறுதிப் படுத்துகின்றனர்.**[220] அதுபோன்றே சிரியர்களும், தாங்கள் தமிழகத்தினின்றும் குடிபெயர்ந்து சென்றவர்களே என்ற உண்மையை அறிந்திருக்க வேண்டும். **கி.பி. முதல் இரண்டு நூற்றாண்டுகளில் சிரிய நாட்டில் ஏற்பட்ட அரசியல், சமயக் குழப்பங்களால் அல்லலுற்ற சிரிய நாட்டினர், குடும்பம் குடும்பங்களாக, சேரநாட்டில் வந்து குடியேறினர் என்ற செய்தியை வரலாறு கூறுகிறது. உலகின் எந்த நாட்டுக்கும் செல்லத் துணியாத சிரிய நாட்டினர், தமிழகத்துக்கு வருகை தந்தது, தமிழ் மக்கள் மேல் அவர்களுக்கிருந்த முன்னைப் பிணைப்பே கரணியம் எனக் கருதுதல் தவறாகாது.**

பழைய சிரியா நாடு, தாரஸ் மலைகளை வடக்காகவும், யூப்ரடீஸ் ஆற்றை கிழக்காகவும், பாலத்தீனத்தைத் தெற்காகவும், நடுத்தரைக் கடலை மேற்காகவும் கொண்டிருந்த நாடாகும். தற்காலத்துச் சிரியா என்ற நாடு, மேற்கண்ட புவியியல் அமைப்புகளுக்கு மாறுபட்டது. தாரஸ் மலைத் தொடர்கள் இன்றைய துருக்கியிலும், தென்பகுதிகள் இலெபனான் நாட்டி லுமுள்ளன. கிறித்துவம் முதலில் தழைத்திருந்த சிரியநாடு,

---

219. Facts about Lebanon, Lonely Planet.

220. Ibid.

இன்று இசுலாமிய நாடாகத் திகழ்கின்றது. கி.பி. முதல் நூற்றாண்டில், சிரியநாடு உரோமப் பேரரசின் ஒரு பகுதியாக இருந்தது. அந்நாட்டின் அந்தியோக் (Abtioch) நகரில், உரோமை ஆளுநர் தங்கியிருந்து ஆட்சி செலுத்தினார். பாலத்தீனமும் இந்த ஆளுநரின் ஆட்சியின் கீழ் இருந்தது. கி.மு. 300 ஆண்டுகளில் சிரியா நாட்டை ஆண்ட செல்யூகஸ் (Seleucus) என்ற மன்னன், தனது தந்தையின் பெயரான அந்தியோகஸ், என்றும் நினைவில் நிற்கும்படியாக, இந்நகரை நிறுவினான்.[221]

இயேசுகிறித்துவின் மறைவுக்குப் பிறகு, எருசலேம் நகரில், இயேசுவின் தொண்டர்கள் அச்சுறுத்தப்பட்டனர். இச்சூழலில் இயேசுவின் கொள்கைகளில் பிடிப்புகொண்ட அவரது தொண்டர்கள், உயிருக்கும் உடைமைகளுக்கும் பாதுகாப்பாக, அந்தியோக் நகரில் குடிபெயர்ந்தனர். இவ்வாறு ஒறுத்தலுக்கு அஞ்சி ஓடிப் போனவர்களின் (fugitives) மையமாக அந்தியோக் மாறியது. எருசலேமில் ஸ்டீபன் (St. Stephen) கொலை செய்யப்பட்ட பின்பு, பலரும் அந்தியோக் நகரில் வாழத் தலைப்பட்டனர். இவ்வாறு இயற்கையாகவே, இயேசு சமயத்தாரின் மையப் பகுதியாக அந்தியோக் மாறியது. அந்தியோக் நகரத்து மக்களும் இயேசுவின் சமயத்தை ஏற்றுக் கொண்டனர். கிறித்துவர் (Christians) என்ற பெயர், இயேசுவின் தொண்டர்களுக்கு அந்தியோக் நகரில்தான் முதன் முதலில் சூட்டப் பெற்றது. புகழ்பெற்ற மறைத்தொண்டர்பால், தனது சமயப் பணியை இங்குதான் தொடங்கினார்.[222] இப்பகுதியில் வாழ்ந்திருந்த மக்கள் யூதரல்லாதாராயிருந்தனர். கிறித்துவ சமயத்தில் யூதரல்லாதாரின் எண்ணிக்கை பெருமளவிலும், யூதரின் எண்ணிக்கை குறைந்தும் காணப்பட்டதால், யூதர் - யூதரல்லாத கிறித்துவர்கள் என்ற கருத்து வேறுபாடுகளும் தோன்றின. பாலும் பர்னபாவும் இவ்வேறுபாடுகளைக் குறைத்தனர். இவ்வாறாக, அந்தியோக் நகரம், தொடக்க காலக் கிறித்துவச் சமயத்தின் தலைமையிடமாக மாறியது. ஏறக்குறைய 400 ஆண்டுகள் இந்நிலையே தொடர்ந்தது. **சிரியா நாட்டுக் கிறித்துவர்கள் தமிழகம் வந்த போது கூட உரோம் நகரத் தலைமை அறியப்படவில்லை.** கான்ஸ்டண்டைன் என்ற உரோமப் பேரரசன், கிறித்துவத்தை

221. History of Religion.

222. Ibid.

ஏற்று அதனை அரசாங்கச் சமயமாக அறிவித்த போது, உரோமை கிறித்துவத் தலைமையிடத்தில் ஒன்றாகவே கருதப்பட்டது. அப்போதும் கூட, அந்தியோக் அலெக்சாந்திரியா உரோமை ஆகிய நகரங்களின் ஆயர்கள் வலிமை பெற்றிருந்தனர். போப் என்ற தலைமை, கி.பி. 400 ஆண்டுகளுக்குப் பிறகே ஏற்றுக் கொள்ளப்பட்டது. போப்பாண்டவரின் தலைமை ஏற்கப்பட்ட நிலையிலும், அந்தியோக் நகரத்து ஆயர், தனது தலைமைப் பொறுப்பை விட்டுக் கொடுக்கவில்லை. அவர் வழியில் சிரியன் கிறித்துவத் திருச்சபை என்ற அமைப்பு தொடர்ந்து செயல் படத் தொடங்கியது. இத் திருச்சபையே, கி.பி. 300 ஆண்டுகளில் சேர நாட்டில் ஏற்படுத்தப்பட்ட சிரியன் திருச்சபையாகும்.

### *சிரிய நாட்டு மக்களின் தமிழக வருகை*

கி.பி. 350 ஆண்டுகளில், மேலை நாடுகளில் கிறித்துவ சமயம் அறியப்பட்டிருந்தது. ஒவ்வொரு பகுதியிலிருந்த சமயத் தலைவர்களும் ஆயர்களாக (Bishops)த் தங்களை அழைத்துக் கொண்டனர். ஆயர்களைத் தேர்வு செய்வதற்கான முறையான வழிமுறைகளை அப்போது வகுக்கப்படவில்லை. இந்த ஆயர்கள், ஒருவருக்கொருவர் உடன்பட்டும், வேறுபட்டும் செயல்பட்டு வந்தனர். கிறித்துவ சமயத்தில், "இயேசுவே இறைவன்; மீட்பரும் அவரே; அவரையே நம் வாழ்வில் இறைவனாக ஏற்றுக் கொள்ள வேண்டும்", என்ற அடிப்படையான நம்பிக்கை மட்டுமே இருந்தது. மற்றபடி முறையான மெய்யியல் கொள்கைகள் ஒன்றும் அறியப்படவில்லை, விளக்கப்படவுமில்லை. ஆயர் களுக்கு அனைவரையும் கட்டுப்படுத்தும் சூழல் அமையப் பெற்றிருந்தது. ஏனெனில், திருச்சபையின் செல்வம் அவர்களின் கட்டுப்பாட்டிலிருந்ததே அதற்கான முழுமுதற் கரணியம் ஆகும். ஒவ்வொரு ஆயரும் தமக்குச் சரியென்று பட்ட கொள்கைகளை அறிவித்துக் கொண்டிருந்தனர். இதனால் கொள்கையளவில் (disputes over dogmas) பெருங்குழப்பங்கள் நிலவின. இக் கொள்கை வேறுபாடுகளால் ஒவ்வொரு ஆயர் குழுவுக்கு மிடையே பகைமை தோன்றியது. இக்குழுக்களில் குறிப்பிடத் தக்கவை ஜினோஸ்டிசம்[223] (Gnotism) என்ற ஞானப் பிரிவாகும்.

223. சிலப்பதிகாரம், 12: முன்னிலைப் பரவல் 8:4. ஞானக் கொழுந்தாய் நடுக்கின்றியே நிற்பாய் - சிலப்பதிகாரம்.

இந்த ஞானப் பிரிவு, இயேசு தோன்றும் காலத்துக்கு முன்பே, கிரேக்கத்தில் சிலரால் வளர்க்கப்பட்டு, கிறித்துவத்தில் பின்னர் கலந்தது. இவர்கள் யூத சமயத்தைக் கடுமையாக எதிர்த்தனர். இயேசுவை இறைவனாக ஏற்றுக் கொண்ட இக்குழுவினர், எகோவா (Yahweh) என்னும் கடவுளை மறுத்தனர். இவர்கள் பழைய ஏற்பாட்டு நிகழ்வுகளையே எதிர்த்தனர். **மோண்டானுஸ்** (Montanus) என்பார் புதிய சிந்தனைகளைத் தோற்றுவித்தார். ஆயர்களை இவர் கடுமையாக எதிர்த்தார். **ஆயர்கள், இயேசுவின் அருளைப் பெற்றவர்கள் என்றும், இயேசுவே தமது ஆளுமையை தனது தொண்டர்கள் (Apostles) வழியாக ஆயர்களுக்கு அளித்தார் என்ற கொள்கையை மோண்டானுஸ் ஏற்றுக் கொள்ளவில்லை** (It was cited that Christ himself through his apostles transferred power to the Bishops and appointed them to guide the Church in religions affairs).

பாரசீக நாட்டில் மணி (Mani or Manes) என்பார்,[224] புதிய சிந்தனையைத் தோற்றுவித்தார். இவர் கிறித்துவத்தை பாரசீகச் சமயத்தோடு (Zoroastrianism) கலந்தார். பழைய ஏற்பாட்டை முற்றிலுமாகவும், புதிய ஏற்பாட்டின் சில பகுதிகளையும் மணி ஏற்றுக் கொள்ளவில்லை. இக்கொள்கை நசுக்கப்பட்டாலும், இடைக்காலத்தில் மீண்டும் துளிர்த்தது.

மேற்கண்ட குழுக்களின் சிந்தனைகள் இந்தியக் கிறித்துவத்திலும் காணப்பட்டன. இவ்வகையிலான கருத்துவேறுபாடுகள் சிரியா நாட்டுக் கிறித்துவர்களிடையேயும் தோன்றின. தங்கள் தங்கள் கொள்கைகளையே வலியுறுத்தி, மக்களிடம் நிலை நிறுத்திய அக்குழுக்கள் ஒன்றையொன்றும் பகைத்துக் கொண்டன. இந்நிலையில் சிரிய நாட்டு அரசியலும் கிறித்துவர்களுக்கு எதிராய் அமைந்திருந்ததால், கணை தோமா (Thoma of Canaan or Canai Thoma) என்ற வணிகரின் தலைமையின் கீழ்,

---

223. Genosis என்ற கிரேக்கச் சொல்லுக்கு அறிவு என்பதே பொருளாகும். இது சமற்கிருத மொழியில் ஞானம் எனப்பட்டது. ஞானம் மிக விரிவானது என்ற பொருளில், ஞாலம் என்ற தமிழ்ச் சொல்லே, ஞானம் எனத் திரிந்தது. ஞாலம் - ஞானம் ஜினோ (கிரேக்கம்). ஞானம் என்பது தமிழ்ச் சொல்லே என்ற கருத்தும் உண்டு. நாலம் - நானம் என்றவாறும் சொல்லப்பட்டது. எ.கா. நாயிறு - ஞாயிறு; நாண் - ஞாண்.

224. History of Religion, p. 344.

400க்கும் குறையாத 72 குடும்பங்கள், சிரியா நாட்டை விட்டு வெளியேறினர்.[225] தங்களுக்கு ஏற்கனவே அறிமுகமாகியிருந்த சேர நாட்டின் முசிறித் துறைமுகத்தை அடைந்தனர் (கி.பி. 345). தொடர்ந்து கிறித்து நெறிகளை சிரியா நாட்டில் கடைப்பிடித்து வாழ இயலவில்லை என்பதை வெளியேறியவர்கள் கூறினாலும், சிரியா நாட்டுக் கிறித்துவத் தலைவரின் கனவில் தோமையார் தோன்றி, தமது இந்திய கிறித்துவ மக்களுக்கு நல்வழி காட்ட, சமயத் தலைவர்களை அங்கு அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொண்டதாகவும் ஒரு செய்தி சொல்லப்படுகின்றது.

### வணிகர் குழுத் தலைவன் தோமா:

இன்றைய கேரளத்தில் சிரியன் கிறித்துவத் திருச்சபையின் மதிப்புக்குரியவராக, சிரியநாட்டு வணிகர் தோமா கருதப் படுகின்றார். இவரைப் பற்றிய ஏராளமான செய்திகளை இத் திருச்சபை கொண்டுள்ளது. **ஏடன் தொடங்கி காண்டன் வரை யிலான அக்காலத்து வணிகர்கள் அனைவரும் தோமாவுக்கு அறிமுகமானவர்களே.** அக்காலத்து வணிகர்களில் முதன்மை யானவராகப் போற்றப்படும் தோமா, இயற்கையிலேயே அறிவுடையோராய்த் திகழ்ந்தார். கடல் வணிகத்தில் தன்னிக ரற்று விளங்கிய தோமாவின் சேரநாட்டு வருகை, அந்நாட்டின் செல்வவளத்தை பன்மடங்கு பெருக்கியது என்பதில் ஐயமில்லை. பன்மொழிகள் அறிந்த தோமா, கிறித்துவராயிருந்ததால், அச்சமயத்துக்கும் அவரால் உயர்வும் பெருமையும் கிடைத்தன. நடுத்தரைக்கடல் நாடுகள் தொடங்கி, அரேபியா, பாரசீகம், இந்தியா உள்ளிட்ட பல்வேறு நாடுகளின் மன்னர்களும் தோமாவிற்கு அறிமுகமானவர்களே. தோமாவின் முகவர்கள் (Agents) உலகெங்குமிருந்த வணிக நகரங்களில், தோமா விற்காகப் பணியாற்றிவந்தனர். தமது மக்களோடு முசிறிக்குத் தோமா வருவதற்கு முன்னரே பன்முறை இந்தியாவுக்குத் தோமா

---

225. Early Christianity in India and Pakistan, p. 30.

225. This was the immigration into Malabar of a large colony of Syrians under the leardership of a merchant prince called Canai Thoma or Thomas of Canaan. Historians are of opinion that the immediate cause of the emigration of the Syrians was persecution at home.

- Early Christianity in India and Pakistan.

வருகை தந்துள்ளார். சேர மன்னனின் நட்பும் வரவேற்பும் அவரை மீண்டும் சேர நாட்டிற்கே அழைத்தன எனலாம்.

தோமையாரின் மறைவுக்குப் பிறகு, 150 ஆண்டுகளில் ஓர் இடைவெளி ஏற்பட்டது. கி.பி. 72 முதல் கி.பி. 345 வரையிலான கால அளவுகளில், தோமையாரின் கிறித்துவர்களுக்குத் தேவை யான சமய உதவிகளை, சிரியா நாட்டு வணிகர்களே செய்து வந்தனர் எனலாம். அவ்வப்போது சமயக் குருமார்களை, இவ் வணிகர்களே சேர நாட்டுக்கு அழைத்துவந்தனர். இந்நிலையில், சிரியா நாடு, பாரசீகத்தின் ஆட்சியின் கீழ்வந்தது. சசானியர்கள் (Sassaniars) என்ற புது அரசியல் எழுச்சியாளர்கள்,[226] கி.பி. 224ஆம் ஆண்டில், ஏற்கனவே பாரசீகத்தை ஆண்டு கொண் டிருந்த பாரசீக மரபைத் தூக்கியெறிந்துவிட்டு, ஆட்சியைப் பிடித்துக் கொண்டனர். இவ்வாட்சி, உரோமானியர்களையும் கலக்கத்திலாழ்த்தியது. சிரியா நாட்டின் மீது உரோமானியர் கொண்டிருந்த ஆளுமையை சசானியர்கள் தகர்த்தெறிந்தனர். இதனால் சிரியா நாட்டில் கிறித்துவர்களுக்குப் பாதுகாப் பின்மை தோன்றியது. இக்கரணியம் கொண்டே, வணிகர் தலைவன் தோமா தலைமையில் 400 பேர்களடங்கிய 72 குடும்பங்கள் சேரநாட்டிற்கு வந்தனர் என வரலாறு கூறு கிறது.[227] இந்த சசானியர்களின் ஆட்சி, இசுலாமியப் பேரரசு தோன்றிய காலமான கி.பி. 636 வரை நீடித்தது. வணிகர் தோமா வுடன் நினைவே மற்றும் பாக்தாத் நகரத்து வணிகர்களும், அவர்தம் இல்லத்தாரும் இணைந்திருந்ததாகவும் சொல்லப்படு கின்றது. தோமா இந்தியாவுக்கு வருகை தந்த கால அளவுகளில், பாரசீக வளைகுடா முதல், சேரநாடு வரையிலான பகுதிகளின் கடற்கரை நகரங்களில், கிறித்துவம் வளர்ந்திருந்ததாக, மிங்கானா (Mingana) என்னும் வரலாற்றாசிரியர் கூறுகிறார்.

---

226. The Cambridge, Encyclopedia, p. 978.
226. Sasanids: The aggressive Persian dynasty that over threw the Parthian empire in AD 224 and became Rome's firerest challenger in the East, They were driven from Mesopotamia by the Arabs in AD. 636.
   - The Cambridge Encyclopedia.
227. Anecdota Syriaca, Ed. J.P.N. Land, Tommus Primus (Leiden, MDCCLXII), pp. 124-125.

இதுவும் கூட, தோமாவின் பயணத்துக்குப் பாதுகாப்பான சூழலை அளித்திருந்தது எனக் கருதலாம்.[228]

## தோமாவின் கடல்வழி

கி.மு. 1000 ஆண்டுகளிலேயே, அரபிக்கடலைக் குறுக்காகக் கடந்துச் செல்லும் கடல்வழியை, போனீசியர்களும் சிரிய மரபினரும் அறிந்திருந்தனர். இவ்வழியை அவர்கள் மறை பொருளாகவே காப்பாற்றி வந்தனர். தங்கள் மரக்கலத்தையும் அதன் மேல் ஏற்றப்பட்டிருந்த வணிகப் பொருளையும் கூட அவர்கள் இழந்துவிடத் துணிந்தனர். ஆனால் கடல்வழியை மட்டும் அவர்கள் யாருக்கும் தெரிவிப்பதில்லை. இதனால் பல மேலை நாட்டு வணிகர்கள், அரேபியா தொடங்கி பாரசீகம் வழியாக, இந்தியாவிற்குள் நுழைய கடற்கரையோரப் பயணங் களை தெரிவு செய்திருந்தனர். கி.மு. 30ஆம் ஆண்டில் உரோமர்கள் சிரியா, பாலத்தீனம், எகிப்து போன்ற நாடுகளில் தங்கள் மேலாண்மையை நிறுவிய போதும், இந்தியாவுக்கான குறுக்குக் கடல்வழியை அவர்களால் தெரிந்து கொள்ள இயல வில்லை. இறுதியாக, சிரியா நாட்டு வணிகர்களே, இக்கடல் வழியை உரோமருக்குக் காட்டினர் என்று சொல்லப்படுகின்றது. நாற்பதே நாட்களில் ஏடன் (அரேபியாவின் தென்மேற்குத் துறைமுகம்) நகரிலிருந்து முசிறிக்கு வந்து சேர்ந்தனர். இந்தக் கடல்வழியை, தோமா தெளிவாக அறிந்திருந்தார் என்றும், இந்தியாவிக்குக் கிழக்கேயிருந்த சீனம் போன்ற நாடுகளுக்கும் செல்லும் கடல்வழிகளை அவர் அறிந்திருந்தார் என்றும் நம்பப்

---

228. The Early Spread of Christianity in India, A Mingana, BJRL, No. 2, 3-81, 1926.
All along on the Persian and Arab side of the Gulf, there were considerable Christian communities from very early times. Pherat - Maishan, the modern Basrah, at the northern end of the Gulf, was a Bishoporic since AD 225, and further south, on the Arab side of the line, the country of Katars on the highway of the sailing ships from the Persian Gulf is spoken of in history as having also Bishops as early as AD 225. In the Persian tableland, situated in the eastern side of the Gulf and best known in Persian History under the name of Fars. Christianity had also made great head. -way at the very beginning of the 3rd Christian century - Mingana.

படுகின்றது. கி.பி. முதல் நூற்றாண்டில் இந்தியாவில் பயணம் மேற்கொண்ட **பிளினி**, **பெரிப்லூஸ்** போன்றவர்களின் குறிப்பு களில் கூட, அரபிக்கடலின் குறுக்கு வழிகள் சொல்லப்பட வில்லை. மிகுந்த இன்னல்களும் இடர்ப்பாடுகளும் நிறைந்த கடற்பயணத்தில், 400 பேரை அழைத்துக் கொண்டு வந்த தோமாவின் செயல்பாடு, கடலோடுதலில் அவருக்கிருந்த எல்லையற்ற பரந்த பட்டறிவையே காட்டுகிறது எனலாம். தோமா தன்னுடன் **ஜோசப்** (Joseph) என்ற ஆயரையும் (bishop) மேலும் சில குருமார்களையும் (Piests) அழைத்துவந்ததாகச் சொல்லப்படுகின்றது.[229]

முசிறித் துறைமுகத்தில் தோமா தமது குழுவினருடன் வந்திறங்கியபோது, சேரமன்னன் தனது அமைச்சர்கள் சூழ வந்திருந்து வரவேற்றான். ஒருவணிகக் குழுவை மன்னனே வந்து வரவேற்றது தோமாவிற்கு மன்னனிடத்திலிருந்த மதிப்பையே காட்டுகிறது. தோமா அதற்கு முன்பே மன்னனுக்கு அறிமுக மானவர் என்பதும் குறிப்பிடத்தக்க செய்தியாகும். முசிறித் துறைமுகம் அதனையடுத்த பல்வேறு ஊர்களை உள்ளடக்கி யிருந்தது பற்றி ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. திருவஞ்சிக் குளத்தில் சேரமன்னனின் அரண்மனையிருந்தது. தோமாவின் குழுவினர், மகாதேவர் பட்டணம் என்னுமிடத்தில் குடியமர்த்தப் பட்டனர். மகா தேவன் என்ற சொல் பொதுவாகச் சிவனைக் குறித்தது என்றாலும், கிறித்துவக் குடியிருப்புக்கு அப்பெயர் சூட்டப்பட்டுள்ளது. மகாதேவன் என்ற சொல், இயேசுவைக் குறித்ததே என்பது ஆய்வாளர்களின் கருத்தாகும். ஏனெனில், தோமா வருகைக்கு முன்பு அப்பகுதிக்கு மகாதேவன் பட்டணம் என்ற பெயர் வைக்கப்படவில்லை என்பர். திருவஞ்சிக் குளத் திற்கு அடுத்த சிறப்பை மகாதேவன் பட்டணம் பெற்றிருந்தது என்றும் கூறுவர்.

தோமா சேரநாட்டுக்கு வருகை தந்தபோது, ஏற்கனவே அங்கே. தோமையாரின் கிறித்துவர்கள் பெருமளவில் வாழ்ந்து வந்தனர். அவர்கள் பிராமணர்களின் மரபில் வந்தவர்கள் என்ப தால், பிராமண வாழ்க்கை முறையைக் கைக் கொண்டிருந்

---

229. A Bishop named Mar Joseph, four priests and few deacons were also with them. - M.M. Ninan.
History of Early Christianity in India, Magazine, p. 74.

தனர். என்றாலும் பிராமணர் உள்ளிட்ட மற்ற மரபுக் கிறித்துவர்களும், சிரியா நாட்டுக் கிறித்துவர்களை மன மகிழ்வுடன் ஏற்றுக் கொண்டனர். பிற்காலத்துப் போர்த்துக் கீசியர்கள் கிறித்துவர்களாக இருந்தபோதும், கேரளத்துக் கிறித்துவர்கள் போர்த்துக்கீசியர்களைத் தீண்டத்தகாதவர்களாகவே (untouchables) கருதினர் என்பது பிற்கால வரலாறாகும். ஆனால் சேர நாட்டுக் கிறித்துவர்களும், சிரியா நாட்டுக் கிறித்துவர்களும் ஒன்றிணைந்து வாழத்தலைப்பட்டனர். திருமண உறவுகளும் கூட நிகழ்வுற்றன. வணிகர் தோமா கூட, தோமையார் வழிக் கிறித்துவப் பெண்ணையே மணந்து கொண்டார் என்றும் சொல்லப்படுகின்றது

## தோமாவும் மன்னனும்

தோமா - சேரமன்னனின் உறவு மிகவும் உயர்ந்தும் நெருக்கமாகவும் காணப்பட்டது. தோமாவுக்கு ஏராளமான பரிசுப்பொருட்களை மன்னன் வழங்கினான், உள்நாட்டு வெளி நாட்டு வணிகம் தொடர்பான அனைத்து அறிவுரைகளையும் மன்னன் கேட்டான். சேர நாட்டு வணிகம் தொடர்பாக எம்முடிவையும் எடுக்க, தோமாவுக்கு அனுமதி வழங்கப்பட்டிருந்தது. அன்றைய தமிழகத்தின் வணிகப் பெரு விருதான "பெருஞ்செட்டி" என்ற விருதினை மன்னன் தோமாவுக்கு வழங்கினான். செட்டி என்பது* தற்போது ஒரு மரபினைக் குறித்த சொல்லாகி விட்டது. ஆனால் தொடக்கத்தில் வணிகர்களுக்கு வழங்கப்பட்டு வந்த உயர்ந்த விருதாகவே அது கருதப்பட்டது. தோமாவுக்கு 72 வகையான சலுகைகள் அளிக்கப் பட்டதாக (காணை தொம்மன் செப்பேடு) செப்பேடுகள் தெரிவிக்கின்றன. தோமா என்னும் பெயரைத் தமிழ்ப்படுத்தி, தொம்மன் (Knai Thomman) என்று அச்செப்பேடுகள் குறிப்பிடு

---

* செட்டி: செல் என்ற தமிழ் மூலச் சொல்லிலிருந்து, செல்லுதல் - இடம்விட்டு இடம் பெயர்தல் எனக் கொள்க. செல்திசை = பல திசைகளுக்கும் செல்லுதல்.

செல் + திசை = செற்றிசை அல்லது செட்டிசை என நீளும். செட்டிசை என்ற சொல்லே செட்டி எனும் சொல்லுக்கு மூலச் சொல்லாகும். செலவு என்ற பயணம் குறித்த சொல்கூட, செல் என்ற மூலச் சொல்லின் நீட்சியே.

கின்றன.[230] இவை மணிகிராம நிவசிகள் (Manigrama Nivasikal) என்ற இதர ஆவணங்களாலும் குறிப்பிடப்பட்டுள்ளன. தோமா விற்குப் பிறகு வந்த அவரது மரபுவழியினருக்கு "இரவிக் கொற்றன்" (Iravi Kortan) என்ற சிறப்பு விருதும் அளிக்கப் பட்டுவந்தது. (இரவிக் கொற்றன் = கதிரவ வேந்தன் (Sun king).

தோமா, கடல்வழிப் பயணம் செல்லும்போது, தனது பாதுகாப்பிற்கென முறையான பயிற்சி பெற்ற போர்ப்படை யொன்றையும் வைத்திருந்தார். இப்படையை அவர்வைத்துக் கொள்ளவும் அனுமதிக்கப்பட்டிருந்தார். மன்னருக்கும் தோமா வுக்குமிடையே ஏற்பட்ட ஒப்பந்தம், வணிகத்தோடு நின்று விடாமல், நாட்டின் பாதுகாப்பையும் கருத்தில் கொண்டிருந் தது. போர்க் காலங்களில் கிறித்துவப் படை மன்னருக்கு உதவி செய்தது. இதன்பொருட்டே சோழ, பாண்டிய மன்னர்கள் கிறித்துவத்துக்கு எதிராகத் திரும்பினர்.

மன்னரோடு உடனமர்ந்து உணவுண்ணும் உரிமையும் தோமாவுக்கு அளிக்கப்பட்டிருந்தது. விருந்தினருக்கு இரு இலைகளில் உணவு படைக்கப்படுவது, அவர் மன்னரின் சிறப்பு விருந்தினர் என்ற தன்மையையுணர்த்தும். தோமாவுக்கும் அவ்வாறான இரு இலைகளிலிட்ட உணவு படைக்கப்பட்டது. இன்றும் கூட மலபார் கிறித்துவ மரபினர், விழாக் காலங்களில் இரட்டையிலை வைத்து உணவு உண்பார்கள் என்றும் சொல் லப்படுகின்றது.[231]

## தோமாவும் கம்மாளரும்

ஐவினைக் கலைஞர்களான கம்மாளர்கள், தங்கள் தலைவ னாக தோமாவை ஏற்றுக் கொண்டார்கள் என்ற செய்தியும் அறியக்கிடக்கின்றது. கேரளத்தின் பழைய பாடல் ஒன்று அடியிற்கண்ட நிகழ்வை வெளிப்படுத்துகின்றது. சேர நாட்டில் பெருகிவந்த சாதிகளால் வருந்திய சேரமன்னன், கம்மாளர் களை பிறவகுப்பாரோடு திருமண உறவு கொள்ளச் சட்டம் இயற்றியதாகவும், அவ்வாறான உறவு முறைகளால் மக்களில் உயர்வுதாழ்வு தவிர்க்கப்படும் என மன்னன் எண்ணியதாகவும் தெரிகிறது. ஆனால் மன்னனின் எண்ணத்தைத் தவறாகப்

230. Ibid. p. 74

231. Christianity in India and Pakistan, p. 32.

புரிந்து கொண்ட கம்மாளர்கள், தங்களது கட்டுக்கோப்பும் தனித்தன்மையும் பாழ்பட்டு விடும் எனக் கருதி, இரவோடிர வாக நாட்டை விட்டு வெளியேறி விட்டனர்.

சேரநாட்டின் தொழில்கள் அனைத்தும் பாதிக்கப் பட்டன. கட்டிட வேலைகள் நின்றுபோயின. பல்லியும் எறும்பும் மன்ன னின் அரியணையில் மொய்த்தன என்றவாறு மிகைப்படுத்தி இலக்கிய நயத்துடன் இப்பாடல் எழுதப்பட்டுள்ளது. மன்னன் தோமாவையழைத்து, கம்மாளர்களைத் தேடிக் கண்டுபிடித்துக் கொண்டுவரும்படி கேட்டுக் கொண்டான். தோமா தனது கப்பற்படையுடன் அவர்கள் வாழ்ந்திருந்த இலங்கைத் தீவை அடைந்து, மீண்டும் அழைத்துவந்ததாக அப்பாடல் கூறுகிறது. மேலும் கம்மாளர்கள் அனைவரும் தங்களுக்குத் தலைவனாக தோமாவே இருக்க வேண்டுமெனக் கேட்டுக் கொண்டதாகவும், தோமாவும் அதற்கிணங்கியதாகவும், அது முதல், கம்மாளர் களின் தலைவனாகத் தோமாவும், அவன் வழி மரபினரும் இருந்து வந்ததாகவும் கூறப்படுகின்றது. இன்றும் கூட, கேரளக் கிறித்துவர்களில் செல்வம் படைத்தோர் திருமணங்களில், தையற்கலைஞர் ஒருவர், அக்குடும்பத்தைப் புகழ்ந்துப் பாடி, பரிசில் பெறுவது போன்ற நிகழ்வு நடைபெறுவதாகக் கூறு கின்றனர்.[232]

## சிரியன் திருச்சபையின் வளர்ச்சி

தோமாவின் வழிவந்த கிறித்துவர்களும், சிரியன் கிறித்துவர் களும் இணைந்து விட்ட நிலையில் சேர நாட்டுக் கிறித்துவர் களை, சிரியன் கிறித்துவர்கள் என்றே அழைத்தனர். இவர்களில் மிகச் சிலரே சிரிய நாட்டு மரபைச் சார்ந்தவரார். எனினும், சிரியக் கிறித்துவ மரபு வழிச் சடங்குகளை சேரநாட்டுக் கிறித்துவம் ஏற்றுக் கொண்ட அளவில், அவர்கள் சிரியன் கிறித்துவர் எனப்பட்டனர். என்றாலும் இன்றும் சிலர் தம்மைத் தோமாவழிக் கிறித்துவர்கள் என்றே கூறிப் பெருமை கொள் கின்றனர். அது நாள் வரையில் எந்தவொரு சமயவழிபாட்டு முறைகளும் பின்பற்றப்படாத நிலையில், கி.பி. 345ஆம் ஆண்டிற்குப் பிறகு, முறையான சமய வழிபாட்டு முறை பின்பற்றப்பட்டது.

232. Ibid.

தோமாவின் பெருமுயற்சியால், சேரநாடெங்கும் வாழ்ந்திருந்த கிறித்துவர் வாழிடங்களில், தேவாலயங்கள் எழுப்பப்பட்டன. ஒவ்வொரு கிறித்துவ ஊருக்கும் குருமார்கள் அனுப்பி வைக்கப்பட்டனர். ஒவ்வொரு ஆயரும் மறைவுற்ற போது, புதிய ஆயர்கள் சிரியாவினின்றும் வந்து கொண்டிருந்தனர். கிறித்துவர்களுக்கான போர்ப்படை, தொடர்ந்து பேணப் பட்டு வந்தது, இப்படை மன்னருக்கும், கடல் வணிகத்துக்கும் தேவைப் படும் போது அழைத்துக் கொள்ளப்பட்டது. இவ்வாறு, சமய வழிபாடுகளில் சிரியா நாட்டு மேலாண்மையும், அரசியலில் சேரமன்னனது மேலாண்மையும் கிறித்துவர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டன. கிறித்துவர்கள் தங்களது நாட்டு மரபுவழி உடைகளுடன், சிரிய நாட்டு முறைகளையும் சேர்த்துக் கொண்டனர். வீடுகளின் தரைகளிலும், சன்னல்களிலும் திரை களை விரித்து வைத்துக்கொள்ளும் வழக்குகள் தோன்றின. சிரிய நாட்டு ஆண்களைப் போலவே, கிறித்துவர்களும் தலையை மொட்டை அடித்துக்கொண்டனர். சிரிய நாட்டு மக்கள், சேர நாட்டில் மகிழ்ச்சியுடன் வாழ்வதையறிந்து, மேலும் பலர் இங்கு வந்து குடியேறினர் என்று செய்திகள் கூறுகின்றன. தோமாவுக்கு முன்பாக, கி.பி. 340ஆம் ஆண்டில், பாரசீக ஆயர் தாவூத் (Dawood)என்பார் தலைமையில் பலர் சேரநாட்டுக்கு வந்ததாக, எம்.எம். நினன் (Ninan) என்பார் கூறுகிறார்.[233]

கி.பி. 354ஆம் ஆண்டில், ஆயர் தியாபிலுஸ் (Bishop Theophilus) என்பார் சேர நாட்டுக்கு வந்தார். இவர் பிறப்பால் மாலத்தீவுக்காரர் (Maldives). உரோமப் பேரரசன் கானஸ்டண்டைன் காலத்தில், உரோமானிய வணிகர்களுக்கு மாலத்தீவுப் பகுதிகளில் இடையூறு விளைவித்ததின் கரணியமாக, உரோமப் படைகள் இவரைக் கைது செய்து, உரோம் நகருக்கு அழைத்துச் சென்றன. அங்கு அவர் கிறித்துவத்தைத் தழுவி, தியோபிலுஸ் என்ற திருமுழுக்குப் பெயரையும் பெற்றுக் கொண்டு ஆயர் பதவிக்கும் உயர்த்தப்பட்டார். பின்னர் தனது நாட்டில் கிறித்துவத்தை வளர்க்கத் திரும்பினார். ஆயர் சேர நாட்டுக்கு வருகை தந்தபோது, கிறித்துவர்களைச் சந்தித்துப் பேசி மகிழ்ந்தார். அவர்களுடன் சமய வழிபாடுகளில் கலந்து கொண்டார். சமய வழிபாடுகளின் போது சேரநாட்டுக் கிறித்துவர்கள் அமர்ந்து கொண்டே (பிராமண முறைப்படி) வழிபாடு செய்வதைக்

233. Early Christianity in India, p. 74.

கண்ணுற்ற ஆயர் தியோபிலிஸ், இம்முறையை மாற்றி, ஐரோப்பிய முறையைப் புகுத்தியதாகவும் கூறப்படுகின்றது. வழிபாடுகளின் போது எழுந்து நிற்கவும், மண்டியிடவும் (Kneeling down), அமர்ந்து கொள்வதுமான வரைமுறைகளை இவரே இந்தியாவில் அறிமுகம் செய்தார் என்பர்.[234]

கி.பி. 425ஆம் ஆண்டில், சேர நாட்டினின்றும் சென்ற கிறித்துவத் துறவி தானியேல் என்பார், சிரியாவில் சமயப் பயிற்சி மேற்கொண்டார். அவர் அங்கு கிரேக்க மற்றும் சிரிய மொழிகளில் தேர்ச்சி பெற்றார். புதிய ஏற்பாட்டு நூலிலுள்ள உரோமருக்கான மடல்களை (Epistle to the Romans), கிரேக்க மொழியினின்றும் சிரிய மொழியில் (Syriae) மொழி மாற்றம் செய்தார் என்றும், அவர் எடிசா நகரில் தங்கியிருந்தார் என்றும் கூறப்படும் செய்தி வியப்பை அளிக்கின்றது. புதிய ஏற்பாட்டு நூலை தமிழில் மொழிபெயர்த்தவராகவும் தானியேல் இருந்திருக்க வேண்டும். தானியேல் காலத்தில் மலையாளம் என்ற மொழி அறியப்படவில்லை என்பதை நோக்குக. இந்தியாவில் நற்செய்தி நூல்கள் பெரும்பாலும் கிரேக்க, மற்றும் சிரிய மொழிகளை முதனூலாகக் கொண்டே மொழிமாற்றம் செய்யப் பட்டன. தானியேல் தமிழகத்தில் இப்புதிய முயற்சியை மேற் கொண்டிருக்க வேண்டும். தானியேல் தாய்நாடு திரும்பும் போது, பல்வேறு மேலை நாட்டுச் சமயப் பொருட்களுடன் திரும்பினார். அவற்றுள் கிரேக்க எழுத்துகள் பொறிக்கப் பெற்ற தேவாலய மணிகள் (Church bells) இன்றும் காணக்கிடக்கின்றன.[235]

கி.பி. 522ஆம் ஆண்டில் சேர நாட்டுக்கு வந்த அலெக் சாந்திரிய நகரத்துப் பெருஞ்செல்வர் காஸ்மாஸ் (Cosmos) என்பவரைப் பற்றி ஏற்கனவே குறிப்பிடப்பட்டுள்ளது.



234. Ibid, p. 75
235. Ibid, p. 75.

## இந்தியக் கிறித்துவத்தில் மேலைநாட்டுக் கொள்கைகள்

கி.பி. முதல் நூற்றாண்டில், கிறித்துவ சமயத்தில் எந்தக் கொள்கைக் குழப்பங்களும் இல்லை. தோமையார் இந்தியாவில் சமயப்பணியாற்றிய போது குழப்பமற்ற செய்திகளையே கொடுத்தார். இயேசு கிறித்து இறைவன் என்றும், மக்களுக் காகவே அவர் பிறந்து இறந்தார் என்றும், மக்களின் மீட்பைக் கொடுத்தவர் இயேசுவே என்றும், அவர்வழியின்றி மக்கள் விண்ணுலகை அடைய இயலாது என்றும் சமய விளக்கங்களை அளித்தார். தோமையார் மக்களுக்குத் தெரியாத, புரியாத கொள்கைகளை அறிவிக்கவில்லை. தோமையாரைப் போன்றே தொடக்ககால மறைத் தொண்டர்களும் விளக்கமளித்தனர். நூற்றாண்டுகள் செல்லச் செல்ல, பல்வேறு சிந்தனையாளர் களும் கிறித்துவ சமயத்தில் இணைந்தனர். நற்செய்தியில் சொல்லப்பட்டுள்ள இயேசுவின் கொள்கைகளுக்குப் புதிய புதிய விளக்கங்களைக் கொடுத்தனர். இவ்விளக்கங்களையும் மக்கள் ஏற்றுக் கொண்டனர். **இவ்விளக்கங்கள் யாவும், அவைகளை அளித்தவர்கள் மக்களிடையே எடுத்து வைத்த சொல்லாட்சித்திறன், விளக்கிக் கூறும் ஆற்றல், மக்களைத் தன்வயப்படுத்துகின்ற திறமை, சொல்லப்பட்ட செய்திகளில் இருந்த உண்மைகள் போன்ற காரணியங்களால் ஏற்கப்பட்டும் ஒதுக்கப்பட்டும் நின்றன.**

ஒவ்வொரு சிந்தனையாளரும் தமக்கென ஒரு விளக்கக் குழுவையும், தம் விளக்கத்தை ஏற்றுக் கொண்ட மக்களையும் பெற்றிருந்தனர். மாற்றுச் சிந்தனையாளர் கொடுத்த விளக்கம் சரியா தவறா எனத் தீர்ப்பிட்டுச் சொல்ல எந்த நீதிமன்ற அமைப்பும் அக்காலத்தில் இல்லை. பெருவாரியான மக்கள் ஏற்றுக் கொண்டால் அது சரியென்றும், ஏற்கப் படவில்லை

யாயின் தவறென்றும் தீர்ப்பிட்டுக் கொண்டனர். இவ்வாறான கொள்கை முரண்பாடுகள் கிறித்துவ சமயத்தில் மட்டும் தோன்றவில்லை. உலகின் எல்லாச் சமயங்களுமே இவ்வாறான முரண்பாடுகளுக்கு இலக்காயின.

## *ஞான வழி* (Gnosticism)

அறிவைப் பயன்படுத்துவதன் வழியாக ஆண்டவனை அடைய முடியும் என்ற அடிப்படையில் எழுந்ததே ஞான வழியாகும். Gno என்ற கிரேக்க முதற்சொல், ஞான என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே என ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. அறிவைப் பயன்படுத்தி உலகளாவிய மீட்பைப் பெறுவதே இவ்வியக்கத்தின் நோக்கமாகும். இக்கொள்கையையுடைய பலர் தொடக்ககாலக் கிறித்துவ சமயத்திலிருந்தனர்.[236] இயேசு வின் மறைத் தொண்டர்கள் காலத்திலேயே சைமன் மாக்னஸ் என்ற புனிதர் இந்த இயக்கத்திலிருந்த கிறித்துவராவார். மறைத் தொண்டர்களின் செயல்பாடுகள் (Acts of Apostles) இவ் வியக்கம் பற்றிய செய்தியைக் குறிப்பிடுகின்றது.[237] பாரசீகத்தி னின்று இந்தியாவுக்குள் நுழைந்த இவ்வியக்கத்தின் தாக்கம் சற்று கடுமையானதாகவே உணரப்பட்டது.

இந்தியாவின் கிறித்துவ, புத்த சமயங்களில் ஞானவழித் தாக்கங்கள், கி.பி. முதல் நூற்றாண்டிலேயே நிழலிட்டன. பார சீகத்தில் மடிந்துபோன இவ்வழி, இந்தியாவில் உயிர்பெற்றது. பரதேசன் (Bardaisan) என்ற பாரசீகச் சிந்தனையாளன், (கி.பி. 154-222) சேரநாட்டிற்கு வருகை தந்தான். இவனது வருகைக் கான கரணியம் தெரியவில்லையென்றாலும் மணி என்னும் கிறித்துவப் பெரியாரைச் சந்தித்தது பற்றிய செய்திகள் உள்ளன. இச்சந்திப்புக்குப் பிறகே, மறைத்தொண்டர் தோமையாரின் செயல்பாடுகள் (Acts of Thomas) என்ற நூலை மணி என்பார்

---

236. Some of the early Gnostics include, Simon Magnus and Simonians, Nicolitans, Cerinthus, Marcion, Basilides (130-150AD), (Theodotus (140-160AD), Valentenus (140-160AD), Heracleon (170-180 AD), and the Sethians. All of these were dealt with by the early church. - M.M. Ninam

236. Ibid, p. 71.

237. Acts. 8:9 ff

எழுதினார் என்பர். அந்நூலில், தோமையார் ஒரு ஞானவழிக் கிறித்துவர் (Gnostic Christian) என்று விளக்குகிறார். பரதேசன் இறக்கும் தருவாயில் கிறித்துவ சமயத்துக்கு மாறியதுடன், தனது தொண்டர்களைப் பெருமளவில் மணியின் குழுவில் (Manicheans) இணைத்துவிட்டார். மணியின் குழுவினர் தமிழகத்தில் பரவலாக அறியப்பட்டனர்

## *மணி கிராமம்* (Manechean)

மணி (Mani or Mane) என்பார், பரதேசன் கொள்கை களை ஏற்றுக்கொண்டவர் *(217-300 கி.பி.)* கி.பி. 242ஆம் ஆண்டில் நாடு முழுதும் சுற்றுப் பயணம் மேற்கொண்டார். தன்னை, உண்மையின் தூதுவன் (Messenger of Truth) என்று சொல்லிக் கொணடார். பாரசீகத்திலும் இந்தியாவிலும் தனக்குச் சார்பான கருத்துடையவர்களை உருவாக்கிக் கொண்டார். தமிழகத்தின் காஞ்சிபுரத்தில் இவரது கொள்கை மையம் அறியப்பட்டது. மயிலின் (Peacock) தன்மைகளுடன் தன்னைத் தொடர்புபடுத்திக் கொண்டு, மயிலைப்போன்றே வானில் பறக்கப் போவதாகவும் அறிவித்துக் கொண்டார். திருமயிலையிலும் இவருக்குச் சார்பான குழு இருந்ததாகக் கூறப்படுகிறது. மயிலை, மயிலோடு தொடர்புடைய ஊர் என்பதை நோக்குக. மயிலைப் பகுதியிலிருந்த தோமையாரின் கிறித்துவர்களுக்குத் தாமே வழிகாட்டியென அறிவித்துக் கொண்டார். மணியின் மயில் பற்றிய சிந்தனை, பிற்காலத்தில் சுப்பிரமணியன் என்ற பிராமணக் கடவுளோடு தொடர்புடையதாக ஆய்வாளர்களில் சிலர் கருதுகின்றனர். திருச்சபையை (கிறித்துவ சமயத்தை)ப் பெண்ணாகவும், இயேசுவை மணமகனாகவும், மணி உருவகப் படுத்தினார்.[238] இந்த உருவகம் இன்றும் கூட கிறித்துவர்களால் நினைவு கூறப்பட்டு வருவதைக் காணும் போது, மணியின் கொள்கைத் தாக்கம் எந்த அளவுக்கு கிறித்துவத்தில் நிழலிட்டது என்பதை அறியலாம்.

---

238. The Bride is the Church, the Bride groom is the Light Mind; the Bride is the soul and Jesus is the Bridegroom. If he rises in us, we too shall live in him, if we believe in him, we shall transcend death and come to life. - The Gospel of the Prophet Mani.

238. The Gospel of Prophet Mani, Dunean Greenlees, The Theosophical Publishing House, Adayar, Chennai, 1956.

மணி சோழநாட்டில் பரவலாகத் தனது பயணத்தை மேற்கொண்டதாகத் தெரிகிறது. தமிழகத்திலிருந்த பல கிறித்துவர்கள், மணியின் சிந்தனைகளால் கவரப்பட்டனர். நாகப்பட்டிணத்திற்கருகிலுள்ள மணிகிராமம் என்னும் ஊர், இவர் பெயராலேயே அழைக்கப்பட்டது எனக் கருத இடமுண்டு. பிற்காலத்தில் மணிகிராமத்து மக்கள், பாரசீகத்தோடு இருந்த தொடர்பால் வணிகர்களாக வலம் வந்தனர். தமிழகத்தினின்றும் பாரசீகம் திரும்பிய மணி, தனது தந்தையுடன் சில தொண்டர் களைத் தமிழகத்துக்கு அனுப்பிவைத்தார். கி.பி. 276ஆம் ஆண்டில், மணி தனது முரண்பாடான கொள்கைக்காக (heresy) சாவுக்குத் தீர்ப்பளிக்கப்பட்டதாகத் தெரிகின்றது. இதனால் அச்சமுற்ற மணியின் தொண்டர்கள், இந்தியா மற்றும் சீன நாடுகளுக்குச் சென்று குடியமர்ந்தனர். மணியின் தாயார் (மேறி - Mary) காஷ்மீரத்திலுள்ள பாரமுல்லா பகுதியில் இறந்துபோனார். அவரது கல்லறை அங்கிருப்பதாகவும் கூறப்படுகின்றது.

மணியின் தொண்டர்கள் சோழ, பாண்டிய நாடுகளில் பரவலாக வாழ்ந்திருந்தனர். சேரநாட்டிலிருந்த கிறித்துவர்களில் சிலரும் மணியின் தொண்டர்களாயிருந்தனர். மணியின் தொண்டர்கள் கிறித்துவர்களாகவே அறியப்பட்டதாலும், பாரசீகத்துடன் அவர்களுக்கு நெருங்கிய தொடர்புகள் இருந்தமையாலும், சிரியன் திருச்சபையைச் சேர்ந்த வணிகர்களின் குழு (இரவி கொற்றன்), மணியின் தொண்டர்களையும் தங்கள் வணிகத்தோடு இணைத்துக் கொண்டனர். நாகையில் இருந்த மணிகிராமமும், கொல்லத்தில் (Quilon) இருந்த வணிகர் குடியிருப்பும், முற்றிலுமாக மணியின் தொண்டர்களான வணிகக் குழுவினர் வாழ்ந்திருந்த பகுதிகளே. மணிகிராமம் என்ற வணிகக் குழு, தமிழகத்தின் மிகப்பெரும் செல்வாக்குடன் விளங்கியதை வரலாறு விளக்கும். ஸ்தானு இரவி (Sthanu Ravi)யின் செப்பேடுகள், மணிகிராம வணிகக் குழுவின் சிறப்பையும், சிரியன் திருச்சபையுடன் கொண்டிருந்த தொடர்பையும் விளக்குகின்றன.[239]

---

239. In this context of this sea faring and commerce that we may look at the evidence of the 9th to 10th c. exodus of christians from the regions bordering the Persian Gulf to the Kerala coast which is contained in the inscriptions of Sthanu Ravi, a series of inscribed copper plates in which the Manigramam guild of India is first mentioned. - Meera Abraham.

Two Medieval Merchant Guilds of South India, p.20.

மணீசியக் கொள்கைகள், பிராமண சமயத்தில் பெரும் மாற்றத்தை விளைவித்தன. கி.பி. 3ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு வந்த ஆறு நூற்றாண்டுகளில் ஏற்பட்ட பிராமண சமயத்தின் மெய்யியல் கொள்கைகள், கிறித்துவ மணீசியக் கொள்கையின் தாக்கங்களே என்பது ஆய்வாளர்களின் கருத்துரைகளாகும். கிறித்துவ மணீசியக் கொள்கைகளை உள்வாங்கிக் கொண்ட பிராமண சமயம், பின்னர் மணீசியக் கிறித்துவத்தையே எதிர்த்துப் போராடியது. வட இந்தியாவில், பக்கீர் (Fakir) எனப் பட்ட மணீசியத் துறவிகள் பிராமண சமயத்தாரால் வேட்டை யாடப்பட்டதின் விளைவாக, அவர்கள் தலை மறைவு வாழ்க்கை நடத்த வேண்டியதாயிற்று.[240] தமிழ் நாட்டில் சோழபாண்டியப் பகுதிகளில் கடும் எதிர்ப்புகள் கிளம்பின. திருநாவுக்கரசர், மயிலையை அடுத்துள்ள பகுதிகளில் வாழ்ந்திருந்த மணிசியக் கிறித்துவர்களை, பிராமண சமயத்துக்குத் திருப்பினார் என்பர். நாகையை அடுத்த மணி கிராமம் முற்றிலுமாக பிராமண சமயத்துக்கு மாற்றப்பட்டது. கி.பி. 9ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்த மாணிக்க வாசகர், கொல்லத்தில் வாழ்ந்திருந்த 116 கிறித்துவர்களை பிராமண சமயத்துக்குத் திருப்பினார். மணிவாசகர் என்ற பெயரே மாணிக்க வாசகர் எனப்பட்ட தாகக் கூறுவாருமுளர்.[241] மணிவாசகர் ஏற்கனவே மணீசியக் கொள்கையில் தொடர்பு கொண்டவர் என்பதற்கு, அவர் பெயரையே சான்றாகவும் சிலர் காட்டுகின்றனர். எனவே மாணிக்க வாசகரை ஒரு ஞானவழியாளர் (Gnostic) என்றும் சிலர் கருதுகின்றனர்.

அலெக்சாந்திரிய நகரத்து பாந்தேனுஸ் தமிழகம் வந்த போது, மணீசியக் கொள்கையைக் கடுமையாக எதிர்த்தார். சேர நாட்டினர் தொடர்ந்து மேலை நாட்டவரோடு கொண் டிருந்த உறவின் அடிப்படையில், மணீசியக் கருத்துகள், சேர நாட்டுக் கிறித்துவத்தில் பாதிப்பு எதனையும் ஏற்படுத்தவில்லை. தொடர்ந்து சேரநாடு, கிறித்துவர்களின் நாடாகவே விளங் கிற்று. ஆனால் இந்தியாவின் மற்ற பகுதியிலிருந்து மணீசியக் கொள்கைக் கிறித்துவர்கள் வலுக்கட்டாயமாகச் சமய மாற்றம் செய்யப்பட்டனர். ஏற்கனவே மணீசியக் கிறித்துவர்களாயிருந்

240. Early Christianity in India, M.M.Ninan, p.72

241. Ibid.

தவர்கள், சமயம் மாறியபோதும், சிரியன் கிறித்துவர்களின் வணிகக் குழுக்களில் தொடர்ந்து செயலாற்றிவந்தனர் என்பதை ஸ்தானு இரவியின் செப்பேடுகள் மெய்ப்பிக்கின்றன. பழைய மரபையொட்டி, சிரியன் திருச்சபைத் திருவிழாக்களிலும் கூட, சில உரிமைகள் மதம் ம்ாறிய மணிகிராமத்தாருக்கு அளிக்கப் பட்டிருந்தன. வரலாற்றுச் செய்திகளை முழுவதுமாக ஆய்வு செய்யாத சில வரலாற்றாசிரியர்கள், மணி கிராமத்தார் எச்சமயத்தினர் என்று குழம்பிக்கொண்டனர். மேற்கண்ட செய்திகளின் அடிப்படையில், மணி கிராமத்தார், மணீசியக் கொள்கையைக் கொண்டிருந்த கிறித்துவர்கள் என்றும், பிற் காலத்தில் பிராமண சமயத்துக்கு மாற்றப்பட்டனர் என்றும் தெளிந்து கொள்ளலாம்.

## *நெஸ்டோரியன் கொள்கை*
## (Nestorian schism)

நெஸ்டோரியஸ் என்பார் கிறித்துவம் கொடுத்த மிகச் சிறந்த சிந்தனையாளர்களில் ஒருவராவார். அந்தியோக் நகரில் குருவாயிருந்த நெஸ்டோரியஸ், கி.பி. 425ஆம் ஆண்டில், கான்ஸ்டாண்டி நோபிளின் ஆயராகப் பொறுப்பேற்றார். அக்காலத்தில் அந்தியோக், அலெக்சாந்திரியா, கான்ஸ்டாண்டி நோபிள், உரோமை ஆகிய நான்கு நகரங்களின் ஆயர்கள் கிறித்துவ சமயத்தில் மிகுந்த வலிமை பெற்றிருந்தனர். நெஸ்டோரியஸ் மிகச் சிறந்த மெய்யியல் அறிஞராவார். நற்செய்தியில் கூறப்பட்ட பல்வேறு செய்திகளுக்கும் விளக்க மளித்தார். மறியாள் (Mary) கடவுளின் தாயன்று; அவள் கடவுளின் தாயாகவும் இருக்க இயலாது; அனைத்தையும் கடந்த கடவுளுக்கு தாய் ஏது? தந்தை ஏது? என்பன போன்ற சிந்தனை களால் பலரது சினத்துக்கு ஆளானார். இயேசுவின் மாந்தத் தன்மையும் இறைத்தன்மையும் மாறுபடாமலேயே இணைந் துள்ளன, என்பது நெஸ்டோரியரின் கருத்தாகும்.

அலெக்சாந்திரியா நகரத்து ஆயர் சிரில் (Cyril) என்பார், இக்கொள்கையை மறுத்தார். இவ்விரு ஆயர்களும் தத்தம் கொள்கைகளில் விடாப்பிடியாயிருந்தனர். இருவரும், ஒருவரை யொருவர் கிறித்துவ சமயத்தினின்றும் நீக்கிக் கொண்டனர். ஏபேசுஸ் நகரில் நடந்த மாநாட்டில் (கி.பி. 431) பெயரளவுக்குக்

கூட நெஸ்டோரியரின் கொள்கைகள் பற்றி எவரும் பேச வில்லை. மாநாடு, நெஸ்டோரியருக்கு எதிராக வாக்களித்து, நெஸ்டோரியரைத் திருச்சபையை விட்டு விலக்கியது செல்லும் என்றும் தீர்ப்பளித்தது. இச்செயல் ஒருதலையான முடிவென்றும், மாநாடு சரியான பார்வையில் நடத்தப்படவில்லையென்றும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.[242] இந்த நெஸ்டோரியச் சிந்தனை கள் இந்தியாவிலும் உணரப்பட்டன. இப்படியாக, மேலை நாடு களில் அவ்வப்போது தோன்றும் கொள்கைப் போராட்டங்கள், இந்தியக் கிறித்துவத்தையும் அசைத்தன.



242. History of Religion, pp. 345-346.

## கேரளத்தில் கிறித்துவத்தின் செல்வாக்கு

கானா தோமாவின் காலத்தில், சேர நாட்டின் பொருளியல் கூறுகள், கிறித்துவர்களால் உறுதி செய்யப்பட்டன. சோழ பாண்டிய நாடுகளைவிட, உள்நாட்டு வெளிநாட்டு வணிகத்தில் சேரநாடு செழிப்புற்று, சிறப்புற்றிருந்தது. கிறித்துவர்கள் இவ்விரு வணிகங்களிலும் தமக்குப் போட்டியாளர்களின்றி விளங்கினர். சேரமன்னர்கள், தங்கள் நாட்டின் வளர்ச்சியைக் கருத்தில் கொண்டு, கிறித்துவர்களைத் தாங்கிப்பிடித்தனர். மகாதேவர்பட்டிணம் என்ற கிறித்துவர் குடியிருப்புப் பகுதி யின் முழுக்கட்டுப் பாடும் கிறித்துவர்களிடமே இருந்தது. கிறித்துவர்கள் தங்கள் பகுதியில் ஆட்சி செய்து கொள்ள அனுமதி அளிக்கப்பட்டிருந்தனர். பொது மக்களுக்கு உரிய பல சட்டங்கள், கிறித்துவர்களைக் கட்டுப்படுத்தவில்லை. மன்னனுக்கு அடுத்த நிலையில், இரவிகொற்றன் என்ற கிறித்துவத் தலைவன் போற்றப்பட்டான். கிறித்துவர்கள் தங்களுக்கென நிலையான போர்ப்படையைப் பெற்றிருந்தனர். இதனால் மற்ற வகுப்பார், கிறித்துவர்களைக் கண்டு அஞ்சினர். கிறித்துவர் களும் தங்களைத் தனிமைப் படுத்திக் கொள்ளாமல், மற்ற வகுப்பாருடன் கலந்து பழகினர். சேர நாட்டின் வளர்ச்சியில் தங்களது பங்களிப்பை ஈடுபாட்டுடன் செலுத்தினர். கிறித்து வர்கள் வேற்று நாட்டுச் சமயத்தைச் சார்ந்தவர்கள் என்ற எண்ணம், மற்றவகுப்பாரிடம் இல்லாமலிருந்தது. கிறித்துவர்கள் குமுகாயத்தில் பெற்றிருந்த பல சலுகைகள்பற்றி, பல்வேறு செப்பேடுகள் வழியாக அறிந்து கொள்ள முடிகிறது.

கி.பி. 774ஆம் ஆண்டில் வீரராகவப் பெருமாள் என்ற சேரமன்னன், கிராங்கனூரில் இருந்த இரவி கொற்றனுக்குப் பல்வேறு சலுகைகள் வழங்கியதை, செப்பேடு ஒன்று அடியிற் கண்டவாறு விளக்குகின்றது.[243]

243. Christianity in India and Pakistan, pp. 33-34.

“கதிரவன் ஆண்டு மீனத்திங்களில், மீனத்தில் வியாழன் நிலைத்திருந்த காலத்தில், ஒரு காரிக்கிழமை, உரோகிணி விண்மீன் நாளில், பல்லாயிரம் ஆண்டுகளாக அரசு செலுத்தி வரும் மரபில் தோன்றி வெற்றிப் புகழ் கொண்ட வீற கேரளச் சக்கரவர்த்தியாகிய வீற இராகவப் பெருமாள், பெரும் மாளிகையாகிய தம் அரண்மனையில் மகிழ்வுடன் வாழ்ந்து வரும் காலத்தில், மணிகிராமம் என்ற விருதினை, மகாதேவர் பட்டிணத்து இரவிக் கொற்றன் சேரமான் உலகப் பெருஞ் செட்டிக்கு வழங்குகிறோம்”, என்று தொடங்கும் அச்செப்பேடு, பல்வேறு சலுகைகள் வழங்கப்பட்டதைத் தெரிவிக்கின்றது. அவைகளில் சில:

1. விழாக் காலங்களில் விழா உடை உடுத்திக் கொள்ள அனுமதி. (festive clothing).
2. பல தூண்கள் அமையுமாறு வீடுகளைச் சுட்டிக் கொள்ளுதல்
3. தங்களது வருவாயைப் பெருக்கிக் கொள்ள அனுமதி.
4. ஏற்றுமதி வணிகத்துக்கான அனுமதி.
5. ஒரு செய்தியை பொதுமக்களுக்கு அறிவிக்க அனுமதி (பறைசாற்றுதல் வழியாக)
6. நாட்டு வணிகத்தில் முழு உரிமை (Monopoly of trade).
7. இரவிக் கொற்றனுக்கு முன்பாக, அவன் வருகையை அறிவித்துக் கொண்டு ஓடும் அறிவிப்பாளர்களை வைத்துக் கொள்ள உரிமை. (fore runners)
8. தங்களது இல்ல, குமுகாய, சமயவிழாக்களில் ஐந்து வகையான இசைக் கருவிகளைப் பயன்படுத்திக் கொள்ள உரிமை. (Five musical instruments).
9. விழாக்களில் சங்கு போன்ற இசைக்கருவிகளை ஊதிக் கொள்ள அனுமதி.
10. ஊர்வலம் மற்றும் விழாக்களில், பகல்வேளையில் தீவட்டி ஏற்றிப் பிடித்துக் கொண்டு செல்ல அனுமதி.
11. கிறித்துவர்களின் வீடுகளில் தரைவிரிப்புகள் (carpets) போட்டுக் கொள்ள அனுமதி.
12. கிறித்துவ சமயத் தலைவர்கள், பெருஞ்செல்வர்கள், பல்லக்கு போன்றவைகளைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.
13. இரவிக் கொற்றன் தன் தலைக்கு மேலாக, வெண் கொற்றக் குடை பிடித்துக் கொள்ளலாம் (Royal parasol).

14. முரசு போன்ற இசைக்கருவிகளை ஊர்வலங்களில் பயன் படுத்திக் கொள்ளுதல்.
15. கிறித்துவர்கள் தங்கள் வீடுகளின் முகப்புகளில், அழகான வளைவுகளை (ornamental arch) அமைத்துக் கொள்ளலாம்.
16. எண்ணெய்ச் செட்டிகளையும் (oil mongers), ஐவினைக் கம்மாளர்களையும் பணியாளர்களாக வைத்துக் கொள்ள அனுமதி.
17. கொடுங்கல்லூர் துறைமுகம் முதல் நான்கு கோவில்களுக்கு இடையிலிருக்கும் வாயில் வரையிலுள்ள வணிகச் சந்தையில், பொருட்களுக்கான தரகு வருவாய் (Brokerage) பெறும் உரிமையும், பொருட்களை அளக்கவும் எடைபோடவு முள்ள உரிமையும், அதன்வழியே கிடைக்கும் வருவாயும், மகாதேவர் பட்டிணத்தின் தலைவர் (Lord of the city) இரவி கொற்றனுக்கு வழங்கப்பட்டது.

மேற்கண்ட உரிமைகள், இரவி கொற்றனுக்கு வழங்கப்பட்ட வைகளில் சிலவாகும். இதற்கான செப்பேட்டில் நீர் வார்த்து (Libation of water)க் கொடுத்துள்ளதாகவும் கூறப்பட்டுள்ளது. இந்த உரிமைகள் யாவும் சேரமான் உலகப்பெருஞ் செட்டி என்ற மணிகிராமம் இரவி கொற்றனுக்கு அளித்த செல்வங் களாகவே (Properties) கருதிக் கொள்ள வேண்டியது என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. இச் செல்வ உரிமைகளை, இரவிக் கொற்றனின் மக்கள் மற்றும் மக்கள் வழி மக்களுக்காக சேர மன்னரால் வழங்கப்பட்டதாகச் செப்பேடு கூறுகிறது.

இப்பட்டயத்துக்குச் சான்றாளர்களாக (writnesses),

1. பண்ணியூர் என்ற ஊரின் பொதுமக்களும், (Panniyur)
2. சாய்கிராமம் ஊரின் மக்களும் (Soigram)
3. வேய் நாட்டு ஆட்சியாளர்களும் (authorities of Venadu)
4. ஓடுநாட்டு ஆட்சியாளர்களும் (authorities of Odunadu)
5. ஈர நாட்டு ஆட்சியாளர்களும் (authories of Erandu)
6. வள்ளுவ நாட்டு ஆட்சியாளர்களும் (authorities of Valluvanadu)

கையொப்பமிட்டுள்ளனர். மன்னர், நிலவையும் கதிர வனையும் முன்வைத்து அவையிரண்டுமுள்ளளவும் (the moon and the sun shall exist), இப்பட்டயம் செல்லுபடியாகும் எனக் குறிப்பிட்டுள்ளார்.

இதனை எழுதிய நெட்டெழுத்துக்காரர், "சேரமான் உலகப் பெரும் தத்தன் நம்பி சடையன்" என்பார், மேற்கண்டவர் களைச் சான்றாளர்களாகக் கொண்டு செப்புப்பட்டயமாக வழங்கப்பட்ட செய்தியில் குறிப்பிடப்பட்டுள்ளான். தத்தன் என்ற தமிழ்ச் சொல்லுக்குக் கொடையாளி என்பது பொரு ளாகும். இக்கொடையை எழுதியது பற்றி இவனும் தத்தன் எனப்பட்டதோடு, அரசாங்கத்தில் இதுபோன்ற செப்பேட்டு ஆவணங்களை அளிக்கும் பொறுப்பிலும் (authority for documentation) இவன் இருந்தான் எனலாம்.

### ஸ்தானு இரவிகுப்தன்

வரலாற்றாய்வாளர் கோபிநாத இராவ் என்பாரின் கூற்றுப் படி, ஸ்தானு இரவிகுப்தன் என்பான், வேநாட்டின் (Venadu) ஆளுநராகப் பொறுப்பு வகித்தவன்.[244] கொல்லத்தில் உள்ள தேவாலயம் ஒன்றிற்கு, அதன் ஆயர் மாரன் சபிர்-இஷோ பெயரைக் குறிப்பிட்டு ஸ்தானு இரவி என்பான் செப்புப் பட்டயம் ஒன்று அளித்துள்ளான். மார் (Mar) என்ற சிரியச் சொல்லுக்கு ஆயர் என்பதே பொருளாகும். சபிர் இஷோ என்ற பெயர், பொதுவாக சிரிய நாட்டில் பரவலாக அறியப்பட்ட பெயராகும். இதற்கு, "இயேசுவே எனது நம்பிக்கை" என்பது பொருளாகும்"[245] இஷோ என்பது இயேசு என்ற சொல்லின், சிரிய ஒலிப்பாகும். கொல்லத்திலிருந்த ஆயர்கள் பெரும்பாலும் பாரசீக நாட்டின் செட்டிசிபோன் (Ctesphon) நகரத்தின் கிழக்குச் சிரிய (East Syrian) த் தலைமையின் கீழ் செயல்பட்ட வர்களே. இத்தலைமை நெஸ்டோரியன் கொள்கை வழி வந்ததேயாகும்.[246] கி.பி. ஏழாம் நூற்றாண்டில் பாரசீக சமயத் தலைமையின் இந்தியத் திருச்சபையொன்று இயங்கி வந்ததாக

---

244. Two Medievel Merchant Guilds of South India, p. 21
245. Early Spread of Christianity, p. 76.
245. Mar is the Syriac title of all Bishops, and Sabrisho is a very common Syriac name meaning, "Jesus is my hope".
246. The patriarchs who came to Quilon may possibly have belonged to a church in Persia which was under the jurisdiction of the East Syrian (Nestorian) Patriarchate of Ctesiphon. p. 32.

(நெஸ்டோரியன்), மிங்கானா கூறுகிறார்.[247] கொல்லத்திலிருந்த தேவாலயத்திற்கு அளிக்கப்பட்ட சலுகைகள் பற்றி ஸ்தானு இரவியின் செப்பேடு தெரிவிக்கின்றது.

மேலும் ஒரு செப்பேடு, மார்சபீர் குழுவைச் சார்ந்த வணிகர்களுக்கு ஏராளமான சலுகைகளை அளித்தது பற்றியும் குறிப்பிடுகின்றது. இதற்குச் சான்றாளர்களாக இருந்தவர்களில் சிலர் பாரசீக நாட்டின் சோராஸ்திரியர்கள் எனவும், அவர்கள் தம் மொழியாகிய பக்லவி (Pahlavi) மொழியில் கையொப்பம் இட்டுள்ளனர் எனவும் **பிரெளன்** (L.W. Brown) என்பார் கூறுகிறார். மேலும், **இப்ராகிம் மகன் மெய்மன், மணி மகன் முகம்மது, அலிமகன் சுல்க், அல் - மார்சிபன் மகன் உட்மன், யாகித் மகன் முகம்மது, இப்ராகிம் மகன் அமிர், அட்டேமகன் இப்ராகிம், மன்சூர் மகன் பகர், அமீது மகன் அல் - காசிம், இசாமகன் மன்சூர், யாக்கூப் மகன் இசுமாயில் போன்றோர் அரபு மொழியில் கையொப்பமிட, அசன் அலி மற்றும் இசாக், இப்ராகிம், இசுமாயில் போன்றோரின் பெயர்கள் எபிரேய மொழியிலும் அறியப்பட்டுள்ளன.***

போர்த்துக்கீசியர்கள் கேரளத்துக்கு வருகை தந்தபோது, கேரளக் கிறித்துவர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த பல்வேறு சலுகைகள் பற்றி, அனந்த கிருஷ்ண அய்யர் விளக்குகிறார்.[248]

1. கிறித்துவர்கள் மேட்டுக் குடியினராக (Noble classes) விளங்கினர்.
2. நாயர்களைப் பணிக்கமர்த்திக் கொண்டனர்.
3. மன்னனின் மக்கள் (Sons of kings) என்ற சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டனர்.
4. பொன் மற்றும் வெள்ளியிலான நகைகளை அணிந்து கொள்ள அனுமதிக்கப்பட்டிருந்தனர். தலையிலணியும் நெற்றிப்பட்டி, கொண்டை ஊசிகள் போன்ற தலையழகுக் கான நகைகளும் இவற்றிலடங்கும்.
5. திருமண விழாக்களை ஊர்கூடி நடத்த அனுமதி.
6. தென்னைத் தோட்டத் தொழிலாளர்களின் வழக்குகளை கிறித்துவர்கள் கேட்டறிந்து அவர்களுக்குச் சரியான உதவி களைச் செய்யும் உரிமை.

---

247. Ibid.

248. Anthropology of the Syrian Christians, L.K. Anantha Krishna Ayyar, Ernakulam, 1926.

---

* கி.பி. 700களில் இசுலாமியரின் வருகை உறுதிப்படுத்தப்பட்டுள்ளது.

7. கிறித்துவர்கள் மன்னனுக்கு மட்டுமே கட்டுப்பட்டவர்கள். உள்ளூர் ஆளுநர்கள் (Local authorities) கிறித்துவர்களின் வாழ்க்கையில் தலையிடத் தடை.
8. கிறித்துவனல்லாத ஒருவன், கிறித்துவனுக்கு எதிராக இழைக்கப்படும் குற்றத்திற்கு, குற்றம் புரிந்தவன், தேவாலயத் திற்குப் பொன்னோ பொருளே அளிக்க வேண்டும். அவ்வாறு அளிக்காதவன், குருதி சிந்தும் ஒறுப்புக்கு ஆளாவான்.
9. கிறித்துவர்கள், தங்கள் குமுகாய நிலைக்குக் கீழானவர் களுக்கு வணக்கம் செலுத்தத் தேவையில்லை. தங்கள் நிலையிலுள்ளோருக்கு (கிறித்துவர் அல்லாத பிராமணர் போன்றோர்) வணக்கம் செலுத்தும் போது, அவர்கள் பதில் வணக்கம் செலுத்த வேண்டும். அவ்வாறு செய்யாதவர் களுக்கு சாவு உள்ளிட்ட கடுமையான ஒறுப்பு வழங்கப்படும்.
10. கிறித்துவரல்லாதவர், கிறித்துவர் இணங்கினாலொழிய அவர் அருகில் அமரக் கூடாது.
11. கிறித்துவ ஆயர்களுக்கு மன்னருக்குரிய மாண்பும், பெருமை யும் அளிக்கப்பட்டன.
12. மன்னர் குடும்பத்து மக்கள் விளையாட்டிடம் அமைத்துக் கொள்வது போல் கிறித்துவர்களும் அமைத்துக் கொள் ளலாம்.
13. மன்னன் அவையில் கிறித்துவத் தலைவர்களுக்கு, மன்னருக் கடுத்த இடம் கொடுக்கப்பட்டது.
14. மன்னனின் ஆளுநர்களுக்கு இருந்த சலுகைகள் கிறித்துவத் தலைவர்களுக்கும் வழங்கப்பட்டன.
15. கி.பி.16ஆம் நூற்றாண்டில், பரூர் நாட்டு குறுநில மன்னன் (King of Parur) நாயர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த சில சலுகைகளைத் திரும்பப் பெற்றுக் கொண்டதை எதிர்த்து, மன்னன் மீது கிறித்துவர்கள் போர் தொடுத்தனர். இச் செய்தி யின் வழியே ஆற்றல் மிக்க போர்ப்படையை வைத்திருக்க கிறித்துவர்கள் உரிமை பெற்றிருந்தனர் என்பது தெளிவு.
16. சாணார் மரபைச் சார்ந்த மறவர்களை, கிறித்துவர்கள் தங்கள் போர்ப்படையில் சேர்த்துக்கொள்ள உரிமை பெற் றிருந்தனர்.
17. கிறித்துவர்களும் பிராமணர்களும் மட்டுமே, தங்கள் வீடு களுக்கு முன்பாக வெற்றிடங்களை (vacant site) வைத்துக் கொள்ளவும், அவ்விடங்களில் கொட்டகை, பந்தல் போன்ற முகப்புகளை வைத்துக் கொள்ளவும் அனுமதிக் கப்பட்டிருந்தனர்.

18. வீட்டின்முன் உள்ள வாயிற்கதவு மற்றும் கைப்பிடிகளை பொன் போன்றவைகளால் அழகுபடுத்திக் கொள்ள, கிறித்துவர்களுக்கு உரிமை வழங்கப்பட்டிருந்தது.

19. சுண்ணாம்புக் குடுவை (lime metal box) வைத்துக்கொள்ள உரிமை.* இச்சுண்ணாம்பு வெற்றிலை மெல்லும் சிலருக்கு தேவைப்படுவதாகும்.

## கிறித்துவ அரசு (Christian Kingdom)

கி.பி. 3ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு, கிறித்துவர்களுக் கென தனியான போர்ப்படையை கானா தோமா உருவாக்கி வைத்திருந்தார். அப்படை கடற்பயணம் செல்லும் போதும், உள்நாட்டு வணிகத்தின் போதும், கிறித்துவர்களுக்குப் பாது காப்பளித்தது. இப் போர்ப்படையை, தோமாவுக்குப் பின்வந்த கிறித்துவ வணிகர்களும் பேணிக் காத்துவந்தனர்.

கிறித்துவர் போர்ப்படைக்கான ஆட்கள், 8 வயதுச் சிறுவர் களாக இருக்கும் போதே தேர்வு செய்யட்டனர். முறையான போர்ப்பயிற்சி, வேட்டையாடுதல் போன்றவை இளமையிலேயே கற்பிக்கப்பட்டன. இப்பயிற்சி 25 அகவை வரையிலும் கற்பிக்கப்பட 26ஆம் அகவையில் அப்பயிற்சியாளன் போர்ப் படையில் சேர்த்துக் கொள்ளப்பட்டான்.[249] கிறித்துவக் குடும்பங் களில் ஒருவன் இப்போர்ப்படையில் பணியாற்றினான் எனலாம். சிரியா நாட்டு போர்முறைகளோடு தமிழகத்தின் போர் நுணுக்க முறைகளும் சேர்த்துக் கற்பிக்கப்பட்டதால், கிறித்துவப் போர் மறவன் மற்றவர்களைக் காட்டிலும் சிறந்து விளங்கினான். பிற மன்னர்களின் போர்ப்படை மறவர்களுக்கு இவ்வாறான முறை யான பயிற்சி அளிக்கப்படவில்லை என்பதாலும், போர்க் காலங்களில் வேளாண் தொழில் செய்து வந்த இளைஞர்களும் கூட படையில் சேர்த்துக் கொள்ளப்பட்டதாலும், மற்ற மன்னர் களின் போர்ப்படை எண்ணிக்கையில் கூடியிருந்தபோதிலும், திறமையற்றதாகவே இருந்தன. ஆனால், இளமை தொடங்கி 17

249. Christianity in India and Pakistan, p. 36.

* ......... to another a small metal box which contained quicklime. This lime was prepared in a peculiar manner to impore the flavour of the betal which they in common with all other natives of India both men and women, were contiually chewing.

ஆண்டுகள் முறையான போர்ப் பயிற்சி பெற்றிருந்த கிறித்துவப் படை வலிமை மிக்கதாகவும் ஆற்றலுள்ளதாகவும் விளங்கியது. சேர மன்னர்கள் கிறித்துவர்களிடம் நட்பு பாராட்டியதற்கு, இப்போர்ப்படையும் ஒரு கரணியம் என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். அக்காலத்திய கிறித்துவப் படையில், கிறித்துவ சமயத்துக்கு மாறிய சாணார்களும் நாயர்களும் பெருமளவி லிருந்தனர். (சான்றோர் என்ற தமிழ்ச் சொல்லே சாணார் என்றும், நாயகன் என்ற தமிழ்ச் சொல்லே, நாயர் என்றும் திரிந்தன)

ஒவ்வொரு கிறித்துவக் குடியிருப்புகளினின்றும் தேர்வு செய்யப்பட்ட இவ்வாறான போர் வீரர்கள், 5000 என்ற எண்ணிக்கையிலிருந்ததாக ஆய்வாளர்கள் கூறுகின்றனர். பல நூற்றாண்டுகளாக, சேரர்களுக்கு உதவிய இப்படையின் ஆற்ற லால் தான், அருகிலிருந்த பாண்டியர்கள், சேரநாட்டின் மீது படை எடுக்காமலிருந்தனர் என்றும் கூறப்படுகின்றது. கி.பி. 10ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு சேரர்களின் வலிமை குன்றியதற்குப் பல்வேறு கரணியங்கள் உண்டு. ஆனால் கிறித்துவர்கள் அதற்குப் பொறுப்பானவர்கள் அல்லர் என்பதும் தெளிவு. இடைக்காலச் சோழர்கள், சேர நாட்டை வென்ற போதும் கிறித்துவர்களிடம் பகைமை பாராட்டவில்லை யென்றே கருதலாம்.

இராசேந்திர சோழன் காலத்தில் சோழப் பேரரசின் வணிக மற்றும் வெளிநாட்டுத் துறை அமைச்சராகவிருந்த பரஞ்சோதி என்பானைப் பற்றிய செய்தியொன்று, எசாலம் செப்பேட்டுக் குறிப்பில் காணப்படுகின்றது. "கங்கை கொண்ட சோழ புரத்து ராஜவிச்சாதிரப் பெருந்தெருவில் சோனகன் இராசேந்திர சோழ கந்திருவப் பேரரையன் சாவூர் பரஞ்சோதி" என்ற முழுப்பெய ருடன் சொல்லப்படும் பரஞ்சோதி[250] ஓர் இசுலாமியனே என்று சிலர் கருத்துரைக்கின்றனர். சோனகம் என்பது சோன் என்ற எகிப்திய நகரத்தைக் குறித்த பண்டைய சொல் என்பது தெளிவு. சோனகன் பரஞ்சோதி என்னும் பெயரில் காணப்படும் சொற் களுக்கான பொருள், அவனை ஓர் இசுலாமியன் என்றும் சுட்டு

---

250.1. Esalam Copper plates of Rajendra Chola I, collected Papers (study in Tamil Culture), Nadana. Kasinathan, Dept. of Archaeology, 1994, pp. 1-34.

2. எசாலம் செப்பேடுகள், (1037) ஏ. சுப்பராயலு, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

வதைவிட, கேரளத்தில் தங்கியிருந்த சிரியன் கிறித்துவனே என்பதற்கானச் சான்றுகள் உள்ளன. சேரர்களின் செல்வப் பெருக்கிற்கான கரணியத்தைப் புரிந்து கொண்ட இராசேந்திர சோழன், கிறித்துவ வணிகக் குழுவின் தலைவனாயிருந்த வனைத் தன்பக்கம் சேர்த்துக் கொண்டான் என்பதே சரியானச் சிந்தனையாக இருக்கும்.

சிரியன் கிறித்துவர்களின் மரபுவழிச் செய்திகளின்படி, வலியர் வட்டம் (Valiyar vattam) என்ற கிறித்துவ மன்னர் மரபு பற்றி அறியக் கிடக்கின்றது.[251] மலையாளப் பொருள்படி, பெரும் நாடு எனப் பொருள் கொள்ளலாம். வலியர் வட்ட மன்னர்கள் பல நூற்றாண்டுகளாக ஆட்சிப் பொறுப்பிலிருந் தனர் என்றும், பிற்காலத்தில் ஆண்மக்களில்லாத நிலையில், மரபுவழி ஆட்சி மறைவுற்றது என்றும் கூறப்படுகின்றது. எனினும் வலியர் வட்டம் என்ற மரபு சேரனுக்குட்பட்டு ஆட்சி செய்த மரபாகவே கொள்ள வேண்டும். கி.பி. ஒன்பதாம் நூற் றாண்டில் சேர நாட்டுக்கு வந்த அராபியப் பயணியொருவர், ஒரு கிறித்துவ மன்னன் (Christian Emir), கிராங்கனூர் அருகில் ஆட்சி செய்து வந்ததாகக் குறிப்பிடுகின்றார். பிற்காலத்தில் இம்மரபு ஆட்சி செய்யவில்லையெனினும், அம்மன்னர் மரபினர் தங்களது பழைய அரசு முத்திரையை (Royal emblem)ப் பாதுகாத்து வந்தனர் என்று கருதலாம். கி.பி. 1439ஆம் ஆண்டில், போப் யூஜின் IV (Pope Eugene IV) என்பார், தூதுக் குழுவொன்றை வலியர் வட்டம் மன்னருக்கு அனுப்பியதோடு, மடல் ஒன்றையும் விடுத்திருந்தார்.[252] அம்மடலில், மன்னராகவே அழைக்கப்பட்டு, வலியர் வட்டம் அரசுக்கு எழுதப்பட்ட குறிப்புகள் தெரிவிக் கின்றன.



---

251. Christianity in India and Pakistan, p. 37.
252. "To my most beloved son in Christ, Thomas the illustrious Emperor of the Indians, health and Apostalic bendection. There of ten has reached us a romour that your serenity and also all who are the subjects of your kingdom are true Christians..." p. 38.

## இசுலாமியர்களின் எழுச்சி

கி.பி. 750 ஆண்டுகளில் இசுலாமியர்கள் பேரெழுச்சி நடுத்தரைக்கடல் நாடுகளை அதிரவைத்தது. பன்னெடுங் காலமாய் ஆண்டுகொண்டிருந்த பேரரசுகளும் சிற்றரசுகளும் சின்னா பின்னமாய்ச் சிதறிப் போயின. எகிப்து, பாலத்தீனம், சிரியா, பாரசீகம், அரேபியா போன்ற நாடுகள் இசுலாமியப் பேரரசின் கீழ் வந்தன. இதுவரையில் தடையின்றி வளர்ந்து வந்த கிறித்துவ சயமத்துக்குத் தளர்ச்சி ஏற்பட்டது. கிறித்துவத்தின் நாற்றங்காலாகக் கருதப்பட்ட சிரியாவும், சிந்தனையாளர்களின் நகரமாக விளங்கிய அலெக்சாந்திரியாவும் இசுலாமிர்களின் கட்டுப்பாட்டில் வந்தன. இது நாள் வரையில் கடலோடிகளாக விளங்கிய சிரிய நாட்டு வணிகர்கள், தங்கள் வணிகச் செல்வாக்கையிழந்தனர். குறிப்பாக, கேரளத்தில் தன்னாட்சி யாளர்களாக வணிக உலகில் கொடிகட்டிப் பறந்த மணி கிராமம் என்ற வணிக நிறுவனம் தனது செல்வாக்கையிழந்தது. ஆனாலும் முற்றிலுமாக ஒதுக்கப்படவில்லை. அரபிக் கடல் பகுதிகளை இசுலாமியர்கள் கைக் கொண்டுவிட்டதால், அவர்கள் அனுமதியின்றி வணிகம் செய்ய மற்ற நாட்டினரும் சமயத்தாரும் அனுமதிக்கப்படவில்லை. ஆனாலும் விரிந்து பரந்த வணிக உலகின் தேவைகளை இசுலாமிய வணிகர்களால் மட்டுமே ஈடு செய்ய இயலவில்லை. மேலை நாடுகளிலும் கீழை நாடுகளிலும் நன்கு அறிமுகமாகியிருந்த இந்திய - ஐரோப்பிய வணிகர்களின் தயவும் இசுலாமியருக்குத் தேவைப்பட்டன.

கிறித்துவ சமயத்தைப் பொறுத்தவரையில், இதுவரை சிரிய நாட்டினின்றும் தடையின்றி வந்து போன கிறித்துவ சமயத் தலைவர்களை, இசுலாமிய அரசு தடை செய்தது. இசுலாமியரின் அனுமதியுடன்தான், குருமார்களும் ஆயர்களும் இந்தியாவுக்கு வரமுடிந்தது. சிரியா மற்றும் பாரசீக நாட்டில் இசுலாம் ஏற்கப் பட்டதால், அந்நாடுகளிலிருந்த திருச்சபைக்கு இடைஞ்சல்

களே மிஞ்சின. அரசின் கட்டுப்பாட்டில் கிறித்துவ சமயம் கொண்டுவரப்பட்டதாலும், ஏராளமான கிறித்துவர்களும் பிறரும் இசுலாத்தைத் தழுவியதாலும், திருச்சபைகளின் நிலை இரங்கத்தக்கதாயிருந்தது.

இதுநாள் வரை புகழ்பெற்றிருந்த பல துறைமுக நகரங்கள் பொலிவிழந்தன. மேலை நாட்டில் கான்ஸ்டாண்டி நோபிள் நகரத்தின் கட்டுப்பாடு இசுலாமியரிடம் சென்றடைந்ததால், அந்நகர் தனது சிறப்பையிழந்ததோடு, அங்கு நீண்டிருந்த பன்னாட்டு வணிக வழி தடை செய்யப்பட்டது. தமிழகத்தில் முசிறி தனது பெருமையை இழந்தது. இசுலாமிய வணிகர்கள், முசிறிக்கும் வடக்கேயிருந்த கள்ளிக்கோட்டை என்ற கல்லுக் கோட்டையைத் தேர்வு செய்து கொண்டனர்.

இடைக்காலச் சோழர்களால் வீழ்ச்சியுற்றிருந்த சேர அரசு, மீண்டும் தனது பெருமையை அடையவேயில்லை. மேலை நாடுகளில் எழுச்சி பெற்ற இசுலாம் பேரரசின் தாக்கங்கள் சேர நாட்டிலும் எதிரொலித்தன. இதனால் மகிழ்வுற்ற சேர நாட்டு ஆட்சிக் குழுக்கள், தங்களுக்குள் போரிட்டுக் கொள்ளத் தொடங்கின. நிலையான வலிமை மிக்க அரசு இல்லாததால், சேரமான் அரசு சிதறிப் போயிற்று. இச் சிதறலுக்கு இசுலாமிய வணிகர்களும் துணை நின்றனர். இறுதியாக, கள்ளிக் கோட்டை (Calicut), கொச்சி, திருவாங்கூர் என்ற மூன்று அரசுகள் தோன்றின. இம்மூன்று அரசுகளும் ஒன்றுக்கொன்று பகைமை பாராட்டிக் கொண்டன. கள்ளிக் கோட்டை மன்னனான சாமரின் (Zamorin) என்பானை இசுலாமியர் வழி நடத்தினர். இதனால் கிறித்துவ மக்களும் அதன் படையும் சாமரினுக்கு எதிரணியில் திரண்டனர். கொச்சி அரசு, தொடர்ந்து கிறித்துவர் களின் நல்லுறவோடு செயல்பட்டது. திருவாங்கூர் அரசு எப்பக்கமும் சாய வில்லையெனினும், மற்ற இரு அரசுகளைப் பார்க்கிலும் வலிமை குன்றியே காணப்பட்டது. போர்த்துக் கீசியர்கள் இந்தியாவுக்கு வருகை தந்த போது காணப்பட்ட அரசியல் சூழ்நிலை இதுவே எனக் கூறலாம்.

சிரியன் கிறித்துவ வணிகக் குழுக்களின் கடல் கடந்த வெளி நாட்டு வாணிகம் இசுலாமியர்களால் தடைப்பட்டுப் போனதால், உள்நாட்டு வாணிகத்தில் கவனம் செலுத்தினர். தங்களுடைய கடந்தகால சமய, குமுகாய நிலையைத் தொடர்ந்து

கடைப்பிடித்துக் கொண்டிருக்கவும் போராட வேண்டியிருந்தது. ஆயர்களும் குருமார்களும் தங்குதடையின்றி மேலை நாடுகளி லிருந்து வந்துபோக இயலவில்லை. இருப்பினும் இசுலாமியரின் அனுமதியுடன் ஒருசிலர் வந்து போய்க் கொண்டிருந்தனர். ஆயர்களின் வருகை அடிக்கடி தடைப்பட்டுப் போனதால், கேரளத்தின் குருமார்களின் தலைவராயிருந்தவர்களே (Arch-deacons), கிறித்துவப் பகுதிகளின் சமயத்தலைவர்களாயினர். இச்சமயத்தலைமையும் மரபு வழியில் இயங்கத் தொடங்கியது.

கேரளத்தின் கிறித்துவர்களின் எண்ணிக்கை கி.பி. 16ஆம் நூற்றாண்டில், மூன்று இலக்கத்தையும் (300000) தாண்டி யிருந்ததாக ஒரு புள்ளிக் கணக்குத் தெரிவிக்கின்றது. இம் மக்களுக்குச் சமயப்பணியாற்றி வந்த பல்வேறு நிலையிலிருந்த சமயத்தலைவர்களை, முறையான ஆணைகள் வழியே எந்த சமயத் தலைமையும் பணியில் அமர்த்தவில்லை. உள்ளூர்ச் சூழலுக்கேற்ப தலைவர்கள் தோன்றிய வண்ணமிருந்தனர். பெரும்பாலும் கிறித்துவ மக்கள் இச்சமயத் தலைமையுடன் இணைந்தே தமது சமயக் கடமைகளை ஆற்றினர். உரோமை நகரிலிருந்த கத்தோலிக்கத் திருச்சபையின் ஆளுமை, கேரளத்துக் கிறித்துவர்கள் பால் இருந்ததில்லை என்பதே வரலாற்று உண்மை நிலையாகும். போப்பாண்டவரின் நேரடிப் பார்வை யில் கேரளம் உருவாவதற்கான வாய்ப்புகள் இல்லாமற் போயின.

தொடக்கத்தில் உலக கிறித்துவ அமைப்புகளின் கூட்டமைப்பு மாநாடு, கி.பி. 325ஆம் ஆண்டு நீசின் (Nicene) நகரில் நடைபெற்றபோது, இந்தியக் கிறித்துவர்களின் சார்பில் ஜான் (John) என்ற ஆயர் கலந்துகொண்டதாகச் செய்திகள் கூறுகின்றன.[253] இந்தக் கூட்டமைப்புதான் பிற்காலத்தில் விரி வடைந்து உரோமைத் தலைமையாக (கத்தோலிக்கத் திருச்சபை) உருவெடுத்தது. இந்தியாவின் சார்பில் இம்மாநாட்டில் கலந்து கொண்ட ஆயர் ஜான், இந்தியர் அல்லர் என்றும், அவர் பாரசீக நாட்டைச் சார்ந்தவர் என்றும் சில செய்திகள் கூறுகின்றன. இருந்தாலும் இந்த ஆயர், விரிந்து பரந்த பாரசீக - இந்தியப் பகுதிகளின் ஆயர் என்றே (John, Bishop of Persia and Great India) அறியப்படுகின்றார். இவரும் இவர்வழி வந்த ஆயர்களுமே

253. Ibid, p. 39.

கேரளத்தின் சமயத்தலைவர்களுக்குப் பொறுப்பாயிருந்தபடி யால், இந்தியக் கிறித்துவர்கள் உரோமத் தலைமைக்குக் கட்டுப் பட்டவர்களே என்று சிலர் கருதினர். ஆனால் ஆயர் ஜான் கலந்து கொண்ட நீசின் மாநாட்டுக்குப் பிறகு மேலை (ஐரோப்பிய) நாட்டுத் தொடர்பு துண்டிக்கப்பட்டுவிட்டது என்றும், சிரிய - சால்திய (Syro - Chaldean) சமயச் சடங்குகளே இந்தியாவில் வழக்கிலிருந்தன என்பாருமுளர்.

கி.பி. நான்காம் நூற்றாண்டில் தலையடுத்த நெஸ்டோரியன் மெய்யியல் கொள்கை, இயேசுவின் தேவ - மாந்தப் பண்பு களைப் பற்றி கடுமையான கருத்து வேறுபாடுகளை உருவாக் கியது. கத்தோலிக்கச் சமயம், இயேசு, தேவனாகவும் மாந்த னாகவும் இரு வேறுபட்ட நிலைகளில் இல்லையென்றும், இரு பண்புகளையும் ஒருங்கே பெற்றிருந்தார் எனவும் கூறியது. நூற் றாண்டுகள் செல்லச் செல்ல, இக் கொள்கை மீதான சொற் போர்களும் விளக்கங்களும் தொடர்ந்த வண்ணமேயிருந்தன. கிறித்துவர்கள் அல்லாத பிற சமயத்தாரின் பார்வையில், இம்மெய்யியல் கொள்கை அப்படியொன்றும் பெரியதாகத் தென்படவில்லை. ஆனால் கிறித்துவ உலகம் அக்காலத்தில் இக்கொள்கையைக் கையிலெடுத்துக் கொண்டு போரிட்டது. ஆயர்கள் மற்ற ஆயர்களைச் சமயத்தினின்று நீக்கவும் செய் தனர். மக்கள் வேட்டையாடப்பட்டனர். கிறித்துவர்களிடையே வன்முறை தலைதூக்கியது. இறுதியாக நெஸ்டோரியர்களும், ஒற்றைப் பண்பினை ஏற்றுக் கொண்ட மோனோபிசிட் (Monophysites) என்ற குழுவும், உரோமத் தலைமையினின்றும் உடைத்துக் கொண்டு வெளியேறின.[254]

பிற்காத்தில் இவ்விரு குழுக்களுக்கும் இசுலாமியரின் அரவணைப்பும் இருந்தது. ஏனெனில், உரோமத் திருச்சபையை, அரசியல் கண்ணோட்டத்துடன் இசுலாமியர்கள் நோக்கினர். பகைவனுக்குப் பகைவன் நண்பன் என்ற பழமொழி வேலை செய்தது. இவ்விரு குழுக்களும் இந்தியாவிலும் செல்வாக்குப் பெற்றிருந்தன. மோனோபிசியர்கள் என அழைக்கப்பட்ட குழுவை, யாக்கோபு சன்சலூஸ் (Jacobus Zanzalus) என்பார் அந்தியோக் நகரில் தோற்றுவித்தார். பெரும் எண்ணிக்கையில்

---

254. Ibid, p. 40.

தொண்டர்களைப் பெற்றிருந்த இவரின் குழு, யாக்கோபியர்கள் (Jacobites) என அழைக்கப்பட்டனர்.[255] இவ்வாறான கொள்கைத் தாக்கங்கள் இந்தியாவிலும் எதிரொலித்தன. கேரளத்தில் இன்றும் பரவலாக உள்ள யாக்கோபியர்களே, அக்காலப் பிளவின் வழிவந்தவராவர். எனவே, மேலை நாடுகளில் எந்தெந்த கொள்கைப் பிரிவுகள் இருந்தனவோ, அவையெல்லாம் கேரளத் திலுமிருந்தன. இந்நிலையே போர்த்துக்கீசியர் இந்தியாவுக்கு வந்த போது இந்தியக் கிறித்துவத்தின் நிலையாகும். அவ்வப் போது இந்தியாவுக்கு வந்த மேற்கத்திய கிறித்துவக் குழுக்கள், தங்கள் தங்கள் குழுவே இந்தியாவில் செல்வாக்குடன் இருப் பதாக எழுதிவைத்தனர். **பேராயர் மெனசீஸ்** (Menezies) **என்பார். இவ்வாறான குழுப்பகைமையால், சிரியன் திருச்சபையிலிருந்த ஏராளமான ஆவணங்களைத் தீக்கிரை யாக்கினார்**. கி.பி. நான்காம் நூற்றாண்டில் அலெக்சாந்திரியா நகரிலிருந்த ஏழு இலக்கத்திற்கும் (700000) மேலான பண்டைய பதிவுகளும் ஆவணங்களும், கொள்கை வழி எனக் கூறிக் கொண்டை ஒரு கிறித்துவக் குழுவால் தீக்கிரையாக்கப்பட்டது. கி.பி. 10ஆம் நூற்றாண்டில், மதுரையை அழித்த சோழர் களாலும், கி.பி. 12ஆம் நூற்றாண்டில், தஞ்சை மற்றும் கங்கை கொண்ட சோழ புரத்தை அழித்த பாண்டியர்களாலும், தமிழகத்தின் வரலாறுகளே அழிந்தன என்ற செய்திகளையும் இங்கு ஒப்புநோக்குக. **உலகில் இவ்வாறான அறிவு சாராத குழுக்களால், உலக வரலாறே தொலைந்து போய்விட்டது எனக் கூறுவதில் தவறில்லை எனலாம்**.

இசுலாமியர் அரபிக் கடலைத் தன்வயமாக்கிக் கொண்ட தால், கேரளக் கிறித்துவர்களுக்கு சரியான சமய வழிகாட்டு தல்கள் தடைப்பட்டன. ஆயர்களும் குருமார்களும் வருகை தருவது ஏறக்குறைய நின்று போன நிலையில், சிலர் தங்களை சிரியாவினின்றும் வந்த ஆயர்கள் எனச் சொல்லிக் கொண்டு, போலியான அல்லது பொய்யான கையொப்பமிட்ட மடல் களைக் காட்டி, கேரளத்தில் ஆயர்களாக வலம் வந்தனர். இந்தப் பொய்யான ஆயர்களின் மோசடிகள், போர்த்துக்கீசியர் வருகைக்குப் பிறகும் தொடர்ந்து பின்னர் நின்று போயிற்று.

---

255. Ibid.

இவ்வளவு. இன்னல்களுக்கும் இடையூறுகளுக்குமிடையே தான், இந்தியக் கிறித்துவம் எந்தப் பின்னடைவுமில்லாமல் தொடர்ந்து எழுச்சியுடன் காணப்பட்டது. நூற்றாண்டுகளாகச் சொல்லப்பட்டு வந்த கொள்கை முரண்பாடுகள், இந்தியக் கிறித்துவனை எட்டவேயில்லை. சிந்தனையாளர்கள் தங்க ளுக்குள் போரிட்டுக் கொண்ட காலத்தில், இந்தியக் கிறித்து வர்கள் இக்கொள்கைகள் பற்றியெல்லாம் அறிந்து கொள்ள ஆர்வம் காட்டவில்லை. இந்தியக் கிறித்துவன் இயேசுவே கடவுள், அவர் வழியே மீட்புக்கான வழி என்ற ஒரு கொள்கையை மட்டுமே கொண்டிருந்தான். இயேசுவின் நேரிடையான தொண்டர்களும் இக்கொள்கையையே அறிவித்தனர். **நல்ல வேளையாக, இயேசு சிந்தனையாளர்களைத் தமது தொண்டர்களாகத் தேர்வு செய்யவில்லை. அவ்வாறு நிகழ் வுற்றிருந்தால், இயேசுவின் தொண்டர்களே கிறித்துவ சமயத்தில் பிளவை ஏற்படுத்தியிருப்பார்கள்.** இன்று உலகிலுள்ள கிறித்துவத் திருச்சபைகள் கணக்கிலடங்காதவை. அடிப்படையில் இயேசுவை இறைவனாக ஏற்றுக் கொண்ட இத்திருச்சபைகள் ஏன் பிரிந்து கிடக்கின்றன என்ற கேள்விக்குச் சுருக்கமாக விடையளிக்க இயலும். **இயேசுவின் கொள்கை களைத் தவிர, மற்ற மற்ற உலகியல் கூறுகள் திருச்சபையில் பெருகிவிட்டன. செல்வம், ஆட்சி வேட்கை, ஆளுமைப் பண்பு, தமது அறிவாற்றலை வெளிப்படுத்த முயலுதல், தமது கருத்துக்கு மாற்றாகச் சிந்திப்பவர்களை நசுக்குதல், எவ்வகையிலேனும் மற்றவர்களை அடக்கியாள நினைப்பது போன்ற அரசியல் கோட்பாடுகள் கிறித்துவத்தில் பெருகின.** அதன் விளைவுகளே இன்றுள்ள திருச்சபைகள் எனலாம். இதற்கு இந்தியக் கிறித்துவமும் விதிவிலக்கன்று. **இன்று கிறித்து வத்தின் ஆளுமையை அருளியல் கூறுகள் மறைத்து பொருளியல் கூறுகளே முடிவு செய்கின்றன என்பதே உண்மை நிலையாகும்.**



# வளர்ச்சிப் பாதையில்
# கேரளக் கிறித்துவம்

இந்தியக் கிறித்துவம் என்பது, ஐரோப்பியர்களின் வருகைக்கு முன்பு வரையில், அது கேரளக் கிறித்துவத்தையே குறிக்கும். கி.பி. 15ஆம் நூற்றாண்டுக்கு முன்பு, இந்திய நாட்டில் பரவலாகக் கிறித்துவம் அறியப்படவில்லை. தோமையார் காலத்திய கிறித்துவம், தமிழகத்தில் வளர்ச்சியடைந்த போதிலும், அடுத்த சில நூற்றாண்டுகளில் வறண்டு போயிற்று. தமிழகத்தில் பரவலாக வாழ்ந்திருந்த கிறித்துவர்கள், தங்களது சமயப் பாதுகாப்பைக் கருதி, கேரளத்தில் குடிபுகுந்தனர். ஐரோப்பியர்களின் இந்திய வருகை, இந்தியக் கிறித்துவ வரலாற்றில் ஒரு திருப்புமுனையாக அமைந்தது. கேரளத்தில் மட்டுமே அறியப்பட்டிருந்த கிறித்துவம் தமிழகம் உள்ளிட்ட இந்திய நாட்டில் துளிர்க்கத் தொடங்கியது.

கி.பி. 700-1500 ஆண்டுகட்கு இடைப்பட்ட 800 ஆண்டுகளில், **இந்தியக் கிறித்துவம் பெரும் பின்னடைவைச் சந்தித்தாலும், பேரழிவைச் சந்திக்கவில்லை**. கேரளக் கிறித்துவர்கள் தலைசிறந்த அறிவாளிகளாகவும், போர் வீறர்களாகமிருந்தனர் என்பது பற்றி ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. வலியர் வட்டம் என்ற மரபு, பனை வில்லர் வட்டம் என்றும் சில குறிப்புகளில் காணப்படுகின்றது. கடற்கரைத் தீவுகளையொட்டிய சின்னமங்கலம் (Chennamangalam), மலையங்கரை (Maliankara), உதயம் பேரூர் ஆகிய பகுதிகளை உள்ளடக்கிய கிறித்துவ அரசு, மகாதேவர் பட்டிணத்தைத் தலைமையிடமாகக் கொண்டு செயல்பட்டதாகவும், அராபியர் தாக்குதலுக்குப் பிறகு உதயம் பேரூருக்குத் தலைநகரம் மாற்றப்பட்டதாகவும் செய்திகள்

கூறுகின்றன. உதயம் பேரூர் தேவாலயம், வலியர் வட்டம் கிறித்துவ மன்னரால் கி.பி. 510ஆம் ஆண்டில் கட்டப்பட்டது.[256] இச்செய்தியை உறுதிப்படுத்தும் பல்வேறு குறிப்புகள் அத் தேவாலயத்தில் உள்ளன. கி.பி. 900 ஆண்டுகளில், தாமஸ் என்ற மன்னர் அரசாண்டார் என்ற செய்தியும் அறியக்கிடக்கின்றது.[257] போப்பாண்டர் யூஜின் IV, தாமஸ் வழிவந்த மன்னருக்கு எழுதிய கடிதம் பற்றியும் (கி.பி. 1439) ஏற்கனவே விளக்கப் பட்டுள்ளது.

இடைக்காலத்தில், கிறித்துவ விடையூழியர் (Missionary) பிரைர்ஜான் (Friar John of Vorvino) என்பார், கி.பி. 1291-92 ஆண்டுகளில் இந்தியாவுக்கு வந்தார். அவர் சீனத்துக்குச் செல்லும் வழியில் 13 திங்கள் மைலாப்பூரில் தங்கியிருந்தார். மைலாப்பூர் பகுதியில் நூற்றுக்கணக்கானவர்களைக் கிறித்துவ சமயத்துக்கு மாற்றினார். அவருடைய முதன்மைப் பணி சீனத்திலிருந்ததால், கி.பி. 1292ஆம் ஆண்டில் சீனா சென்றார். கி.பி. 1307ஆம் ஆண்டில், சீனத்தின் முதல் பேராயராக பிரைர்ஜான், போப் பாண்டவர் நிக்கோலிஸ் IV என்பவரால் பணியமர்த்தப்பட்டார்.[258] பிரைர்ஜான் குறிப்புகளில், கேரளத்தின் கிறித்துவம் நன்னிலையிலிருந்ததாகக் குறிப்பிட்டுள்ளார்.

கி.பி. 1252ஆம் ஆண்டில், போப்பாண்டவர் இன்னொசென்ட் IV, ஐரோப்பிய கிறித்துவ விடையூழிர்கள் பேரவை (The society of Wayfarers of Christ) என்ற சங்கத்தை நிறுவினார்.[259] இதில் தோமினிக்கன் மற்றும் பிரான்சிஸ்கன் திருமடங்களைச் சார்ந்த துறவிகள் பங்கேற்றுப் பணியாற்றினர். இந்தியாவில் கிறித்துவர்கள் பரவலாக வாழ்ந்து வருவது பற்றியும், மைலாப்பூரிலுள்ள தோமையாரின் கல்லறையில் எண்ணற்ற அருஞ்செயல்கள் (Miracles) நடந்து வருவதாகவும் கேள்விப்பட்டனர். இச்செய்திகள், அவர்களுக்கு இந்தியாவுக்குச் செல்லவேண்டுமென்ற ஆவலைத்தூண்டின.

---

256. Early Christianity in India, M.M. Ninam, p. 76.

257. Ibid.

258. Christianity in India and Pakistan, p. 42.

259. Ibid.

அக்காலத்தில் ஐரோப்பாவினின்றும் கடல்வழி மற்றும் தரைவழிகளில் கிழக்கு நாடுகளுக்குச் செல்ல இசுலாமியர்கள் ஐரோப்பியர்களுக்கு அனுமதி மறுத்தனர். மீறிச் செல்வோர் படுகொலை செய்யப்பட்டனர். வழியில் சிக்கிக் கொண்டவர்கள் இசுலாத்தில் சேருமாறு துன்புறுத்தப்பட்டனர். குறிப்பாக, கிறித்துவ சமயத்தாரை அனுமதிக்கவே மறுத்தனர். இந்தியா போன்ற கிழக்கு நாடுகளுக்குச் செல்ல விரும்பிய பல ஐரோப்பிய விடையூழியர்கள் கைது செய்யப்பட்டனர். அல்லாவை ஏற்றுக் கொள்வதாகவும் முகமது நபி அவர்களே தூதர் என்பதை ஒப்புக் கொள்வதாகவும் கூறிய கிறித்துவர்கள், விடுவிக்கப்பட்டனர்.

இச்சூழலில் தான், பிரான்சு நாட்டின் அவிஞோன் (Avignon) நகரத்தைச் சார்ந்த தொமினிக்கன் துறவி ஜோர்டானுஸ், பிரான்சிஸ்கன் துறவிகள் தாமஸ், ஜேம்ஸ், பீட்டர், டெமட்ரியூஸ் ஆகிய ஐவரும்[260] இந்தியாவுக்கு வர எண்ணினர். கடும் தடைகளையும் உடைத்தெறிந்துவிட்டு ஓம்ருஸ் (Omruz) துறைமுகத்திற்கு வந்து சேர்ந்தனர். அங்கிருந்து இந்தியாவிற்குச் செல்ல கப்பலேறினர். கடல் கொந்தளிப்பால் சால்செட் (Salselte) தீவுகளைத் தாண்டிக் கப்பல் செல்ல இயலாத நிலை ஏற்பட்டது. ஜோர்டானுஸ் மட்டும் மற்ற நால்வரையும் தானா (Thana) நகரில் விட்டுவிட்டு, கால்நடையாக இந்தியா நோக்கிப் பயணமானார். சூரத் நகருக்கு வந்து சேர்ந்த போது, தானா நகரிலிருந்த நால்வரும் இசுலாமிய ஆளுநரால் கொலை செய்யப்பட்டனர் என்ற செய்தி கிட்டியது. அந்நால்வரும் இசுலாத்துக்கு உரிய புகழுரைகளைச் செய்ய வில்லை என்பதே கரணியமாகும். சிலகாலம் ஜோடானுஸ் சூரத்தில் தங்கியிருந்து சமயப் பணியாற்றி விட்டு ஐரோப்பா சென்றடைந்தார். தமது பயணத்தின் போது ஏற்பட்ட இன்னல்களைப் போப்பாண்ட வரிடம் எடுத்துரைத்தார்.

கி.பி. 1331ஆம் ஆண்டில், ஜோர்டானுஸ், போப்பாண்டவ ரால் மீண்டும் இந்தியாவுக்கு அனுப்பிவைக்கப்பட்டார். இம்முறை கத்தோலிக்க சமயத்தின் ஆயராக வந்தார். கொல்

260. They were the French Dominican Friar Jordanus, the Franciscans Thomas of Tolentino, James of Padua, Peter of Siena and the Georgian lay Brother Demetrius.

லத்தின் (Quilon) ஆயர் என்ற பொறுப்புடன் வந்தவர், சிரியன் கிறித்துவர்களை, கத்தோலிக்கச் சமயத்திற்கும், போப்பாண்டவரின் தலைமைக்கும் மாற்றமுயன்று தோல்வியடைந்தார். கேரளத்துக் கிறித்துவர்கள், தோமையார் காலத்திலிருந்து கட்டுக்கோப்பான மக்களாக வாழ்ந்து வந்தனர். மேலும் சிலர், தோமையார்தான் இயேசு கிறித்து என்று நம்பியிருந்ததாகவும், இயேசுவைவிட தோமையார் பற்றியே அம்மக்கள் அறிந்திருந்ததாகவும், ஜோர்டானூஸ் அறிந்து கொண்டார்.

மேற்கண்ட செய்திகளின் படி, போர்த்துக்கீசியர்கள் வரும் காலங்கள் வரையிலும், ஏறக்குறைய 1400 ஆண்டுகளாக, கிறித்துவம் இந்தியாவில் வாழ்ந்திருந்ததை அறியலாம்.

கி.பி. முதல் நூற்றாண்டில்
நம்பூதிரிப் பிராமணர்களாலும்,
கி.பி. இரண்டாம் நூற்றாண்டுகளில்
புத்த சமண சமயங்களாலும்,
கி.பி. ஆறாம் நூற்றாண்டுகளில்
பிராமண சமய மறுமலர்ச்சியாலும்,
கி.பி. ஏழாம் நூற்றாண்டுகளில்
இஸ்லாத்தின் வளர்ச்சியாலும்,

கேரளத்தில் கிறித்துவம் அழிந்துவிடவில்லை. மாறாக வளர்ந்தது என்றே கூறவேண்டும். நம்பூதிரிப் பிராமணர்கள் பற்றி இரு கருத்துகள் நிலவுகின்றன. பரசுராமன் பற்றிய தொன்மக்கதை கி.பி. 4ஆம் நூற்றாண்டுக்குப் பிறகே அறியப் படுவதால், பம்பாய் கொங்கணம் உள்ளிட்ட பகுதிகளில் வாழ்ந் திருந்த நம்பூதிரிப் பிராமணர்கள், கி.பி. நான்காம் நூற்றாண் டுக்குப் பிறகே கேரளத்துக்கு வந்தனர் என்ற கருத்தும் உண்டு. தோமையார் காலத்தில் கிறித்துவத்துக்கு மாறிய பிராமணர்கள் நம்பூதிரிகளே என்ற கருத்தும் சொல்லப்படுகின்றது. எப்படி யிருப்பினும் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டுக்குப் பிறகே, நம்பூதிரிப் பிராமணர்களின் செல்வாக்கு கேரளத்தில் பரவலாக அறியப் பட்டது என்பது தெளிவு. கி.பி. முதல் நூற்றாண்டில் ஆண்ட மன்னர்கள் புத்த சமயத்தினராகவும், கி.பி. இரண்டாம் நூற் றாண்டில் சமண சமயத்தினராகவும் இருந்தனர் என்று சொல்லப்படுகின்றது. சேரன் செங்குட்டுவன் சமண சமயத் தைச் சார்ந்தவனே என்பது பலரது முடிவு. கி.பி. 40-55 ஆண்டு

களில் சேரநாட்டை ஆண்ட சேரமன்னன் குருவர்மன் I என்கிற வியாக்கிரசேனன் ஒரு கிறித்துவனே என்பது சிலரது கருத்தாகும். அவன் ஒரு சிற்றரசனாக இருந்திருக்கலாம்.

வைணவ சமயம் கி.பி. ஆறாம் நூற்றாண்டுக்குப் பிறகே, கேரளத்தில் அறியப்பட்டதாகக் கூறுவர். மகாபலி என்ற மன்னன் பற்றிய கதையில், மகாபலி பிரகலாதனின் பெயரனாகச் சுட்டப் படுகின்றான். பிரகலாதன் வைணவப் பற்றாளன் என்றும் அவன் பிராமணன் என்றும் ஒரு கருத்துண்டு. ஆனால் பிரகலாதனின் தந்தை இரணிய கசிவு ஒரு திராவிடன் என்று சொல்லப் படுவதால், பிரகலாதன் பிராமணன் அல்லன் என்பது தெளிவு. வைணவத்துக் கதைகளில் சொல்லப்படும் மகாபலி, விஷ்ணு வின் ஐந்தாவது அவதாரத்தினால் ஒறுக்கப்பட்டான். மகாபலி மூவுலகை ஆண்டதாகக் கூறப்படும் கதையினால் அவன் சேர சோழ பாண்டிய நாடுகளை ஆண்டிருந்தவன் என அறியலாம். தொண்டை நாட்டின் மகாபாலிபுரம் என்பது இவன் பெயரால் சொல்லப்பட்ட கடற்கரை நகரம் எனக் கருதலாம். மகாபலி புரம் என்பதே மாமல்லபுரம் எனத் திரிந்தது என்பதை ஏற்க இயலாது என்பாரும் உளர். மகாபலி என்பதற்கு பெரியதொரு பலிப்பொருள் - the great sacrifice என்பது பொருளாகும். பலி, பலிப் பொருள், பலிபூஜை, போன்ற சொற்கள் கிறித்துவத் தோடு தொடர்புடையன. மகாபலி ஒரு கிறித்துவன் என்பதால், கிறித்துவத்தை அழிக்க முனைந்த சில வைணவர்கள், மகாபலிக் கதையின் வழியே, வைணவக்கடவுளின் பெருமையை உணர்த் தினர் என்று கருத இடமுண்டு.[261] ஆய்வாளர்கள் சிலரும் இக்கருத்தை ஏற்றுக் கொள்கின்றனர். மாவேலிக் கரை என்ற நகரமும் (Mavelikkara) மகாபாலியுடன் தொடர்புடையதாகக் கொள்ளலாம். மகாபலியை வீழ்த்தியதாக அறியப்படும் விழாவே ஓணம் என்பதாகும். இவ்விழாவை கேரளக் கிறித்துவர்களும், இந்துக்களும் இன்று கொண்டாடுகின்றனர். இரு சமயத்தினரும் கொண்டாடும் ஓணம் விழாவின் உண்மைப் பொருள் யாது? ஓணம் என்ற விண்மீனுக்கு மட்டும் திருவோணம் என்ற அடை மொழி கொடுக்கப்பட்டுள்ளது. 22வது விண்மீன் கூட்டமாகச்

---

261. Christianity is older than Hinduism in Kerala, Paper presented by George Menachery, World Syria conference, Kottayam, 2002.

சொல்லப்பட்டுள்ளது. ஓணம் என்றால் ஆறு என்று பொரு ளாகும். ஆறு என்பது தூய்மையைக் குறித்த சொல்லாதலால், மகாபலி இறப்பின் வழியே தூய்மை பெற்றான் எனக் கருதவும் இடமுண்டு. கடவுளுக்காகத் தன்னையே பலியாகக் கொடுத் ததினால் அம்மன்னனுக்கு மகாபலி எனப் பெயர் ஏற்பட்ட தாகவும் சொல்லப்படுகின்றது. கி.பி. 6ஆம் நூற்றாண்டுகள் வரையில் கேரளத்தில் கிறித்துவ மன்னர்களின் ஆட்சி நடை பெற்றதற்கான கருதுகோள்கள் நிறைய உண்டென ஆய்வாளர் கள் கருதுகின்றனர். இருப்பினும் கி.பி. 15ஆம் நூற்றாண்டு வரை, வலியர் வட்டம் போன்ற கிறித்துவச் சிற்றரசுகளும் ஆட்சிப் பொறுப்பிலிருந்தன என அறியலாம். எனவே, இடைக் காலத்தில் கிறித்துவம் சிறந்ததொரு சமயமாகவே கேரளத்தில் அறியப் பட்டது எனக் கொள்ளலாம்.



# இந்தியாவிற்கு கிறித்துவம் அளித்த கொடைகள்

உலகிற்கே மொழியையும், பண்பாட்டையும், கல்வியையும், அறிவியல் கலையையும், வானியலையும், வேளாண்மையையும், தொழில்களையும், நகரிய நாகரிகத்தையும், சமயத்தையும், ஆன்மீகத்தையும் அளித்தவர்கள் தமிழர்களே என்பதில் மாற்றுக் கருத்தில்லை. கி.மு. 10000 ஆண்டுகளில், உலகின் முதல் நாகரிக நாடாக விளங்கிய குமரிக் கண்டம், பல்வேறு இயற்கைச் சீற்றங்களால் அழிவுற்ற போது, குமரிக்கண்டத்துத் தமிழர்கள், சிந்துவெளி, பாரசீகம், பாபிலோன், பாலத்தீனம், எகிப்து, எத்தியோப்பியா, அரேபியா போன்ற நாடுகளுக்குக் குடியேறிப் போனார்கள். இந்நாடுகளில் கி.மு. 8000 ஆண்டுகளில் வாழ்ந் திருந்தோர் தமிழரே என்பதை, பல்வேறு சான்றுகளால் நிறுவ இயலும். தமிழர் குடியேறிய நாடுகளில் சிந்துவெளியைத் தவிர மற்ற நாடுகள் இயற்கையின் பேரழிவுகளால் தாக்கப்பட வில்லை. தமிழர் எடுத்துச் சென்ற தமிழ்ச் செல்வங்களான மொழி, பண்பாடு, நாகரிகம், கட்டிடக்கலை, வானியல் போன்ற துறை களில், குடியேறிய தமிழர்கள் மேலும் மேலும் முன்னேறினர். தமிழ்நாட்டுத் தமிழர்கள், மேலைநாட்டுத் தமிழர் அளவுக்கு முன்னேற, தொடர்ந்து நிகழ்வுற்ற இயற்கைப் பேரழிவுகள் இடந்தரவில்லை. கி.மு. 2000 - 1000 ஆண்டுகளில் பல்வேறு கடற்கோள்களால் தமிழகம் தாக்கப்பட்டதற்கான சான்றுகள் கிடைத்துள்ளன. இருப்பினும் தமிழர் தம் தொல்பெருமை யைத் தொடர்ந்து கட்டிக்காத்து வந்தனர். தமிழரின் நாகரிக வாழ்வுக்கு எடுத்துக்காட்டாக பிற்காலத்தில் அறியப்பட்ட சங்க காலத்தைக் கூறலாம். ஆனால் சங்க காலத்துக்கு முந்தைய காலங்களில், மேலைநாட்டுத் தமிழர் எகிப்திலும் பாபிலோனி லும் தலைசிறந்த பண்பாட்டு வளர்ச்சி பெற்றிருந்தனர் என

லாம். மேலை நாட்டுத் தமிழர் உருவாக்கிய வானுயர்ந்த கட்டிடங்களை, பாபிலோனிலும் எகிப்திலும் காணலாம்.[262]

கி.பி. 1000 ஆண்டுகளில் தொய்வுற்ற தமிழகத்தின் வளர்ச்சியை ஈடுசெய்ய, மீண்டும் தமிழரின் கட்டிடக்கலை, மேலை நாட்டவரின் கட்டிடக்கலை என்ற பெயரால், தமிழ்நாட்டில் அறிமுகம் செய்யப்பட்டது. மேலை நாட்டவர் தமிழகத்தில் புகுத்திய இக்கலை, உண்மையில் தமிழருடையதே என்பதை பல்லாற்றானும் நிறுவ இயலும். குறிப்பாக, மேலை நாட்டுத் தமிழரின் சமய, பண்பாட்டு, கட்டிடக்கலை தொடர்பான பல்வேறு அறிமுகங்கள், கிறித்துவத்தின் வாயிலாக மீண்டும் தமிழகத்தில் அரங்கேறின என்றால், அது மிகையன்று. கிறித்துவம் இன்றைக்கு ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பு இந்தியாவில் அறிமுகம் செய்யப்பட்டது என்பது வரலாற்று உண்மை. கி.மு. 10000 ஆண்டுகளில் தமிழர் கைக்கொண்டிருந்த தமிழ்ச் சமயமே, மேலை நாடுகளில் பாபிலோனிய, யூத சமயங்களாக வெளிப்போந்தன என்பதையும் நிறுவ இயலும். தமிழ் நாட்டில் தமிழ்ச் சமயம் எப்போதும் போல் இருந்த நிலையில், மேலை நாட்டில் தமிழ்ச் சமயம், பல்வேறு சிந்தனையாளர்களால் மெருகூட்டப் பட்டது என்பதும், அவ்வாறு மெருகூட்டப் பட்ட சமயங்களில் ஒன்றே யூத சமயம் என்பதும் வெள்ளிடை மலை. யூத சமயத்தையும் அழகுபடுத்தி, மெருகூட்டி, புதிய மெய்யியல் கொள்கைகளை உருவாக்கிய சமயமே கிறித்துவ சமயமாகும். எனவே, இயேசு கிறித்து வழிவந்த கிறித்துவ சமயத்தில், தொல் தமிழரின் மெய்யியல் கொள்கைகள் பின்னிப்பிணைந்து காணப்படுவது, தமிழரோடு யூதர்கள் கொண்டிருந்த மரபு வழித் தொடர்பேயன்றி, வேறல்லவென்பதை உணர்தல் வேண்டும்.

ஒரு நாட்டின் தொன்மை வரலாற்றை வெளிக்கொணர, தொல்லியல் ஆய்வு (archaeology), நாணயங்கள் (numismatics), மாந்த வளர்ச்சி பற்றிய ஆய்வு (anthropology), புவியியல் (geography), நிலவியல் (Geology), கடலாய்வுகள் (ocean studies), கலை (Art), கலை நயமிக்கக் கட்டிடக்கலை (architecture), பண்பாடு (culture), இலக்கியம் (literature), நாட்டுப் புறக்கலைகள் (folk arts), மொழி (language), சமயம் (religion), செவிவழிச் செய்திகள்

---

262. எபிரேயத்தின் தாய்மொழி தமிழே ம. சோ. விக்டர்.

(local belief) போன்ற பல்வேறு துறைகளை ஆய்வு செய்தல் வேண்டும். இவைகள், பல்வேறு வரலாற்றுச் செய்திகளைக் கொடுக்க வல்லன என்பதில் ஐயமில்லை. இந்த அளவுகோள் களின் அடிப்படையில், இந்தியக் கிறித்துவம் (Early Christianity in India) ஆய்வு செய்யப்படும் போது, பல்வேறு வரலாற்றுச் செய்திகள் வெளிச்சத்திற்கே வந்துள்ளன.

குமரிக்கண்டத்தில் வானளாவிய கட்டிடங்களைக் கட்டி மகிழ்ந்த தமிழர்கள், தமிழ்நாட்டில் குடியேறிய போதும், பல்வேறு கடற்கோள்களைச் சந்தித்தபோதும், அவ்வாறான கட்டிடங்களைக் கட்டத் துணியவில்லை. எக்காலத்தில் எப்பேரழிவு தோன்றுமோ என்ற கடந்த கால பட்டறிவால் ஏற்பட்ட அச்ச உணர்வே இதற்குக் கரணியமாகும். வரலாற்று ஆசிரியர்கள், தமிழகத்தில் பெருமளவிலான கட்டிடங்கள், கோயில்கள் போன்றவை தொன்மைக் காலத்தில் இருந்திருக்க வில்லை என்பதைக் கூறி, தமிழகம் அவ்வாறான கட்டிடக் கலை பற்றி அறிந்திருக்க வில்லையென தவறான முடிவுகளைத் தெரிவிக்கின்றனர். ஊர் நகரத்தின் முற்றுப் பெறாத கோபுரமும் (Babel Tower), எகிப்தின் பிரமிடுகளும் தமிழரின் கட்டிடக் கலைக்குக் கட்டியங் கூறுபவைகளாகும்.[263]

பாபிலோனியக் கட்டிடக்கலையை, வட இந்தியப் பகுதி களில் அறிமுகம் செய்தவர்கள் கிரேக்கர்களே. கிரேக்கக் கட்டிடக்கலையென்பது பாபிலோனியரிடமிருந்து கற்றதே எனலாம். புத்த சமயத்தினர், மேலை நாட்டு கட்டிடக் கலையின் அடிப்படையில், தூண்கள் கோபுரங்கள், பாறைச் சிற்பங்கள், கற்சிற்பங்கள் போன்றவைகளை வடிவமைத்தனர். இந்திய அரசுச் சின்னமாக விளங்கும் சிங்கமுகச் சிற்பம் கூட, சிந்து வெளிச் சிற்பத்தின் சாயலே என்பது சில ஆய்வாளர்களின் கருத்தாகும். நான்கு முக கற்றூண்கள் (obelisks) வட இந்தியா வில் கிரேக்கர்களாலும், தென்னிந்தியாவில் கிறித்துவர்களாலும் அறிமுகம் செய்யப்பட்டன. கி.மு. 300 ஆண்டுகட்குமுன்பு வட இந்தியாவிலும், கி.பி. முதல் நூற்றாண்டுகட்கு முன்பு தமிழகத் திலும் இவ்வாறான ஒற்றைக் கற்றூண்கள் அறியப்படவில்லை.

263. Ibid.

ஒற்றைக் கற்றூண்கள், கற்சிலுவைகள் போன்ற செதுக்கப் பட்ட பாறைவடிவங்கள், கேரளத்தின் தேவாலயங்களில் முதன் முதல் காணப்பட்டன என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். ஒளிக்கம்பம் (deepa sthamba), ஒளித்தாங்கி (lamp stand), கொடிக் கம்பம் (dwaja sthamba), திருநீற்றுக் கல்தொட்டி (Baptismal font), முன்பண்டக் கற்றூண்கள் (Portico pillars) ஆகியவை அவற்றுள் சிலவாகும். கடற்கரை நகரங்களைத் தவிர, மற்ற தேவாலயங்கள் யாவும் மலைமீதே கட்டப்பெற்றன. இதன் நோக்கம், யாவருக்கும் தெரியும் வண்ணம் அமைத்தலும், ஆலயத்துக்குச் செல்ல தமது உடலை வருத்தி ஏறிச் செல்லும் சமய நோக்கமும் கரணியங்கள் ஆகும். மலைமீதே இறைவன் வீற்றிருக்கிறான் என்பது பழந்தமிழர் நம்பிக்கையுமாகும். இந்த நம்பிக்கை தமிழர் வழிவந்த யூதரிடமும் இருந்தது என் பதை, சினை மலையில் (Mt. Sinai) வீற்றிருந்த இறைவன் பற்றிய விவிலியச் செய்தியால் அறியலாம். கேரளத்தின் ஒல்லூர், குருவிலங்காடு, உழவூர், பரப்பூர், இராமாபுரம், கடத்துருத்தி, செங்கணாஞ்சேரி போன்ற ஊர்களிலுள்ள தேவாலயங்கள், மலைமீதே கட்டப்பட்டுள்ளன.[264]

வழிபாட்டு முறைகளில், தேவாலயத்தைச் சுற்றியுள்ள வெளியில் வலம் வருவதாய் (இதனைச் சுற்றுப் பிரகாம் என்பது தற்காலத் தமிழர் வழக்கு. பிரகாரம் = கோவிலைச் சுற்றியுள்ள இடம்), கோவிலுக்கு வெளியே தெருக்களில் வலம் வருதல் (ஊர்வலம்) என்ற இருமுறைகள், கிறித்துவர்களால் தொன்று தொட்டுக் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன. தேவாலயத்தின் உச்சியில் சிலுவையை வைக்கும் முறை பிற்காலத்தில் கடைப் பிடிக்கப்பட்டதாகும். கி.பி. முதல் நூற்றாண்டுகளில், தேவாலயத்தின் முன் கற்சிலுவை நடப்பட்டிருக்கும். அதற்கு முன் புறத்தில் கொடிக்கம்பம் வைக்கப்பட்டிருக்கும். இந்தக் கொடிக்கம்பம் வைக்கும் முறை, பிற்காலத்தில் பிராமண சமயத்தவரால் பின்பற்றப்பட்டது என ஆய்வாளர்கள் கருது கின்றனர். சிலுவைக் கல், பல்வேறு உயரங்களில் வைக்கப் பட்டிருந்தன. உயர்ந்த ஒற்றைக் தேக்கு மரங்களில் கொடிக் கம்பங்கள், பரூர் போன்ற இடங்களிலும் அத்தேக்கு மரங்

264. Early Christianity in India, 2005, p. 47.

களின் மேல் செப்புத் தகடுகளால் வேயப் பெற்ற கொடிக் கம்பங்கள், செங்கணாஞ்சேரி, புலிங்குண்ணு, செம்பக்குளம் ஆகிய ஊர்களிலும் காணப்பட்டன.[265] வண்ணத்தில் தோய்த்த அல்லது துவைத்த கொடி, துவச்ச கொடியெனப்பட்டது. துவச்ச என்ற தமிழ்ச் சொல்லே துவஜ என வடமொழியில் திரிந்தது. கம்பம், ஸ்தம்பம் எனத் திரிந்தது. துவச்சக் கொடிக்கம்பம் - துவச்சக் கம்பம், துவஜ ஸ்தம்பம் என்று வடமொழியில் திரிந்துள்ளதைக் காண்க. உயரம் என்ற தமிழ்ச் சொல்லே, உயரகம் (மலை) - உயரோகம் - ரோகம் என்று வடமொழியில் திரிந்தது. துவஜ ரோகணம் = உயரத்தில் பறக்கும் கொடி.

கேரளத்தில் காணப்படும் கற்சிலுவை, அழகுணர்ச்சியுடன் கூடிய வேலைப்பாடுகள் நிறைந்தவைகளாகக் கருதப்படுகின்றன. கற்சிலுவையைத் தாங்கி நிற்கும் மேடையும் தனிச்சிறப்பு வாய்ந்தது. கேரளத்தில் வேறெந்த சமயக் கோவில்களிலும் காணவியலாத இக்கல் அமைப்புகள் (stone structure), உலகில் எந்தக் கிறித்துவத் தேவாலயங்களிலும் காணப்படாத ஒன்றாகும். தேவாலயத்தின் உள்ளே வைக்கப்பட்டுள்ள கற்சிலுவைகளின் அடிப்பகுதியில் (அசோகச்சிம்ம உருவம் போன்று) தமிழகத் துக்கே உரிய பறவையினமான மயிலும், தாமரை மலரும் அழகுற செதுக்கப்பட்டுள்ளன. இவ்வகையிலான சிலுவைக் கற்சிற்பங்களைப் போன்று, தென்னிந்தியாவில் வேறெங்கும் காணப்படவில்லை. மயிலும் தாமரையும் தமிழகத்தின் தனிப் பெருமையை விளக்குவதுடன், பல்வேறு செய்திகளின் உருவகங் களாக இவை காணப்படுகின்றன. இதனை "மலையாளிதளிம" என்ற சொல்லால், கேரளக் கிறித்துவர்கள் சொல்லிப் பெருமை கொள்கின்றனர்.

பிராமணக் கடவுளரான கணேசர், விஷ்ணு, சிவா, சப்த மாதர்கள், ஜேஷ்டர் போன்றவர்களின் கற்சிலைகள், குருவாயூர் - பாலையூர், கொல்லம், தமிழகத்தின் சேலம், ஈரோடு, கன்னியா குமரி போன்ற பகுதிகளில் காணப்படுகின்றன. இவைகள் யாவும் கி.பி. 9ஆம் நூற்றாண்டுகளுக்குப் பிற்பட்டவைகளே என்பது ஆய்வாளர்கள் முடிபுகளாகும்.[266]



---

265. Ibid. p. 48.

266. Ibid.

## பக்தி மார்க்கம்

பக்தி மார்க்கம் என்ற வட சொல், பற்றிய மாரகம் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே. பற்று - பற்றுதல் என்ற தமிழ்ச் சொல், பக்தி என்று திரிந்தது. மார்+அகம் = மாரகம் என்பது நெஞ்சம். மனம், எண்ணம் போன்றவைகளின் இருப்பிடம். எண்ணத்தின் வழியே செல்லும் பற்றுதலை ஒழுக்கம் என்பர். மார்க்கம் என்ற வடசொல் ஒழுக்கத்தையே குறித்து, பின் அதன் வழி நின்ற சமயத்தையும் குறித்தது. மார்க்கம் = ஒழுக்க நெறிகளில் செல்லும் சமயம்.

மார்க்கம் நல்வழி காட்டுவதால், பிற்காலத்தில் வழி (way) என்ற பொருளுக்கும் மார்க்கம் என்ற சொல்லே சுட்டப் பெற்றது. வடமொழியில் மார்க் (Marg) என்பது வழியாகும். பக்தி மார்க்கம், கி.பி. இரண்டாம் நூற்றாண்டிலேயே தமிழகத் தில் துளிர் விடத் தொடங்கியது எனலாம். கி.பி. நான்காம் நூற் றாண்டின் திருமூலர், ஏழாம் நூற்றாண்டின் ஆதிசங்கரர், பத்தாம் நூற்றாண்டின் இராமனுசர் என, நாயன்மார்கள், ஆழ்வார்கள் என்ற பெரும்பட்டியல், பக்தி மார்க்கத்தை வளர்த்தவர்களைப் பற்றிக் கூறும். பிராமண சமயத்தின் மறு மலர்ச்சியாக பக்தி மார்க்கத்தைக் கூறலாம்.

கிறித்துவ சமயம் அன்பு (love) என்ற அடிப்படையில் தோன்றிய சமயமாகும். அன்பு - அயலானிடத்தும் (neighbours), ஆண்டவனிடத்தும் காட்டப் பெறுதல் பற்றிய விளக்கங்களை கிறித்துவம் விளக்குகின்றது. கிறித்துவ சமயத்தின் அன்பு பற்றிய மெய்யியல் கொள்கை, கி.பி. முதல் நூற்றாண்டுக்கு முன்பு தமிழக மெய்யியல் கொள்கைகளில் காணப்படவில்லை. அன்பினை ஆழமாக எடுத்துரைக்கும் முதல் இலக்கியம் திருக் குறளே எனலாம். கிறித்துவத்தின் அன்பிற்கும், திருக்குறளின் அன்பிற்கும் வேறுபாடுகள் இல்லை. திருக்குறளை, தமிழகத்தின்

விவிலியம் எனக் கூறுதல் பொருத்தமானதே. **திருக்குறளும் கூட, கிறித்துவத்தின் மெய்யியல் கோட்பாடுகளினால் உந்தப் பெற்று எழுதப்பெற்றதே என, புலவர் தெய்வ நாயகம் கருதுகிறார்.**[267]

1. *திருவள்ளுவர் கிறித்துவரா?*
2. *ஐந்தவித்தான் யார்?*
3. *வான் எது?*
4. *நீத்தார் யார்?*
5. *சான்றோர் யார்?*
6. *எழு பிறப்பு?*

ஆகிய நூல்களின் வாயிலாக, திருக்குறள் கிறித்துவ நூலே என முடிவு கட்டுகிறார்.

பெஞ்சமின் வாக்கர் (Benjamin Walker), தமிழகத்தின் பக்தி மார்க்கத்துக்கு வித்திடப்பட்டது கி.பி. முதல் நூற்றாண்டிலே என்பார்.[268] இறைவன் அன்பு வடிவானவன் (God is love) என்ற செய்தியை அடிப்படையாகக் கொண்டதே, நாலாயிரதிவ்விய பிரபந்தம் என்ற வைணவ பக்தி இலக்கியம் என பல்வேறு அறிஞர்களும் கருதுகின்றனர்.

கண்ணன் பற்றிய செய்திகள், கி.பி. 3ஆம் நூற்றாண்டிற்குப் பிறகே மெருகூட்டப் பட்டன என்பது ஆய்வாளர்களின் கருத்து. கிரு என்ற வடமொழி முன்னொட்டுச் சொல்லுக்கும், கிறி (Kri - Kru) என்ற கிரேக்கச் சொல்லுக்கும் மொழியியல் வழியாகத் தொடர்புண்டு. கரு என்ற தமிழ் மூலச் சொல்லே, கிரு - கிறிஷ் என்று வடமொழியிலும், கிறி - கிறித்து என்று கிரேக்கத்திலும் சொல்லப்பட்டுள்ளன. கருமை என்று தமிழ் மூலச் சொல், விண்ணின் கொடையான முகிலையும் மழையையும் குறிக்கும். உலகைச் செழிக்க வைக்கும் முகிலையே மால் எனத் தமிழ் மரபு கூறும். எனவே, கிரு - கரு - கிறு போன்ற முன்னொட்டுச் சொற்கள், ஊகத்தின் அடிப்படையில் பொரு

267. இந்தியா, தோமா வழித் திராவிடக் கிறிஸ்துவ நாடே, டாக்டர் தெ. தேவகலா, மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை, 2005, ப. 281-284.

268. The Bhakti notion, it would appear is a direct consequence of the impact of Christianity in the early centuries of the present era. The Hindu World, Benjamin Walker, Vol. I, New Delhi, 1983.

ளுரைக்கும் சொற்கள் அன்று. உண்மையில் அவை ஒரு பொருள் குறித்த பன்மொழிச் சொற்கள் மட்டுமல்லாது, தமிழ் மூலத்தி னின்றும் திரிந்தவைகளே. கிருஷ்ணனுடைய வரலாறு, ஏறக் குறைய கிறித்துவின் வரலாற்றை யொட்டியே சொல்லப்படுவ தாகும். கிருஷ்ணன் ஆயர்குலத்தில் பிறந்ததும், கிறித்துவை ஆயராக உருவகம் செய்ததும், ஒப்பிடத்தக்கவையாகும். கிறித்து பிறந்த போது, ஆண்குழந்தைகளைக் கொல்லுமாறு மன்னன் ஆணையிட்டதையும், கம்சனுடைய இதே நடவடிக்கையையும் ஒப்புநோக்குக. நல்லவரைக் காக்கப் பிறப்பெடுத்து தீயவரை அழித்த கிருஷ்ணனும், சாத்தானை அழித்த கிறித்துவும் மீட்பர் களாகவே சொல்லப்படுகின்றனர். இயேசு கிறித்துவின் மலைப் பொழிவு (Sermon on the mount)ம், அதனை விளக்கும் மத்தேயுவின் நற்செய்தியும், கிருஷ்ணன் தந்ததாகச் சொல்லப்படும் கீதையில் எதிரொலிப்பதைக் காணலாம். பகவத்கீதை கி.பி. மூன்றாம் நூற்றாண்டில், கிருஷ்ணன் அருளியதாக, வேறோர் ஆசிரியரால் தொகுக்கப்பட்டது என்பதை ஆய்வாளர்களும் உறுதி செய் கின்றனர்.[269] கிறித்து நிகழ்த்தியதாகச் சொல்லப்படும் அருஞ் செயல்கள் (Miracles) கிருஷ்ணனுடைய செய்திகளிலும் காணப் படுகின்றன. எனவே, கிருஷ்ணன் பற்றிய செய்திகளின் தாக்கங் களை, கிறித்துவின் வாழ்க்கையினின்றும் பெற்றுள்ளதாகவும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.*

---

269. கீதையின் மறுபக்கம், கி. வீரமணி, முன்னுரை.

---

* The world was made by Him and the world knew him not. He came unto His own, and they that were His own received Him not. St. John, 10:11 - **Bible**.

Men distraught know Me not in My highest nature. I take a human form and they honour Me not. **Gita**, 9 :11

I know whence I came ... but ye know not. **St.Jn.** 8:14

I have come through many births and thou also; I know them all; thou knowest them not. **Gita**, 4:5.

He that loveth Me ... I Shall love him. **St. Jn.** 14:21

I Love them that are devoted to Me; even as they are to Me, so I to them. **Gita,** 4:11

This is life eternal, that they should know Thee, the only true God, and Him whom thou has sent. **St. Jn.** 17:13.

He who knows me, the Lord of the world, is freed from sins. **Gita**, 10:3.

அபிரா (Abhiras) என்ற இடையர் கூட்டத்துடன், வாசு தேவன் தொடர்பு கொண்டுள்ளதாக **பண்டார்க்கர்** கருது கிறார்.[270] இக்கூட்டம் சிரியாவினின்றும் வடஇந்தியப் பகுதி களில் குடியேறியதாகக் கருதப்படுகின்றது. கிறித்துவின் பிறப்பு, வளர்ப்பு, இறப்பு, உயிர்ப்பு போன்ற செய்திகளடங்கிய கதை களை வட இந்தியாவில் பரப்பினர் என்றும், கிறித்து - கிருஷ்ண னாக மாற்றப்பட்டார் என்றும், இன்றும் கூட வட இந்தியப் பகுதிகளில் சிலர், கிருஷ்ணனை கிறிஸ்டா அல்லது குஸ்டா (Krista or Kusta) என வழங்குவதாகவும் பெஞ்சமின் வாக்கர் கருதுகிறார்.[271]

ஆதிசங்கரர் கி.பி. 9ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். காலாடி என்னும் ஊரைச் சார்ந்தவர். இவ்வூர் கேரளக் கிறித்துவ மையமான அங்கமலைக்கு 3 கி.மீ. தொலைவில் உள்ளது. ஆதிசங்கரர், கிறித்துவ மெய்யியல் கொள்கைகளை அறிந்து கொண்டவர் என்பதற்கு, அவர் வாழ்ந்திருந்த பகுதியே வழி வகுத்தது என்பர். **இவரை, பிராமண சமயத்தின் தாமஸ் அக்வி னாஸ் என்றும் சில மேலை நாட்டவர் கருதுகின்றனர்.** (அக்வி னாஸ் கிறித்துவ சமயத்தின் மிகச் சிறந்த மெய்யியல் சிந்தனை யாளர்). **இயேசுவின் தேவ - மாந்தப் பண்புகளைப் பற்றி எந்த அளவில் இந்தியச் சிந்தனையாளர்களால் புரிந்து கொள்ளப்பட்டது என்பது ஒரு கேள்விக்குறியே. அவர்கள் புரிந்து கொண்ட அளவில் உருவானவைகளே, அத்வைதம், துவைதம், விசிட்டாத்துவைதம் போன்ற கொள்கைகளாகு மென்பது, மெய்யியல் சிந்தனையாளர்களின் கருத்தாகும்.**

மாணிக்க வாசகரின் திருவாசகம், அன்பையே அடிப் படையாகக் கொண்டது. மாந்தனுக்கும் இறைவனுக்குமுள்ள தொடர்பு, இறைவன் மாந்தனை அன்பு செய்யும் பாங்கு, மாந்தன் இறைவனை அன்பு செய்யும் முறைமை பற்றித் திருவாசகம் விளக்குகிறது. திருவாசகத்தின் வேண்டுதல்களைக் கேட்டு இறைவன் இரக்கம் கொள்வார் என்பதை, திருவாசகத் துக்கு உருகார், ஒரு வாசகத்துக்கும் உருகார் என்ற பழம்பெரு மொழியால் விளங்கிக் கொள்ளலாம். பழைய ஏற்பாட்டு

---

270. DR. R.G. Bhandarkar says, on the other hand about the first century of the Christian era the boy - god of a wandering tribe of Abhiras came to be identified with Vasu deva. - Early Christianity in India, p. 58.

271. Hindu World, Benjamin Walker, Vol.I, p. 240.

நூலில் காணப்படும் பாடல்கள் (சங்கீதங்கள்) திருவாசகத்தின் முன்னோடிகளாகக் கருதப்பட வேண்டியவைகளாகும். இரக்கச் சுவையை இவ்விரு வகைப் பாடல்களும் வெளிப்படுத்துகின்றன.

இராவ் சாகிப் அபிறகாம் பண்டிதர், தமிழகத்தின் தலை சிறந்த இசையறிஞர் ஆவார். சிலப்பதிகாரத்தில் காணப்படும் பல்வேறு இசையின் நுணக்கங்களை வெளிப்படுத்தியவர். கருணாமிர்த சாகரம் என்னும் இசை ஆய்வு நூலை 1917ஆம் ஆண்டில் வெளியிட்டவர். பழைய ஏற்பாட்டில் சொல்லப் பட்டுள்ள சங்கீதம் என்ற தலைப்பில் வரும் பாடல்களுக்கும் அப்பாடல்களின் இசை ஒழுங்குக்கும் உள்ள தொடர்பை வெளிப்படுத்தியதோடு, அப்பாடல்கள் தமிழிசையோடு கொண் டுள்ள தொடர்பையும் ஆய்ந்தளித்துள்ளார். பழைய ஏற்பாட்டு நூலில் சொல்லப்படும் இசைவாணன் "ஊஆள்" என்ற ஊது குழல் வாணன், தமிழ்ப் பெண்ணான "ஆடை" (Adah) என்பா ளுக்குப் பிறந்த இரண்டாவது மகனாவான்.[272] தமிழர் வழிவந்த யூதர் வெளிப்படுத்திய பாடல்களில், தமிழிசையிலிருந்தது இயற்கையே என்றாலும், அபிறகாம் பண்டிதர் காலத்தில் யூதர் - தமிழர் பற்றிய முறையான ஆய்வுகள் மேற்கொள்ளப்பட வில்லையென்பதும் குறிப்பிடத்தக்கது.

சித்தர்கள் (Siddhas) என்பார் பதினெண்மர் என்றும், அவர்கள் முக்காலமும் அறிந்தவர்கள் என்றும், இயற்கையின் விதிகளுக்கப்பாற்பட்டு இயங்கியவர்கள் என்றும், அறிவாளிகள் என்றும் பல்வேறு கதைகள் சொல்லப்படுகின்றன. உண்மை யில் அவர்கள் மாந்தர்களே என்பதும், மாந்த அறிவுக்கு மாறு பட்டுச் சிந்தித்தவர்கள் என்பதும் மிகச் சிறந்த மெய்யியல் அறிஞர்கள் என்பதும் வெள்ளிடைமலை. சித்தர்களைப் புரிந்து கொள்ளாதவர்கள், அவர்கள்பால் பல்வேறு கதைகளைக் கற்பித்துக் கொண்டனர். சிற்றர்கள் (the humble persons) என்ற தமிழ்ச் சொல்லே, சித்தர்கள்* எனத் திரிந்தது. (எ.கா. சிற்றெறும்

---

272. Gen. 4:21.

---

* சிற்றர் - சித்தர் என அழைக்கப்பட்டனர். சித்தர்கள் எதையும் செய்ய வல்லவர் என்பதால் அவர்தம் செயல்கள் சித்து எனப் பட்டன. செய்துமுடித்த வெற்றிகரமான செயல் சித்தி என்பட்டது. செய்ய வேண்டிய எண்ணம் சித்தம் எனப்பட்டது. எனவே, சிறு என்ற மூலச் சொல்லிலிருந்தே, சிற்று - சிற்றர் - சித்தர் - சித்து - சித்தி - சித்தம் போன்ற தமிழ்ச் சொற்கள் நீண்டன. இவை யாவும் தமிழ்ச் சொற்களேயன்றி வடசொற்கள் அல்ல என்று அறிதல் வேண்டும். - நூலாசிரியர்.

- சித்தெறும்பு; சிற்றப்பா - சித்தப்பா). சிற்றர்கள் - சிற்றடியார் கள் என்பார் பொறுமையின் இலக்கணமாகத் திகழ்ந்தவர்கள். சினத்தை அடக்கியவர்கள். பிற்காலத்தவர்கள், சிற்றர்கள் என் போர் குள்ளமானவர்கள் என்று தவறாகக் கருதினர். இந்தச் சிற்றர்களில் அகத்தியச் சிற்றர் என்பார் எழுதிய 30 பாடல் களை ஆய்வு செய்த டாக்டர் மைக்கேல் பாரடே (Dr. Michael Paraday) என்னும் மேலை நாட்டவர், விவிலிய நற்செய்தியில் கூறப்படும் மாந்தமீட்பு (Salavation of human being) பற்றிய சிந்தனைகள், சிற்றர் பாடல்களில் வெளிப்படுவதாகக் கூறுகிறார். மக்களின் மூடநம்பிக்கைகளைச் சாடிய சித்தர்களின் பாடல் களை, விவிலியக் கண் கொண்டு பார்க்கும் போது இயல்பான விடை கிடைக்கும் என்பது, பாரடேயின் கருத்தாகும்.[273]

## கிறித்துவமும் சிலப்பதிகாரமும்

கி.பி. முதல் நூற்றாண்டில் தமிழகத்தில் அறிமுகப்படுத்தப் பட்ட கிறித்துவத்தின் கொள்கைகள் திருக்குறளில் ஊடுருவி நிற்கின்றன என்று பல்வேறு அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். திருக்குறள், கிறித்துவ பிறப்புக்கு முந்தின நூற்றாண்டு இலக்கியம் என்பது சிலரது கருத்தாகும். இதுவரை திருக்குறள் எழுதப்பட்ட ஆண்டு எதுவென மெய்ப்பிக்கப்படவில்லை. ஆனால் கி.பி. 180ஆம் ஆண்டுக்கு முற்பட்டது என்பது தெளிவு. ஏனெனில், சிலப்பதிகாரம் கி.பி. 180 ஆண்டுகளில் எழுதப் பட்டது என்று கூறலாம். சிலப்பதிகாரத்தில் திருக்குறள் பற்றிய மேற்கோள்கள் கூறப்பட்டுள்ளன. 44 இடங்களுக்கும் குறையாத அளவில், திருக்குறள் கருத்துகள், சிலப்பதிகாரத்தில் கையாளப் பட்டுள்ளதாக, டாக்டர் உ.வே.சா. கூறுகிறார்.[274]

---

273. The so called siddha school of thought, particularly of the 18 siddhars there is much to be desired on Christian teaching for a better understanding and appreciation of their stand on human salvation. The 30 poems of the Siddhar named Agastiyar needs more careful study on this premises, Dr, Michael Paraday's published dissertation on the study of Siddhar's literature and the Bible throws much light on the Siddhar's thinking on salvation. - Early Christianity in India, V. Gnanasikamani on Agathiyar wisdom, p. 59.

274. சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லாருரை யும் டாக்டர் உ.வே. சாமிநாதையர், (முதல் பதிப்பு 1892), பெசன்ட் நகர், சென்னை, 2001, ப. 699.

தோமையார் மறைந்து 100 ஆண்டுகளில், சேர நாட்டில் கிறித்துவம் பரவலாக அறியப்பட்டிருந்தது. இளங்கோ அடிகளுக்கும் கிறித்துவம் பற்றித் தெரிந்திருக்க வேண்டும் என்று கருதலாம். சமண சமயத் துறவி என்ற அளவில், கிறித்துவக் கொள்கைகளையும் அவர் அறிந்தார் என்றே உணரலாம். கிறித்துவம் தமிழகத்தில் தோன்றிய பிறகு எழுதப்பட்ட சிலப்பதிகாரம், கிறித்துவ சமயத் தொடர்பான செய்திகளை வெளியிடவில்லை என்று பலர் கருதலாம். ஆனால் கிறித்துவ சமயக் கருத்துகள் ஆங்காங்கே பரவிக் கிடக்கின்றனவென்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இளங்கோவடிகள் நினைத்து எழுதிய வரிகளுக்கு, பலநூறு ஆண்டுகளுக்குப் பிறகு எழுதப்பட்ட உரைகள், இளங்கோவடிகளின் எண்ணங்களை வெளியிடவில்லை என்பது பெரும் பாலானவர் கருத்தாகும். திருக்குறள் உள்ளிட்ட தமிழர் யாத்த இலக்கியங்களுக்கு, ஆரியர் வழிவந்த பரிமேலழகர், அடியார்க்கு நல்லார் போன்ற பிராமணர்கள் எழுதிய உரைகள், யாத்தவர்களின் கருத்துகளுக்கு மாறுபட்டு, பிராமண நோக்கில் சொல்லப்பட்டுள்ளது வெள்ளிடை மலை.

சிலப்பதிகாரத்துக்கு முந்திய இலக்கியங்களில், இறைவனைப் பல்வேறு பெயர்களால், சிலப்பதிகாரம் போன்று யாரும் சுட்டவில்லை. நாடுகாண் காதையில் இறைவன் பற்றி இளங்கோவடிகள் பயன்படுத்தும் சொற்களாவன.

அறிவன்[275] : எல்லாப் பொருளையுமறியும் அறிவுடையோன்.

அறவோன்[276] : அறஞ்செய்தலையே தொழிலாகவுடையோன்.

அறிவு வரம்பிகந்தோன்[277] : அறிவெல்லையைக் கடந்தோன்.

செறிவன்[278] : எல்லாவுயிர்கட்கும் இதனாயுள்ளவன்.

சினேந்திரன்[279] : எண்வகை வினைகளை வென்றவன் (டாக்டர் உ.வே.சா.) எண்வகைக் கன்மங்கள் : ஞானாவரணீயம், தரிசனா வரணீயம், வேதநீயம், மோகநீயம், ஆயுஷ்யம், நாமம், கோத்திரம்,

---

275. நாடுகாண் காதை, வரிகள் 177 முதல் 189 முடிய.

276. மேற்படி

277. மேற்படி

278. மேற்படி

279. மேற்படி

அந்தராயம் என்பனவாம் என்று அடியார்க்கு நல்லார் கூறுகிறார். இளங்கோவடிகள் காலத்தில் மேற்கண்டவை பற்றிய கொள்கைகள் இல்லை என்பதும், கி.பி. 10ஆம் நூற்றாண்டுகளில் இவை அறியப்பட்டன என்பதும் கருத்தில் கொண்டால், இளங்கோவடிகள் சொல்லாத செய்திகளைச் சொன்னதாகக் கூறமுற்படுவது, உரையாசிரியர்கள் செய்த சூழ்ச்சியே என அறிதல் வேண்டும்.

சித்தன்[280] : செய்ய வேண்டுவனவற்றைச் செய்து முடித்தவன் (...யார்?)

பகவன்[281] : இறைவன். இச்சொல்லே பக்வான் என்று வடமொழியில் திரிந்தது. திருவள்ளுவர் கூறும் பகவன் தமிழ்க் கடவுளே. பகு என்ற மூலச் சொல்லினின்றும் நீண்டதே, பகுவன் - பகவன் என்ற சொற்களாகும். பகுத்தல் - தொகுத்தல் - வகுத்தல் போன்ற செயல்களால், மக்களை ஆளும் இறைவன். ஆதி பகவன் என்று திருவள்ளுவர் சுட்டிய பெயர், ஆரியக் கடவுளே என்று கருதிய பிராமணர்கள், திருக்குறளை ஆரியர் வழிநூல் எனக் கருதி அழிக்காமல் விட்டனர் என்று தேவநேய பாவாணர் கூறுகிறார்.

தரும முதல்வன்[282] : தருமைகளுக்கு (கொடுத்தவைகளுக்கு) முதன்மையானவன்:

தருமம் என்ற வடசொல், தரு - தருமை - தருதல் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே. தா - தருதல் = கொடுத்தல். தா - தரு = கொடுக்கும் தன்மையுள்ள மரம். தரு - தருமை = கொடுத்தல். தருமை என்ற தமிழ்ச்சொல் வழக்கிழந்துள்ளது. தருமை - தர்மா எனத் திரிந்தது.

பொருளான்[283] : உண்மைப் பொருளானவன்.

---

280. மேற்படி

281. மேற்படி

282. மேற்படி

283. மேற்படி

புனிதன்[284] : அழுக்கற்றவன்.

புர்ாணன்[285] : தொன்மையானவன்.

புலவன்[286] : அறிவுள்ளவன்

சினவரன்[287] : சினத்தைக் கீழ்ப்படுத்தியவன்.

தேவன்[288] : முழுமுதற் கடவுள்.

தேவன் தமிழ்ச் சொல்லே என்பது பாவாணரின் கருத்து. தேவன் என்ற தமிழ்ச் சொல்லே, உலக மொழிகளில் கடவுளைக் குறித்துச் சொல்லப் பட்டுள்ளது.

பரமன்[289] : பரந்த விண்ணுலகின் நாயகன்.

பரத்திலொளி யான்[290] : விண்ணகத்தின் ஒளி போன்றவன்

தத்துவன்[291] : மெய்யியலின் ஊற்றானவன். தெள் - தெளிவு - தெளிந்த - தெளித்துவ - தெளித்துவன் தெளித் துவம் என்ற தமிழ்ச் சொல்லே, தத்வ என வட மொழியில் திரிந்தது.

சாதுவன்[292] : ஒடுங்கினவன்.

சாரணன்[293] : விண்ணுலக வேந்தன்.

மேலும்,

**சித்தன், பெரியவன், செம்மல், திகழொளி[294]**

**இறைவன், குரவன், இயல்குணன், எங்கோன்[295]**

---

284. மேற்படி
285. மேற்படி
286. மேற்படி
287. மேற்படி
288. மேற்படி
289. மேற்படி
290. மேற்படி
291. மேற்படி
292. மேற்படி
293. மேற்படி
294. மேற்படி
295. மேற்படி

குறைவில் புகழோன், குணப்பொருட் கோமான்[296]

சங்கரன், ஈசன், சமயம்பு,[297]

அருகன், அருண்முனி[298]

பண்ணவன், எண்குணன், பழம்பொருள்[299]

விண்ணவன், வேத முதல்வன், விளங்கொளி[300]

மேற்கண்ட இறைவனைப் பற்றிய சொற்களை, இளங்கோவடி கள் தேடிப்பிடித்துச் சொல்கிறார் எனக் கொள்ளலாம். இச் சொற்கள் எல்லாம் எந்த சமயத்தின் கடவுளைக் குறிக்கின்றன என்பதற்கு, ஒவ்வொரு சமயத்தைச் சார்ந்த உரையாசிரியர்களும் ஒவ்வொரு பொருளைத் தருகின்றனர். எடுத்துக்காட்டாக,

சங்கரன் என்ற சொல் சிவனைக் குறித்ததாகவும், அச்சொல் லுக்கு மகிழ்ச்சியைத் தருபவன் என்பதாகவும் (giver of joy) சொல்லப்பட்டுள்ளது. தருதல் என்பது கரங்களுக்கான செயல். இடைவிடாது கொடுப்பதால் சிவந்துபோன கரங்கள் என இலக்கியங்கள் சுட்டும். இக்கரத்தைச் "செங்கரம்" என்று கூற லாம். இச்சொல்லே, சங்கரா என்று வடமொழியில் திரிந்துள் ளதைக் காண்க. சங்கரா என்ற சொல்லுக்கு கொடுக்கின்ற கடவுள் என்பதே பொருளாகி, அது பொதுப் பெயராகவே உள்ளது.

சிலப்பதிகாரத்தில் சொல்லப்பட்டுள்ள இறைவனின் பெயர்களுக்கு, பிற்கால பிராமண உரையாசிரியர்கள் தேடிச் சென்று கதைகளைப் பொறுக்கி எடுத்து, அக்கதைகளைப் பெயர்களோடு இணைத்துள்ளனர். மேற்கண்ட பெயர்ப்பட் டியலில், இளங்கோவடிகள், புத்த, சமண, தமிழ், பிராமண சமயங்களின் கடவுளர் பெயர்களை இணைத்துள்ளதாகக் கருதலாம். இவைகளில் இயேசுவைக் குறித்த பெயர் எது வெனக் கூற இயலாத போதிலும், இயேசுவின் பெயரும் இப் பட்டியலில் இடம் பெற்றிருக்க வேண்டும். புனிதன், தேவன், பரமன், ஈசன், விண்ணவன், வேத முதல்வன் போன்ற சொற்கள்,

---

296. மேற்படி
297. மேற்படி
298. மேற்படி
299. மேற்படி
300. மேற்படி

இயேசுவைக் குறித்தே சொல்லப்பட்டிருக்க வேண்டும். ஈசன் என்பது சரியான தமிழ்ச் சொல்லே. இச்சொல்லைப் பெய ராகக் கொண்டவரே இயேசு ஆகும். ஈசன் என்ற தமிழ்ச் சொல், எபிரேய மொழியில் ஈசா என்று திரிபுபட்டுள்ளது எனலாம். வடமொழியில் ஈஸ்வர் எனத் திரிந்தது. இவையெல்லாம் ஈ, அதாவது கொடுத்தல் என்ற தமிழ் வேர்ச்சொல்லின் நீட்சிகளே எனலாம்.

சிலப்பதிகாரத்தில், பல கோயில்களைப் பற்றி இளங்கோ வடிகள் கூறுகிறார். கி.பி. முதல் நூற்றாண்டிலிருந்தே பூம்புகார் நகரில் கிறித்துவர்கள் இருந்தனர் என்ற செய்தி அறியப்படு கின்றது. இவர்கள் மூன்றாம் நூற்றாண்டில் சேர நாட்டுக்குக் குடிபெயர்ந்தனர் என்ற செய்தியும், அவ்வாறு குடிபெயர்ந் தோர் வேளாளர் மரபினர் என்ற செய்தியும் ஏற்கனவே விளக்கப் பட்டுள்ளது. எனவே, பூம்புகாரில் கிறித்துவக் கோயில் இருந்த தற்கான அடிப்படைச் சான்றுகள் உள்ளன. சிலப்பதிகாரம் எழுதப்பட்ட கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் இறுதியில், தமிழ்க் கிறித்துவர்களும், வணிகம் தொடர்பாகத் தமிழகம் வந்த சிரிய மற்றும் யூதக் கிறித்துவர்களும் பூம்புகாரில் வாழ்ந் திருந்தனர். இவர்களை ஒட்டுமொத்தமாக யாவனர்கள் என்று சிலப்பதிகாரம் சொல்கிறது.[301] அப்படியாயின் கிறித்துவர்களின் கோயில் பற்றிய செய்தியை இளங்கோவடிகள் ஏன் தெரிவிக்க வில்லை என்று எண்ணத் தோன்றுகிறது. அடியிற் கண்ட சிலம்புப் பாடலைக் காண்க.![302]

> "அமரர் தருக்கோட்டம் வெள்யானைக் கோட்டம்
> புகர்வெள்ளை நாகர்தங் கோட்டம் பகல்வாயில்
> உச்சிக் கிழான்கோட்டம் ஊர்க்கோட்டம் வேற்கோட்டம்
> வச்சிரக் கோட்டம் புறம்பணையான் வாழ்கோட்டம்
> நிக்கந்தக் கோட்டம் நிலாக்கோட்டம்"
>
> "சுடுகாட்டுக் கோட்டத்துத் தூங்கிருளில் சென்றாங்கு"
>
> "காமவேள் கோட்டந் தொழுதார் கணவரொடு"

மேற்கண்ட கோட்டங்களுக்கு (கோயில்களுக்கு) அடியார்க்கு நல்லார் தரும் விளக்கம்:

---

301. சிலப்பதிகாரம், 14:67.

302. மேலதே, 9:9-13.

**அமரர் தருக் கோட்டம்** = கற்பகம் நிற்கும் கோயில். கற்பகம் என்ற மரம் தேவருலகில் உள்ளதாகவும் அது வேண்டி யதைத் தரும் என்றும் ஒரு நம்பிக்கை. அம்மரம் இக்கோயிலில் உள்ளதாக நம்பப்பட்டு, வேண்டியவைகள் கேட்கப்பட்டன என்று அடியார்க்கு நல்லார் கூறுகிறார்.[303]

தரு என்பதற்கு மரம் என்ற பொருளோடு, கொடுத்தல் என்ற பொருளும் உண்டு. காய், கனி, இலை, கிளை, வேர் என பலவற்றையும் தருதலால் மரத்திற்குத் தரு வென்ற சொல் குறிக்கப்பட்டது. இது தா என்ற வேர்ச் சொல்லின் நீட்சி யாகும். அமரர் தருக் கோட்டம் என்ற சொற்களுக்கு, அமரர் தருங் கோட்டம் எனப் பொருள் கொள்வதே சரியானது. இக் கோயிலில் வேண்டுதல் செய்பவருக்கு இறைவன் அனைத்தை யும் தருவார் என்பதே பொருள். தருவை மரமாக்கி, மரத்தைக் கற்பகமாக்கிச் சொல்லப்பட்ட செய்தி,

பிற்கால பிராமண உரையாசிரியர்களால் திணிக்கப்பட்ட செய்தியாகும். சிலப்பதிகார மூலத்தில் தருக் கோட்டம் என்று உள்ளதா, தரு கோட்டம் என்றுள்ளதா எனத் தெரியவில்லை. படியெடுத்தவர்களும் பிராமணர்களாதலால், தங்கள் சார்புக்குத் திருத்திக் கொண்டனர்.

**வெள்யானைக் கோட்டம்**

குறிஞ்சி நில மக்கள் யானையை வணங்கியதாகச் செய்தி கள் உண்டு. சிந்துவெளியிலும் யானை வணக்கமிருந்ததாகவும், அந்நாகரிக அழிவுக்குப் பின் குசராத், பம்பாய் பகுதியில் குடி யேறிய தமிழர், யானையை வணங்கியதாகவும், அவ்வணக்கமே பிற்காலத்தில் கணேசக் கடவுள் வணக்கமாக மாறியதாகவும் கூறப்படும் செய்தியின் அடிப்படையில், யானைக்கோட்டம் சிவ நெறிக் கோயிலாக இருந்தது என்றுணரலாம். அய்ராவதம் என்ற யானை பற்றிய கதைகள், காலத்தால் பிந்தியவை என்பது ஆய்வாளர்களின் கருத்தாகும். **அயிரவ் அனா (Airavana) என்ற வடசொல்லில்[304], அனா என்பது ஆனை என்ற தமிழ்ச் சொல் லின் திரிபே**. கிழ்த்திசையைக் காக்கும் காவலான அய்ராவதம் கூறப்பட்டுள்ளது. அய்ராவதம் பற்றியக் குறிப்புகள் வேதத்தில்

---

303. சிலப்பதிகார மூலமும் அரும்பதவுரையும் அடியார்க்கு நல்லாரு ரையும், டாக்டர் உ. வே. சா., ப. 245.

304. An Encyclopedia of Hindu Deities, p. 21.

காணப்படவில்லை யாதலால், சிலப்பதிகார காலத்துக்குப் பிறகே அய்ராவதம் பற்றிய கதைகள் எழுந்தன எனலாம். உரை யாசிரியர் தமது காலக் கதையை முன்கூட்டியே தெரிவிக்கிறார்.

**புகர் வெள்ளை நாகர்தங் கோட்டம்**

பலதேவர் கோயில். இராமாவதாரக் கடவுள். பலராமர் கோயில் எனக் கூறப்படுகின்றது. இராமன் கதையைப் பற்றி இளங்கோவடிகள் குறிப்பிடுகின்றார். இருப்பினும் வெள்ளை நாகர் என்பது பலதேவரே என்று அடியார்க்கு நல்லார் கூறுவது பற்றிச் சிந்திக்க வேண்டியுள்ளது.[305] நாகர் என்பார் தமிழரே என்பதாலும், அவர் கரியை நிறம் கொண்டவர் என்பது அப்பெயரிலேயே உள்ளதாலும் (நாகு - கருமை), வெள்ளைக் கருப்பர் என்ற சொல் எவ்வாறு பொருத்தமானது என்ற ஐயம் எழுகின்றது. வடமாநிலத்து பலதேவரை, நாகர் இனத்துடன் இணைத்திருப்பது, வரலாற்றுச் செய்திக்கு முரண்பட்டது. வெள்ளை நாகர் என்ற கடவுள் யார் எனச் சிந்திப்பது நல்லது. புகர் = அழகு. வெள்ளை நாகர் = வெண் நாகம். நாகத்தின் கோயிலாக இருக்கவும் வாய்ப்புகளுண்டு.

**உச்சிக் கிழான் கோட்டம்**

கதிரவன் கோயில். (இது தமிழர் கோட்டமே)

**ஊர்க் கோட்டம்**

கைலாயம் நிற்கும் சிவன் கோயில் என்று அடியார்க்கு நல்லார் கூறுகிறார்.[306] ஊர் என்பது கைலாயம் என்று பொருள் கொள்கிறார். உண்மையில் இப்பொருளைத் தாங்கி இக்கோயில் இருப்பதாகத் தெரியவில்லை. ஊர் மக்களெல்லாம் தங்கள் சமய வேறுபாடுகளை மறந்து வழிபாடு நடத்தும் ஒரு கோயிலாக அது இருந்திருக்க வேண்டும். சமயங்களை ஒன்றிணைக்கும் வகையில் நிறுவப்பட்ட கோயிலாக அதனைக் கொள்ளலாம். ஊர் என்பது ஆகு பெயராய் வந்தது.

**வேற்கோட்டம்**

வேல் = ஆகுபெயராய் இதுவும் வந்ததென்க. முருகன் வாழும் கோயில். இது ஒரு தமிழ்க் கோயிலே.

---

305. அடியார்க்கு நல்லாருரை, ப. 245.

306. மேலதே, ப. 246.

**வச்சிரக் கோட்டம்**

வச்சிரப் படையான ஈட்டி (சூலாயுதம்) உள்ள கோயில் சிவனுக்குரியது. வச்சிராயுதத்தைத் தாங்கிய இந்திரனுடைய கோயில் என்ற கருத்தும் உண்டு. வச்சிர (Vajra) என்ற சொல்லுக்கு வெண்மையான வைரம் (Diamond) என்று வடமொழியில் பொருள் சொல்லப்பட்டுள்ளது.[307] வெள் + சூரி வெள்ளை நிறமுடைய கூர்மையான கருவி. சூரி = கூரிய வாள் அல்லது ஈட்டி. சுள் - சூர் - சூரி என நீண்டது. சூரி தமிழ்ச் சொல்லே. வெள் + சூரி - வெச்சூரி வெச்சிர - வஜ்ர என வடமொழியில் திரிந்தது.

**புறம்பணையான் வாழ் கோட்டம்**

ஊருக்குப் புறத்தே வாழும் அய்யனார் கோயில். வணிகர்களின் கடவுளான மாசாத்தன் கோயில். சாதவாகனன் கோயில் என்று சொல்லப்பட்டாலும், அய்யனார் தமிழ்க் கடவுளே.

**நிக்கந்தக் கோட்டம்**

நிக்கந்தமென்பது ஒளி பொருந்திய திருவடி என்று பொருள் கொள்ள வேண்டும். இறைவன் ஒளிபொருந்திய திருவடிகளைக் கொண்டவனே. இதனை அருகன் கோயில் (சமணதேவன்) என அடியார்க்கு நல்லார் கூறுவது பொருத்தமானதாகத் தெரியவில்லை.[308] அருகன் என்ற பக்குவி என்பானைப் பற்றி மணிமேகலையில் சொல்லப்பட்டுள்ளது (28:96) பக்குவி = சமயக்குரவன்.

**நிலாக் கோட்டம்**

திங்களுக்கான கோயில். தமிழகத்தைப் போலவே ஊர் நகரத்திலும் (பாபிலோன்) நிலாக் கோட்டம் இருந்ததற்கானச் சான்றுகள் உள்ளன.

மேற்கண்ட கோயில்களில், புகர்வெள்ளை நாகர் தம் கோட்டம் (பாம்பு), உச்சிக் கிழான் கோட்டம் (கதிரவன்), வச்சிரக் கோட்டம், வேற்கோட்டம், புறம்பணையான் வாழ் கோட்டம், நிலாக் கோட்டம் ஆகியவை தமிழ்ச் சமயத்தோடு தொடர்புடைய கோயில்களாகும்.

---

307. An Encyclopedia of Hindu Deities. p. 606.

308. அடியார்க்கு நல்லாருரை, ப. 246.

அமரர் தரு கோட்டம், ஊர்க்கோட்டம், நிக்கந்தக் கோட்டம் ஆகியவை எச்சமயத்தைச் சார்ந்தவை எனத் தெரிய வில்லை. கி.பி. முதல் நூற்றாண்டில் தான் ஹீனாயனம் என்ற கடவுள் வணக்கப் புத்தப் பிரிவு தோன்றியது. எனவே மிகக் குறுகிய கால அளவுகளில் புத்தருக்குத் தமிழகத்தில் கோயில் கட்டியிருக்க வாய்ப்பில்லை. அமரர் = தேவர். விண்ணுலகில் வாழ்பவர்.[309] *(மணி. பதி. 28:9)*

அமரர் என்பார் நீத்தார் என்றும் பொருள் கொள்ளலாம். இறந்துபோனவர்கள் விண்ணகத்தில் வாழ்கிறார்கள் என்றும், அவர்கள் புனிதர்கள் என்றும், புனிதர் வணக்கம் ஏற்றுக் கொள்ளப்பட்ட கிறித்துவ சமயம் கூறுகிறது. பூம்புகாரில் கிறித்துவர்கள் வாழ்ந்திருந்ததற்கான செய்திகளை ஏற்கனவே கண்டோம். எனவே அமரர் தரு கோட்டம் என்பது தோமையார் பெயரிலிருந்த கோயிலாகவுமிருக்கலாம்.

பொதுவாகத் கிறித்துவக் கோயில்களுக்கு பிறசமயத்தாரும் வருகை தருவது கண்கூடு. அந்த வகையில் ஊரார் அனைவரும் சென்று வழிபட்ட கிறித்துவக் கோயிலாக, ஊர்க்கோட்டம் அமைந்திருக்கலாம். நிக்கந்தக் கோட்டமும் அவ்வாறே. வருங் கால ஆய்வுகள் பூம்புகாரிலிருந்த கிறித்துவக் கோயில்களைப் பற்றிய விளக்கங்களைக் கொடுக்கும் என நம்பலாம்.

## கிறித்துவமும் வஞ்சியும்

முசிறித்துறைமுகம் பற்றி ஏற்கனவே விளக்கப்பட் டுள்ளது. முசிறி என்பது ஒரு குறிப்பிட்ட ஊர் அல்லவென்பதும், அது சில ஊர்ப்பகுதிகளை உள்ளடக்கிய பெயர் என்பதும் அறியப்பட்டுள்ளது. கொடுங்கல்லூர், திருவஞ்சிக்குளம், மலை யங்கரை போன்ற ஊர்கள் இருந்த பகுதியே முசிறி என்றழைக் கப்பட்டது. பேரியாற்றங்கரையிலும், கழி முகத்திலுமிருந்த இவ்வூர்கள் பற்றிய செய்திகள் வரலாற்றில் இடம் பெற்றுள்ளன. திருவஞ்சிக்குளம் என அழைக்கப்பட்ட ஊரே வஞ்சி எனச் சுருக்கி அழைக்கப்பட்டதாகவும் கூறுவர். வஞ்சி என்றால் ஒரு வகைக் கொடியெனப் பெயர் பெறும். கொடிபோன்ற இடை யைக் கொண்ட பாவையரும் வஞ்சி எனப்பட்டனர். தமிழ் இலக்கண இலக்கியங்களில் வஞ்சி என்ற சொல் பரவலாகப்

---

309.மணிமேகலை பதிகம், 28:9.

பயன்படுத்தப்பட்டுள்ளது (வஞ்சிச் சீர், வஞ்சியுரிச்சீர், வஞ்சித் தாழிசை, வஞ்சிப்பா என விரியும்). வஞ்சி என்ற திருவஞ்சிக் குளமே சேரர்களின் தலை நகரம் என்றும், அது முசிறித் துறை முகத்திற்கு மிக அருகில் இருந்ததென்றும் கூறப்படும் செய்திகள் பற்றிக் கருத்து வேறுபாடுகள் உள்ளன. வஞ்சி என்பது இன்றைய கரூர் நகரமே என்பது பலரின் கருத்துரைகளாகும். கரூர் சங்க காலத்தில் சிறப்புற்றிருந்த வணிக நகரமேயன்றிச் சேரர்களின் தலைநகரமன்று என்பதும் சிலரின் எண்ணங்களாகும்.

முசிறி - கரூர் - உறையூர் - பூம்புகார் என்ற நகரங்களை இணைத்த பெருவழிச் சாலையொன்று அக்காலத்திலிருந்தது என்றும், தோமையார் இவ்வழியேதான் தனது பயணத்தை மேற்கொண்டார் என்ற கருத்தும் உண்டு. முசிறித் துறைமுகம் பற்றிப் புறநானூறு கூறுகிறது. சிலப்பதிகாரத்தில் பேரியாற்றங் கரையிலிருந்த வஞ்சி (முசிறி) பற்றிய செய்தியில்,

வலம்படு சிறப்பின் வஞ்சி மூதூர்[310]
பேரிசை வஞ்சி மூதூர்ப் புறத்து[311]
வஞ்சி மூதூர் மாநகர் மருங்கில்[312]
வஞ்சி மூதூர் மணிமண் டபத்திடை[313]

என்றவாறு மூதூர் என்ற அடைமொழியுடன் சொல்லப்படு வதால், அந்நகர் பழைய பெருமைகளைக் கொண்ட நகர் என அறியலாம்.

திருவஞ்சிக் குளம்,[314] முசிறித்துறைமுகத்திற்கு மூன்றுகல் தொலைவில் இருந்ததாகவும், அங்கு மன்னன் வாழ்ந்து வந்த தாகவும் குறிப்புகள் தெரிவிக்கின்றன. மிகப்பெரிய வணிக நகரான முசிறியை விடுத்து, கரூரில் சேரமன்னன் வாழ்ந்திருந் தான் என்ற செய்தியும், வரலாற்று நிகழ்வுகளும் பல நிலைகளில் முரண்படுகின்றன. தோமையார் சேரமன்னனைச் சந்தித்த செய்திகள் சிரியத் திருச்சபைக் குறிப்புகளில் காணப்படுகின்றன.

---

310. சிலப்பதிகாரம், 29:4
311. மேலதே, 28:196.
312. மேலதே. 30:137
313. மேலதே. 30:173.
314. வஞ்சிக்களம், வஞ்சிக்குளம், அஞ்சைக் களமெனவும் வழங்கும்.
- சிலப்பதிகாரம் மூலமும் உரையும், ப. 725.

முசிறி என்னும் ஊர்ப்பெயருக்கான காரணியம் ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. முசிறித் துறைமுகத்தை மேலை நாட்டவர் முசிறிஸ் (Muziris) என அழைக்கின்றனர். ஆனால் கிரேக்கர் குறிப்புகளில், அந்தரப் போலிஸ் (Andrapolis) என்று குறிக்கப் பட்டுள்ளது. கிரேக்கர்கள் தங்கள் மனம்போன போக்கில், உலகின் நகரங்களின் பெயர்களைத் தங்கள் மொழியில் மாற்றி வைத்துக் கொள்கின்றனர். இதனால் பலவாறான குழப்பங்கள் தோன்றுகின்றன. Andrapolis என்ற சொல்லுக்கு "மாந்தர்களின் நகரம்" என்பதே பொருளாகும் (manly city). இது மக்கள் பெரு மளவில் கூடும் துறைமுக நகராக முசிறி விளங்கியதால், இப் பெயரை வைத்துக் கொண்டனர் போலும்.

முச்சிறு நிலப்பகுதிகள் (three islands) இருந்தமையால், முச்சிறி என்று அழைக்கப்பட்டு முசிறி என்றானது என்ற விளக் கம் ஒருபுறமிருக்க, மூச்சேரி என்ற தமிழ்ச்சொல்லே, முசிறி எனத் திரிந்தது என்ற கருத்தும் உள்ளது. சேரி என்பது, சேர்ந்து வாழும் மக்களிடம் என்று பொருள்படும். சேர் - சேரி = மக்கள் குடியிருப்பு. மூச்சு என்ற தமிழ்ச் சொல்லுக்கு ஆண்மை, வலிமை யென்று மலையாளச் சொல்லகராதியில் பொருள் கூறப்பட் டுள்ளது. பாடி என்ற தமிழ்ச் சொல்லே, பாலிஸ் அல்லது போலிஸ் என்று கிரேக்கத்தில் திரிந்ததாக, தேவநேயப் பாவாணர் கூறுகிறார். இது, பொலி என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாகவும் இருக்க வேண்டும். பொல் - பொலி - பொலிதல் = இணைதல் கூடுதல், சேர்தல் என நீளும். பொலி என்ற தமிழ்ச் சொல்லே, Poly என்று கிரேக்கத்தில் திரிந்தது என்க. மூச்சேரி என்பதே முசிறியாயிற்று என்ற விளக்கம், Andrapoly - Andrapolis என்ற கிரேக்கச் சொல்லை அறிந்தவரை உண்மையாகவே உள்ளது. Andra = மூச்சு என்றும், Poly - சேரியென்றும் அறியப் படும்.

முச்சி என்று இன்றும் தமிழகத்தில் வழக்கிலுள்ள சொல், முறத்தைக் குறிப்பதாகும். மூன்று பக்கம் உயர்ந்தும், ஒரு பக்கம் வாயைத் திறந்தபடியிருக்கும் முச்சியைப் போன்று முசிறித் துறைமுகம், மேற்குப்பக்கம் தாழ்வாகவும், மற்ற மூன்று பக்கங் கள் உயர்ந்து நிலமாகவும் இயற்கையிலேயே அமைந்திருந்த தால், ஒரு துறைமுகத்திற்கான முழுத் தகுதியையும் முசிறி பெற்றிருந்தது எனலாம். முச்சி + சேரி = முச்சிச்சேரி - முசிறி என்று திரிந்ததாகவும் கொள்ள இடமுண்டு. இன்னுமோர்

விளக்கமாவது, மேல் + சேரி மேச்சேரி - உயர்ந்த நிலத்திலுள்ள குடியிருப்பு என்ற பொருளில், மேச்சேரி முசிறி எனத் திரிந்த தாகவும் கொள்ளலாம். மேற்கண்ட விளக்கங்களில் எது சரியான விளக்கம் என அறிய இயலவில்லை.

பேரியாறு கடலில் கலக்கும் பகுதி, இயற்கையிலேயே உடைபட்டுப் பல நிலத்துண்டுகளாகக் காட்சியளித்தது. உவர் நீர் பேரியாற்றின் வழியே உட்சென்றது. இவ்வாறான இயற்கைத் துறைமுகத்தின் ஒரு பகுதியினின்று மற்றொரு பகுதிக்குச் சிறு ஓடம் போன்ற மரக்கலங்களில் தான் செல்லும் படி இருந்தது. ஐரோப்பிய நகரமான வெனிஸ் நகரை முசிறித்துறைமுகம் நினைவுபடுத்தும் வகையிலிருந்தது. தோமையார் முசிறித் துறைமுகத்தில் இறங்கி, மலையங்கரை என்ற பகுதியில் சின்னாட்கள் தங்கியிருந்தார் என்று, மலங்கரா திருச்சபைக் குறிப்புகள் கூறுகின்றன.

வஞ்சி என்பது திருவஞ்சிக்குளமே எனவும், திருவஞ்சிக் குளம் பேரியாற்றங்கரையிலிருந்த, துறைமுகத்துக்கருகே அமைவுற்றிருந்த தீவு போன்ற நிலப்பகுதியென்றும் கருதலாம். வஞ்சியே சேரரின் தலைநகரம் என்றும், குட்டுவனின் அரண் மனை வஞ்சிப் பெருமேட்டில் அமைவுற்றிருந்ததாகவும், இளங்கோவடிகள் இந்நகரைப் பூவா வஞ்சி, வாடாவஞ்சி என குறிப்பிட்டிருப்பதாகவும் கொள்ளலாம். சங்ககாலச் சேரர் களின் தலைநகரம் கொடுங்கல்லூரே என முனைவர் இராசு கூறுகிறார். சேரர்களின் தலைநகரான வஞ்சி, கொடுங்கல்லூ ருக்கும் திருவஞ்சிக் குளத்துக்கும் அருகிலிருந்ததாக குஞ்ஞன் பிள்ளை என்ற கேரளத்து ஆய்வாளர் கருதுகிறார் (பண்டைய கேரளம், பக். 104-107). அகநானூற்றுப் பாடல் 263, குஞ்ஞன் பிள்ளையின் கூற்றுக்கு ஏற்புடையதாக உள்ளதை நோக்குக.[315]

கோவலன் வெட்டப்பட்டு இறந்த காலம் தொட்டு பாண்டிய நாடு வறட்சியில் வாடியது. கொற்கை நகரத்து இளஞ்செழியன் கண்ணகியின் சினம் தணிய ஆயிரம் பொற் கொல்லர்களைக் கொன்றான். உடனே மழை பெய்தது. இதனைக் கேள்வியுற்ற கொங்கு நாட்டவரும் (இன்றைய கரூரைச் சுற்றியுள்ள பகுதி),

315. சங்க காலச் சேரரின் தலைநகர் எது? மு.ம. கோபாலன், திருச் சிராப்பள்ளி நாணயவியல் கழக ஐந்தாம் ஆண்டுவிழா மலர், 1999. ப. 35-36.

சோழ நாட்டரசன் பெருநற்கிள்ளியும், இலங்கை மன்னன் கயவாகுவும் தத்தம் நாட்டில் கண்ணகிக்குக் கோயில் எடுத்து மழைவளம் பெற்றனர் என்ற செய்தியை, சிலப்பதிகாரம் வஞ்சிக் காண்டம் விளக்குகிறது.[316] இச்செய்தி, கொங்கு நாட்டைத் தனியொரு நாடாகச் சுட்டுவதை நோக்குக. தமிழகத்தின் பல்வேறு அறிஞர்களும், வஞ்சி நகர் பற்றி முரண்பட்டாலும், சேரர்களின் தலைநகரம் முசிறியை அடுத்த வஞ்சியே என்பதற் கானச் சான்றுகள், வெளி நட்டினர் வழியேயும் நமக்குக் கிடைத்துள்ளதால், தோமையார் சந்தித்த மன்னன் சேரனே என்பதும், அவன் திருவஞ்சிக் குளத்தில் வாழ்ந்திருந்தான் என்பதும், அவனைக் கிறித்துவனாகச் சமயமாற்றம் செய்தார் என்பதும், பல்வேறு குறிப்புகளின் வாயிலாக அறியலாம்.

## கொண்ட போரஸ் - குட்டுவனே

அப்பன் (Habban) என்ற பெயர்கொண்ட தமிழ்வணிகன், எருசலேம் நகரில் வணிகத்தின் பொருட்டு தங்கியிருந்த வேளையில், தோமையாரிடம் அப்பன் அறிமுகமானான். இவனே தோமையாரைத் தமிழகத்திற்கு அழைத்து வந்தவன் என்று குறிப்புகள் கூறுகின்றன. தமிழ் வணிகன் ஒருவன், தோமை யாரைத் தமிழகத்திற்கே அழைத்து வந்திருப்பான் எனக் கருத இடமுண்டு. ஆனால், (Acts of Thomas) குறிப்புகள், அப்பன் என்ற வணிகன், தோமையாரை சந்தருக் (Sandaruk) என்ற துறைமுகத்துக்கு அழைத்துவந்தான் எனக் கூறுகிறது. சந்தருக் என்பது சிரிய மொழிச் சொல்லாகும் (Syriac). இந்நகரில்தான், தோமையாரை கொண்ட போரஸ் என்ற மன்னனிடம் அப்பன் விற்றுவிட்டான் என்று கூறப்படுகின்றது. கொண்ட போரஸ் (Gondophares) என்பது கிரேக்கச் சொல்லாகும். இதனை குட்நாபர் (Gudnaphar) என்று சிரியாக் மொழி கூறுகிறது. கிரேக்கச் செய்தியின்படி, அந்திர பொலிஸ் என்ற முசிறி நகரமே, சந்தரக் எனக் கொண்டால், தோமையார் பாரசீகம் (Parthia) செல்லவில்லையென்பது உறுதியாகிறது. எனவே, கொண்ட போரஸ் அல்லது குட்நாபர் என்ற மன்னர், சேர மன்னனே என்பது சிலரது கருத்தாகும். தோமையாரைப் பாரசீகத்துக்கு அழைத்துச் செல்லவேண்டிய நிலை அப்பனுக்கு ஏற்பட்டிருக்க வாய்ப்பில்லையென்பது பல ஆய்வாளர்களின் கருத்துமாகும்.

---

316. சிலப்பதிகாரம் வஞ்சிக்காண்டம்.

கொண்ட போரஸ் மன்னின் காலம் கி.மு. 30-15 என்பதும் சிலரது கருத்தாகும். இவன் வடமேற்கு இந்தியாவில் அரசாண்டவன் என்பர். இவனைத் தோமையார் சந்தித்திருக்கவில்லையென்றும், குட் நாபர் என்ற (சிரியாக் குறிப்பின்படி) மன்னனையே தோமையார் சந்தித்ததாகவும் சிலர் கருதுகின்றனர். குட்நாபர் என்ற சிரியாக் சொல், குட்டுவன் என்ற பெயரின் திரிபே என்பதும் சிலரது கருதுகோளாகும்.[317]

Kuttuvar - Gudduvar - Gudnaphar எனத் திரிந்தது என்பர்.

குட்டுவனின் காலம் கி.பி. 180 என முடிவு செய்துள்ளனர். தோமையார் காலத்தில் வாழ்ந்திருந்த சேர மன்னன் யார் என்பதிலும் குழப்பங்கள் உள்ளன. குட்டுவன் என்பதற்கு குள்ளமானவன் என்பதே பொருளாகும். எல்லா மன்னர்களும் குட்டுவனாக இருந்திருக்க வாய்ப்பில்லை. சிவந்த நிறத்தோடு குள்ளமாயிருந்ததால், செங்குட்டுவன் என்று அழைக்கப்பட்டிருக்க வேண்டும். கி.பி. 50-70 ஆண்டுகளில் குட்டுவன் என்ற பெயரில் சேரமன்னன் ஒருவன் இருந்ததாகக் கூற இயலவில்லை. கொற்றவன் என்ற சொல்லே, குட்டுவன் எனத் திரிந்ததாகச் சொல்வதும் ஏற்புடையதாயில்லையாதலால், மன்னர்களின் பொதுப் பெயராக, குட்டுவன் என்ற சொல் இருந்திருக்க வாய்ப்பில்லை. (பிற்காலத்தில் அறியப்பட்ட, கட்டபொம்மன், கட்டையத் தேவன் போன்றோர் குள்ளமானவர்களே) தோமையார், சேரமன்னர்களுக்கடங்கிய குறுநிலமன்னர்களில் ஒருவனான குட்டுவன் என்பானைச் சந்தித்திருக்கலாம். குட்நாபர் என்ற பெயருடைய மன்னன், பாரசீகத்தைச் சார்ந்தவன் என்பதைவிட, சேர மன்னன் என்பதற்கான வாய்ப்புகளே உள்ளன எனலாம்.

மேலும், குட்நாபர் என்ற மன்னன், அரண்மனை கட்டுவதற்காகத் தோமையாரிடம் கொடுத்த பொற்காசுகளை, மக்களுக்காகச் செலவிட்டுவிட்டார் என்றொரு கதை தோமையாரின் வாழ்க்கையில் சொல்லப்பட்டுள்ளது. இதே கதையை மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்திருந்ததாகச் சொல்லப்படும் ஒரு மாணிக்கவாசகருடன், அல்லது பிற்கால மாணிக்கவாசகருடன் தொடர்புபடுத்தி ஒரு கதை சொல்லப்படுகிறது.

---

317. Did the Apostle Thomas visit South India?, Dr. Basil S. Davis, Journal of the Institute of Asian studies, Vol. XVIII No. 1., Sept. 2000, p.31

நரிகளைப் பரிகளாக்கிய கதையின் கரு, தோமையாரின் கதை யோடு தொடர்புடையது என்பதால், தோமையார் கதையில் சொல்லப்படும் மன்னன், சேர மன்னனே எனக் கருதலாம். இம்மன்னன் முசிறித்துறைமுகத்தை அடுத்த திருவஞ்சிக் குளத் தில் வாழ்ந்திருந்தவனே எனவும் கருத இடமுண்டு.

தோமையார் எவ்வளவு நாட்கள் முசிறியிலிருந்தார் என்பது பற்றிய தெளிவான செய்திகள் இல்லை. இருப்பினும் முசிறியில் பலரைக் கிறித்துவ சமயத்துக்கு மாற்றினார் எனக் கருதலாம். மயிலையில் சமயப் பணியாற்றிய தோமையார், பெரும் எண்ணிக்கையிலான மக்களை அங்கு அவர் சமய மாற்றம் செய்திருக்க வேண்டும். தோமையார் கொலையுண்டது பற்றிப் பல்வேறு செய்திகள் இருந்தபோதும், தோமையாரின் கல்லறை யைக் கட்டியபோது பயன்படுத்தப்பட்ட செங்கற்கள், கி.பி. முதல் நூற்றாண்டைச் சேர்ந்தவைகளே என ஆய்வாளர்கள் உறுதி செய்கின்றனர். கி.பி. முதல் நூற்றாண்டில், புதுவையை யடுத்த அரிக்க மேட்டில் கண்டெடுக்கப்பட்ட சுட்டசெங்கற் களின் அளவுகளைக் கொண்டதாகவே, தோமையர் கல்லறை யில் கற்களும் உள்ளனவென்று அறியப்பட்டுள்ளது.[318]

தோமையார் தமது மனைவி மக்களுடன் தமிழகம் வந்தார் என்று சொல்லப்படுகின்றது. இருப்பினும் அவரது மனைவி, மக்கள் பற்றிய செய்திகள் யாதொன்றும் கிடைத்தில. தோமை யாரின் மக்கள், தமிழக மக்களோடு திருமண உறவுகள் வழியில் கலந்திருக்கலாம் எனக் கருதலாம். தோமையார் தமிழகம் வந்தது உண்மையே எனவும், அவர் வித்திட்ட கிறித்துவம், தமிழகத்தையும் தாண்டி, இந்தியப் பெருநாட்டில் வளர்ச்சி யுற்றிருப்பதையும் காணலாம். தோமையாரின் தொண்டுகளால் கிறித்துவம் புனிதப்பட்டது போல், இந்திய நாடும் புனிதப் பட்டது எனலாம்.



318. Ibid. p. 35.

## ஐரோப்பியர் வருகைக்கு முன்பிருந்த தமிழகம்

வரலாற்றுக் காலத்துக்கு முன்பே தொடங்கிய தமிழகத்தின் அயல்நாட்டு வாணிகம், மேற்கே உரோமையையும், கிழக்கே சீனத்தையும் தமிழகத்தோடு இணைத்திருந்தது. ஏடன் தொடங்கி காண்டன் வரையிலான தமிழர் வாணிகம், ஏராளமான செல்வத்தைத் தமிழகத்தின்பால் குவிக்கக் கரணியமாயிருந்தது. கிறித்து பிறப்பாண்டுகளில், உரோமை நாட்டின் பொன்வளம் முற்றிலுமாக வறண்டு போய், அது தமிழகத்தில் கொட்டப்பட்டது. உரோமை நகரில் வாழ்ந்திருந்த மேட்டுக்குடி மக்களின் தேவைகளான முத்தும் மணியும், மிளகு உள்ளிட்ட நறுமணப் பொருட்களும், தேக்கு முதலிய கெட்டியான மரவகைகளும், தமிழகத்தினின்றும் ஏற்றுமதி செய்யப்பட்டன. உரோமைப் பெண்டிர், கொற்கையின் முத்துக்களுக்கு அடிமைகளாயினர். தமிழகத்தின் அகிற்புகை, அந்தப்புரங்களில் பரவி மணம் பரப்பிற்று. உரோமையரின் உணவுப் பொருட்களில், தமிழகத்தின் மிளகும் இலவங்கமும், பட்டையும் இன்றியமையாதனவாயின. தமிழகத்தின் மெல்லிய பட்டாடைகள், உரோம் பெண்களைப் பெரிதும் கவர்ந்தன. என்னவிலை கொடுத்தேனும் இப்பொருட்களை வாங்க உரோமையர் துடித்தனர். இதற்கான விலையும் விளைவும்தான் தமிழகத்தைப் பொற்களஞ்சியமாக மாற்றியது. ஒரு கால அளவில், உரோமை நகரின்கண் பொன் இருப்பே இல்லை என்ற நிலை ஏற்பட்டதாக வரலாறு கூறுகிறது

டைபிரியஸ் என்ற உரோமப் பேரரசன், தமது நாட்டு மக்கள், தேவையற்ற அயல்நாட்டுப் பொருட்கள் மீது ஆர்வம் கொண்டுள்ளதாலும், அவ்வார்வம் கரணியமாக அயல் நாட்டுப்

பொருட்கள் உரோமையில் குவிவதாலும், நாட்டின் செல்வ வளம் குறைந்து போவது பற்றிய தனது அச்சத்தைப் பாராளு மன்றத்தில் வெளிப்படுத்தினான். **டைபீரியஸ் குறிப்பிட்ட அயல்நாடு தமிழகமே என்பதில் ஐயமில்லை. பிளினி என்னும் பயணி, உரோம மக்கள், தமிழகத்துப் பொருட்களுக்கான உரிய விலையைத் தராமல், 100 மடங்குக் கூடுதலாக விலை யைக் கொடுத்தனர் என்று கூறுகிறார்.**

தமிழகத்துக்கும் எகிப்துக்கும் இடையே நடைபெற்ற கப்பல் போக்குவரத்து, கிறித்து பிறப்பாண்டுகளுக்கு முன்பு, அரபிக்கடலைக் குறுக்காகக் கடந்துச் சென்றனர் என்றே கருதப்பட்டாலும், அதற்கானச் சான்றுகள் இல்லை. கி.மு. 1500 ஆண்டுகளில் ஃபோனீசியர்கள் தமிழகம் வந்து போனதற் கானச் சான்றுகள் உள்ளன. அவர்கள் எவ்வழியாகத் தமிழகம் வந்தனர் எனத் தெரியவில்லை. பெரிப்புளூஸ் என்னும் பயண நூலிலும், கப்பல்கள் அரேபியக் கடலைக் குறுக்காகக் கடந்தது பற்றிய செய்திகள் இல்லை.

முசிறியினின்றும் புறப்பட்ட மரக்கலம், குசராத் பாரசீகம் அரேபியா போன்ற நாடுகளின் கடற்கரைகளையொட்டியே ஏடன் துறைமுகம் சென்றடைந்தன என்று அறியலாம். இப் பகுதிகளில் கடற்கொள்ளைக்காரர்கள் தங்களது மரக்கலங் களில் ஆட்களை ஏற்றிக் கொண்டு சென்று எதிர்ப்பட்ட வணிகக் கப்பல்களைச் சூறையாடி வந்தனர். இக் கொள்ளை யர்களைத் தாக்குவதற்கென்றே ஒவ்வொரு வணிக மரக்கலத் திலும் போர்வீறர்கள் இருந்தனர். இதனால் வணிகர்களுக்குக் கூடுதல் செலவு ஏற்பட்டதில் வியப்பில்லை. இவ்வாறான கடற் கரையையொட்டிய கடற் பயணத்திற்கு ஏறக்குறைய ஆறு திங்கள் தேவைப்பட்டது.

உரோமப் பேரரசின் ஆட்சியின் கீழ் எகிப்து கொண்டு வரப்பட்டபோது, மேற்சொல்லப்பட்ட கடற்கரை வழியே பின்பற்றப்பட்டு வந்தது. ஃபோனீசியர்கள் அடிக்கடி தமிழகம் வந்து சென்றது பற்றிய செய்திகளும் உள்ளன.[319] இச்செய்தி களின் படி, தமிழ் வணிகர்கள் ஃபோனீசியருடன் இணைந்து ஆப்பிரிக்கக் கரைகளின் வழியே சுற்றிக் கொண்டு அட்லாண் டிக் கடலையடைந்தனர் என்றும், ஆங்கிலக் கால்வாயைக்

---

319. Facts about Lebanon, Lonely Planet, p. 14.

கடந்து செர்மனி வரை சென்ற தமிழரின் மரக்கலம் ஒன்று, ஸ்கான்டிநேவியக் கடலில் கவிழ்ந்து போனது என்றும், அங்கிருந்து கரை ஒதுங்கிய தமிழர் சிலரை அடிமைகளாக்கினர் என்றும் பிளினி குறிப்பிடுகிறார். இச்செய்தி உண்மையன்று எனச் சிலர் கருதினாலும், இந்திய வரலாற்றறிஞர்கள் சிலர், ஆப்பிரிக்காவைச் சுற்றித் தமிழர் சென்ற செய்தி உண்மையானதே எனக் கருதுகின்றனர்.[320]

கடற்கரையையொட்டிய கடற்பயணத்தையே, அலெக்சாந்தர், தனது இந்திய வெற்றிக்குப் பிறகு, தனது நாடு திரும்பும்போது மேற்கொண்டான். அரேபியக் கடலைக் குறுக்காகக் கடந்துச் சென்றவர்கள், அவ்வழியைப் பிறருக்குத் தெரிவிக்காமல் மறைபொருளாகவே வைத்திருந்தனர் என்பதால், அவர்களின் மறைவுக்குப் பின்னர் மற்றவர்களுக்குத் தெரிய வாய்ப்பில்லாமற் போனது. கி.மு. 1500 ஆண்டுகளிலேயே தமிழரும் ஃபோனீசியரும் பாய்மரங்களைப் பயன்படுத்தி வந்தனர் என்ற செய்திகளால், அரேபியக் கடலைக் குறுக்காகக் கடந்துச் செல்ல அவர்கள் அறிந்திருந்தனர் எனலாம். இவ்வாறு வரலாற்றுக் காலத்துக்கு முன்பும் பலருக்கு இவ்வழி தெரிந்திருந்தது என்பது உண்மையே.

உரோமப் பேரரசு தோன்றிய காலங்களில், உரோமைக்கும் தமிழகத்துக்குமான கடல்வழி வாணிகம் செழிப்படைந்திருந்தது. செங்கடலின் வடக்கு முனைவரையில் சென்ற மரக்கலங்களிலிருந்த பொருட்கள் இறக்கப்பட்டு, தரைவழியாக அலெக்சாந்திரியாவுக்கு எடுத்துச் செல்லப்பட்டன. அங்கு மீண்டும் மரக்கலங்களில் ஏற்றப்பட்டு, நடுத்தரைக் கடல் வழியே உரோமை சென்றடைந்தன. தமிழகத்து வணிகர்கள், எகிப்தின் அலெக்சாந்திரிய நகரத்தில் வாழ்ந்திருந்த ஐரோப்பிய வணிகர்களிடம் தங்களது பொருட்களை விற்று விடுவதாகவும் கூறப்பட்டது. எகிப்திய வணிகனும் தமிழ் வணிகனும் கி.பி. 150 ஆண்டுகளில் செய்து கொண்ட வணிக ஒப்பந்தம் பற்றிய ஆவணம் ஒன்றும் கிடைத்துள்ளது. அவ்வொப்பந்தம் இரண்டு பக்கங்கள் கொண்ட பாப்பிரஸ் தாளில் எழுதப்பட்டிருந்ததாகவும், ஒரு தாள் காணாமல் போய்விட்டதாகவும் கூறப்படுகின்றது. இவ்வொப்பந்தம் கிரேக்க மொழியில் எழுதப்பட்டுள்ளது. எனவே, தமிழ் வணிகன் கிரேக்க மொழியையும் அறிந்திருக்க வேண்டும்

320. Ancient Explorers, Cary and Warmington, London, 1929, p. 55.

என ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.[321] அலெக்சாந்திரிய நகரில் மறுமுறை சுங்கம் பெறப்பட்டதாகவும் செய்திகள் கூறுகின்றன.

மேற்கண்ட செய்தியின்படி முசிறியிலிருந்து செங்கடல் வரையிலான பயண காலம் 40 நாட்கள் என அறியப்படுவதால், அரேபியக் கடலைக் குறுக்காகக் கடந்து அவர்கள் சென்றிருக்க வேண்டும் என்பது தெளிவு. இக்குறுக்கு வழிக்கு அரேபியக் கடலில் வீசும் பருவக்காற்றே பெரிதும் உதவிற்று எனலாம். ஐப்பசி தொடங்கி வைகாசி வரையிலும் இக்காற்று வீசுவது, கடல்வணிகத்தைப் பெரிதும் ஊக்குவித்தது. மற்றுமோர் ஆவணத்தின்படி, பண்டைய செங்கடல் துறைமுகமான கோபடஸ் (Copotos) துறைமுகத்தில் இறக்கப்பட்ட ஆறு பொதிகள் பற்றிய செய்திகள் வியப்பூட்டுவனவாக உள்ளன. இப் பொதிகள் ஹெர்மபோலன் (Hermapollan) என்ற கப்பலில் ஏற்றப்பட்டதாகவும், அதன் எடை 1154 தாலந்தும் (Talents) 2852 திராமும் (drachmas) ஆகும் என்று கூறப்படுகின்றது. இப் பொருட்களின் கூடுதலான மதிப்பு இன்றைய இந்திய மதிப்பில், ரூ 29,48,40,000 என முனைவர் ராஜன் குறிப்பிடுகிறார்.[322]

ஹிப்பாலஸ் என்ற எகிப்திய மாலுமி அரேபியக் கடலின் குறுக்காகச் செல்லும் வழியைக் கண்டுபிடித்ததாகச் செய்திகள் கூறுகின்றன. ஹிப்பாலஸ் என்ற சொல், தமிழ்ச் சொல்லான கப்பல் என்ற சொல்லின் எகிப்தியத் திரிபே என்பதால், ஹிப்பாலஸ் என்பான் தமிழனே என்று கூறலாம். நாடுகளின் கடற்கரைகளில் திரிந்து கொண்டிருந்த கடற்கொள்ளைக்காரர்களால் தாக்கப்படலாம் என்ற அச்சவுணர்வுகளும் குறுக்கு வழியால் குறைந்து போயின. கடற்கரையைத் தொட்டுச் செல்லும் கடற்பயணத்தால், ஆண்டொன்றுக்கு இருபதுக்கும் குறைவான கப்பல்களே பயணம் மேற்கொண்டன. குறுக்குவழி கண்டுபிடிக்கப்பட்ட பிறகு நாளொன்றுக்கு ஒரு கப்பல் என எகிப்தியத் துறை முகங்களிலிருந்து கீழைநாடுகளுக்குப் புறப்பட்டன.[323] கி.பி. முதலிரண்டு நூற்றாண்டுகளில், செங்கடலுக்

321. தொல்லியல் நோக்கில் சங்க காலம், கா. ராஜன் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 2004, ப. 88.

322. மேலதே, ப. 90.

323. The historians verified the record are H. Harvauer, P. Sijpestaijn, G. Thur and L. Casson.

கும் முசிறித்துறை முகத்துக்கும் நேரிடையான குறுக்குக் கடல் வழி அறியப்பட்டிருந்தது எனலாம்.

நடுத்தரைக் கடலுக்குக் கிழக்கேயிருந்த சிரிய நாடு, கி.பி. முதல் நூற்றாண்டுகளில் உரோமப் பேரரசின் கீழ் இருந்தது. சிரிய நாட்டு வணிகர்கள், செங்கடல் வழியாகவோ பாரசீக வளைகுடா வழியாகவோ தமிழகத்தை அடைந்தனர். சிரிய நாட்டினின்றும் தரை வழியாகப் பாரசீக வளைகுடாவை அடைந்து, அங்கிருந்து கடல்வழியே தமிழகம் வந்தனர் என லாம். சிரிய நாட்டு வணிகர்கள் பெருமளவில் முசிறித் துறை முகத்தில் காணப்பட்டனர். தமிழகத்தின் வணிகர்களும் சிரிய நாட்டில் அறியப்பட்டிருந்தனர். இவ்வழியிலான வணிகக் கப்பலொன்றில்தான் தோமையார் தமிழகம் வந்தார் என அறியலாம். தோமையாரைத் தமிழகத்துக்கு அழைத்து வந்த அப்பன் (Habban) என்ற வணிகனும் தமிழனே என அறியலாம். தோமையார் பாரசீகம் என்று அங்கு கொண்ட போரஸ் என்ற மன்னனைக் கிறித்துவனாக்கிய செய்தி, தோமையாரின் செயல் பாடுகள்[364] (Acts of Thomas) என்ற சிரியநாட்டு நூலில் காணப் பட்டாலும், கொண்ட போரஸ் என்ற மன்னன் குட்டுவன் என்ற சேர மன்னனேயென்றும், தோமையார் பாரசீகம் செல்ல வில்லை யென்ற கருத்தும் உண்டு.

கொண்ட போரஸ்[325] என்ற கிரேக்கச் சொல்லுக்குரிய மன்னன் வடமேற்கு இந்தியாவில் வாழ்ந்திருந்தவனா அல்லது தமிழகத்தின் சேரமன்னனா என்பதில் ஆய்வாளர்கள் வேறுபடு கின்றனர். எப்படியிருப்பினும் சேர நாட்டிலிருந்த மன்னனை, தோமையார் சமய மாற்றம் செய்தார் என்ற செய்தியும் உண் டென்பதால், இந்திய மன்னர்களை தோமையார் கிறித்துவராக் கினார் என்று அறியலாம்.

முசிறித்துறை முகத்தில் கி.பி. 52ஆம் ஆண்டில் வந்திறங்கிய தோமையார் மலையங்கரை என்னும் தீவுத்திட்டில் சின்னாட் கள் ஓய்வெடுத்தார் என்றும், பின்னர் தமது சமயப் பணி

---

323. The Ancient Explorers, pp. 73-77.
324. The Apocryphal New Testament, M.R. James, Clarendon Press, Oxford, 1924.
325. A History of India, Michael Edwards, New York, 1961, p. 64.

களைத் தொடங்கினார் என்றும் செய்திகள் கூறுகின்றனர்.[326] மலையங்கரையில் முதன்முதல் தோமையரால் கிறித்துவரான சேர நாட்டு மக்கள், தம்மை மலங்கரா கிறித்துவர்கள் என்று அழைத்துக் கொள்கின்றனர்.[327] கி.பி. 72ஆம் ஆண்டு வரையிலும் சேர, சோழ, பாண்டிய நாடுகளில் (தமிழகத்தில்) தோமையார் சமயப் பணிகளாற்றினார். கி.பி. 72ஆம் ஆண்டில் கிறித்துவ சமயத்தின் சான்றாளராய், திருமயிலையில் கொலை செய்யப்பட்டார் என அறிகிறோம்.[328]

தூய தோமையாரின் இளமை பற்றிய செய்திகள் தெளிவாக இல்லையென்றாலும் இசுராயேலின் பன்னிரு மரபுகளில் ஆசர் (Asher) மரபில் இவர் தோன்றியதாகத் தெரிகின்றது. விவிலியக் குறிப்பின்படி, தோமையார் இந்தியாவுக்குச் செல்ல வேண்டுமென திருவுளச் சீட்டுப் போட்டுப் பார்த்ததில் தெரிய வந்தது.[329] இயற்கையிலேயே, பிறர் சொல்வதை நம்பாதப் பண்புடையவர் தோமையார் என்பதும், மிகத் துணிச்சலான செயல்பாடுகளைக் கொண்டவர் என்பதும், தவறென்று தெரிந்த போது தனது தவற்றை ஏற்றுக் கொள்ளும் மனப்பாங்கு உடையவர் என்பதும், இவரது சிறப்புக் குணங்களாகும். தோமையாரின் தமிழக வருகையை மேற்கத்தியச் சான்றுகளாலும், சிரியன் கிறித்துவ ஆவணங்கள் வாயிலாகவும், உரோமன் கத்தோலிக்கத் திருச்சபையின் சில குறிப்புகளாலும், சேரநாட்டின் மரபுவழிச் செய்திகளாலும் அறியலாம்.[330] கி.பி. முதலிரண்டு நூற்றாண்டுகளில், தோமையார் வழிக் கிறித்துவம், தமிழகத்தில் எந்தக் கொள்கைக் குழப்பமுமின்றி வளர்ந்து வந்ததைக் காணலாம். கி.பி. மூன்றாம் நூற்றாண்டுக்குப் பிறகு வந்த சிரியன் கிறித்துவர்களைத் தொடர்ந்து, சமய வழிபாடுகளில் பல்வேறு மாற்றங்கள் தோன்றின. அவை 20ஆம் நூற்றாண்டு வரையிலும் கூடத் தொடர்ந்து வந்தன எனலாம்.

---

326. History of India, Nagam Aiya, Travancore State Manual Vol. II, Trivandrum, p. 115.
327. Sovenir on the History of Early Christianity in India, New York, 2005, p. 27.
328. History of Christianity in India, Mundadan M., Bangalore, Vol. I, 1984, pp. 71-78.
329. Mark, 16:14.
330. The Land of the Perumals, Dayanandan Francis, T, 1968.

சிரியன் கிறித்துவ மரபு கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் சேரநாட்டில் வந்து சேர்ந்த சிரியநாட்டுக் கிறித்துவர்களால் தோற்றுவிக்கப்பட்டது. இவர்கள் நெஸ்டோரியன் சிந்தனை யாளர்களாகக் கருதப்பட்டாலும், தோமையாரின் தொடக்க காலச் சிரிய நாட்டுப் பணிகளுடன் இவர்கள் தொடர்பு கொண்டவர்களாதலால், தம்மைத் தோமையார் வழிக் கிறித் துவர்கள் என்றே அழைத்துக் கொள்கின்றனர். சிரியன் மரபு தோமையாரின் சேர நாட்டுச் சமயப் பணிகள் பற்றி விரிவாக விளக்குகின்றது. குறிப்பாக முசிறி என்ற கொடுங்கல்லூர்ப் பகுதியில் தோமையாரின் சமயப் பணிகளை சிரியன் குறிப்புகள் விளக்கி நிற்கின்றன. சேர நாட்டுத் தொடக்கக் கிறித்துவம் தோமையார் வழிக் கிறித்துவமே என்பதில் ஐயமில்லை.[331]

சேரநாட்டுக்குத் தோமையார் வருமுன்னரே, அங்கு யூத இனத்தார் வாழ்ந்திருந்தார் என அறியலாம். அவ்வினத்தார் திசைப்புறம் செல்லும் (Diaspora) சூழலில், தங்கள் தாய் நாடான இசுரேல் நாட்டினின்றும் வெளியேறியவராவர். அவர்களின் குடியிருப்புகளும், கோயிலும் (Synagogue) இன்றும் கூட கொச்சியில் காணப்படுகின்றன. அம்மக்களில் பலர் இன்றும் வணிகர்களாகவுள்ளனர். முசிறி நகரில் வாழ்ந்திருந்த யூதர்கள் தோமையாரை வரவேற்றதாகவும், அவர்களில் 40 பேரை, தோமையார் கிறித்துவ சமயத்துக்கு மாற்றியதாகவும், பழூர், பரவூர், கொக்க மங்கலம், நீராணம், காயல், கொல்லம் ஆகிய இடங்களில் தோமையார் தேவாலயங்களை அமைத்ததாகவும் செய்திகள் கூறுகின்றன. குமரி மாவட்டத்திலுள்ள திருவிதாங் கோடு நகரில் தூய மறியன்னையின் பெயரால் ஒரு தேவாலயத் தைத் தோமையார் எழுப்பியதாகவும், இன்று அவ்விடம் தோமையார் கிணறு என அழைக்கப்படுவதாகவும் கூறுவர்.



---

331. India and Apostle St. Thomas, Medlycott, A.E., London, 1905, Repr. in the Indian Church History Classics, Vol. I, The Nazranies, Ed. George Menachery, Ollur, 1998.

# தோமையார் பற்றிய பழம் பாடல்கள்

தோமையார் தமிழகம் வந்தது, சமயப் பணியாற்றியது, மக்களையும் மன்னர்களையும் கிறித்துவ சமயத்துக்குத் திரும்பியது, அருஞ்செயல்கள் (Miracles) ஆற்றியது பற்றிய பாடல்கள் இன்றும் கேரளக் கிறித்துவர்களாலும் மற்றவர்களாலும் பாடப் பெற்று வருகின்றன. இப்பாடல்கள் யாவும் அக்காலத்தில் தமிழிலேயே இயற்றப் பெற்று பாடப் பெற்றவைகளாகும். பிற்காலத்தில் இப்பாடல்கள் தொகுக்கப்பட்ட போது, மலையாளக் கலப்பில் வெளிவந்தன. மலையாளம் என்ற மொழியே இன்றைக்கு 1000 ஆண்டுகட்கு முன்புதான் தோன்றியது என்பதை நினைவில் கொள்ளவேண்டும்.

மலைக்கல் தோமா இரம்பான் என்பவரே சில பழம் பாடல்களைத் தொகுத்தார். இத்தொகுப்புக்கு இரம்பான் பாடல்கள் எனப் பெயர் வழங்குகிறது. மார்கம் களி என்ற ஊர்ப்புற நாடகம் கேரளக் கிறித்துவர்களால் நடித்துக் காட்டப் படுவதாகும். இதுவோர் பண்டைய நாடகமாகும். இயல் - இசை - நாடகம் என்ற முத்தமிழின் வெளிப்பாடுகளும் மார்கம் களியில் அரங்கேறும். மார்கம் களி என்ற தமிழ்ச் சொற்கள், உள்ளத்திற்கு மகிழ்ச்சியை அளிக்க வல்லவையென்ற தமிழ்ப் பொருளைத் தருவனவே. தோமையாரின் வாழ்க்கை நிகழ்வுகளை இக்களிப்பாடல்கள் விளக்குகின்றன. வீறடியான் பாடல்கள், கிறித்துவ விழாக்களில் பாடப்பெறும். இப்பாடல்களைப் பாணர் என்ற சங்ககால இசை வல்லுநர் குழு பாடிப் பரிசில் பெறும். இப்பாணர்கள் கிறித்துவர்கள் அல்லர் என்பது குறிப்பிடத்தக்கது. சேர மன்னன் கிறித்துவர்களின் நண்பனாயிருந்த வரலாற்றை வீறடியான் பாடல்கள் விளக்குகின்றன.

கிறித்துவர்களின் இல்லவிழாக்களில், குறிப்பாகத் திருமணம், பிறந்தநாள் விழாக்களில் பாணர்கள் இப்பாடல்களைப் பாடுவர். மேலும் இப்பாடல்கள், சேர நாட்டில் கிறித்துவர்கள் சிறப்புற்று வாழ்ந்த நிகழ்வுகளைப் போற்றியும் தோமையாரின் பணிகளை வாழ்த்தியும், பாடப்பெறுகின்றன. நீராணம் என்பது தோமையார் தோற்றுவித்த ஏழு தேவாலயங்கள் விளங்கிய ஊர்களில் ஒன்றாகும். இது தற்போது கேரளத்தில் ஆலப்புழை மாவட்டத்திலுள்ளது. நீராணத்தில் தோமையார் வழிவந்த கிறித்துவ மரபு இன்றும் அறியப்படுகின்றது. இவர்கள் அனைவரும் தமிழரே. இத்தமிழ் மரபின் சமயத்தலைவர்களாகச் சிலரை தோமையார் திருநிலைப் படுத்தியதாக நீராணம் தேவாலய மரபுவழிச் செய்திகள் கூறுகின்றன. இத்தேவாலயத்தில் பாடப் பெறும் சில சிறப்புப் பாடல்களை இன்றும் கேரளக் கிறித்து வர்கள் பாடி மகிழ்கின்றனர்.[332]

இவையன்றியும் பல்வேறு தனிப்பாடல்களும், தொகுப்புப் பாடல்களும் கேரளத்தில் இன்றும் அறியப்படுகின்றன. கேரளக் கிறித்துவர்களில் **பழைய கூத்துக்காரர்** (Pazhaya Koottukar) என்போர் மலபார் கத்தோலிக்கர்களாகவும் (Malabar Catholics), **புதிய கூத்துக்கார்** (Puthen Koottukar) கத்தோலிக்கரல்லாத சிரியன் கிறித்துவர்களாகவும் (Non Catholic Syrians) அறியப் படுகின்றனர்.[333] கூத்துக்காரர் என்ற தமிழ்ச் சொல், அம்மக்கள் நாடகத் துறையோடு தொடர்பு கொண்டிருந்ததை விளக்கும். எனவே, கிறித்துவர்களின் வாழ்வில் கூத்து ஓரங்கமாகவே பிணைக்கப்பட்டிருந்தது என அறியலாம்.

தோமையாரின் சமயப் பணிகள் தமிழகத்தில் பெரும் மெய்யியல் சிந்தனைகளைத் தோற்றுவித்ததாகப் பல்வேறு வரலாற்று அறிஞர்கள் கருதுகின்றனர். அதுவரையில் தமிழகம் அறிந்திராத மோட்சம், நரகம், மூவொரு கடவுள், ஆன்மா போன்ற புதிய சிந்தனைகள் தமிழகத்திலிருந்த பல்வேறு சமய நெறிகளில், தோமையாரின் வரவுக்குப் பிறகே காணப்படுவ

332. Sixteenth Century Traditions of St. Thomas Christians, Mundadan, A.M., Banglore, 1970, pp. 38-67.

333. An essay titled St. Thomas and India, Soveneir-On the Early Christianity in India, 2005, p. 26.

தாகவும் கூறுகின்றனர். இத்தலைப்புகளை ஆய்ந்த அறிஞர் களின் பட்டியலும் மிக நீளமானது எனலாம்.[334]



---

334. Christian Influiences in Silappathikaram
 - **Hepzibah Jesudhas**
 The Influence of Bible on Thirukkural
 - **Lazarus Samraj**
 Thirukkural and Christianity - **Jasmine Asir.**
 Commanalities between Jesus and Thiruvalluvar
 - **Sam Peedikayil Mathew**
 Early Christianity and the Tamil Cankam Society
 - **Thiagarajan.**
 Christianity and Saiva Siddanta
 - **M. Deivanayakam and D. Devakala**
 Vaishnavism and Christianity - **Bhaskara Doss.**
 Doctrine of Trinity in Sivananapotam and in Thirukkural
 - **M. Deivanayakam** and **D. Devakala**
 Christianity and the Tamil Cittars
 - **Vijaya Kireeti Thambi.**
 Bible and Thiruvacakam - **Gerard Pushparaj**
 Christianity and Saivam
 - **M. Deivanayakaman** and **D. Devikala**
 Christ Vs Krishna - **M.G. Mathew**
 Prajapathy and Jesus - **Jolly Sebastian**
 Siddha Literature and Christianity
 - **Dr. Moses Michael Faraday**
 Christianity and Ithihasa - **Joshua Giromony**
 Brahma Sutras and Christianity - **Bhaskara Doss**
 Christianity and Adishankara - **Ramanathan Palaniappan**
 Locus of Advaita and Christianity - **Lourdunathan**
 A Short Note on Christianity and Vedanta
 - **Mathew**
 Vyasa School of Thought and Christianity
 - **R. Sounder rajan** and **Bhaskara doss.**
 Sakthi and Christianity - **Mercy Rajadurai**
 Ibid, pp. 144-166.

# இடைக்காலத் தமிழகம்
# (கி.பி. 900 – 1400)

தோமையார் காலத்தில் (கி.பி. 52-72) எண்ணற்றவர்களைத் தோமையார் கிறித்துவ மறைக்கு மாற்றியதாகச் செய்திகள் கூறுகின்றன. கி.பி. 52ஆம் ஆண்டில் 40 யூதர்களையும், கி.பி. 51இல் சேர மன்னன் உள்ளிட்ட 3000 பேரையும் கிறித்துவத்தில் தோமையார் இணைத்தார். கி.பி. 52ஆம் ஆண்டிலேயே திரு மயிலையில் மன்னனையும் அவன்தம் மக்களில் 700 பேரையும் மனந்திருப்பினார். கி.பி. 69ஆம் ஆண்டுகளில் இறந்தோரில் 19 பேரை மீண்டும் உயிர்ப்பித்ததாகவும், 260 எண்ணிக்கையி லான கடும் நோய் கொண்டோருக்கு நலமளித்ததாகவும் செய்தி கள் கூறுகின்றன. அதே ஆண்டில் 17750 மக்களைத் தமிழகத்தின் வடபகுதிகளில் சமய மாற்றம் செய்தார். அவர்களில் 6850 பிராமணர்களும், மற்ற எண்ணிக்கையிலானவர்கள் தமிழர்கள் என்றும் சொல்லப்படுகின்றது.[335] தமிழகத்தில் சமயப் பணி யாற்றிய 20 ஆண்டுகளில், 50000க்கும் குறையாத மக்களைக் கிறித்துவ மறைக்குத் தோமையார் திருப்பியதாக செவிவழிச் செய்திகள் கூறுகின்றன. சோழ நாட்டின் பூம்புகார் நகரில் பலர் கிறித்துவர்களாயினர். சோழநாட்டுக் கடற்கரையோரங் களில் பலவிடங்களில் கிறித்துவம் தழைத்திருந்தது. நாகப்பட் டினத்துக்கு அருகிலிருந்த மணி கிராமம் கிறித்துவர்கள் பெரு மளவில் வாழ்ந்திருந்த வணிக நகரமாகும்.

தோமையாருடைய மறைவுக்குப் பின்னர், ஆயனில்லா ஆடுகள் போன்று, தமிழகத்தின் வடபகுதி மற்றும் கடற்கரை

335. History of Christianity in India, Mundadan M., Vol. I, Bangalore, 1984, pp. 71-78.

யோரப் பகுதிகளின் கிறித்துவர்கள் வருந்தினர். அடுத்தடுத்து வந்த தலைமுறையினருக்குத் திருமறையை விளக்கவும், கிறித்துவ வாழ்க்கை முறைகளைக் கற்பிக்கவும் சமயத்தலைவர்கள் இல்லாது போயினர். அடுத்துவந்த மன்னர்களில் சிலரும் கிறித்துவம் பற்றி அறியாதிருந்தனர். மேலும் கி.பி. நான்காம் நூற்றாண்டுக்குப் பிறகு சிவநெறியில் புதிய சிந்தனைகள் தோன் றவே, தோமையார் வழிக் கிறித்துவர்களில் பலர் தமது மறை யைத் துறந்தனர். துறக்க மனமில்லாதவர் பெருங்கூட்டமாகச் சேரநாட்டுக்குச் சென்று குடியேறினர். தோமையார் வழிவந்த சேரநாட்டுக் கிறித்துவர்களுக்குச் சேர மன்னர்களின் நட்பும் நல்லிணக்கமும் தொடர்ந்து கிடைத்து வந்ததால், சேரநாட்டுத் திருச்சபை செழித்து வளர்ந்திருந்தது.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டில், சிரிய நாட்டினின்றும் சேரநாட்டுக்கு வருகை தந்த கிறித்துவக் குடும்பங்கள் பெரு மளவிலான எண்ணிக்கையைக் கொண்டிருந்தது. 42 குடும்பங் களும் 400க்கு மேற்பட்டவர்களுமான கணக்கொன்று சிரியன் திருச்சபைக் குறிப்புகளில் காணப்படுகின்றது. இந்த 400 பேரும் தமிழ்க் கிறித்துவர்களுடன் அடுத்த சில நூற்றாண்டுகளில் இரண்டறக் கலந்தனர். கி.பி. 9ஆம் நூற்றாண்டுகளில் சேர நாட்டில் மட்டும் வாழ்ந்திருந்த கிறித்துவர்களின் எண்ணிக்கை ஐந்து இலக்கத்திற்கும் மேல் இருக்கும் (5,00,000) என்று கருதப் படுகின்றது.[336]

திருமயிலையில் தோமையார் ஏற்படுத்திய சமயத் தலைமை யிடமும், கிறித்துவ மக்களும், இயற்கையின் கொடுமை, சமய எதிர்ப்பாளர்களின் கொடுஞ்செயல் ஆகியன பற்றி, கிராங்க னூர் பகுதிக்கு மாறுதலுக்குள்ளாயின. தோமையாரின் மறை வுக்குப் பிறகு 93ஆம் ஆண்டில் மாணிக்க வாசகர் என்பவர் தோன்றிய மயிலைக்குச் சென்று தோமையாரைப் போன்றே அருஞ்செயல்களை ஆற்றி, பெரும்பாலான கிறித்துவ மக்களை சிவநெறிக்கு மாற்றிவிட்டதாக ஒரு செய்தி காணப்படுகின்றது. கிறித்துவ நெறியில் ஆழ்ந்த பிடிப்புடன் இருந்த பலர், சேர நாட்டுக்கென்று, அங்கு ஏற்கனவே வாழ்ந்திருந்த தமது சமயத் தாருடன் இணைந்து கொண்டனர் என்பர். இந்த மாணிக்க

336. Ibid, pp. 30-32.

வாசகரை ஒரு மந்திரவாதி (Magician) என்று சில குறிப்புகள் கூறுகின்றன. கி.பி. 9ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந் திருந்த, திருவாசகத்தை அருளிய மாணிக்கவாசகரோடு, கி.பி. இரண்டாம் நூற்றாண்டுச் செய்தி இணைக்கப்படுவதால், இரு வரும் வெவ்வேறு மாணிக்க வாசகர்களா என்பதும் தெளி வடையவில்லை. மணீசியக் (Manechean sect) கொள்கையைக் கொண்ட பாரசீக நாட்டுத் துறவியொருவன் மாணிக்கவாசகர் என்ற பெயருடன் தொடர்பு படுத்தப்பட்டுள்ளதாகவும் சிலர் கருதுகின்றனர். திருவாசகம் தந்த மாணிக்கவாசகர், கி.பி. 9ஆம் நூற்றாண்டில் சிவநெறிக்காக அயராது உழைத்தவராவார். இவர் காலத்தில் தமிழகத்தின் வடபகுதியில் பரவலாக வாழ்ந்து வந்த கிறித்தவர்களும், குறிப்பாக நாகை மணிகிராமக் கிறித்தவர் களும், சிவநெறிக்கு மாணிக்கவாசகரால் மாற்றம் செய்யப்பட் டிருக்க வேண்டும். ஒருமுறை இலங்கையிலிருந்து வந்திருந்த புத்த பிக்குகளை, சிதம்பரத்தில் நேருக்கு நேர் வாதிட்டு மாணிக்க வாசகர் வென்றார் என்ற செய்தியும் அறியக் கிடக்கின்றது.[337] இது போன்ற செய்திகளின் அடிப்படையில், தமிழகத்தின் வட பகுதியில் வாழ்ந்திருந்த கிறித்துவர்கள், தங்களது பாது காப்பை வேண்டி சேரநாட்டிற்குக் குடிபெயர்ந்தனர் என்பதால், சேர நாட்டின் (இன்றைய கேரளத்தின்) கிறித்துவ மக்கள் தொகை பெருமளவில் காணப்படுவதற்கான கரணியங்களுள் ஒன்றெனக் கருதலாம்.

பெரும் எண்ணிக்கையிலான கிறித்துவர்களைக் கொண் டிருந்த சேரநாட்டின் பொருளியல் வணிகத் துறைகள், பெரும் பாலும் கிறித்துவர்களின் கட்டுப்பாட்டிலேயே இருந்தன என்பதால், சேர மன்னர்கள், கிறித்துவர்கள்பால் நல்லிணக்கம் கொண்டு, அவர்களின் நலன்களையும் பாதுகாத்து வந்தனர். கிறித்துவர்களிடம் முழுமையான, முறையான போர்ப்பயிற்சி பெற்ற படையொன்று இருந்தது பற்றிய செய்திகள், சிரியன் திருச்சபைக் குறிப்புகளில் காணப்படுகின்றன.[338] இசுலாமியரின் வருகைக்கு முன்பு (கி.பி. 700), இப்போர்ப்படை, சேர மன்னர்

---

337. History of South India, Nilakanta Sastri, K.A., Oxford University Press, 1994, pp. 175, 369, 370, 425.

338. The Christians and Christianity in India and Pakistan, Thomas, P. London, 1954, p. 36.

களின் பாதுகாப்பிற்காகவும் பயன்படுத்தப்பட்டது. கி.பி. 300-700 ஆண்டுகளில் இக்கிறித்துவப்படையின் ஒத்துழைப்பு கிடைத்ததால், சோழ பாண்டிய மன்னர்களால், சேரநாட்டை வெற்றிபெற இயலவில்லை என ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

மூவேந்தர்களில் சேரமன்னர்களுக்கு மட்டுமே கிறித்துவர்கள் நண்பர்களாயிருந்ததாலும், போர்க்காலங்களில் உதவி வந்ததாலும், சோழ பாண்டிய மன்னர்கள், தங்கள் நாட்டிலிருந்த கிறித்துவர்கள் அனைவரையும் வெறுத்தனர், ஒறுத்தனர் என்று கருத இடமுண்டு. எனவே, தமிழகத்தின் கிறித்துவர்கள் அனைவரும் சோழ பாண்டிய நாடுகளைவிட்டு வெளியேறி, சேரநாட்டில் வாழ்வாராயினர். இந்நிலை போர்த்துக்கீசியர் இந்தியாவிற்கு வரும் காலம் வரையில் நீடித்தது எனலாம்.



## இசுலாமியர்களின் வருகை

கி.பி. 650களில் வேரூன்றத் தொடங்கிய இசுலாம் சமயம், கிறித்துவ சமயத்தைக் காட்டிலும் மிகவும் வேகமாகப் பரவியது. நபிகள் நாயகம் காலத்திலேயே கேரளத்தில் இசுலாம் விதைக் கப்பட்டது. அரேபியாவிற்குச் சென்ற சேரமன்னனை நபிகள் நாயகமே இசுலாத்தில் இணைத்ததாகவும் சில செய்திகள் கூறுகின்றன. ஏற்கனவே வணிகர்களாகவிருந்த அரேபியர்கள், இசுலாத்தில் இணைந்ததும், மிகவும் முனைப்போடு தங்கள் வணிகச் செயல்பாடுகளைத் தொடங்கினர். இதற்கு இசுலாம் ஆட்சியும் துணை நின்றது. ஒரு நூற்றாண்டுக்குள், அரேபியா, எகிப்து, சிரியா, பாரசீகம் போன்ற நாடுகளை இசுலாத்தின் ஆட்சியின்கீழ் இணைத்தனர். வென்றெடுத்த நாடுகளில் இசுலாம் நிலைநிறுத்தப்பட்டது. செங்கடலும், அரேபியக்கடலும், பாரசீக வளைகுடாவும் இசுலாமியர்களின் கட்டுப்பாட்டுக்குள் வந்தன. இங்கு நடைபெற்ற வணிகச் செயல்பாடுகள் முழுமை யும் இசுலாத்தின் கைப்பிடிக்குள் ஒடுங்கின. **ஒரு காலத்தில் ஸ்பெயின் முதல் இந்தியாவின் வடமேற்குப் பகுதிவரை பிறைக் கொடியே பறந்தது எனலாம்.**

இதுவரையில் சிரியநாட்டு கிறித்துவ வணிகர்களின் கட்டுப்பாட்டிலிருந்த உலகச் சந்தை, இசுலாமியர்களின் கை களுக்கு மாறிப் போயிற்று. சிரியாவினின்றும் முசிறித்துறை முகத்துக்கு அடிக்கடி வந்துபோன மரக்கலங்கள் நிறுத்தப் பட்டன. சேர நாட்டுக் கிறித்துவ வணிகர்களுக்கும் பெரும் பின்னடைவு தோன்றியது. தொன்றுதொட்டு புகழ்பெற்று விளங்கிய முசிறித் துறைமுகம் களையிழந்து போயிற்று. இசுலாமிய வணிகர்கள் தடையின்றி சேரநாட்டின் மேற்குக்

கரைகளில் வந்திறங்கி வணிகம் செய்யலாயினர். இசுலாமியரின் வருகையால் கிறித்துவர்களின் செல்வாக்கும் குறையத் தொடங்கியது. அரசியல் சூழல்களால், சேரநாடு மூன்று பிரிவுகளாகப் பிரிந்து போயிற்று. கள்ளிக் கோட்டை புதிய துறைமுகமாகி, அங்குப் புதிய மன்னர் மரபும் தோன்றியது. கொச்சி மற்றும் திருவாங்கூரில் புதிய அரசுகள் தோன்றின. கள்ளிக் கோட்டையில் இசுலாமிய வணிகர்களும் போர்ப்படையினரும் தங்கி, சாமரின் மன்னருடன் உறவை மேம்படுத்திக் கொண்டனர். கொச்சி மன்னன் கிறித்துவர்களிடம் நட்பு கொண்டிருந்தான். முசிறி தனது பொலிவையிழந்து, கள்ளிக் கோட்டை புதிய துறைமுக நகராயிற்று.[339]

கிறித்துவர்களுக்கும் இசுலாமியருக்குமிடையே உறவுகள் சரியாக அமையவில்லை. இச்சூழலில் வெளிநாட்டுக் கடல் வாணிகத்தில் கிறித்துவர்களால் வெற்றி காண இயலவில்லை. எனவே உள்நாட்டு வணிகத்தில் கிறித்துவர்கள் கவனம் செலுத்தினர். திசை ஆயிரத்தை நூற்றுவர், நானாதேசிகள், ஐநூற்றுவர், மணிகிராமத்தார் போன்ற வணிகக் குழுக்கள் ஏற்கனவே வணிகத்தில் ஈடுபட்டு வந்த நிலையில், மணிகிராமத்தாருடன் இணைந்து கிறித்துவ வணிகர்கள் உள்நாட்டு வணிகத்தில் ஈடுபட்டனர். அஞ்சுவண்ணம் என்ற புதிய இசுலாமிய வணிகக் குழு இக்காலத்தில் தோன்றியது.[340] அஞ்சு வண்ணம் என்பதற்கு ஐந்து நிறங்கள் என்ற பொருள் இருந்தாலும், இப்பெயர் இசுலாமிய வணிகக் குழுவுக்கு எவ்வாறு பொருந்துகிறது என்பதற்குச் சரியான விளக்கங்கள் இல்லை. நாளைக்கு ஐந்துமுறை தொழுகை நடத்துவதால் அவர்கள் அஞ்சு வண்ணம் என அழைக்கப்பட்டதாகவும் கூறப்படுகின்றது.

இசுலாமியர் வருகையால், இதுவரையில் சிரிய நாட்டிலிருந்து வந்து சமயப் பணிகளாற்றி வந்த ஆயர்களின் வருகை தடைபட்டுப் போனது. ஆயர்களின் வருகையை இசுலாமியர் தடை செய்துவிட்டனர். சிரிய நாட்டு ஆயர்களை இந்தியாவுக்குள் அனுமதிக்கும் உரிமை இசுலாமிய ஆட்சியாளர்களிட

339. Ibid, p. 398.

340. The Medieval Merchants Guilds of South India, Meera Abraham.

மிருந்ததால், மிகக் கடுமையான முயற்சிகளுக்குப் பிறகே ஓரிருவர் அனுமதிக்கப்பட்டனர். சிரிய நாடும் இசுலாமியர் ஆட்சிக்குட்பட்டதால், முன்புபோல் கிறித்துவர்களால் அங்கும் செயல்பட இயலவில்லை.

சிரிய நாட்டில் கிறித்துவம் தடைசெய்யப்பட்டது. பாரசீக நாடும் இசுலாமியர் ஆட்சிக்குட்பட்டதால், தரைவழியாகவும் இந்தியாவுக்குள் நுழைய தடையேற்பட்டது. கிறித்துவர்களின் மரக்கலங்கள் அரேபியக் கடலில் காணாமற்போயின. பாரசீக வளைகுடாவிற்கும் தென்னிந்தியாவின் மேற்குக் கரை நகரங் களுக்கும் இறுக்கமான தொடர்புகள் ஏற்பட்டன. மேற்கத்திய நாடுகள் எல்லாம் இசுலாத்தைத் தழுவியதாலும், அவர்களின் ஆளுமை மிகவும் வலிமையாகக் காணப்பட்டதாலும், சேர மன்னர்கள் இசுலாமிய வணிகர்களுக்குக் கட்டுப்பட வேண்டிய தாயிற்று. முசிறித்துறைமுகம் தாக்கப்பட்டது. புதிய துறைமுக மாகக் கள்ளிக் கோட்டை தோன்றியது.

சேரமன்னர்களின் ஆளுமை குறைந்தவுடன், மன்னனுக் கடுத்த நிலையிலிருந்த படைத்தலைவர்கள், மன்னனுக்கெதி ராகப் போர்க்கொடி தூக்கினர். பலப்பல சிற்றரசுகள் தோன்ற லாயின. இச்சூழலிலும் உள்நாட்டு வணிகத்தில் கிறித்துவர்கள் முதன்மையானவர்களாகவே திகழ்ந்தனர். சமய வழிபாட்டு முறைகளுக்குத் தலைமையேற்க, சிரியன் ஆயர்கள் வருகை நின்றுபோனதால், இங்குள்ள சமயத்தலைவர்களில் மூத்தவர் (Archdeacons) ஆயர் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். இப்பதவி வழிவழியாகவும் நிலைக்க, பகலோமட்டம் (Pakalomattam) என்ற குடும்பம் தலைமைப் பொறுப்பை ஏற்றுக் கொண்டது.[341]

கி.பி. 325ஆம் ஆண்டில், நிசென் கூட்டத்தில் (Nicene Council) இந்திய மற்றும் பாரசீக மக்களின் சார்பில் ஆயர் ஜான் கலந்து கொண்டு, உரோமைத் தலைமையை இந்தியாவும் பாரசீகமும் ஏற்றுக் கொள்வதாக உறுதியளித்திருந்தார். அதன் படி, போப்பாண்டவரின் தலைமையைத் தொடக்க காலத் தமிழகக் கிறித்துவம் ஏற்றுக் கொண்டிருந்தது.[342] இந்த நிலையில் பிற் காலத்தில் சிறிது தள்ளாட்டம் ஏற்பட்டது. இதற்கு முழுப்

---

341. Early Christianity in India and Pakistan, p. 39.

342. Ibid, p. 35.

பொறுப்பானவர்கள் போர்த்துக்கீசியர்களே என்பதைப் பிற் பகுதியில் அளிக்கப்படும் விளக்கங்களால் அறிந்து கொள்ளலாம்.

கி.பி. 774ஆம் ஆண்டில், கிறித்துவத் தலைவனான கிராங் கனூர் இரவிக் கொற்றன் என்கிற மகாதேவர் பட்டினத்து உலகப் பெரும் செட்டி சேரமான் என்பானுக்கு சேரமன்னன் வீர ராகவப் பெருமாள் எழுதிக் கொடுத்த செப்புத்தட்டு, பல்வேறு சலுகைகளை அளித்துள்ளது பற்றிக் குறிப்பிடுகின்றது. இத் தட்டைச் செதுக்கியவன் பெயர் கூட, சேரமான் உலகப் பெருந் தத்தன் நம்பி சடையன் என்று காணப்படுகின்றது. இச்செப்புத் தட்டின் மூலம், இசுலாமியரின் வருகைக்குப் பின்னரும் கிறித்து வர்களின் செல்வாக்கு சேர நாட்டில் குறைந்து விடவில்லை என அறியலாம்.[343]

கி.பி. 800-1400 ஆண்டுகளுக்கிடையில், இசுலாமியர் செல் வாக்குப் பெற்றிருந்த கால அளவுகளில் தீயாம்பர் (Diamper) என்ற பகுதியின் மன்னனுக்குட்பட்ட தன்னாட்சி உரிமை பெற்றிருந்த வலியர் வட்டம் (Valiar Vattam) என்ற கிறித்துவ அரசு செயல்பட்டு வந்ததாக, சிரியன் கிறித்துவ மரபுவழிச் செய்திகள் தெரிவிக்கின்றன. இம்மரபு தீயாம்பர் மன்னனின் ஒரு பிரிவேயென்றும், வலியர் வட்டம் மரபினர் கிறித்துவத்தில் இணைந்துவிட்டாலும், ஆட்சியுரிமையை தீயாம்பர் மன்னன் பறித்துவிடவில்லையென்றும் அறியப்படுகின்றது. வலியர் வட்டம் மரபில் ஆண் குழந்தையின்றி அடுத்த மன்னர் பட்ட மேற்கும் சூழல் தடைப்பட்டுப் போனால், வலியர் வட்டம் அரசை, தீயாம்பர் அரசோடு இணைத்துவிட வேண்டும் என்ற விதியும் செயல்பாட்டில் இருந்ததாகக் கூறப்படுகின்றது.[344]

வாஸ்கோடகாமா வந்த காலத்தில், அவர் வழியாகப் போர்த்துக்கல் மன்னருக்கு வாழ்த்துக்களைத் தெரிவிப்பதாக, வலியர் வட்டம் அரச மரபினர் கூறினர் என்றும், அதற்கான அரசு முத்திரையிட்ட கடிதத்தையும் வாஸ்கோடகாமாவிடம் அளித்தனர் என்றும் சொல்லப்படுகின்றது. கி.பி. 9ஆம் நூற் றாண்டில் சேர நாட்டில் பயணம் மேற்கொண்ட அரேபியப் பயணியொருவன், மலபார் பகுதியில் கிறித்துவ எமிர் (Christian

343. Ibid p. 34.

344. Ibid.

Emir) ஒருவர் ஆட்சி செய்து வந்ததாகக் குறிப்பிடுகின்றான். போப்பாண்டவர் யூஜின் IV, வலியர் வட்டம் மன்னருக்குத் தனது அன்பான வாழ்த்துக் கடிதத்தை அனுப்பியதாகவும் அறியப்படுகின்றது.[345] வலியர் வட்டம் என்ற தமிழ்ச் சொற்களுக்கு ஆற்றலுள்ள ஒரு கூட்டம் (Powerful Circle) என்ற பொருளே அறியப்படுவதால், இம்மன்னர் மரபு வலிமையானதோர் அரசே என்பதில் ஐயமில்லை.



345. Christianity in India and Pakistan, pp. 37-38.

31

## பள்ளிகள் யாவர்?

தமிழகத்தில் தொழில்வழியிலான பிரிவுகள் இருந்தனவே யன்றி, மனுநீதி நூல் கூறும் நான்கு வண்ணப் பாகுபாடு கி.பி. முதல் நூற்றாண்டுக்கு முன்பு இருந்ததில்லை என்பது வரலாற் றாய்வாளர்களின் கருத்து. தொல்காப்பியம் கூறும் புலையன் என்பான், புலத்தைச் சீர்திருத்தி உழுது பயிரிட்டு வாழ்ந்து வந்த வேளாளனே என்பதுதான் சரியான கண்ணோட்டமாகும். புலையன் என்பான் கடையன் என்றவாறு பிற்கால ஆரியச் செய்திகளில் கூறப்பட்டுள்ளதோடு, அவன் தீண்டத்தகாதவன் என்றும் கூறுகின்றன. தொல்காப்பியம் கி.மு. 1000-700 ஆண்டு களில் எழுதப்பட்டது என்பது பெரும்பாலோரின் கருத்து. தொல் காப்பியர் காலத் தமிழகத்தில் சாதிகள் இல்லை என்பதும் தெளிவு.

தோமையார் தமிழகம் வந்த போது, சாதிப் பாகுபாடுகள் இருந்தன என்பது ஏற்றுக் கொள்ளக் கூடிய செய்தியன்று. கிறித்து பிறப்பாண்டுகளில் ஆரியரின் வருகை தமிழகத்தில் தொடக்க காலமாகவே இருந்தது எனலாம். சேரநாட்டு நம்பூதிரி களே அங்கு உயர்சாதியினர் என அறியப்படுகின்றனர். நம்பூதிரி கள் கி.பி. 4ஆம் நூற்றாண்டுக்குப் பிறகே, வேம்பாய் - கொங் கணப் பகுதியினின்றும் சேரநாட்டிற்கு வருகை தந்தனர் என்று செய்திகள் கூறுகின்றன.[346] பரசுராமன் கேரள மாநிலத்தை உருவாக்கியதாகச் சொல்லப்படும் கதையும் கூட பிற்காலத்தில் சொல்லப்பட்டதேயென்பர். சேர நாட்டு பிராமணர்கள் வெளியூர் மக்கள் என்பதை மறைக்கவும், பிராமணர்களுக் காகவே சேரநாடு தோற்றுவிக்கப்பட்டது என்ற கதையின்

346. Ibid.

வழியே, சேரநாடு பிராமணர்களுக்கே உரிமையானது என்ற கருத்தை நிலைநாட்டவும், பிராமணர்களின் தயவால்தான் மற்ற இன மக்களுக்கும் சேரநாட்டில் வாழ்வுரிமை அளிக்கப் பட்டது என்ற பொய்யான செய்தியை நிலைநாட்டி, பிராமணர் கள் தங்களுடைய வாழ்க்கை நிலைப்பாட்டை உறுதி செய்து கொள்ளும் வகையில், பிராமணர்களே கட்டிவைத்த கதைதான் பரசுராமன் கதையாகும்.

நம்பூதிரி என்ற சொல், தமிழ்ச் சொல்லாகவே உள்ளதால், வடக்கேயிருந்து வந்த பிராமணர்களை, சேர நாட்டுத் தமிழர், நம்பூதிரி என அழைத்தனர் எனக் கருதலாம். நம்பி[347] என்ற தமிழ்ச் சொல்லுக்கு உயர்ந்தோன் என்ற பொருளுண்டு. உத்திரி[348] என்ற வடசொல்லுக்கு வழிபாட்டுக்குரிய மந்திரம் சொல்லுதல், பூசை செய்தல் செபம் பண்ணுதல் என்ற முச்செயல் களைக் கொண்ட வழிபாடு என்பதே பொருளாகும். நம்பூதிரி என்ற சொல்லுக்கு வழிபாடுகள் செய்யும் மறையோன் அல்லது உயர்ந்தோன் என்பதே பொருளாகும். நம்பி = ஆண்களின் சிறந்தவன் என்பது பொதுப் பொருள்.

நம்பியாண்டார் நம்பி = கலித்துறையந்தாதி எழுதிய அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவர்.

**நம்பி**

அரசர்குலப் பெண்ணை வலியப் புணர்ந்த பார்ப்பானுக்குப் பிறந்த மகன். நம்பூதிரி என்ற பெயர், நம்பூரி என்றும் வழங்கப் படுகின்றது. மலையாளத்துப் பார்ப்பான் என்று அகரமுதலிகள் கூறுகின்றன.

நம்பியார் என்ற மற்றொரு வகுப்பார், பிராமணரல்லாத கேரள மரபைச் சார்ந்தவரே. நம்பியர் என்பதே பிற்காலத்தில் ஆர் விகுதி சேர்ந்து நம்பியாராயிற்று. நம்பூதிரிக்கும், தில்லையி லுள்ள தீட்சிதர்களுக்கும் தொடர்புண்டு என்பர். இவர்கள் இருவரும் தலைமுடியை வலப்பக்கம் சாய்த்துக் கொண்டை போட்டுக் கொள்பவராவர். தில்லை மூவாயிரவர், தேவலோகத்தி

347. சிலப்பதிகாரம், 14:100.

348. உத்திரி: மந்திரம், பூசை, செபம். வின்ஸ்லோவின் தமிழ் - ஆங்கில அகராதி. ப. 132.

லிருந்து சிவபெருமானால் உலகிற்கு அழைத்து வரப்பட்ட வர்கள் என்று சொல்லிக் கொள்கிறார்கள்.

**தீக்கையர்**

யாகம் வளர்க்கையில் நெய்யும் கையுமாக இருந்து தீயை வளர்ப்பவர்கள். தீக்கை என்ற தமிழ்ச் சொல்லே. தீக்ஷை என்று வட மொழியில் திரிந்தது. தீக்ஷை பெறுவ தென்பதும், தீக்கரங்களுக்கு உரிமையாளர்களான தீர்கையர் களிடமிருந்து ஆசிபெறுதல் அல்லது வாழ்த்துப் பெறுதல் என்பதே.

நம்பூதிரி, தீக்ஷிதர் போன்றவர்கள் தமிழ்ச் சொற்களையே மூலமாகக் கொண்டிருப்பதால் தமிழ்ப் பார்ப்பனர்களாகிய வள்ளுவர்களே காலப்போக்கில் நாட்டு நடப்பை அறிந்து தங்களை வேறு பெயர்களால் அழைத்துக் கொண்டனரோ என்றும் எண்ணத் தோன்றுகின்றது.

தோமையார் சேரநாட்டில் பல நம்பூதிரிப் பிராமணர் களுக்கு திருமுழுக்கு அளித்துக் கிறித்துவத்தில் இணைத்தார் என்ற செய்தியிலும் கூட, தோமையார் காலத்தில் நம்பூதிரிகள் இருந்தனரா என்ற ஐயம் எழுகிறது. பிற்காலத்தவர், தோமை யார் காலத்துப் பார்ப்பனர்களை (தமிழ் வள்ளுவர்களே) நம்பூதிரிகள் எனக் கருதியிருக்க வேண்டும். **தோமையார், தாழ்த்தப்பட்ட மக்களையும் கிறித்துவர்களாக்கினார் என்ற செய்தி எதுவும் சொல்லப்படவில்லையாதலால், தோமையார் காலத்தில் சாதிப்பாகுபாடுகள் எதுவும் இல்லை என்றே கருத வேண்டும்.** மாறாக, போர்த்துக்கீசியர் வருகை தந்த காலத்தில் சாதிகள் வேரூன்றியிருந்ததை, இயேசு அவைக் குருமார்களின் மடல்களே விளக்கமாகக் கூறுகின்றன.

தோமையார் காலத்தில் கிறித்துவத்துக்கு மாறியவர்களை என்ன பெயரிட்டு அழைத்தார்கள் என்ற கேள்வி எழுகின்றது. மேலை நாடுகளில், கி.பி. 3ஆம் நூற்றாண்டு வரையில், கிறித்துவ சமயத்தைச் சார்ந்தவர்கள், தங்களை நம்பிக்கையாளர்கள் (Believers) என்றும், தம் சமயத்தைச் சார்ந்தவர்களை உடன் பிறப்புக்கள் (Brethren) என்றும் அழைத்துக் கொண்டனர். கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில், கிறித்துவ சமயத் தின் எதிர்ப்பாளர்கள், இவர்களை நக்கலாகக் கிறித்துவர்கள் (derogatory term) என அழைத்தனர். இப்பெயரே நின்று

நிலைத்துவிட்டது என்பர்.[349] தமிழகத்தில், "கிறித்துவர்" என்ற பெயர் அறியப்படாத நிலையில், "பள்ளிகள்" என்ற சொல்லால் கிறித்துவர்கள் அழைக்கப்பட்டனர் என்று சொல்லப்படு கின்றது. கிறித்துவ தேவாலயத்தைப் பள்ளி என்றும், கிறித்து வர்களைப் பள்ளியர் என்றும் அழைத்தனர்.[350] இந்தப் பள்ளி களுக்கு அளிக்கப்பட்ட அரசாங்கத்தின் சலுகைகள் பற்றிய குறிப்புகள் இதனைத் தெரிவிக்கின்றன. கேரளத்தில் பள்ளி என்ற சொல், இன்றும் கிறித்துவர்களையே குறிக்கின்றது.

சங்க இலக்கியங்கள் பள்ளி என்ற சொல்லைப் பல்வேறு பொருள்களில் கையாண்டுள்ளதைக் காண முடிகின்றது. தமிழகத்தில் (சோழ பாண்டிய நாடுகளில்) சமணர்களையே பொதுவாகப் பள்ளிகள் என அழைத்ததாகக் கூறுவர். புத்த சமயத்தினரையும் பள்ளிகள் என அழைத்திருப்பதும் தெரிய வந்துள்ளது. சோழ பாண்டிய நாடுகளில், கிறித்துவர்களைப் பள்ளிகள் என்று அழைத்ததற்கானச் சான்றுகள் இல்லை. இசுலாமியரின் வருகைக்குப் பின்னர், அவர்களது தொழுகை மற்றும் வழிபாட்டிடங்களைப் பள்ளிவாயில் என அழைக்கும் வழக்கு தோன்றியது. பள்ளிகள் பொதுவாக, சமயச் சான்றோர் உண்டு உறங்கி வாழ்ந்த உறைவிடங்களையே குறித்தன. அவ் வுறைவிடங்களிலேயே அவர்கள் கல்வியையும் அளித்தனர் என்பதால், கற்கும் இடங்கள் பள்ளிக் கூடங்கள் எனப்பட்டன. உறங்கும் இடத்தையும் பள்ளியறை எனப் பொருள் கொண்டும், இதன் வழியில் பள்ளி என்பதற்கு உறங்குதல் என்ற பொருளும் உணரப்பட்டது. வைணவக் கோயில்களில் திருப் பள்ளியெழுச்சி என்ற நிகழ்வை நோக்குக.

---

349. History of Religion, p. 333.

350. Cultural Symbiosis in Kerala, Narayanan, M.G.S. Kerala Historical Society, Trivandrum, 1972, p. 36.

It is especially stated (in the Copper plates) that Vijayaraja deva, the kings representative, Ayyan Atikal (அய்யன் அடிகள்) the governor, Rama Thiruvatikal (திருவடிகள்) the governors heir apparent, Prakriti (Chief citizens), Adhikarar (Officers), Arunoorttuvar (அறுநூற்றுவர்), and the Padis (local Chiefs) of Punnaittalai and Polaikkuti were present on the occassion of this gift (to Palliars) and this in itself conveys its importances. - M.G.S. Narayanan.

தமிழகம் சாரா சமயங்களையும், சமயக் கூடங்களையும் பள்ளிகள் என்ற பெயரால் அழைத்தனர் என்றாலும், வைணவக் கோயில்களிலும் இச்சொற்கள் பயன்படுத்தப்படுவதால், முதலில் கூறிய பொருள் கரணியம் சரியானதன்று எனக் கூறலாம். மடை[351] என்ற சொல்லுக்கு உணவு அல்லது சோறு என்பதே பொருளாகும். மடைப் பள்ளி என்பது சோறு சமைக்குமிடம் என்றே அறியப்படும். எப்போதும் சோற்றைத் தின்று கொண்டேயிருப்பவனை மடையன் என்று கூறினர்.

பள்ளி என்ற சொல் கிறித்துவர்களைக் குறித்து முதலில் சொல்லப்பட்ட பின்பே, சமணர்களையும் புத்த சமயத்தைச் சார்ந்தவர்களையும் குறித்துப் பிற்காலத்தில் சொல்லப்பட்டதாக அறியலாம். தோமையார் காலத்துத் தமிழ் இலக்கியங்களில் பள்ளி என்ற சொல் சமணர்களைக் குறித்துச் சொல்லப் படவில்லை. மணிமேகலையும் சிலப்பதிகாரமும் பள்ளியென்னும் சொல்லைப் பெருமளவில் பயன்படுத்தின. இவையிரண்டும் கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் எழுதப் பெற்றவையென்பர். கி.பி. எட்டாம் நூற்றாண்டில் எழுதப்பட்டவைகளே எனச் சொல்வாருமுளர். குறுந்தொகை, மேற்கண்ட இரட்டைக் காப்பியங்களுக்கும் காலத்தால் முற்பட்டதென்பது தமிழறிஞர்களின் கருத்தாகும். குறுந்தொகை, பள்ளியென்ற சொல்லைச் சமயம் சார்ந்து பயன்படுத்தவில்லை.

> இல்லிறைப் பள்ளித்தம் பிள்ளையொரு வதியும் –
> குறுந்தொகை[352]

இல்லிறைப்பள்ளி = வீட்டின் தாழ்ந்த பகுதி, இங்கு குருவிகள் கூடு கட்டி வசிக்கும் என்க. பள்ளி என்பது இங்கு வீட்டைக் குறித்தது.

> சிறுவீ ஞாழல் வேரளைப் பள்ளி – குறுந்தொகை[353]

**வேரளைப் பள்ளி**

மரத்தினடியில் உள்ள தடித்த வேர்களுக்கு இடையே உள்ள நண்டின் வளை. பள்ளி என்ற சொல் இங்கு நண்டு தங்கும் வளையைக் குறித்தது.

---

351. சிலப்பதிகாரம், 12:37.
352. குறுந்தொகை, 46:5.
353. மேலதே, 328:1.

பள்ளி யானைய னுயிர்த்தென் – குறுந்தொகை[354]

பள்ளியானை = துயில் கொண்டுள்ள யானை. பள்ளி இங்கு தூக்கத்தைக் குறித்தது.

அருள்புரி நெஞ்சத் தறவோர் பள்ளியும் – மணிமேகலை[355]

அறவோர் பள்ளி = பௌத்த முனிவர் வாழுமிடம். இதே பொருளில்,

உறையும் பள்ளிடிக் கிறைவளை நல்லாள் – மணிமேகலை[356]

அறவோர் பள்ளியு மறனோம் படையும் – சிலப்பதிகாரம்[357]

ஐயருறை பள்ளியிடம் – சீவக சிந்தாமணி[358]

இடம் (Place) என்ற பொருளில்,

ஒளித்துறை யிடங்களும் பளிக்கறைப் பள்ளியும் – மணிமேகலை[359]

சொல்லப்பட்டுள்ளதை நோக்குக.

அரங்கும் பள்ளியு மொருங்குடன் பரப்பி – சிலப்பதிகாரம்[360]

பள்ளி = மண்டபம். பள்ளி என்பதற்குப் பல்வேறு பொருளையும் அறியலாம்.[361]

---

354. மேலதே, 142:4.

355. மணிமேகலை, 20:6.

356. மேலதே, 28:72.

357. சிலப்பதிகாரம், 5:179.

358. சீவக சிந்தாமணி, 1782.

359. மணிமேகலை, 19:105.

360. சிலப்பதிகாரம், 25:14.

361. பள்ளி: அறை (A room Or Chamber)
தேவாலயம், கோயில், சமணர்களின் கோயில்,
மக்கட் படுக்கை (Sleeping place or bed)
பள்ளிக் கூடம் (School)
அறச்சாலை (Almonry)
சிற்றூர் (A small village)
மருத நிலத்தூர் (An agricultural village)
ஒரு வகுப்பினர் (Name of a Caste)
வின்ஸ்லோ தமிழ் அகரமுதலி, ப. 745.

தோமையார் காலத்தில் பல இடங்களில் தேவாலயங் களைக் கட்டி, அங்கு சமயக் கல்வியைக் கற்றுத்தந்தார். தமது தொண்டர்களை அத்தேவாலயங்களுக்குப் பொறுப்பாக்கி, அத்தேவாலயங்களிலேயே அவர்கள் தங்கியிருக்கவும் பணித் தார். ஆன்றோர்கள் தங்கியிருந்த இடம் பள்ளி என, சங்க இலக்கியங்கள் கூறுவதையொட்டி, முதன் முதலில் இத்தேவால யங்களே பள்ளி என அழைக்கப்பட்டது. பள்ளியில் தங்கி யிருந்த அல்லது அங்கு கல்வி கற்ற அனைவரும் பள்ளியர் எனப்பட்டனர். இவ்வாறாக, முதன் முதலாகத் தேவாலயங்கள் பள்ளிகள் எனப்பட்டன. இந்த வரலாற்று நிகழ்வுக்குப் பிறகு, புத்த சமண சமயத்தார் தங்கியிருந்த உறைவிடங்களும் பள்ளிகள் என அழைக்கப்பட்டன.

தோமையார் தமிழகத்தில் குறிப்பாகத் திருமயிலையில் பெரும்பாலான மக்களை கிறித்துவத்துக்கு மாற்றியிருந்தார். இம்மக்களும் பள்ளியர் என்ற பெயரால் அழைக்கப்பட்டிருக்க வேண்டும். ஏற்கனவே, பள்ளர் என்ற வேளாண் பிரிவினர் தமிழகத்தில் வாழ்ந்திருந்ததாக அறியலாம்.

பிள் - பிள - பிளவு = நிலத்தில் தோன்றும் வெடிப்பு' அல்லது குழி.

பிள் - பள - பளை = நிலத்தினடியில் செல்லும் ஓட்டை. அது வளைந்து சென்றால் வளை.

பிள் - பள - பள் - பள்ளம் = தாழ்ந்த நிலம்.

பள்ளம் - பள்ளர் = நீர் நிறைந்த தாழ்ந்த நிலத்தில் பயிர்த்தொழில் செய்யும் வேளாளர்.

பள்ளம் = தன் தரையிலிருந்து தாழ்ந்து காணப்பட்ட தாலும், ஒரு சிறு பகுதியாக விளங்கியதாலும், அறை (room)க்கும் சொல்லப்பட்டது.

பிள் - பிள்ளை = பிளவு அல்லது பிரிவு. தாயிடமிருந்து பிரிக்கப்பட்ட குழந்தை.

பள்ளம் = மருத நிலத்துப் பகுதிகள்.

மருத நிலத்தின் தலைவன் வேந்தன் என்ற இந்திரன். அவனையே மருத நில மக்கள் வழிபட்டனர். அதனால்

தேவேந்திரனைத் தங்கள் குலத்தில் தலைவனாகவும் ஏற்றுக் கொண்டனர். தங்களைத் தேவேந்திர குல வேளாளர் என்று கூறிப் பெருமைப்பட்டுக் கொண்டனர்.

பள்ளர் என்ற வேளாளர் மரபில் பிற்காலத்தில் ஏற்றத் தாழ்வுகள் தோன்றின. உழுதுண்பாரும் உழுவித்துண்பாரும் வேளாளர் மரபில் பிரிந்தனர்.[362] உழுதுண்போர் பள்ளர் எனவும், உழுவித்துண்போர் வேளாளர் எனவும் கருதப்பட்டனர். உழுவித் துண்போர் செல்வச் செழிப்பில் வாழ்ந்திருந்ததால், தம்மைக் குமுகாயத்தின் தலைமைப் பிரிவாக எண்ணிக் கொண்டனர். கிறித்து பிறப்பாண்டுகளுக்குப் பிறகு உலக நாடுகளின் வணிகத் தொடர்புகள், நிலமானிய முறையைத் தோற்றுவித்தன. செல்வர் வறியர் பிரிவுகள் தோன்றவும் வித்திட்டன. இக்காலத்தில் பிராமணர்களின் சாதிப்பிரிவினைக் கொள்கை வலுப்பெற்ற போது, பள்ளர்கள் என்ற உழைத்துண்ணும் வேளாளர் இனம் தீண்டத்தகாதவர்களாக அறியப்பட்டனர்.

பறையர் என்ற இனம், அரசியல் தொடர்புடையது. அவர்கள் வேளாண் தொழிலில் ஈடுபடவில்லை. மன்னரின் செயல்பாடுகள், அறிவிப்புகள் ஆகியவற்றை மக்களிடையே கொண்டு செல்லும் ஊடகத் தொழிலையே அவர்கள் மேற் கொண்டிருந்தனர். முத்தமிழின் இசைக்கலையை வளர்த்த பாணர் என்ற குழுவினர் பறையர் இனத்தைச் சார்ந்தவரே. மக்களுக்கும் மன்னனுக்கும் இடையே தொடர்பாளர்களாக விருந்த பறையர், பிற்காலத்தில் தாழ்த்தப்பட்டவர்களாக ஒதுக்கப்பட்டனர். நான்கு வகை சாதிகளை ஊக்குவித்த பிரா மணர்கள், ஐந்தாம் சாதியாக பஞ்சமர் என்ற உழைக்கும் மக்களை அறிவித்தனர். இவ்வாறு பள்ளர், பறையர், பஞ்சமர் ஆகியோர் தாழ்த்தப்பட்டவர்களாக அறிவிக்கப்பட்டனர். இம்மூன்று இனங்களும் தாழ்த்தப்பட்டவர்களாக இருந்த நிலையில், இம்மூன்று பிரிவினரும் எதிர்காலத்தில் இணைந்து விட்டால், சனாதன தர்மத்துக்கு எதிரான அணியில் திரண்டு ஆற்றல்மிக்க ஒரு பிரிவாக மாறிவிடுவர் என அஞ்சிய ஆரிய தர்மம், இம்மூன்று பிரிவினரிடையேயும் ஏற்றத்தாழ்வுகளைத் தோற்றுவித்து, அவர்களில் உயர்ந்தோர் யாரெனப் போரிட்டுக் கொள்ளத் தூண்டியது. கடந்த ஈராயிரம் ஆண்டுகளாக நடை

362. தமிழர் வரலாறு, தேவநேயன், நேசமணி பதிப்பகம், காட்டுப்பாடி.

பெறும் இவர்களின் போராட்டம் இன்றும் கூட முற்றுப் பெற வில்லை என்பது வரலாற்றில் காணப்படும் செய்தியாகும்.

பறை முற்றிப் பள்ளராயினர், பள்ளர் முற்றிப் பள்ளியா யினர் என்ற பழமொழியுண்டு. பள்ளர்கள் வேளாளர் என்ற மரபைச் சார்ந்தவர்கள் என அறியப்படுவதால், பள்ளர் - பள்ளி - வேளாளர் என்ற தற்காலத்து மூன்று இன மக்களும் தொடக்க காலத்தில் உழைக்கும் வேளாளப் பெருங்குடி மக்களே என்பதில் மாற்றுக் கருத்து இல்லை எனலாம். தற் காலத்தில் தமிழகத்தின் வடமாவட்டங்களில் அறியப்படும் வன்னியர் அல்லது படையாச்சி என்ற மரபினர், அண்மைக் காலம் வரையிலும் கூட பள்ளி என்றே அழைக்கப்பட்டனர். ஆங்கிலேயர் கால ஆவணங்கள் எல்லாம், வன்னியர் மரபைப் பள்ளி என்றே சுட்டுகின்றன.

வன்னியர்களைப் பள்ளிகள் என அழைத்ததற்கான கரணியங்கள் இது வரையில் விளக்கமாகச் சொல்லப்பட வில்லை. பள்ளி என்ற சொல் வேற்று நாட்டிலிருந்து வந்த வரைக் குறித்தோ, அயல்நாட்டுச் சமயங்களைக் குறித்தோ சொல்லப்பட்டது என்பது உண்மையானால், பள்ளிகள் எனப் பட்ட வன்னியர்கள் வேற்று நாட்டினராகவோ அல்லது அயல் நாட்டிலிருந்து வந்த சமயத்தைப் பின்பற்றியவர்களாகவோ இருந்திருக்க வேண்டும். வன்னியர்கள் தமிழர்களே என்பதில் மாற்றுக் கருத்து இல்லை என்பதனால், இவர்கள் புத்த, சமண, கிறித்துவ, இசுலாமியச் சமயத்தைச் சார்ந்தவர்களாக இருந் திருக்க வேண்டும். தோமையார் காலத்தில் சேரநாட்டுக் கிறித் துவர்களைப் பள்ளிகள் என அழைத்தனர் என்பது தெளிவு. திருமயிலைப் பகுதியிலும் ஏராளமானவர் கிறித்துவ மறைக்கு மாற்றப்பட்டதால், அப்பகுதிக் கிறித்துவர்களும் பள்ளிகள் என்றே அழைக்கப்பட்டிருக்க வேண்டும். அவர் வழி வந்த கிறித்துவர்களை (பள்ளிகள்) பல்கிப் பெருகிய காலத்தில், மாணிக்கவாசகர் போன்ற சிவநெறிப் பெரியார்களால், கிறித்து வர்கள் மீண்டும் சிவநெறிக்கு மாற்றம் செய்யப்பட்டதாக வரலாறு கூறுகிறது. அவ்வாறு மாற்றம் செய்யப்பட்டு சிவ நெறியில் இணைக்கப்பட்ட பின்பும், அம்மரபினரைப் பள்ளி கள் என்றே அழைத்தனர்.

வன்னியர் மரபைச் சார்ந்தவர்கள் சமணர்களாயிருந்தனர் என்ற செய்தியும் உண்டு. இதற்கானச் சான்றுகள் தெளிவாக்கப்

படவில்லையென்றாலும், சமணர்களையும் பிற்காலத்தில் பள்ளிகள் என அழைத்ததால், வன்னியர்களும் ஒருகாலத்தில் சமணராயிருந்தோரே என்று கூறுகின்றனர். சமணர்களைப் பள்ளிகள் என அழைக்கும் மரபு கி.பி. 6ஆம் நூற்றாண்டுக்குப் பிறகே அறியப்பட்டுள்ளதாலும், கி.பி. முதல் நூற்றாண்டிலேயே கிறித்துவர்கள் பள்ளிகள் என அழைக்கப்பட்டதாலும், வன்னியர்கள், குறிப்பாக தமிழகத்தின் வடமாவட்டங்களிலுள்ள வன்னியர்கள் கிறித்துவர்களாயிருந்திருக்க வேண்டும் என்ற கருத்தும் ஆய்வுக்குரியதே எனலாம். இன்று வட மாவட்டங்களிலும் காணப்படும் வன்னியக் கிறித்துவர்கள், கி.பி. 14ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு போர்த்துக்கீசியர்களாலும், மற்ற ஐரோப்பிய சமயத் தொண்டர்களாலும் கிறித்துவ சமயத்துக்கு மாற்றம் செய்யப்பட்டவரேயாவர். தோமையார் காலத்துப் பள்ளிகள் (கிறித்துவர்கள்) கி.பி. இரண்டாம் நூற்றாண்டிலேயே சேரநாட்டிற்குச் சென்று குடியேறிவிட்டதாகக் கருதலாம். வன்னியர் இனத்தின் ஒரு பிரிவினர், கி.பி. முதல் நூற்றாண்டில் கிறித்துவர்களாகிப் பின்னர் பல்வேறு கரணியங்களால் சிவ நெறிக்குச் சென்று, கி.பி. 14ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு மீண்டும் கிறித்துவராயினர் எனக் கொள்ளலாம். வன்னியர்கள் கடைப் பிடித்து வரும் வழக்குகளையும் வழக்காறுகளையுமே, வன்னியக் கிறித்துவர்களும், சமயம் மாறிய நிலையிலும் கடைப்பிடித்து வருகின்றனர் என்பதும் கண்கூடு. எனவே, பள்ளி என்ற பெயர், வன்னியர்களுக்கென வழங்கப்படுவதால், வன்னியர்கள் தொடக்க காலத்தில் கிறித்துவர்களாயிருந்தனர் என்ற செய்தியை உறுதிப் படுத்தும்.

❖❖❖

## கடல்வழியும் கிறித்துவ சமயமும்

கடல்வழியும், வாணிகமும் கிறித்துவ சமயமும் ஒன்றோடொன்று தொடர்புடையனவாகும். இந்தியாவைப் பொருத்தவரை, கடல்வாணிகமே கிறித்துவ சமயத்தை இந்தியாவுக்குக் கொண்டுவந்தது என்பது மிகையில்லை. தமிழ் வணிகனான அப்பன் (Habban) என்பவனே, தோமையாரைப் தமிழகத்துக்கு அழைத்து வந்தவனாவான். தோமையாருக்குப் பிறகு கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் கானாதோமா என்ற வணிகன் தலைமையில் 400 சிரிய நாட்டினர், முசிறித்துறைமுகம் வந்து சேர்ந்தனர். அதன்பிறகு நான்கு நூற்றாண்டுகள் வரையிலும், கிறித்துவ சமயத்தலைவர்கள், வணிகக் கப்பல்களிலேயே தமிழகத்துக்கு வந்து போயினர். இசுலாமியர்கள் செல்வாக்குப் பெரும் வரையிலும் (கி.பி. 700) கடல் வணிகக் குழுக்களே தமிழகத்தில் கிறித்துவத்தை வளர்த்தன.

கி.பி. 700-1400 ஆண்டுகள் இடைவெளியில், மேலை நாடுகளிலிருந்து வருகை தரும் கிறித்துவ சமயத்தலைவர்களின் எண்ணிக்கை குறைந்துபோனது. இசுலாமியர்களின் கடல்வழி வாணிகம், மற்ற மேலை நாட்டவரைத் தடுத்து நிறுத்தியது. இருப்பினும் அவ்வப்போது பாரசீகம் வழியே தரைவழியாகவும், இசுலாமிய ஆட்சியாளர்களின் அனுமதி பெற்றும் சில கிறித்துவத் தலைவர்கள் தமிழகம் வந்தனர். தோமையார் சீன நாட்டுக்குச் சென்று வந்தது பற்றிய செவிவழிச் செய்திகள் அறியப்பட்டாலும், அதற்குப் பிறகு சீனம் போன்ற கிழக்கத்திய நாடுகளுக்குக் கிறித்துவத் தொண்டர்கள் சென்றதாகத் தகவல் இல்லை. தோமையாருங் கூட, வணிகக் கப்பலில்தான் சீனம் சென்று வந்திருக்க வேண்டும். சங்க காலத்திலேயே, முசிறி - காண்டன் துறைமுகங்களுக்கிடையே வணிகப் போக்குவரத்து

நடைபெற்றது. இடைக்காலத்தில் தமிழகக் கடற்கரையினின்றும் பெரும் எண்ணிக்கையிலான மரக்கலங்கள் சீனம் வரை சென்று திரும்பின.

சங்க காலத்துக்குப் பிறகு தோன்றிய களப்பிரர் ஆட்சியின் கீழ் கடல்வாணிகம் குறைந்தே காணப்பட்டது எனலாம். மேலும் வாணிகத்தை ஊக்குவித்து வந்த மேலை நாட்டு உரோமப் பேரரசும் வீழ்ச்சியடைந்தது, மற்றொரு கரணியம் ஆகும். கி.பி. 400-700 ஆண்டுகளில், கடல்வணிகம் குறைவாகவே அறியப்பட்டது. கி.பி. 700க்குப் பிறகு எழுச்சி பெற்ற அரேபியர்கள், கடல்வணிகத்தைத் தங்கள் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்ததோடு, சீனம் வரையில் தங்கள் எல்லையை விரிவுபடுத்தினர். செங்கடலின் ஏடன் (Aden) முதல் சீனத்தின் காண்டன் (Canton) வரையிலும், எதிர்ப்பில்லா கடல் வணிகத்தைத் தொடர்ந்தனர்.

களப்பிரரைத் தொடர்ந்து பல்லவர் காலத்தில், தமிழகத்தில் சமய மறுமலர்ச்சி தோன்றியது. சிவநெறியைத் தவிர்த்துப் பிறநெறிகளைப் பகைக்கும் மனப்பான்மை தோன்றியது. தமிழகத்தின் வட மாவட்டங்களில் எஞ்சியிருந்த கிறித்துவர்களும் சிவநெறிக்கு மாற்றப்பட்டனர். இதற்கு ஆள்கின்ற ஆட்சியாளர்களின் ஆசியும் கிட்டியது. கிறித்துவர்களைத் தொடர்ந்து, தொண்டை நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் பெருந்தொகையிலான சமணர்கள் கொலை செய்யப்பட்டனர். ஆறு இலக்கத்திற்கும் கூடுதலான சமணர்கள் கொலை செய்யப்பட்டனர் என்றும் ஒரு செய்தியுண்டு. இது மிகைப்படுத்தப்பட்ட செய்தியென்றும் சில ஆய்வாளர்கள் கருதுகின்றனர். பொதுவாகத் தமிழகத்தில் சமயப் பொறையுணர்வு இக்காலத்தில் குறைந்திருந்தது என்றே வரலாறு கூறுகின்றது. இச்சூழல்களிலும் கூட, சேர நாட்டில் கிறித்துவம் அச்சுறுத்தப்படவில்லை. மாறாக, மன்னர்களின் அரவணைப்பாலும் சலுகை களாலும் கிறித்துவம் வளர்ந்து வந்தது எனக் கருதலாம்.

தொடர்ந்து வணிக உலகைத் தமது பிடிக்குள் கொண்டு வந்த அரேபிய இசுலாமியர்கள், தமிழகத்தின் மேற்குக் கரைகளில் வலம் வந்தனர். வணிகர்களாக வந்த இசுலாமியர் ஆட்சியைப் பிடிக்கும் எண்ணத்தைக் கொண்டிருக்கவில்லை. இசுலாமியர்களின் வருகையால் மேலைக் கடலில் செல்வாக்கையிழந்த கிறித்துவ சமய வணிகக் குழுவான மணி கிராமத்தார், தமது பார்வையைக் கீழ்த்திசை நாடுகளில் திருப்பினர். பல்லவ மன்னன்

மூன்றாம் நரசிம்ம வர்மன் (கி.பி. 844-866) சீன நாட்டுக்கு வணிகக் குழுவொன்றை அனுப்பி வைத்தான். இக் குழுவினுடன் சென்ற மணிகிராமத்தார், தாகுவா-பா (Takua-Pa) எண்ணு மிடத்தில் குடியிருப்பொன்றை ஏற்படுத்திக் கொண்டனர்.[364] சுமத்திராத் தீவின் கடற்கரை நகரான தாகுவா - பா, பிற்காலத்தில் இராசேந்திர சோழன் படையெடுத்த நகரங்களில் ஒன்றாகும்.

இடைக்காலச் சோழர்களின் ஆட்சியில், மேற்குக் கடற்கரைத் துறைமுகங்களைவிட, கிழக்குக் கடற்கரைத் துறைமுகங்கள் சிறப்பு பெற்றன. நாகப்பட்டினம், தேவிபட்டிணம், வீர பாண்டியன் பட்டிணம், காயல், கீழக்கரை, பெரியபட்டிணம், தேவனாம் பட்டிணம், சதுரங்கப் பட்டிணம், திருமலைராயன் பட்டிணம், நாகூர், திருமுல்லை வாயில், கிருட்டினா பட்டிணம், அனந்தராயன் பட்டிணம் போன்ற கிழக்குக் கடற்கரை நகரங்கள் அடுத்த நூற்றாண்டுகளில் சிறப்பு பெற்றன. இராசராசன் காலத்தில் நாகப்பட்டிணம் துறைமுகம் மரக்கலங்களின் ஆரவாரங்களால் களையுடன் காணப்பட்டது.

சென்ற நூற்றாண்டுகளில் புத்த சமயத்தினரை வெறுத்து வந்த சோழ மன்னர்கள் தங்களது கிழக்காசிய நாடுகளின் வணிக ஈடுபாடுகளால், நாகப்பட்டினத்தில் சூடாமணி விகாரம் என்ற புத்த சமயக் கோயிலையும் கட்டித்தர முன்வந்தனர். சுமத்திராவின் ஸ்ரீ விஜய அரசின் வேண்டுகோளுக்கிணங்க, முதலாம் இராச இராசன் (கி.பி. 985-1014), நாகையில் தங்கியிருந்த கிழக்காசிய புத்த வணிகர்களுக்காகக் கட்டிக் கொடுத்த புத்த கோயிலும், அதற்கு வாரி வழங்கியிருந்த நிலங்களும், சமய நோக்கில் சோழர்களின் மறுசிந்தனைகளை தெரிவிக்கின்றன. இலெய்டன் (Leiden) செப்புத் தகடுகள் இச்செய்தியைத் தெளிவாக விளக்குகின்றன. குலோத்துங்கச் சோழன் (கி.பி. 1070-1120), இக்கோவிலுக்கு மேலும் பல சலுகைகளை அளித்ததெல்லாம், வணிக நோக்கில்தான் என்பதை வரலாறு கூறும்.[365]

---

363. சிலப்பதிகாரம், 10:125.

364. Takua - Pa and its Tamil inscription is the Journal of the Malayalam Branch of the Royal Asiatic Society, K.A. Nilakanta Sastri, Vol. 22, 1949, pp. 25-30.

365. இந்திய வரலாறு, சுப்பிரமணியன், ந. நியு செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட், சென்னை, 1989, பக். 211-215.

இராசேந்திர சோழன் காலத்தில் (கி.பி. 1014-1044), ஸ்ரீ விஜய அரசு என்ன கரணியம் பற்றியோ, தமிழகத்து வணிகர் களுக்குத் தொல்லைகளைத் தர முயன்று, வணிக நடவடிக்கை களையும் தடுத்து நிறுத்தியது. இதனால் சினமுற்ற இராசேந்திர சோழன், இந்திய வரலாற்றில் எந்த மன்னனும் மேற்கொள் ளாத, கடற்போரை சுமத்திராத் தீவு உள்ளிட்ட தென்கிழக்கு ஆசிய நாடுகள் மீது நிகழ்த்திக் காட்டினான். இப்போர் முற்றிலும் தமிழகத்தின் வணிக நலனைக் கருத்தில் கொண்டு தொடுக்கப்பட்டதேயாகும். (கி.பி. 1025) போரின் முடிவில், ஸ்ரீவிஜய அரசின் மன்னன் முதலாம் சூரியவர்மன், சோழ மன்னர்களின் குடும்பத்துடன் திருமண உறவும் கொண்டான். திசை ஆயிரத்து ஐநூற்றுவர் என்ற தமிழக வணிக நிறுவனத் தார், கி.பி. 1088ஆம் ஆண்டுகளில், இலபோ தோவா, பன்சூர் (Laboe Toewa and Pansur) போன்ற சுமத்திரா தீவின் துறைமுக நகரங்களில் குடியிருப்புகளையும் ஏற்படுத்திக் கொண்டனர்.[366]

இராச இராசன் காலத்திலேயே சீனநாட்டுக்கு வணிகக் குழு அனுப்பப்பட்டது. சோழர்களின் நான்கு நல்லெண்ணக் குழுக்கள் பற்றிய செய்திகளை, சீனக் குறிப்புகள் தெரிவிக் கின்றன.[367] சங்க காலத்திலிருந்து சேரர்கள் தன்னாட்சி பெற் றிருந்த நிலையில், இராசஇராசன் முதன்முதலில் சேர நாட்டை வென்றான். சேர நாட்டுத் துறைமுக நகரான முசிறியின் சிறப்பை யுணர்ந்திருந்த இராசஇராசன், தனது வெளிநாட்டு வணிகத் துக்கு அத்துறை முகத்தைப் பயன்படுத்திக் கொண்டான். சிவ நெறியாளனான இராசஇராசன், சேர நாட்டில் சிறப்புற்றிருந்த கிறித்துவ வணிகர்களுடனும் நல்லுறவை ஏற்படுத்திக் கொண் டான் என அறியலாம். முற்காலச் சோழர்கள் கிறித்துவர்களை வெறுத்த அளவில், இராசஇராசன் தனது கொள்கையில் மாற்றம் செய்து கொண்டான்.

---

366. Portuguese in the Tamil Coast, Jayaseela Stephen, S., Navajothi, 1998, p. 21.

367. Ibid.

1. இராசஇராசன் காலத்தில் முதல் குழுவும் (கி.பி. 1015).
2. இராசேந்திரன் காலத்தில் இரண்டு குழுக்களும் (கி.பி. 1020, 1033).
3. குலோத்துங்கன் காலத்தில் நான்காவது குழுவும் (கி.பி. 1077) அனுப்பப்பட்டன.

இராசேந்திர சோழன், கிறித்துவக் குழுவிலிருந்த வெளி நாட்டு வணிகன் பரஞ்சோதி என்பானை, தனது வெளிநாட்டு வணிகத் துறை அமைச்சராக்கிக் கொண்டான் என்று செய்திகள் கூறுகின்றன.[368] இவன் ஓலை நாயகமாகப் பணியாற்றிய செய்தியும்[369] அறியக் கிடக்கின்றது. "**கங்கை கொண்ட சோழ புரத்து இராஜவிச்சாதிரப் பெருந்தெருவில் சோகைன், சாலூர், கந்திருவப் பேரரையன் பரஞ்சோதி**" என்ற முழுநீளப் பெயருடன் காணப்படும் இவ்வணிகனை, அரேபியன் என்றும் இசுலாமியன் என்றும் ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர். கந்திருவன்[370] என்ற சொல்லுக்கு தளிச்சேரிப் பெண்களுக்கும், வாய்ப்பாட்டுக் காரர்களுக்கும் இவன் இசையைக் கற்றுத் தந்தவன் என்ற பொருளில் அறியப்படுவதால், ஓர் இசுலாமியன் இவ்வாறான இசையோடு தொடர்புடைய நாட்டியப் பெண்களுக்கு ஆசிரியனாக இருந்திருக்க இயலாது என்பது தெளிவு. இசையையும் பெண்களின் நடனத்தையும் இசுலாம் தடை செய்திருந்ததை நினைவு கொள்க. மேலும், சோனகன் என்ற பெயர், சோனகம் என்ற நாட்டிலிருந்து வந்தவன் என்று கருதப்படுகிறது. சோனகம் என்பது எந்த நாடு என்பதை இதுவரையாரும் விளக்கவில்லை. சோனகம் என்பது அரேபிய நாடே என்பதற்கான குறிப்புகள் ஒன்று கூட இல்லை எனலாம். கி.மு. 1000 ஆண்டுகளில், சோன் (Zoan) என்ற துறைமுகநகரம் (அலெக்சாந்திரியா) எகிப்தில் சிறப்புற்றிருந்தது. அந்நகரில், யூதர்கள் முற்காலத்திலும், கிறித்துவர்கள் இடைக்காலத்திலும் தங்கியிருந்து தமது வெளிநாட்டு வணிகத் தொழிலை மேற்கொண்டிருந்தனர். சோன் நகரம் இருந்த நாடே சோனகம் என்று சொல்லப்பட்டிருக்க வேண்டும். சோனகம் என்பது, கிறித்து பிறப்பாண்டுகளுக்கு முன்பு சொல்லப்பட்ட எகிப்து நாடே என அறியலாம். எனவே, இடைக்காலத்தில் அறியப்

---

368. எசாலம் செப்பேடு, 14 ஏடுகள் கொண்டவை. கண்டுபிடித்து வெளியிட்டவர் இரா. நாகசாமி, 1987.

369. Archaeological finds in South India, Esalam Bronzes and Copper-Plates, 1987, pp. 1-51.

370. A Sidelight on Chola officialdom, Y. Subbarayalu, Perspectives in Indian Archaeology, Art and Culture, Srinidhi; New Era Publications, Madras 1983, pp. 357-60.

பட்ட சோனகன்[371] பரஞ்சோதி (வெளிநாட்டின் ஒளி) ஒரு கிறித்துவனாகவோ அல்லது யூதனாகவோ இருந்திருக்க வேண்டும் என்பது தெளிவு. கிறித்துவம், இசைநாட்டியம் போன்ற கலைகளைக் கற்க என்றும் தடை விதித்ததில்லை.

பரஞ்சோதியின் தாய் தந்தையர் சேர நாட்டில் தங்கியிருந்த சிரியன் கிறித்துவக் குழுவைச் சார்ந்தவர்கள் என அறியலாம். தமிழகத்தின் இசை நாடகத் துறையென்பது, மிகமிக நுண்ணிய கலை நுணுக்கங்களைக் கொண்டதாகும். ஒரு வெளிநாட்டினன் தனது வாழ்க்கையின் இடைப்பகுதியில் இக்கலைகளைக் கற்று ஆசிரியனாக வருவதென்பது இயலாத ஒன்று. எனவே, தமிழகத்தில் பிறந்திருந்த பரஞ்சோதி, தனது இளைய அகவையிலிருந்தே இக்கலைகளைக் கற்றிருக்க வேண்டும் என்பதும் தெளிவு. இக்கண்ணோட்டத்தில் காணும் போது, கந்திருவன் பரஞ்சோதியை இசுலாமியன் என அழைப்பதை விட, கிறித்துவன் எனக் கொள்வதே சரியான முடிவாகும்.[372]

இராசஇராசன் சேரர்களை வென்றதாகக் கூறப்படும் செய்திகளில் சிறப்பானது, கள்ளிக் கோட்டையை ஆண்ட மன்னர்களின் கடற்படையைச் சிதறடித்ததேயாகும். ஏறக்குறைய இசுலாமியரின் கட்டுப்பாட்டிலிருந்த கள்ளிக்கோட்டை மன்னரின் கடற்படையும், இசுலாமியர்களை பெருமளவில் கொண்டிருந்ததே எனலாம். அக்காலத்தில் மாலத்தீவும் இசுலாமியர்களின் கட்டுப்பாட்டில்தான் இருந்தது. அத்தீவினையும் தனது ஆட்சியின் கீழ் இராசஇராசன் கொண்டு வந்தான். இராச இராசன் காலத்தில் சேரநாடு ஒரு மன்னனின் ஆட்சியின் கீழ் இல்லை. கி.பி. 800 ஆண்டுகளில், மூன்று மன்னர்களின் கீழ் சேரநாடு ஆளப்பட்டு வந்தது.* இவற்றில், கள்ளிக்கோட்டை மன்னரை இசுலாமியரும், கொச்சி மன்ன

---

371. Esalam Copper Plates of Rajendra Chola I, Kasinathan, N., Collected Papers (Studies in Tamil Culture, State Dept. of Archaeology, Madras, 1994), pp. 1-34.
372. Christianity in India and Pakistan, p. 38.

---

* கள்ளிக்கோட்டை, கொச்சி, திருவிதாங்கூர் என அறியப்படும். போர்த்துக்கீசியர் காலம் வரையிலும் இம்மூன்று அரசுகளும் செயல்பட்டு வந்தன.

ரைக் கிறித்துவரும் நட்பரசர்களாகக் கொண்டிருந்தனர்.[373] கொச்சி மன்னருக்கு மணிகிராமம் என்ற கிறித்துவ வணிகக் குழு பேருதவியாய் அமைந்திருந்தது. மணிகிராம வணிகக் குழுவினர் சோழ நாட்டைச் சேர்ந்தவர்களாவர். இவர்களுக்கும் கொச்சி அரசில் வாழ்ந்திருந்த கிறித்துவ வணிகக் குழுவினருக் கும் நெருங்கிய தொடர்பிருந்தது. தமது நாட்டைச் சார்ந்த வணிகர்களுடன் இயற்கையாகவே சோழ மன்னர்கள் தொடர்பு கொண்டிருந்தனர் என்பது ஏற்கக் கூடிய செய்தியே. இவ்வுற வின் அடிப்படையில்தான் கிறித்துவனான பரஞ்சோதி, சோழப் பேரரசில் ஓலை நாயகமாகப் பணியாற்றினான் எனக் கருத இடமுண்டு. மேலும் சோழர்கள், இசுலாமியர்களிடம் நெருங் கிய உறவு கொண்டிருந்தனர் என்பதற்கானச் சான்றுகளும் இல்லை. அடுத்த நூற்றாண்டுகளில் எழுச்சி பெற்ற பாண்டியர் கள், இசுலாமியர்களிடம் கொண்டிருந்த உறவு நெருக்கமானது என்பதற்கானச் சான்றுகள் பெருமளவில் உள்ளன.

தென்கிழக்கு ஆசிய நாடுகள் அக்காலத்தில் சுவர்ணபூமி என்னும் பொன்னாடு என்ற பெயரால் அழைக்கப்பட்டது. சீனத்தினின்றும், சுமத்திராவினின்றும் ஏராளமான பொற் கட்டிகள் தமிழகத்திற்கு வந்து சேர்ந்தன.[374] கி.பி. 12 மற்றும் 13ஆம் நூற்றாண்டுகளில், தமிழகம் பொற்களஞ்சியமாகவே காட்சியளித்தது. கொச்சியில் வாழ்ந்திருந்த கிறித்துவர்கள் இப் பொன் வணிகத்தில் முன்னணியில் இருந்தனர் என்றும், பல நூற்றாண்டு மரபு வழியில், இன்று கேரளத்தில் புகழ்மிக்க பொன்னகைக் கடைகளான அலுக்காஸ் (Alukkas), ஜோஸ்கோ (Josco), கேரளா ஜுவல்லரி போன்றவைகள், மேற்கண்ட கிறித் துவ வணிக வழியினருடையதே என்றும் கூறப்படுகின்றது.[375]

---

373. Ibid.

The rise of Islam: The state of anarchy continued for some time till Malabar settled down to the three large size independent Kingdoms of Kozhikod (Calicut), Cochin and Travancore. Of these Calicut was a staunch ally of the newly risen Muslim power, Cochin an ally of the Old Christian power, and Travancore an insignificant principality.

374. Chinese and Arab Trade in the Twelfth and Thirteenth Centuries, Hirth, F., and Rockhill, W.W., St. Petersburg, 1911, p. 19.

375. Early Christianity in India, The Gold Industry of Nazranacy.

இவர்களின் முன்னோர்கள், கிறித்துவ சமயத்தைச் சுவர்ண பூமிக்குக் கொண்டு சென்றனரா என்பதற்கான செய்திகள் இல்லை. கொல்லம் பகுதியில் வாழ்ந்திருந்த மன்னர்களைக் கூட பாண்டியர்கள் என்றே சீனத்துச் செய்திக் குறிப்புகள் தெரிவிக்கின்றன. மாறவர்மன் முதலாம் குலசேகரப் பாண்டியனை, கொல்லத்தின் மன்னன் என்றும் (கி.பி. 1280), பாண்டியனை Pi-na-ti என்ற சீனச் சொல்லால் அவை குறிப்பிடுகின்றன. குலசேகரப் பாண்டியனுக்கு, "கொல்லம் கொண்ட", "சேரனை வென்ற" போன்ற அடைமொழிகளும் உண்டு என அறியலாம். இதே ஆண்டில், சீனப் பேரரசரும் பாண்டியனும் செய்து கொண்ட வணிக ஒப்பந்தமும் அறியக் கிடக்கின்றது. கொல்லம் துறைமுகம் தொடங்கப்பட்ட ஆண்டே (கி.பி. 825), கொல்லம் ஆண்டின் தொடக்க ஆண்டாகவும் கருதப்படுகிறது என்க. இதே கால அளவுகளில், ஸ்தானு இரவி குப்தன் என்ற கிறித்துவ வணிகக் குழு தலைவனுக்குப் பல்வேறு சலுகைகளை கொல்லம் அரசு வழங்கியது பற்றிய செப்பேடுகள் கிடைத்துள்ளன[376] (கி.பி. 849).



376. Anthropology of the Syrian Christians, Christians; Ananthakrishna Ayyar, L.K., Ernakulam, 1926.



18

## இடைக்காலத்தின் கடல் வழிகள்

தொடக்க காலம் முதலே மீகாமர்கள் தாங்கள் அறிந்திருந்த கடல்வழிகளைப் பிறருக்குத் தெரிவிக்காமல் மறைபொருளாகவே வைத்திருந்தனர். வணிகத்தில் ஏற்பட்டிருந்த போட்டியும், கடற் கொள்ளைக் காரர்களிடமிருந்து தப்பவும், கடல் வழிகளைக் காக்கக் கரணியங்கள் ஆகும். மேலும் நேர்வழியானது பயணச் செலவுகளையும், நெடுநாட்கள் கடலில் பயணம் செய்யும் தொலைவையும் குறைத்தன. அரேபியக் கடலும், சோழ சமுத்திரம் என்னும் வங்கக் கடலும், இந்தியப் பேராழியும் அக்கால வணிகர்களுக்கு அறிமுகமான கடற்பகுதிகளாகும். சுலைமான் என்ற அரேபிய வணிகரின் கூற்றுப்படி, ஏடன் முதல் காண்டன் வரையிலான கடல்வழி சிறப்பு வாய்ந்ததாகும். சுலைமானின் குறிப்புகளின்படி, அரேபிய மரக்கலங்கள் முதலில் கொல்லத்தையடைந்தன. குமரி முனையைச் சுற்றிக் கொண்டு இராமேசுவரம் வழியாகத் தொண்டி, கோடியக் கரையை அடைந்தன. தமிழகத்தின் கிழக்குக் கடற்கரைத் துறைமுகங்களான நாகை முதல் அனந்தராயன் பட்டிணம் (புலிகாட் - Pulicat) வரையிலிருந்த துறைமுக நகரங்களில் பொருட்களை ஏற்றிக் கொண்டு நக்கவரத் தீவுகள் (Nicobar islands) நோக்கிப் பயணமாயின. அங்கிருந்து மலாய் தீவக் குறையின் வடக்குப் பகுதியில் அமைந்திருந்த கிரா (Kra) அல்லது கலவர் (Kalabhar) துறைமுகத்தையடைந்தன. மலாய் தீபக் குறையின் தென்கிழக்குப் பகுதியிலிருந்த மலக்கா (Melaka) வழியே சீனக்கடல் நோக்கிப் பயணமாயின. சீனக்கடலின் வடகிழக்குத் துறைமுகமான காண்டன் இறுதிப் பகுதியாகவிருந்தது. கி.பி. 1405ஆம் ஆண்டில் சீனவணிகன் செங்-இ (Cheng-He) என்பான்

மேற்கண்ட வழியினூடே சீனத்திலிருந்து செங்கடலையடைந்த தாக ஒரு குறிப்பு கூறுகின்றது.

மரக்கலங்களை வடிவமைப்பதில் தமிழர்களே முன்னோடி களாயிருந்தனர். கலஞ்செய் கம்மியர் என்றும் கலம்புணர் கம்மியர் என்றும்,[378] மரக்கலங்களை வடிவமைக்கும் பொறி யாளர்களைப் பற்றி இலக்கியங்கள் கூறுகின்றன. மரக்கலங்கள் செய்யும் நுணுக்கங்களையும், கடல்வழிகளையும் மறைபொரு ளாகவே வைத்திருந்ததால், இலக்கியங்கள் மரக்கலங்கள் பற்றிப் பொதுவாகப் பேசுகின்றனவேயன்றி, நுணுக்கங்கள் பற்றி எதனையும் கூறவில்லை அல்லது அறிந்திருக்கவில்லை. மரக் கலங்களின் வகைகள் பற்றி நூற்றுக்கு மேற்பட்ட சொற்கள் தமிழில் மட்டுமே சொல்லப்பட்டுள்ளதாலும், உலகின் எம் மொழிகளிலும் இவ்வளவு சொற்கள் இல்லையென்பதாலும், மரக்கலங்களின் முன்னோடிகள் தமிழர்களே என்பது தெளிவு. இதே அளவில், மலையாளத்தில் 38 சொற்களும், கன்னடத்தில் 37 சொற்களும், தெலுங்கில் 27 சொற்களும் மரக்கலங்கள் பற்றிக் குறிப்பிடுவனவாக, பன்மொழிகளின் அகர முதலிகளை ஒப்பு நோக்கிக் கூறப்படுகின்றன.[379]

பழைய ஏற்பாட்டு நூலில் கூறப்படும் நோவா என்பான் தமிழனே என்பதும், அவன் கட்டிய மரக்கலம் பற்றி விவிலியம் அளிக்கும் விளக்கம், தொன்மைக் காலத் தமிழர்களின் மரக்கலம் கட்டும் நுணுக்கங்களை அறிவிப்பனவாக உள்ளன எனலாம். கடற்செலவு மேற்கொள்வோர், கரைகளின் தொலைவுகளை அறியப் பறவைகளைப் பயன்படுத்திய முறையும் தமிழருடை யதே எனலாம். காட்டுப் பெரு மரங்களைக் கொண்டு மரக் கலங்களைத் தமிழர் கட்டிமுடித்தனர். முதன்முதலில் பாய் மரத்தைக் கண்டுபிடித்து, காற்றின் திசைகளை அறிந்து, கடலோடியவரும் தமிழரே. கடலின் ஒவ்வொரு அசைவையும் உன்னிப் பார்த்து கடலோடும் ஆற்றல் தமிழருக்கு இருந்தது. இரவு நேரங்களில் கடலில் திசையறிய பத்து விண்மீன் கூட்டங்

377. Portuguese in the Tamil Coast, p. 47.

378. மணிமேகலை, 25:124.

379. Maritime History of South India, Victor Rajamanickam and Arulraj, Tamil University, Thanjavur, 1994, p. 40.

களைப் பயன்படுத்திக் கொண்டனர். அவற்றில் குறிப்பாக ஒற்றைவெள்ளி, ஈரணை வெள்ளி, கூட்ட வெள்ளி (Single star, twin star, crowded constellations) என்ற விண்மீன்களின் இயக்கங் களைக் கொண்டு திசையை அறிந்தனர்.[380] மரக்கலம் இருக்கும் இடத்தின் ஆழத்தைக் கண்டறிய ஒரு வகையான கரண்டியின் துணை கொண்டு, அடி மண்ணை எடுத்து முகர்ந்து பார்த்து, கடலாழத்தைக் கணக்கிட்டனர் என்ற செய்தி, தமிழரின் கடலறிவைத் தெளிவாக விளக்கும்.

விவிலியம் கூறும் நோவா கப்பலில், ஒரு விலங்குக் காட்சிச் சாலையே ஏற்றப்பட்டதாக அறியலாம். இதன் உட்கருத்து என்னவெனில் பெருமளவிலான எடை கொண்டவைகள் மரக்கலங்களில் ஏற்றப்பட்டனவென்பதே. இடைக்காலத்து இசுலாமியர்களின் மரக்கலங்கள் 224 டன் (Tons)கள் அளவுக்கு பொருள்களை எடுத்துச் செல்லும் திறன் பெற்றிருந்தன.[381] வர்தமா என்ற இத்தாலியப் பயணியின் கூற்றுப்படி, இடைக் கால மரக்கலங்கள் 800 டன்கள் வரை சுமைகளை ஏற்றிச் சென்றன என அறியலாம்.[382] மார்க்கோபோலோ (கி.பி. 1293)வின் குறிப்புகள், 6000 மிளகுப் பெட்டிகளை ஒரு மரக்கலம் ஏற்றிச் சென்றதாகக் கூறுகின்றன.

மரக்கலங்கள் எவ்வாறு வடிவமைக்கப்பட்டன என்பது பற்றிய செய்திகளும் அறியக் கிடக்கின்றன. கி.மு. 1500 ஆண்டு களில், ஃபோனீசியர்கள் அட்லாண்டிக் கடலைக் கடந்து தென்னமெரிக்காவை அடைந்தனர் என்று கருதப்படுகிறது. பிரேசில் நாட்டுப் பாறைச் சிற்பம் ஒன்று பாய்மரத்துடன் கூடிய மரக்கலம் ஒன்றில் ஃபோனீசியர்கள் பயணம் செய்வது போன்று காட்சியளிக்கின்றது.[383] உரோமானியக் கப்பல்கள்,

---

380. Astronomy of the Tamils, An artical presented by Venkataraman, R., sponsored by Tamil University, Thanjavur, 1986.

381. Shipbuilding and Navigation in the Indian Ocean, 1400-1800 A.D., Ed. Mathew, K.S., Delhi, 1997, pp. 62-81.

382. Portuguese in the Tamil Coast, p. 49.

383. Foreign Notices of South India, K.A. Nilakanta Sastri, Madras, 1972, op.cit. p. 154.

துடுப்பு வலிப்போரின் உதவியுடன் செலுத்தப்பட்டது. இதனால் பெருமளவிலான இடம், வலிப்போருக்குத் தேவைப்பட்டதால், கப்பலில் இடநெருக்கடி இருந்தது.

தொன்மைக் காலத்து மரக்கலங்களில் பல அடுக்குகள் கொண்ட தளங்கள் இருந்தன என்பதற்கானச் சான்றுகள் உள்ளன. நோவாவின் கப்பலும் பல அடுக்குகள் கெண்டதே. ஃபோனீசியரின் மரக்கலங்களும் பல அடுக்குகளுடன் இருந்தன. இடைக்காலத்தில் ஓரடுக்கு முதல் பல அடுக்குகள் வரையிலான மரக்கலங்கள் இருந்தன என அறியலாம். மார்க்கோ போலோ ஓரடுக்கு மரக்கலம் ஒன்றைக் குறிப்பிடும் வேளையில், இபின் பதூதா நான்கு அடுக்குகள் கொண்ட கப்பல்கள் பற்றிக் குறிப்பிடுகிறார். கி.பி. 1300களில் வடிவமைக்கப்பட்ட சீனத்துக் கப்பல்கள் நான்கு அடுக்குகளையும், பன்னிரெண்டுக்கும் மேற்படாத பாய்மரங்களையும் கொண்டிருந்தன.

இடைக்கால மரக்கலங்களில் மீகாமர்கள், பணியாட்கள், தற்காப்புப் படையினர் என 200 முதல் 300 வரையிலான எண்ணிக்கையில் பயணம் மேற்கொண்டனர். ஜோர் டானுஸ் என்ற கிறித்துவ சமயத் துறவி (கி.பி. 1330), 700 பேரை ஏற்றிச் சென்ற மரக்கலம் பற்றிக் குறிப்பிடுகின்றார். இபின் பதூதா 1000 பேரைக் கொண்ட கப்பலில்தான் பயணம் மேற்கொண்டதைப் பற்றிக் கூறுகிறார். மேலும் 50 அறைகள் வரையிலும் ஒரு மரக்கலத்தில் கட்டப்பட்டிருந்தன வென்கிறார். ஜோர்டானுஸ் 100 அறைகள் கொண்ட கப்பல்கள் இருந்தன என்பார். இக் குறிப்புகளின்படி, பல அடுக்குகள் கொண்ட, பல அறைகள் கொண்ட, பல பாய் மரங்களைக் கொண்ட, 1000 பேர் வரை தங்கியிருக்கும் வகையில் வடிவமைப்பு கொண்ட, 1000 டன்கள் வரையிலும் (தற்காலத்து 100 லாரிகளின் பொருள் எடை) ஏற்றிச் செல்லும் திறன் கொண்ட மரக்கலங்கள் கி.பி. 1000-1400 ஆண்டுகளில் பெருங்கடல்களில் வலம் வந்தன என அறியலாம்.

பெரும்பாலும் இரும்பினாலான பொருட்களை, மரக் கலங்கள் கட்டும் போது, பயன்படுத்துவதைத் தவிர்த்தனர் எனலாம். கடல் நீரும், உப்புக் காற்றும், இரும்புப் பொருட் களைச் சிதைத்துவிடக் கூடியவைகளாகும். நிகோலா கோண்டி என்ற போர்த்துக்கீசிய பயணி, மரக்கலத்தின் அடிப்பகுதி 3 வரிகளிலான பலகைகளைக் கொண்டிருந்தது என்பார். அலை களின் எதிர்ப்பு, நீரின் அழுத்தம் ஆகியவைகளைத் தாக்குப்

பிடிக்கும் வகையில் அவை இருந்தன. ஓர் அறையில் ஏற்படும் நீர் ஒழுக்கு மற்ற அறைகளுக்குப் பரவாத வகையில், ஒவ்வொரு அறையும் ஒழுக்கற்ற (leak proof) வாறு வடிவமைக்கப்பட் டிருந்தன. ஆங்காங்கே ஏற்படும் நீர் ஒழுக்குகளை உடனுக்குடன் சரி செய்து கொண்டனர். கடற்பயணங்களில் சில மாதங்கள் வரையில் கடலில் வாழ்வதற்கான அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்து கொள்ளும் வகையில் இடைக்கால மரக்கலங் கள் வடிவமைக்கப்பட்டன. பயணக் காலங்களில் எதிர்ப்படும் பல்வேறு இன்னல்கள், இடையூறுகளைத் தாக்குப் பிடிக்கும் வகையிலும், பருவக் காற்றுகளின் வீச்சுகளுக்கேற்பவும் அவை வடிவமைக்கப்பட்டன.[384]

இடைக்காலச் சோழர்கள் காலத்தில் தமிழகத்தின் கிழக் குக் கடற்கரை மரக்கலங்களின் அணிவகுப்பால் ஆரவாரத் துடன் காணப்பட்டது. அடுத்த நூற்றாண்டுகளில், மீண்டும் மேற்குக் கடற்கரை பொலிவுற்றது. சீனத்துக்குச் செல்லும் தமிழகப் பொருட்கள் கோழிக்கோடு, கொச்சி, கொல்லம் போன்ற துறைமுகங்களின் வழியே ஏற்றுமதி செய்யப்பட்டன. தமிழகத்தின் வணிகர்கள் இக்கால அளவுகளில், பெருமளவில் மேற்குக் கரைகளில் தங்களது வணிக நடவடிக்கைகளை மாற்றிக் கொண்டனர். கி.பி. 1450ஆம் ஆண்டுகளில், தமிழகத்தில் சிறப் பான வணிகச் சூழ்நிலை உருவாகியிருந்தது.



384. Portuguese in the Tamil Coast, p. 51.

## தமிழகத்தின் குழப்பமான அரசியல் சூழ்நிலை

இடைக்காலச் சோழர்களின் ஆட்சி வல்லாட்சியாகத் திகழ்ந்தது. கி.பி. 900-1100 வரையிலான காலங்களில், தமிழகத்தில் அமைதியான சூழ்நிலை நிலவியது. உள்நாட்டு வெளிநாட்டு வாணிகம், பொற்களஞ்சியமாகத் தமிழகத்தை மாற்றியிருந்தது. கிறித்து பிறப்பாண்டுகள் முதல் 1000 ஆண்டுகளாகத் தமிழகத்தில் குவிக்கப்பட்ட பொன்னும் பொருளும் அரண்மனைகளிலும், கோயில்களிலும் கொட்டிக் கிடந்தன. இந்த 1000 ஆண்டுகளில் குறிப்பிடத்தக்க வெளிநாட்டவர் படையெடுப்பு எவையும் நிகழவில்லை. மூவேந்தர்கள் தங்களுக்குள் போரிட்டுக் கொண்டனரேயன்றி, தமிழகம் யாருக்கும் அடிமைப்படவில்லை. அளவற்ற செல்வமும், வேளாண் விளைபொருட்களும், தடையற்ற வணிகமும் தமிழகத்தைத் தன்னிறைவான நாடாக்கிக் கொடுத்தன. வெளிநாட்டினருக்குத் தமிழகத்தின் செல்வ நிலை பற்றித் தெரிந்திருந்தாலும், வலிமையான படை எடுப்புகள் எவையும் நிகழவில்லை.

இசுலாமியர்கள் கி.பி. 700 ஆண்டுகளில், வணிகர்களாகவே தமிழகம் வந்தனர். தங்களுடைய தொழுகைக்காக சில வழிபாட்டிடங்களைக் கட்டிக் கொண்டனர் (Mosques). மேற்குக் கரையில் தங்கியிருந்த வணிகர்கள், தமிழகப் பெண்டிருடன் திருமண உறவுகள் கொண்ட போது, தமிழகத்தில் இசுலாம் சமயம் வேரூன்றத் தொடங்கியது. சமயம் வாய்த்த போதெல்லாம், இசுலாத்துக்கு மற்றவர்களை மாற்ற முயற்சிகளையும் மேற்கொண்டனர். தொடக்கத்தில், தமிழகத்தில் நடைபெற்ற இசுலாமியச் சமய மாற்றங்கள் எந்த வன்முறையின் அடிப்படையிலும் நிகழவில்லை. ஆட்சி அதிகாரங்களும் பயன்படுத்தப்

படவில்லை. எவரையும் சமயத்தின் பேரால் துன்புறுத்தவில்லை. கிறித்துவம் போன்றே, இசுலாமும் மக்கள் மனங்களை மாற்றி, அதன் வழியில் சமய மாற்றங்களைச் செய்ய முற்பட்டது.

ஆனால் வடஇந்தியாவில் வேறுவகையான சூழல்கள் தோன்றின. கி.பி. 711ஆம் ஆண்டில் **முகமது பின் காசிம்** என்பார் சிந்துப் பகுதியில் சில நகரங்களை வென்றார். வடஇந்தியாவில் இசுலாமிய அரசுக்கு வித்திட்டவர் இவரே எனலாம். பின்னர் முதன்முதலில் வடஇந்தியப் பகுதிகளைத் துடைத்தெடுத்த **முகமது கஜினி** (கி.பி. 997-1030), இசுலாத்துக்கு வடஇந்தியாவில் வித்திட்டார். **முகமது கோரி** (கி.பி. 1175-1206) நிலையான இசுலாம் அரசைத் தோற்றுவித்தார். அவருக்கு பின் ஆண்ட **சம்சுதீன் இல்துமிஷ்**, **கியாசுதீன் பால்பன்** போன்றோர், இசுலாத்தை எளிதில் பரப்ப முயற்சிகளை மேற்கொண்டனர். கி.பி. 13ஆம் நூற்றாண்டின் இறுதியில், இந்தியாவில் இசுலாமியர்களின் ஆட்சி நிலைபெற்றுவிட்டது. கி.பி. 1290ஆம் ஆண்டில் வட இந்தியாவில் 10 இலக்கம் இசுலாமியர்கள் இருந்தனர் என அறியப்படுகின்றது. ஊர் ஊராகவும், நகரம் நகரமாகவும் இந்துக்கள் இசுலாத்துக்கு மாற்றம் செய்யப்பட்டனர்.

தென்னிந்தியாவில் இசுலாமியர்களின் ஆட்சி அக்காலத்தில் வேரூன்றவில்லை. கி.பி. 14ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தென்னிந்தியாவில் இசுலாமியர்களின் செல்வாக்கு உயரத் தொடங்கியது. டெல்லியை ஆண்ட **அலாவுதீன் கில்ஜி**, தனது படைத்தலைவனான **மாலிக்காபூர்** என்பானைத் தென்னிந்தியா மீது ஏவினான். கி.பி. 1311ஆம் ஆண்டு, ஏப்ரல் திங்கள் 25ஆம் நாள், மாலிக்காபூர் மதுரையை அடைந்தான். மாலிக்காபூரின் தமிழகப் படையெடுப்பு, தமிழக வரலாற்றில் மறக்க முடியாத நிகழ்வாகும். கடந்த ஆயிரம் ஆண்டுகளில், வெளிநாடுகளி னின்றும் சேர்க்கப்பட்ட பொன்னும் செல்வமும், ஒட்டு மொத்த மாகக் கொள்ளை போயின. எதிர்த்தவர்களை வெட்டி வீழ்த்திய மாலிக்காபூர் படை, அதுவரையில் தமிழகம் கண்டறியாத கொலை வெறித்தாக்குதலை நடத்தியது. கோயில்கள், மடங்கள், அரண்மனைகள் என்ற அளவில், செல்வம் குவிக்கப்பட்டிருந்த இடங்களிலெல்லாம் இசுலாமியப் படையினர் புகுந்தனர். கோயில்களில் வணங்கப்பட்ட சிலைகள் உடைக்கப்பட்டன; கோயில்கள் தீக்கிரையாக்கப்பட்டன; சமயத் தலைவர்கள் எல்லோரும் ஓடி ஒளிந்து கொண்டனர்.

கி.பி. 1311ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்கள் 18ஆம் நாள், மாலிக்காபூர் டெல்லி திரும்பினான். அவனுடன் தமிழகத்தின் பொற்களஞ்சியமும் கொண்டு செல்லப்பட்டது. **96000 பொற் கட்டிகளும் (bars of gold),[385] 312 யானைகள் சுமந்து சென்ற பாண்டிய நாட்டு முத்துக்களும், காங்கேயத்துக் கற்களும், இன்னோரென்ன வகையிலான நகைகள், வெள்ளித் தட்டு முட்டுப் பொருட்கள் என, இன்றைய விலையில் ஓரிலக்கம் கோடியென அப்பொருட்களின் மதிப்பு இருக்கும் என்பர்.** தமிழகத்தில் மாலிக்காபூர் தங்கியிருந்த இரண்டு மாதங் களிலும், ஊரிலும் நகரிலும் ஒருவர் கூட இல்லாமல், காட்டுக்கு ஓடிப்போய் விட்டனர் என்பர். எஞ்சியிருந்த மக்களிடமிருந்த அனைத்துப் பொருட்களும் சூறையாடப்பட்டன. தமிழகம் முழுதும் அச்சவுணர்வில் பீடிக்கப்பட்டது. இந்த அச்ச உணர்வு அடுத்த 50 ஆண்டுகள் வரையில் கூட, தமிழக மக்களின் நெஞ்சைவிட்டு அகலவேயில்லை. மாலிக்காபூரின் படை யெடுப்பு பற்றிய குறிப்புகள் தமிழகத்தின் பல்வேறு இடங் களிலும் காணப்படுகின்றன.[386]

மாலிக்காபூரின் படையெடுப்பால் சேரநாடு நேரிடையாக இடைஞ்சல் படுத்தப்படவில்லை. அதுவரையில் தமிழகத்தில் தாங்கள் நினைத்ததை செயலாக்கிக் கொண்டிருந்த மன்னர்களும் குறுநில மன்னர்களும் ஆடிப்போனார்கள். மீண்டும் மாலிக் காபூர் படை எடுக்கப் போகிறான் என்ற அச்சம் அவ்வப்போது

---

385. Ibid, p. 36.

386. Ibid, p. 40.

386. These troubled conditions are mentioned in the inscriptions of,

Thiruvamuthur (1335 A.D),
Velangudi (1336 A.D),
Tellar (1338 A.D),
Tirupattur (1342 A.D),
Idaipaddi (1343 A.D),
Iluppur (1345 A.D),
Vadamaha devimangalam (1359 A.D),
Kudangaram (1360 A.D),
Ramanathapuram (1365 A.D) and
Adanur (1380 A.D)

தமிழகத்தை ஆட்டிப் படைத்துக் கொண்டிருந்தது. மதுரையில் வீரபாண்டியன், சுந்தரபாண்டியன் இடையே தோன்றிய பகைமை, பாண்டிய நாட்டைச் சீரழித்தது. தென்னிந்திய மன்னர்கள் வலுவிழந்து போனதால், மேற்கு கரையில் வாழ்ந்திருந்த இசுலாமிய வணிகர்கள், தாங்கள் நினைத்த வகையில் மன்னர்களை ஆட்டுவித்தனர். பாண்டிய நாட்டின் முத்து வணிகம் முற்றிலுமாக இசுலாமியரிடம் கைமாறியது.

உள்நாட்டு வணிகத்தில் ஈடுபட்டிருந்த தமிழ் வணிகக் குழுக்களுக்கும் தேவையான பாதுகாப்பைத் தர தமிழக மன்னர்களால் இயலவில்லை. மீண்டும் இசுலாமியப் படையெடுப்பு நிகழுமோ என்ற நிலையில் "அஞ்சினான் புகலிடம்" என்ற பொதுமக்கள் பாதுகாப்பு இடங்கள் இடைப்பறை போன்ற இடங்களில் (கி.பி. 1343) தோற்றுவிக்கப்பட்டன.[387] தஞ்சை மாவட்டத்திலும் பற்றன்காட்டு நாடு, செங்கோ நாடு, வல்லநாடு போன்ற புகலிடங்கள் தோன்றின.[388]

இக்குழப்பான காலம் ஏறக்குறைய ஒரு நூற்றாண்டு வரை நீடித்தது. அடுத்து வடக்கே வலிமை பெற்று எழுந்த விசய நகரப் பேரரசு தென்னிந்தியப் பகுதிகளில் நிலவி வந்த அச்சவுணர்வுகளைக் குறைத்தது. இக்கால அளவுகளில் ஐரோப்பாவிலும் இசுலாமியர்களால் இடையூறுகள் தோன்றின. ஐரோப்பாவுக்கும் ஆசியாவுக்குமிடையே வணிக வழி நகரமாக விளங்கிய கான்ஸ்டாண்டி நோபிள் நகரத்தைத் துருக்கியர்கள் பிடித்துக் கொண்டனர். இந்தியாவுக்குப் புதிய கடல்வழியைக் காண ஐரோப்பியர்கள் முயற்சி மேற்கொள்ள விழைந்தனர்.



---

387. Ibid.

388. Ibid.

# இடைக்காலத்துத் தமிழகக் கிறித்துவர்கள்

இடைக்காலத்தில் (கி.பி. 900-1300), தமிழகத்தில் கிறித்து வம் பற்றிக் குறிப்பிட வேண்டுமானால், அது சேர நாட்டி லிருந்த கிறித்துவர்களைக் குறிப்பதாகவே அமையும். இடைக் கால வல்லாண்மை மிக்க சோழர்களின் ஆட்சியின் கீழ் தமிழகம் ஒன்றாகவே இருந்தது. சோழர்களின் வீழ்ச்சிக்குப் பிறகு, சேர நாடு தமிழகத்தின் புவியியல் அமைப்பிலிருந்து மெல்ல மெல்ல பிரிந்து செல்லத் தொடங்கியது. தமிழகத்தின் தென்கிழக்கே யிருந்து, மேற்குக் கடற்கரை வரை பரவியிருந்த சேரநாடு, அரசியல் குழப்பங்களினால் தனித்தே செயல்படத் தொடங் கியது. சோழர்களுக்குப் பின்வந்த தமிழகத்தின் மன்னர்கள் வலிமையற்றவர்களாக இருந்தனர். பாண்டியர்களுக்கும் சேரர் களுக்கும் பகைமை தோன்றியது. இசுலாமியர் வருகைக்குப் பின்னர், சேரநாட்டின் அரசியல் நிலை மாறிப் போனது. மூன்று தனித்தனி அரசுகள் தோன்றின. இம்மூன்று அரசுகளும் தமிழகத் தின் வடபகுதி ஆட்சியாளர்களுடன் தங்களது தொடர்புகளைத் துண்டித்துக் கொண்டனர். தமிழகத்தின் மன்னர்களும் சேர நாட்டின் மீது தமது மேலாண்மையைச் செலுத்தும் அளவில் வலுவாக இல்லை. மேலும் மேற்குத் தொடர்மலை, இயற்கை யிலேயே தமிழகத்தினின்றும் சேரநாட்டைப் பிரித்தது. சரியான தொடர்புகள் அற்றுப்போன சூழலில், தமிழ்மொழியின் பேச்சும் வழக்கும், மேற்குக் கடற்கரைப் பகுதிகளில் மாறிப்போயின. வடமொழியின் தாக்கங்கள், மேற்குக் கரை வழியே எளிதாகப் படிந்தன. இடைக்காலச் சோழர்கள் காலத்தில் பிராமணர் களின் நிலை மிக உயர்வாக காணப்பட்டது. பல்வேறு இடங் களில் நிலங்களைக் கொடையாகப் பெற்ற பிராமணர்கள், நில

உரிமையாளர்களாயினர்.[389] இச்சூழல் வடமொழியை எளிதில் புகுத்த அவர்களுக்கு வாய்ப்பளித்தது. அக்காலத்தில் தமிழும் வடமொழியும் கற்றுணர்ந்தவர்கள் பிராமணர்களே என்பதால், சேரநாட்டுத் தமிழை மலையாள மாக மாற்றினர். தமிழகத்திலும் ஏராளமான வடசொற்களைத் தமிழில் கலந்து, மணிப் பிரவாளம் என்ற புதிய தமிழைத் தோற்றுவித்தனர்.

தமிழ்மொழியில், தமிழ்ச்சொல் எது வடமொழிச் சொல் எது என்று உணர இயலாத அளவுக்கு வடமொழி தமிழில் கலந்தது. போர்த்துக்கீசியர் தமிழகம் வந்த போது, சேரநாட்டில் மலையாளமும், தமிழகத்தில் வடமொழி கலந்த தமிழும் வழக்கிலிருந்தன. சாசனங்கள், கல்வெட்டுகள், செய்திக் குறிப்புகள் யாவும் வடமொழி கலந்த தமிழிலேயே எழுதப்பட்டன. இக்காலத்தில் எழுதப்பட்ட கிறித்துவம் பற்றிய செய்திகளும் கலப்பு மொழியிலேயே இருந்தன. பேச்சு வழக்கிற்கும் எழுத்து வழக்கிற்கும் பெரும் வேறுபாடு காணப்பட்டது. மலையாளம் என்ற மொழி கி.பி. 1200 ஆண்டுகளுக்குப் பிறகு உருவெடுத்தது. மலையாளம் என்பது வரலாற்றுக் காலத்தில் உருவான மொழியே. தமிழைச் சிதைத்து மலையாளம் என்ற மொழியை உருவாக்கியதற்குப் பெரிதும் கரணியமாய் இருந்தவர்கள் பிராமணர்களே. தமிழ்மொழியில் சொல்லப்பட்டு, எழுதப்பட்டு வந்த செய்திகள், பாடல்கள், வரலாறுகள் அனைத்தும், கிறித்துவ இலக்கியங்களாக மலையாளத்தில் மாற்றம் செய்யப்பட்டன. நாட்டுப்புறப் பாடல் இலக்கியங்களான இரம்பான் பாட்டு[390] (Ramban Songs) மார்க்கம் களி[391] (Margam Kali), பள்ளிப்பாட்டுக்கள்[392] (Palli Pattukkal) போன்ற கிறித்துவப் பாடல்கள் இக்காலங்களில் தொகுப்பட்டவைகளே.

---

389. History of Tamilnad, Subramaniyam Dr.N. pp. 170-172.

390. Ramban Songs: Anthropology of the Syrian Christians. Eng. Translation by Ananthakrishna Ayyar, ICHC., Vol. I, The Nazraines, pp. 500-506.

391. Margam Kali: The History of the Church of Malabar, Geddes and Michael, Also with the Synod of Diamper, London, 1964.

392. Palli Pattukkal: 1. Seperate articles in the ecumenical St. Thomas Christians Encyclopedia, Ed. by. Menachery, Trichur, 1973. 2. History of Christianity in India, Ed. A.M. Mundadan. 3. Kristhava Vijnana Kosham (Malayalam, Alleppy, 1976).

இடைக்காலத்தில் தமிழ்நாட்டில் இருந்த கிறித்துவர்கள் பற்றித் தெளிவான செய்திகள் இல்லை. மயிலையில் தோமை யார் நினைவிடத்தைச் சில கிறித்துவக் குடும்பங்கள் வழிவழி யாகப் பாதுகாத்தும் வழிபட்டும் வந்ததாகச் செய்திகள் கூறு கின்றன. போர்த்துக்கீசியர் வருகைக்கு முன்பு தமிழ் மொழியில் கிறித்துவம் பற்றிய குறிப்புகளும் இருந்ததாகத் தெரியவில்லை. சமய மறுமலர்ச்சி காலத்தில், தமிழகத்தில் எஞ்சியிருந்த கிறித்துவர்களும் சேர நாட்டுக்குச் சென்றுவிட்டதால், தமிழகத் தில் பெரும்பாலும் கிறித்துவர்கள் அறியப்படவில்லை. தமிழ கத்தின் கிழக்குக் கடற்கரையில் வாழ்ந்திருந்த பரதவர்களும் போர்த்துக்கீசியர் வருகைக்குப் பிறகு கிறித்துவர்களானவர்களே. எனவே, கி.பி. 900-1500 ஆண்டுகளில், தமிழகத்தில் கிறித்துவர் களே இல்லை என்னும் நிலைமைதான் இருந்தது எனலாம். அவ்வாறு எவரேனும் இருந்திருந்தால், சென்னை - மயிலைப் பகுதியிலும், கடற்கரை நகரங்களிலும் வாழ்ந்திருக்க வேண்டும்.

இக்கால அளவுகளில், சேர நாட்டுக் கிறித்துவம் தனித் தன்மையுடன் விளங்கியது. சிரியன் கிறித்துவத் திருச்சபை, உரோமையின் கட்டுப்பாட்டின் கீழ் இருந்ததா என்பதை உறுதியாகக் கூறவும் இயலாது. போர்த்துக்கீசியர் தமிழகம் வருவதற்கு முன்னதாக ஐரோப்பாவில் கிறித்துவ சமயத்தில் பல்வேறு கொள்கைப் போராட்டங்களும், சமய மலர்ச்சி களும் தோன்றி, கிறித்துவ உலகம் பிளவுபட்டுக் கிடந்தது. சிரியன் திருச்சபையில் இவ்வாறான கொள்கைக் குழப்பங்கள் ஏதுமில்லை எனலாம். இக்கொள்கை பற்றிய விளக்கங்கள் எல்லாம் தமிழகத்துக்கு வந்து சேரவேயில்லை. சிரியன் திருச்சபை யினர், அந்தியோக் நகரிலிருந்து ஆயர்களை மட்டுமே (Bish-ops) எதிர்பார்த்திருந்தனர். சேர நாட்டுத் திருச்சபையினர், நூற்றாண்டுகளாக சிரியன் ஆயர்களையே சமயத் தலைவராக ஏற்றுக் கொண்டிருந்தனர். அந்த ஆயர்களுக்கு மலையாளமும் தெரியாது, தமிழும் தெரியாது. மக்களிடையே அவர்கள் சமயக் கொள்கைகள் பற்றிய எந்த விளக்கங்களையும் அளிக்க இயலாத நிலையிலும், மரபு வழியாக ஏற்றுக் கொண்ட சிரியன் ஆயர் களையே எதிர்பார்த்திருந்தனர். இவர்கள் மட்டுமே கிறித்துவ சமயத்தின் தெய்வீக அருள் பெற்றவர்கள் என்ற நகைப்பிற் கிடமான எண்ணம் சிரியன் கிறித்துவர்களைவிட்டு விலகவே யில்லை. சிவந்த நிறமும் நீண்டதாடியும் கொண்டிருந்த எந்த மேலை நாட்டானையும் ஆயராக அவர்கள் ஏற்றுக் கொள்ளும்

நிலையிலிருந்தனர். இவ்வாறு போலியான ஆயர்களும், போலி யான கடிதங்களுடன் ஆயர்களாகப் பொறுப்பேற்றுக் கொண் டனர் என்றும் கூறப்படுகிறது.[393] இசுலாமியர் கடல்வழியை மறித்த காலமுதல் இதே நிலை, எழுநூறு ஆண்டுகளாக நீடித்தது. அவ்வப்போது சிரிய நாட்டினின்று எவராவது வருகை தந்தால் அவர் ஆயராகிவிடுதலும் வழக்கமாகவிருந்தது.

இந்நிலையில் ஆயர்கள் இல்லாத காலத்து, திருச்சபையை நடத்த தலைமைக் குருமார்களை (Archdecons)த் தங்களுக்குள் ஏற்படுத்திக் கொண்டாலும், வெளிநாட்டு ஆயருக்கு இருந்த மதிப்பும் சிறப்பும் தலைமைக் குருமார்களுக்குக் கொடுக்கப் படவில்லை. இந்தச் சூழ்நிலையில் பல்வேறு தடைகளையும் கடந்து, மோந்தே கார்வினோ ஜான் (Frair John of Monte Corvino) என்ற பாதிரியார், சீனாவிற்குச் செல்லும் வழியில் தமிழகம் வந்து சேர்ந்தார் (கி.பி. 1291-92). பதின்மூன்று மாதங்கள் மயிலாப்பூரில் தங்கியிருந்த ஜான் பாதிரியார், நூற்றுக்கும் மேற்பட்டவர்களை, மயிலாப்பூர் பகுதியில் கிறித்துவர்களாக்கினார். இடைக்காலத்தில் தமிழகம் வந்த முதல் விடையூழியர் (Missionary) இவரே எனக் கருதப்படுகின்றது.[394] பின்னர் தனது முழுமையான சமயப் பணிகளை மேற்கொள்ள சீன நாட்டுக்குப் பயணமானார். போப்பாண்டவர் நான்காம் நிக்கோலஸ் இவரை, பீகிங் நகரத்துத் தலைமை ஆயர் அல்லது பேராயராக (Archbishop of Peking) ஆணையிட்டார். இவர் கேரளத்துக்குச் சென்று வந்தது பற்றிய தெளிவான செய்திகள் இல்லை. மேலும் ஜான் வந்திருந்த காலத்தில், தமிழகக் கிழக்குக் கடற்கரையினின்றும் ஏராளமான கப்பல்கள் சீனநாட்டுக்குச் சென்றுவந்தன என்பது குறிப்பிடத் தக்கது.

இக்கால அளவுகளில் (கி.பி. 1252) ஐரோப்பாவில், "கிறித்துவின் வழி செல்வோர் அவை" என்ற பெயரில் (The Society of Way fares for christ) என்ற கத்தோலிக்கத் திருச்சபையின்

---

393. Christianity in India and Pakistan, p. 41.

393. Many a Bishop who had been of his see in Persia or Asia Minor appeared in Malabar with forged documents supposed to be signed by venerable authorities and ruled the Malabar church.

394. Ibid, p. 42.

முதல் சமயப் பணிக்குழுவை போப்பாண்டவர் நான்காம் இன்னொசென்ட் தொடங்கி வைத்தார்.[395] இன்று கத்தோலிக்கத் திருச்சபையில் செயல்பட அனுமதிக்கப்பட்ட ஆயிரத்துக்கு மேற்பட்ட துணைச் சார்பு நிறுவனங்களுக்கு (Congregations) மேற்குறிப்பிடப்பட்ட சபையே முன்னோடிச் சபையாகும். இயேசு அவை (Society of Jesses) கூட இருநூறு ஆண்டுகள் கழித்தே தொடங்க அனுமதிக்கப்பட்டது என்க. முதலில் சொல்லப்பட்ட சங்கத்தில், அதுவரையில் தனித்தனிக் குழுக் களாகச் செயல்பட்டு வந்த ஃபிரான்சீஸ்கன் மற்றும் தொமி னிக்கன் குழுக்கள் இணைந்து செயல்படத் தொடங்கின.

கிறித்துவுக்காகவும், கிறித்துவ சமயத்துக்காகவும் தங்களால் முடிந்த எதையாவது செய்ய வேண்டும் என்ற எண்ணமும் வெறியும் இவர்களிடையே இருந்தது. இந்தியாவின் பல பகுதி களிலும் கிறித்துவர்கள் பரவி வாழ்கிறார்கள் என்றும், அவர் களுக்குச் சரியான சமய வழிகாட்டுதல்கள் இல்லாமல் தவிக் கிறார்கள் என்றும் கேள்விப்பட்டனர். மேலும் மயிலாப்பூரில் தோமையார் அடக்கம் செய்யப்பட்ட கல்லறையில் நாள் தோறும் அருஞ்செயல்கள் (Miracles) பல அரங்கேறுகின்றன என்றும் அறிந்தனர். தோமையார் கல்லறை பற்றிய பல்வேறு கதைகள் ஐரோப்பாவெங்கும் பேசப்பட்டன.[396] இந்தியாவைப் பற்றி வணிகர்கள் தரும் தகவல்களைக் கொண்டு, எப்படி யாவது இந்தியாவுக்குச் செல்ல வேண்டுமென ஐந்து சமயத் துறவிகள் துணிந்தனர். இவர்களில் முதன்மையானவர் ஜோர் டானுஸ் என்பவராவர். இவருடன் தாமஸ், ஜேம்ஸ், பீட்டர் என்ற துறவிகளும், டெமட்ரியுஸ் என்ற துறவியல்லாத கிறித்து வரும் இணைந்து கொண்டனர். டெமட்ரியுஸ் எனப்படுபவர் மிகச்சிறந்த மொழியறிஞரும் வல்லுநருமாவார். பிரான்சு நாட்டி லுள்ள அவிஞோன் (Avignon) என்ற நகரிலிருந்து புறப்பட்ட ஐவரும் நடுத்தரைக் கடலைக் கடந்து செங்கடல் துறைமுக மான ஓர்முஸ் (Ormuz) வந்தடைந்தனர் (கி.பி. 1321).[397]

தோமையாரின் கல்லறையைக் காண வேண்டும் என்ற ஆவலுடன் கப்பலேறியவர்கள், கடுமையான காற்றினால்

395. Ibid, pp. 42-43.

396. Ibid, pp. 42-43.

397. Ibid, pp. 42-43.

கப்பல் மேற்கொண்டு பயணம் செய்ய இயலாத நிலை ஏற்பட்டு, சால்செட் தீவுக்கருகில் தவித்தனர். தானா நகரில் மற்ற நால்வரையும் விட்டுவிட்டு, ஜோர்டானுஸ் மட்டும் இந்தியாவின் குசராத்துக்கு வந்து சேர்ந்தார். சூரத் நகருக்கு அவர் வருகை தந்தபோது அவருக்கு அதிர்ச்சியான செய்தி அறிவிக்கப்பட்டது. தானா நகரில் தங்கியிருந்த நால்வரையும் இசுலாமிய ஆட்சியாளர்கள் படுகொலை செய்த செய்திதான் அதுவாகும். இதற்குச் சொல்லப்பட்ட கரணியம் என்னவென்றால் நபிகள் நாயகம் அவர்களைப் புகழ்ந்துரைக்கவில்லையென்பது தான்.[398]

சூரத் பகுதியில் சமயப் பணியாற்றிய ஜோர்டானுஸ், மயிலாப்பூர் வராமலேயே ஐரோப்பா திரும்பினார். போப் பாண்டவரிடம் இந்தியாவில் தாம் அறிந்த செய்திகளைத் தெரிவித்தார். தமிழகத்திலுள்ள சிரியன் கிறித்துவர்களுக்கு கத்தோலிக்கத் திருச்சபையின் அடிப்படைகளே தெரியவில்லையென்றும், அவர்களது வணக்க முறைகள் முற்றிலும் இந்திய வழியில் அமைந்துள்ளன வென்றும், அவர்களை உரோமைத் திருச்சபையின் மக்களாக மாற்ற வேண்டும் என்றும் எடுத்துரைத்தார். இதன் அடிப்படையில் மீண்டும் இந்தியா செல்லுமாறு ஜோர்டானுஸ் பணிக்கப்பட்டார். இந்த முறை (கி.பி. 1331) ஜோர்டானுஸ் துறவியாக அல்லாமல் கொல்லம் நகரத்து ஆயராக (Bishop of Quilon) அனுப்பி வைக்கப்பட்டார்.[399] ஆயராக வந்த ஜோர்டானுஸ் சிரியன் கிறித்துவர்களுக்கு கத்தோலிக்கக் கொள்கைகளை விளக்கிக் கூறினார். ஆனால் அவர்கள் இவைகளுக்கெல்லாம் செவி மடுக்கவில்லை. மிகவும் முரட்டுத்தனமாகப் பழகும் இக்கும்பல், கிறித்துவ நெறிகளையே அறியாதிருக்கிறார்கள் என்றும், தோமையாரே இயேசு கிறித்து என்றும் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள் என்றும் தனது குறிப்புகளில் ஜோர்டானுஸ் தெரிவிக்கிறார்.[400]

கிறித்துவுக்குப் பிறகு பதின்மூன்று நூற்றாண்டுகளில், கிறித்துவ சமயம் ஏறக்குறைய இசுரேலிய மரபுகளையெல்லாம் விட்டுவிட்டு, ஐரோப்பிய மயமாக்கப்பட்டு விட்டது. கிறித்துவம் ஓர் ஆசிய சமயம் என்பதற்கான அடிச்சுவடுகளே அச்சமயத்தில்

398. Ibid, pp. 42-43.

399. Ibid, pp. 42-43.

400. Ibid, pp. 42-43.

இல்லாமற் போயின. இக்கால அளவுகளில் ஜோர்டானுஸ் போன்ற ஐரோப்பியர்கள் இந்தியாவுக்கு வருகை தந்த போது, சிரியன் கிறித்துவர்களின் வழிபாட்டு முறைகள் அவர்களுக்கு அதிர்ச்சியூட்டின. தேவாலயத்தில் நடுநாயகமாக சிலுவை வீற்றிருந்ததைத் தவிர, அது கிறித்துவத் தேவாலயம் என்று சொல்வதற்கான அறிகுறிகள் ஏதுமில்லை. மக்கள் தமது வட்டா ரத்தின் பிற சமயத்தாரைப் போலவே, தரையில் அமர்ந்து (பிராமண முறைகளின்படி) வேண்டுதல்களை நடத்தினர். மலர்கள், காணிக்கைப் பொருட்கள், குத்து விளக்குகள் போன் றவை அவர்கள் வழிபாட்டில் இடம் பெற்றிருந்தன. கன்னிமறி யாளின் உருவமோ, மற்ற புனிதர்களின் படங்களோ எங்கும் காணப்படவில்லை. சிரியன் கிறித்துவர்களுக்கு தெரிந்திருந் தவர்கள் இயேசு கிறித்துவும் தோமையாரும் மட்டுமே. சிலர் தோமையாரையே இயேசு கிறித்து எனவும் எண்ணிக் கொண் டிருந்தனர். ஐரோப்பாவில் சமய வழிபாட்டில் அக்காலத்தில் (இக்காலத்திலும்) நடைமுறையிலிருந்த பூசைப்பலி (Holy mass) என்ற நிகழ்வு, சிரியன் கிறித்துவர்களிடம் காணப்படவில்லை. ஏழு அருங்கொடைகள் (Seven holy Sacremements) என்ற கிறித்துவத்தின் அடிப்படை நடைமுறைகளில், திருநீற்று முழுக்கு (Baptism) என்பது மட்டுமே அவர்களுக்குத் தெரிந் திருந்தது. திருமணங்கள் யாவும், இயேசுவின் பெயரைச் சொல்லி இந்திய முறைப்படியே நிகழ்வுற்றன. இவைகளையெல்லாம் கண்ணுற்ற ஐரோப்பியர்கள், இவர்கள் உண்மையில் கிறித்து வர்கள் தானாவென ஐயுற்றனர். ஜோர்டானுஸ், சேர நாட்டுக் கிறித்துவர்களை, ஐரோப்பிய வழிபாட்டு முறைகளில் திருப்ப மேற்கொண்ட முயற்சிகள் பலனளிக்கவில்லை.



## போர்த்துக்கீசியர்களின் வருகை

வரலாற்றுக் காலத்துக்கு முன்பே ஐரோப்பாவிற்கும் தமிழகத்துக்கும் கடல்வழிப் போக்குவரத்து நடைபெற்று வந்தது ஒருபுறமிருக்க, வடஇந்தியாவின் சிந்து மாநிலத்தின் வழியே பாரசீகம், (ஈரான்), பாபிலோன் (ஈராக்), சிரியா ஊடாக தரைவழியொன்று, கான்ஸ்டாண்டி நோபிள் (இன்றைய இஸ்தான்புல்) சென்றது. அங்கிருந்த குறுகிய கடல்வழியைக் கடந்து (பாம்பன் - இராமேசுவரம் போன்று) ஐரோப்பிய நாடுகளுக்கு வணிகப் பொருட்கள் சென்றன. இவ்விரு வழிகளும் காலம் காலமாகப் பயன்பட்டு வந்தன.[402] ஐரோப்பிய மக்களுக் குக் குளிர்காலத்தில் உணவுப் பொருட்கள் கெட்டுப் போகா வண்ணம், மிளகைப் பொடியாக்கி, உணவுப் பொருட்களில் கலந்து, அவற்றைப் பல நாட்கள் வரை பதப்படுத்தி உண்டு வந்தனர். ஐரோப்பிய மக்களுக்கு உணவு, நீர், உறைவிடம் போன்று மிளகும் வாழ்க்கைக்குத் தேவையானதொன்றாக இருந்தது. மிளகு வணிகம் கடல் வழியாகவும், தரைவழியாகவும் நடைபெற்று வந்தன.

கி.பி. 800 ஆண்டுகளுக்குப் பிறகு கடல்வழியை இசுலாமி யர்கள் மூடிவிட்டனர் என்றாலும், இசுலாமிய வணிகர்கள் மிளகு வணிகத்தை மேற்கொண்டனர். தமிழகத்திலிருந்தும் மிளகு கொள்முதல் செய்யப்பட்டு, ஐரோப்பியச் சந்தைகளில் விற்பனையாயின. வணிகக் குழுக்கள் மாறினவேயன்றி, மிளகு தட்டுப்பாடின்றி ஐரோப்பியர்களுக்குக் கிடைத்து வந்தது. பல காலம் இத்தொழிலை மேற்கொண்டிருந்த சிரிய, எகிப்திய,

---

401. Ibid, pp. 42-43.

402. Cambridge Encyclopedia, p. 287.

ஐரோப்பிய வணிகர்கள் தங்கள் தொழிலையிழந்தனர். இச் சூழலில், கி.பி. 1453ஆம் ஆண்டில், துருக்கியர்கள் கான்ஸ டாண்டி நோபிள் நகரத்தைக் கைப்பற்றிக் கொண்டனர்.[403] உடனே இந்தியா - ஐரோப்பிய நாடுகளுக்கிடையே நடைபெற்று வந்த வணிகத் தரைவழி மூடப்பட்டது. இதனால் மிளகுத் தட்டுப்பாடு ஐரோப்பாவில் ஏற்பட்டது. இத்தாலிய வணிக நகரங்களான பிளாரன்ஸ், நேப்பிள்ஸ், ரோம், வெனிஸ் போன்றவைகள் பொலிவிழந்தன.

ஏற்கனவே நிகழ்வுற்ற சிலுவைப் போர்கள், ஐரோப்பியக் கிறித்துவர்களுக்கும் இசுலாமியர்களுக்கும் பகைமையை வளர்த் திருந்தன. ஐரோப்பியக் கிறித்துவர்களைப் பழி வாங்கும் நோக்குடன், கடல்வழியையும் (செங்கடல் வழி), தரைவழியை யும் இசுலாமியர்கள் மூடிவிட்டதால், ஐரோப்பா கதிகலங்கிப் போயிற்று. இந்தச் சூழலில், இந்தியாவுக்குப் புதிய கடல்வழி யைக் கண்டுபிடிக்க வேண்டும் என்ற உடனடித் தேவை ஐரோப்பியர்களுக்கு ஏற்பட்டது. இந்தியர்கள் ஐரோப்பியர் களை வெறுக்கவில்லையென்பதையும், எவ்வழியிலாவது இந்தியா வை அடைந்துவிட்டால், இந்திய மக்கள் தங்களை வரவேற் பார்கள் என்றும் ஐரோப்பியர் கருதினர்.[404]

அக்கால அளவுகளில், உலகம் உருண்டையானது என மெய்ப்பிக்கப்பட்டிருந்ததால், கிழக்கே செல்ல இசுலாமியர் களின் குறுக்கீடுகளைக் களைந்து, மேற்கு முகமாகச் சென்று இந்தியாவை அடையலாம் என்ற கருத்து உறுதிப்பட்டது. பழைய நூலகங்களில் குப்பைகளாகக் கருதப்பட்ட சில உலக வரைபடங்களைத் தூசுதட்டி எடுத்தனர். துணிச்சல் மிக்க சில மீகாமர்கள், உலகின் ஏழு கடல்களையும் கடந்துச் செல்ல முயன்றனர். உலகில் ஏழு கடல்கள் இருந்தன என்பது அக்கால எண்ணமாகும். கடற்கரை நாடுகளான போர்த்துக்கல்லும், ஸ்பெயினும் அக்காலத்தில் மரக்கங்களை வடிவமைப்பதில் சிறப்புற்றிருந்தனர்.[405]

**கிறிஸ்தோபர் கொலம்பஸ் என்ற இத்தாலிய (கி.பி. 1451–1506) மீகார், மேற்குத் திசை வழியே சென்று**

---

409. Facts about Lebanon, p. 14.

410. Ibid.

411. Fodor's Lisbon, p. 74.

**இந்தியாவை அடைய முடியும் என்று நம்பினார்**. தூய மறியாள் (Santa Maria) என்ற கப்பலில் அட்லாண்டிக் கடலைக் கடந்து மேற்கு நோக்கிப் பயணமானார் (அகஸ் 3, 1492). மேற்கிந்திய தீவு களான பகாமாஸ் (Bahamass) கெய்ட்டி (Haiti), தென்னமெரிக்கா போன்ற நிலப்பகுதிகளைக் கண்டறிந்தார்.[406] இவையெல்லாம் இந்தியாவின் ஒரு சில பகுதிகளே என நம்பியிருந்த கொலம்ப சுக்கு, தான் கண்டுபிடித்தது புதிய உலகமான அமெரிக்காவை யடுத்துள்ள நிலப்பகுதிகளே எனத் தெரியவில்லை. கொலம் பசைத் தொடர்ந்து **டிரேக்**, **காபட்**, **பிராபிஷர்**, **மெகல்லன்**, **அமெரிகோ வெஸ்புகி** போன்றோரும் அடுத்தடுத்து மேற்கு நோக்கிப் பயணமாயினர். ஆனால் ஒருவர் கூட இந்தியாவை வந்தடையவில்லை. மெகல்லனின் முயற்சி மட்டும் அவரது இறப்பிற்குப் பின் வெற்றி பெற்று, உலகம் உருண்டையானதே என்ற உண்மையை உலகுக்கு அறிவித்தது. அட்லாண்டிக் கடலைக் கடந்த முதல் மாலுமி கொலம்பஸ்தான் என்பதைக் கூட வரலாற்று ஆசிரியர்கள் மறுக்கின்றனர். கி.மு. 1500 ஆண்டுகளிலேயே ஃபோனீசியர்கள் தென்னமெரிக்காவுக்குச் சென்று வந்துள்ளனர் என்ற செய்தி வியப்புக்குரியதே.[407]

பழைய கடல் வழியானது, செங்கடல் வழியே அரேபியக் கடலை அடைந்து, அங்கிருந்து தமிழகத்தின் மேற்குக் கரையை அடைவதே. செங்கடலையும் அதன் சுற்றுப் பகுதிகளையும் இசுலாமியர்கள் கைக்கொண்ட போது, செங்கடல் வழியாக அல்லாமல் அரபிக் கடலை அடைய வழியுண்டா என ஆய்வு செய்ய ஐரோப்பியர் முனைந்தனர். கி.பி. 1487ஆம் ஆண்டிப் **பார்த்தலோமியு டயஸ் என்பார்**, ஆப்பிரிக்காவின் மேற்குக் கரையைச் சுற்றிக் கொண்டு, தென்முனையை அடைந்தார்.[408] அம்முனை உலகின் எப்பகுதியிலிருக்கிறது என்பதைக் கூட அவரால் தெரிந்து கொள்ள இயலவில்லை. கடுமையான புயல்காற்றும் மழையும் அவரை மேற்கொண்டு பயணம் செய்ய அனுமதிக்கவில்லை. சில காலம் காத்திருந்தும் புயல் ஓயவில்லை. எனவே இத்துடன் தனது பயணத்தை முடித்துக் கொண்டு,

---

406. Cambridge Encyclopedia, p. 112.

407. Facts about Lebanon, p. 14.

408. Fodors Lisbon, Richard Moore, Ed. Fodor's Travel Publications, INC., New York and London, 1987, p. 74.

வந்தவழியே திரும்பவும் ஐரோப்பாவை அடைந்தார். **புயல் வீசிய பகுதியைப் புயல் முனை என்று பெயரிட்டார்.** இவ்வாறு ஆப்பிரிக்காவை அரைச் சுற்றில் முடித்த முதல் மீகாமர் டயஸ் என்பாரே என்பதையும் சிலர் மறுக்கின்றனர். செங்கடல் தொடங்கி, ஆப்பிரிக்காவின் கிழக்குக் கடற்கரையைத் தெற்கு முகமாகப் பயணித்து, புயல் முனையைச் சுற்றிக் கொண்டு, மேற்குக் கரைவழியாக வடக்கு நோக்கிச் சென்று, ஜிப்ரால்டர் நீர்வழி ஊடாக, நடுத்தரைக் கடலையடைந்து, மீண்டும் தனது நாடான ஃபோனீசியாவுக்குத் திரும்பியவர்கள் ஃபோனீசியர் களே என்ற உண்மை அண்மையில் வெளிப்பட்டுள்ளது.[409] **ஐரோப்பியர்களுக்கு முன்பாகவும் செங்கடலைக் கடந்து தமிழகம் வந்தவர்களும் ஃபோனீசியர்களே என அறியலாம்.**[410]

டயஸ் பெயரிட்ட புயல் முனையை, **நன்னம்பிக்கை முனை** என்று போர்த்துக்கீசிய மன்னர் அழைத்தார்.[411] டயசின் பயணத் தால் நம்பிக்கை பெற்ற வாஸ்கோடகாமா, என்ற சினஸ் (Sines) நகரில் பிறந்த போர்த்துக்கீசிய மீகாமர், நன்னம்பிக்கை முனை யைச் சுற்றிக் கொண்டு இந்தியாவுக்கு வழி காண முடியும் என நம்பினார். கி.பி. 1497ஆம் ஆண்டில் தமது பயணத்தைத் தொடங்கினார். நன்னம்பிக்கை முனையை அடைந்த வாஸ்கோ, தெற்கேயும் கிழக்கேயும் விரிந்து பரந்து கிடந்த பேராழியைக் கண்டு வியந்தார். டயஸ் வந்த போது வீசிய புயற்காற்று, வாஸ்கோ வந்த போது ஓய்ந்திருந்தது. பருவக் காற்றுகள் பற்றிய தெளிவான செய்திகளை அறியாத டயஸ், புயற்காற்று வீசும் காலத்தில் மாட்டிக் கொண்டார். வாஸ்கோட காமாவுக்கும் இப்புயல் பற்றிய அறிவு ஏதுமில்லை என்றாலும் அவரது நற்கூறு (good luck), புயலற்ற காலத்தில் அவரைத் தென்முனைக்குக் கொண்டு சென்றது.

நன்னம்பிக்கை முனையின்று கடற்கரை வழியாக வடக்கு முகமாகப் பயணமானார். ஆங்காங்கு குறுகிய கடல்வழி வணிகம் செய்வோரை அணுகி, இந்தியாவுக்கான வழி எது வெனக் கேட்டார். ஒருவருக்கும் இந்தியாவைப் பற்றி எதுவும்

---

403. Ibid.

404. Early Christianity in India and Pakistan, p. 44.

405. Ibid.

தெரியவில்லை. நம்பிக்கையை இழக்காத வாஸ்கோடகாமா, வடதிசை நோக்கிப் பயணமானார். ஆப்பிரிக்காவுக்கும் மடகாஸ்கர் தீவுக்கும் இடைப்பட்ட நீர்வழிக்கு வந்து சேர்ந் தார். இன்றைய மொசாம்பிக் நாட்டின் வடபகுதியில் அமைந் துள்ள கோமோரோஸ் (Comoros) தீவுக் கூட்டங்கள், மடகாஸ் கருக்கும் மொசாம்பிக்கிற்கும் இடையில் அமைந்துள்ளன. அங்கு மலையாள மீகாமான் ஒருவனை காமா சந்தித்தார்.[412] அவனே காமாவுக்கு இந்தியாவுக்கான வழியைக் காட்டினான். அக்காலத்தில் ஆப்பிரிக்காவின் கிழக்குக் கடற்கரைகளில் கேரளத்தின் மரக்கலங்கள் காணப்பட்டன. அக்கிழக்குக் கடற் கரையில் நடமாடிக் கொண்டிருந்த மரக்கலங்களில் இருந்தவர் களுக்கு, இந்தியாவுக்கான வழி தெரிந்திருந்தது. **பார்த்தலோமி யோ டயல், நன்னம்பிக்கை முனையைக் கடந்து ஆப்பிரிக்கா வின் கிழக்குக் கரைப் பக்கம் வந்திருப்பாரேயானால், அவரால் இந்தியாவுக்கு வந்திருக்க முடியும்**. மலையாள மீகாமன், காமாவை கடற்கரை வழியே வடக்கு நோக்கி அழைத்துச் சென்றான். இன்றைய ஜிபூதி (D'jibouti) நாடு ஆப்பிரிக்காவின் கிழக்குக் கரையில் அமைந்துள்ள மூக்கு (Nose) போன்ற பகுதி யாகும். அதன் அருகில் தான் தோமையார் சில காலம் இளைப் பாறிய தீவு (Socorto island) உள்ளது. அம்மூக்குப் பகுதியினின்று நேர்கிழக்கே கோடுபிடித்தாற் போன்று பயணம் செய்தால், கள்ளிக்கோட்டையை வந்தடையலாம் (உலக வரைபடத்தைக் காண்க) நற்கூறு (good luck) காமாவுக்குத் துணை செய்ததாகக் கருதலாம். காமாவின் மரக்கலங்கள் கிழக்கு நோக்கிப் பய ணித்தன. கி.பி. 1497ஆம் ஆண்டு மேத் திங்களில் ஐரோப்பாவி லிருந்து பயணம் மேற்கொண்ட வாஸ்கோடகாமா, கி.பி. 1498 ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் சோமாலியா வந்தடைந்தார். ஏறக்குறைய எட்டு மாதகாலம் அவர் ஆப்பிரிக்காவைச் சுற்றி யுள்ளார். தென்மேற்குப் பருவக்காற்று தொடங்கும் சரியான காலத்தில் காமா சோமாலியாவை அடைந்தார். சரியான வழிகாட்டுதலால் மகிழ்ந்த வாஸ்கோடகாமாவின் கப்பல்,

---

412. Maritime History of South India, Introduction, p. 1.
Vasco da Gama's landing in Calicut with the help of the Malayalee pilot from Madagaskar. - Maritime History of South India.

அரேபியக் கடல் வழியாகப் பயணித்து, கி.பி. 1498ஆம் ஆண்டு மே மாதம் 20ஆம் நாள், கள்ளிக்கோட்டைத் துறைமுகத்தில் நங்கூரமிட்டது.[413] இசுலாமியர்கள் 800 ஆண்டுகளாகத் தடைப்படுத்தியிருந்த ஐரோப்பாவுக்கும் இந்தியாவுக்குமான கடல்வழியை வாஸ்கோடகாமா கண்டறிந்தார். ஐரோப்பிய வணிகத்துக்கு மீண்டும் கீழ்த்திசை நாடுகளின் கதவுகள் திறக்கப் பட்டன. **கடல்வழி வரலாற்றில் மாபெரும் வெற்றியாளராக வாஸ்கோடகாமா எண்ணப்படுவது சரியே.**

வாஸ்கோடகாமா கள்ளிக்கோட்டைக்கு வந்திறங்கிய செய்தி மன்னர் சாமரின் என்பாருக்குத் தெரிவிக்கப்பட்டது. இசுலாமிய வணிகர்களுக்கும், அரேபிய நாட்டு ஆட்சியாளர் களுக்கும் உற்ற நண்பராய் விளங்கிய சாமரின், காமாவின் வருகையால் அதிர்ச்சி அடைந்தார். இருப்பினும் ஐயம் கலந்த அரைகுறை எண்ணத்துடன் காமாவை வரவேற்றார். சாமரி னுடன் காமாவால் நேரிடையாகப் பேசித் தனது பயண நோக்கத்தை தெளிவுபடுத்த இயலவில்லை. போர்த்துக்கீசியமும் மலையாளமும் அறிந்த ஒருவர் கூட அப்போது அங்கில்லை. இருப்பினும் வாஸ்கோடகாமா தமது வருகையின் நோக்கத்தை யுணர்த்தினார். காமாவின் வருகை, இசுலாமிய வணிகர்களுக்குப் பேரிடியாய் அமைந்தது. காமா ஐரோப்பியர் என அறிந்திருந் தாலும், அவரது பின்னணி பற்றி அவர்களால் அறிய இயல வில்லை.

வாஸ்கோடகாமா வருகை தந்தபோது, கேரளம் பல்வேறு அரசியல் குழப்பங்களுக்கு இலக்காகியிருந்தது. ஒன்றுக்கொன்று பகைமை பாராட்டும் மூன்று அரசுகள் ஆட்சியிலிருந்தன. குறிப் பாகக் கொச்சியின் மன்னருக்கும் கள்ளிக்கோட்டை மன்ன ருக்கும் இடையே கடும்பகை நிலவியது. கள்ளிக் கோட்டை மன்னரை இசுலாமியரும், கொச்சி மன்னரைக் கிறித்தவர்களும் ஆதரித்தனர். இசுலாமியரின் வருகையால் பொலிவிழந்து போன கிராங்கனூர் (பழைய முசிறி) துறை முகத்தில் மீண்டும் வணிக நடவடிக்கைகளைத் தொடங்க கொச்சி மன்னர் சமயம் பார்த்துக் கொண்டிருந்தார். இச்சூழலில் கிறித்துவர்களான போர்த்துக்கீசியரின் வருகை, சிரியன் கிறித்துவ மக்களுக்கு

413. Early Christianity in India, p. 44.

எல்லையில்லா மகிழ்ச்சியைக் கொடுத்தது. அரேபிய இசுலாம் வணிகர்களிடம் தங்களுடைய தொழிலை இழந்து போன கிறித்துவ வணிகர்கள், மீண்டும் தங்கள் கடல். வணிகத் தொழிலை மீட்டெடுக்க போர்த்துக்கீசியர்கள் உதவு வார்கள் என நம்பினர். மேலும் தங்கள் சமயத்தைச் சார்ந்த ஐரோப்பியர் களால், தங்களது அரசியல் நிலைப்பாடும் உறுதியடையும் எனவும் கருதினர்.

வாஸ்கோடகாமாவுக்குத் தூதுக்குழுக்களையும் அனுப்பி வைத்தனர். இவர்களைக் கண்ட காமா பெரிதும் மகிழ்ந்து போனார். கடல் கடந்த புதிய நாட்டில் கிறித்துவர்களைக் கண்ட காமாவுக்கு எல்லையற்ற மகிழ்ச்சி ஏற்பட்டது. அவர் களுடன் நட்புறவு கொள்ளவும் விழைந்தார். தனது விருப்பத் தையும் அவர்களுக்குத் தெரிவித்தார். சிரியன் கிறித்துவர்களும், வாஸ்கோடகாமாவும் அவர்தம் குழுவினரும் விருந்துண்டு மகிழ்ந்தனர். காமாவின் வருகையின் போதும் மிளகுத் தொழி லில் சிரியன் கிறித்துவர்களே முதன்மையானவர்களாயிருந் தனர். உள்நாட்டு வெளிநாட்டு வணிகத்துக்கு மிளகை அளிப்பது, அதன் விலையை ஏற்றி இறக்குவது, கட்டுப்படுத்துவது போன்ற தன்னுரிமைகளை (Monopoly) சிரியன் கிறித்துவர்கள் கைக் கொண்டிருந்தனர். இசுலாமிய வணிகர்களும் கூட, அவர் களிடமிருந்தே மிளகைக் கொள்முதல் செய்து கொண்டனர். இவ்வாறான இயல்பான சூழ்நிலையில், சிரியன் கிறித்துவர் களிடமிருந்து மிளகு மூடைகளை காமா விலை கொடுத்து வாங்கிக் கொண்டார். கப்பல் நிறைந்த மிளகு மூடைகளுடன் அதே ஆண்டின் இறுதியில், வாஸ்கோடகாமா, தான் வந்த கடல்வழியே போர்த்துக்கல் திரும்பினார். ஏறக்குறைய 800 ஆண்டுகளுக்குப் பிறகு முதன்முறையாக ஐரோப்பாவின் துறை முகத்தில் மிளகு இறக்குமதியாயிற்று. காமா இந்தியாவுக்குப் புதிய கடல்வழியைக் கண்டுபிடித்த செய்தியும் நான்கு கப்பல் நிறைய மிளகு மூடைகளைக் கொண்டு வந்த செய்தியும் ஐரோப்பாவெங்கும் பரவின. அடுத்த ஒரு நூறு ஆண்டுகளில், போர்த்துக்கல் நாட்டின் கருவூலம் நிரம்பி வழியப் போவதை, காமாவின் வெற்றிப் பயணம் உறுதிப்படுத்தியது.



## போர்த்துக்கல் நாடு

வானில் ஒரு நொடியில் மின்னி மறையும் எரி கொள்ளியைப் போல், உலக வரலாற்றில் ஒரு நூறாண்டு ஒளிர்ந்து மறைந்தாலும், தனது ஒப்பற்ற வெற்றிகள் மூலம், வரலாற்றுப் பதிவுகளில் நிலையான இடத்தைப் பிடித்துக் கொண்ட நாடு போர்த்துக்கல். 560 கி.மீ. நீளமும், 220 கி.மீ. அகலமும் கொண்ட ஐரோப்பாவின் தென்மேற்கு மூலை நாடு, அட்லாண்டிக் கடலை ஒட்டி அமைந்துள்ளது. 97 விழுக்காடு கத்தோலிக்கக் கிறித்துவர்கள் வாழும் இந்நாடு, கத்தோலிக்க சமயத்தை உலகெங்கும் பரப்புவதற்கு மேற்கொண்ட முயற்சிகள், மற்ற ஐரோப்பிய நாடுகளின் பணிகளுக்கும் மேன்மையானவை. இதன் முற்காலப் பெயர் லூசிடானியா (Lusitania) என்பதாகும்.[414]

ஆறுகளும் அழகிய மலைகளும், வளமை செறிந்த புல் வெளிகளும், பள்ளத்தாக்குகளும், அப்பள்ளத்தாக்குகளில் வாழும் கொடிய விலங்குகளும், நச்சுப் பாம்புகளும், அட்லாண்டிக் கடலின் இதமான குளிர்க்காற்றும், போர்த்துக்கல்லின் இயற்கையான வளமைக் காட்சிகளாகும். தொடக்க காலத்தில் இபேரியர் (Iberians) என்ற கறுப்பர் இனம் இங்கு வாழ்ந்து வந்ததாகக் கூறப்படுகின்றது. வரலாற்றுக் காலத்துக்கு முன்பே இம்மக்கள் செல்டியர்களோடும் (Celts), ஃபோனீசியர்களோடும் (Phoenicians), யூதர்களோடும் (Jews) மூர் இனத்தாரோடும் (Moors) கலந்து, ஒரு புது இனமாக உருவெடுத்து விட்டனர். போர்த்துக்கீசிய மக்களின் முகச் சாயல்களில், மேற்கண்ட இனத்தானின் உடலமைப்புகள் வெளிப்படுவதைக் காணலாம். கி.மு. 200 ஆண்டுகளில், இந்நாட்டின் ஒளிவ எண்ணெய் (Olive Oil) மற்றும் மயக்கும் நல் மதுவுக்காகவும், உரோமர்கள் தம் நாட்டுடன் போர்த்துக்கல்லை இணைத்துக் கொண்டனர்.[415]

---

414. Fodor's Lisbon, p. 70.

415. Ibid.

கி.பி. 1450கள் வரையிலும், உலக வரலாற்றில் போர்த்துக்கல் பேசப்படவில்லை. கொலம்பசும் **பார்த்தலோமியு டயசும்** ஐரோப்பியர்களின் கவனத்தை ஈர்த்துக் கொண்டனர். **வாஸ்கோட காமா**, புதிய போர்த்துக்கல்லுக்கு அடித்தளமிட்டார். கி.பி. 1500இல் **பெட்ரோ அல்வாரஸ் கப்ரால்** (Pedro Alvares Cabral) பிரேசிலைக் கண்டுபிடித்தார். அடுத்த ஆண்டில் **கொர்த்தே** (Corte) கிரீன்லாந்தில் அடியெடுத்து வைத்தார். **காப்ரிலோ** கலிபோர்னியக் கடற்கரையிலும், **மார்டின்ஸ்** அலாஸ்காவிலும் காலடிகளைப் பதித்தனர். இந்தியாவுக்குப் புதிய கடல்வழியைக் கண்டுபிடித்ததோடு, மலாக்கா சீனா சப்பான் போன்ற கிழக்கு நாடுகளுக்குச் சென்ற முதல் வெள்ளைக்காரர்கள் போர்த்துக்கீசியர்களே. உலகம் உருண்டை என்பதை மெகல்லனே மெய்ப்பித்தார். இவையெல்லாம் போர்த்துக்கல் உலக வரலாற்றில் பதிவு செய்த சாதனை நிகழ்வுகளாகும்.[416]

**கிறித்துவ சமயத்தைக் கீழ்த்திசை நாடுகளில் பரவச் செய்ய போர்த்துக்கீசியர்கள் மேற்கொண்ட முயற்சிகளை கத்தோலிக்கக் கிறித்துவம் என்றைக்கும் மறக்காது**. கீழ்த்திசைக் கிறித்துவ வரலாற்றில் சமயத் தொண்டர் தூய பிரான்சிஸ் சேவியரைப் போன்றதொரு மாமனிதரை, கிறித்துவ உலகம் கண்டதில்லை. சேவியரைப் போன்றதொரு தூய தொண்டரை இந்தியாவிற்கு அறிமுகம் செய்த இவர்களின் புகழ், சேவியரால் மேலும் கூடியது எனலாம்.

இவ்வாறு புதிய நாடுகளைக் கண்டுபிடித்தது, நின்று போன கடல் வாணிகத்தை மீண்டும் நிலைநாட்டியது. கிறித்துவ சமயத்தைக் கீழ்த்திசை நாடுகளில் பரப்பியது போன்ற அருஞ் செயல்களை, மற்றெந்த ஐரோப்பிய நாடும் நிகழ்த்திக் காட்டவில்லை. ஐரோப்பாவில் சின்னஞ்சிறு கீரைப் பாத்தி போன்ற நாடான போர்த்துக்கல், உலக வரலாற்றில் தமக்கு ஒப்பாரும் மிக்காருமில்லா உயர்வான இடத்தை பிடித்துவிட்டது என்பதில் மாற்றுக் கருத்து இல்லை. போர்த்துக்கீசியர்களின் தாக்கங்கள் இந்திய, குறிப்பாகக் கேரள மக்களிடையே பெரும் வாழ்க்கை மாறுதல்களையும் தோற்றுவித்துள்ளன. குறிப்பாக இன்றைய இந்தியக் கிறித்துவம், போர்த்துக்கீசியர் தந்த கிறித்துவமே என்பதில் ஐயமில்லை.



416. Ibid.

## போர்த்துக்கீசியரும் இந்தியக் கிறித்தவரும்

முதன்முறையாக வாஸ்கோடகாமா இந்தியாவுக்கு வருகை தந்தபோது, இந்தியாவின் பெரும்பகுதிகளில் கிறித்துவர்கள் வாழ்ந்திருந்தார்கள் என்று எண்ணியிருந்தார். இந்தியக் கிறித்து வர்கள் பற்றிய உண்மையான நிலையை அவர் அறிந்திருக்க வில்லை. இரண்டாம் முறையாக காமா இந்தியாவுக்குவந்த போது (கி.பி.1502) வலியர்வட்டம் என்ற மன்னர் மரபினர் காமாவுக்கு, நினைவுப் பரிசுகள் வழங்கினர். வலியர் வட்டம் என்பதுவொரு கிறித்துவக் குறுநில மன்னர் மரபு என்பதை ஏற்கனவே விளக்கியுள்ளோம். இக்கால அளவுகளில் இந்தியக் கிறித்துவர்களைப் பற்றி வாஸ்கோடகாமாவும், காமாவைப் பற்றிக் கிறித்துவர்களும் சரியான புரிதல் இல்லாமல் இருந்தனர். நடுத்தரைக் கடலையொட்டிய சிரியா போன்ற நாட்டு வணிகர்கள் இந்தியர்களைப் பற்றியும், இந்திய மக்களைப் பற்றியும் ஓரளவு அறிந்திருந்தனர். ஆனால் அட்லாண்டிக் கடற்பகுதியின் போர்த்துக்கீசியருக்கு, இந்திய மக்களைப் பற்றி எதுவுமே தெரிந்திருக்கவில்லை. ஏற்கனவே இந்தியாவைப் பற்றி எழுதியிருந்த போர்த்துக்கீசிய வரலாற்றாசிரியர்கள், மலபார், இலங்கை போன்ற நாடுகளில், ஐரோப்பாவிலுள்ளதைப் போல் கிறித்துவப் பேரரசுகள் ஆண்டுகொண்டிருப்பதாகக் கூறியிருந் தனர். இந்திய நாடு முழுதும் கிறித்துவர்களே வாழ்ந்திருந்த தாகவும் கருதினர். வாஸ்கோடகாமாவுக்கு எல்லாமே குழப்ப மாயிருந்தது. அவர் சந்தித்த கள்ளிக்கோட்டை, கொச்சி மன்னர் கள் கிறித்துவர்கள் போல் தெரியவில்லை. கிறித்துவச் சின்னங் கள் எதையும் அவர்கள் அணிந்திருக்கவில்லை. இரண்டாம்

வருகையின் போதும்கூட, காமாவுக்குச் சரியான மொழிபெயர்ப் பாளர்கள் கிடைக்கவில்லை.[417]

ஒருமுறை வாஸ்கோடகாமா, தேவாலயம் ஒன்றிற்குச் சென்று வழிபட எண்ணினார். காமாவுடன் சென்ற ஃபெர்னா லோப்பஸ் (Ferna Lopez de Castenheda) என்பவர் அச்செய்தியை அடியிற்கண்டவாறு விளக்குகிறார்.[418]

"கோட்டை ஆள் (கொத்தவால் எனத் திரிந்தது) ஒருவன் காமாவை வழிபாட்டிடத்திற்கு அழைத்துச் சென்றான். மக்கள் பற்றுடன் (பத்தி) கூடும் இடமாக அது இருந்தது. முன் வாயிலுக்கு மேலே ஏழு மணிகள் தொங்கிய வண்ணமிருந்தன. அவ்வாயிலுக்கு முன்னதாக பாய்மரம் போன்றதொரு நெடிய மரம் செப்புத்தகடால் வேயப்பட்டு, நிறுத்தி வைக்கப்பட் டிருந்தது. அதற்கருகில் மயிலைப் போன்றதொரு பறவையின் உருவம் வைக்கப்பட்டிருந்தது. அப்பறவையின் உடல் முழுதும் செப்புத்தகடுகளால் மூடப்பட்டிருந்தது. மிகப்பெரிய மடா லயம் (Monastry) போல் காட்சியளித்த அவ்விடம், கருங்கற் களாலும் செங்கற்களாலும் கட்டப்பட்டிருந்தது. கட்டிட அமைப்பு மிகவும் அழகாயிருந்தது. அங்கு மக்கள் கூடி வழி பட்டுக் கொண்டிருந்தனர். காமா அக்காட்சியைக் கண்டதும் மகிழ்ச்சியடைந்தார். பல கிறித்துவர்களுக்கு நடுவே தாமும் வழிபாடு நடத்தவந்துள்ளதை எண்ணி, ஆர்வமாக உள்ளே நுழைந்தார். கொத்தவாலுடன் உள்ளே நுழைந்தவுடன், சிலர் எங்களை வரவேற்றனர். அவர்களின் இடுப்புக்குமேல் ஆடை யில்லை. இடுப்பில் உடுத்தியிருந்த துணியும் முழங்காலுடன் நின்றுவிட்டது. தோளுக்கும் விலாவுக்குமிடையே குறுக்குமுக மாக ஒரு மெல்லிய கயிற்றைக் கட்டியிருந்தனர். அது இடது தோலுக்கும் வலது விலாவுக்கும் இடையில் தொங்கியது. பாதிரியார் (Deacon) போன்றவர்கள்ஆலயங்களில் பூசைப்பலி (Holy Mass) நடத்தும் போது, பட்டையான ஓராடையைக் கழுத்தில் அணிந்து கொண்டிருப்பர். அது மார்பின் இரு புறங்களிலும் நீண்டு தொங்கிக் கொண்டிருக்கும் (Stole என்று

417. Early Christianity in India and Pakistan, p. 45.

418. Ibid, pp. 46-53.

இதற்குப் பெயர்) ஆனால் இங்கிருந்த பாதிரியார்கள் நூலை மட்டும் குறுக்காக அணிந்துள்ளனர்.

ஒரு கிண்ணத்திலிருந்து காமாவின் மீது நீரை அள்ளித் தெளித்தனர். பின்னர் குழைக்கப்பட்ட சந்தனத்தை நெற்றியில் பூசிக் கொள்வதைப்போல - (Ash Wednesday) கொத்தவால், நெற்றியிலும் கைகளிலும் மார்பிலும் அச்சந்தனத்தைப் பூசிக் கொள்ளுமாறு செய்கை காட்டினார். நாங்கள் நீண்ட உடலை மறைக்கும் ஆடை அணிந்திருந்ததால், நெற்றியில் மட்டும் பூசிக் கொண்டோம். மேலும் உள்ளே சென்றபோது, சுவர்களில் பல உருவங்கள் காட்சியளித்தன. சிலவற்றின் பற்கள் நீண்டதாக இருந்தன. அவை ஓரங்குல (inch) அளவுக்கு வாயைவிட்டு வெளியே நீட்டிக் கொண்டிருந்தன. சில உருவங்களுக்கு நான்கு கைகள் இருந்தன. இவை காண்பதற்கு அருவறுப்பாய்த் தோன்றின. இவையெல்லாம் கண்டபிறகு, இந்த இடம் உண்மையில் தேவாலயம் (Church) தானா வென்ற ஐயம் தோன்றியது, உள்ளே சென்றபோது தனியறையொன்று, கத்திட்ரல் தேவாலயங்களின் நடுவில் பூசைப்பலி நிறைவேற்று வதற்காக அமைக்கப்பட்டவை போன்று தெரிந்தது. இந்த அறையை செப்புத் தகடுகளாலான கதவுகளால் மூடியிருந்தனர். ஒருவர் மட்டும் கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்றார். அந்த அறை இருட்டாக இருந்தது. இந்த அறைக்குள் எங்களை நுழையவிடவில்லை. பூசைப்பலி செய்பவர் மட்டும் உள்ளே சென்றார். உள்ளே மேடையில் கன்னிமறியாள் (Sancta Maria) அமர்ந்திருந்தாள். இந்தியக் கிறித்துவர்கள் மறியன்னையை இவ்வாறான உருவில்தான் வழிபட்டனர்.

வாஸ்கோடகாமா உடனே மண்டியிட்டு (Knelt down) மறியன்னையின் மேல் வேண்டுதல் (Prayer) செய்தார். உடனே ஜோவே டசா (Joao de saa) என்ற உடனிருந்தவர் காமாவை நோக்கி, "உள்ளே இருக்கும் சிலை (Statue) கன்னி மறியாளு டையதுதானா என்று எனக்கு ஐயம் ஏற்படுகிறது. கன்னிமறியாள் இப்படியா அழகில்லாதவளாக இருப்பாள்", என்றார். காமா இக்கருத்தினை ஏற்றுக் கொண்டவராக, "இந்த உருவம் யாருடையதோ எனத் தெரியவில்லை; இருப்பினும் நான் மெய் யான கடவுளை வழிபடுகிறேன்", எனக் கூறிக் கொண்டு காமா அருகிலிருந்தவர்களைப் பார்த்துப் புன்னகைத்தார்.

கொத்தவால் உள்ளிட்ட பலரும் தரையில் நெடுஞ்சாண்கிடையாக மும்முறை விழுந்தெழுந்து வேண்டிக்கொண்டனர். (Prayer) இந்தக் கோயில் காளி[419] கோயில் என்று பிறகு அறிந்து கொண்டோம். மலபாரில் காளி என்றும் தமிழ்ப் பகுதிகளில் மாரியம்மா என்றும் (Mother of Epidemics) இத்தெய்வத்தை அழைத்தனர்."

பெர்னா லோப்பஸ் கூறும் மேற்கண்ட செய்தி, போர்த்துக்கீசியர்கள் எந்த அளவுக்கும் இந்திய மக்களைப்பற்றி அறியாதிருந்தனர் என்பதைக் காட்டுகிறது. காமாவுக்குப் பிறகு வந்த போர்த்துக்கல் நாட்டு கிறித்துவ சமயத் துறவிகள், இந்தியாவில் இந்துக்களே பெருமளவில் வாழ்வதையும், இசுலாமியர்கள் அதற்கடுத்த எண்ணிக்கையில் இருப்பதையும், கிறித்துவர்கள் கேரளத்தில் மட்டுமே பெருமளவில் வாழ்வதையும் புரிந்து கொண்டனர். இந்தியாவில் கிறித்துவப் பேரரசு எதுவும் இல்லையென்பதும், தூயதோமையார் வழிவந்த கிறித்துவர்களுக்கு கொச்சி மன்னரிடத்தில் மதிப்பு உள்ளதையும், பிற மக்களிடையே செல்வாக்கோடு கிறித்துவர்கள் வாழ்ந்து வந்ததையும்,

---

419. நூலாசிரியரின் குறிப்புகள்.

காளி: காளியம்மா, மாரியம்மா என்ற தெய்வங்கள், கண்ணகியைக் குறிப்பன வென்று சில ஆய்வாளர்கள் கருதுகின்றனர். இது தவறான சிந்தனையாகும். இத்தெய்வத்திற்கு மூலம் கொற்றவை என்ற தமிழ்த் தெய்வமே. சினம், போர், மழையின்மை, வெப்பம் ஆகியவற்றின் தெய்வமாகக் கொற்றவை சொல்லப்படுகிறாள். தமிழ்த் தெய்வமானதால் அவள் கரிய நிறம் கொண்டவளாக இருந்தாள். காளம் என்றாலும் மாரி என்றாலும் கரிய நிறத்தைக் குறிக்கும். இவை தமிழ்ச் சொற்களே. காளம் காளி எனப்பட்டாள். அம் + காளம் = அங்காளம் - அங்காளம்மன் = அழகிய கரியநிறம் கொண்டவள். சினத்தால் கண்கள் பெரிதாகித் தெரிபவள் கோல விழியம்மன் (முண்டக் கண்ணியம்மன்) எனப்பட்டாள். காளியை சக்தியாக ஆரியர்கள் வழிபட்டனர். சிவந்த நிறம் கொண்ட ஆரியர்கள், கரிய நிறம் கொண்ட தமிழ்க் கடவுளை வழிபட்டது, ஆரியச் சமயமே தமிழ்ச் சமயத்தைச் சார்ந்தது என்பதை வெளிப்படுத்தும். காளி வணக்கம் பிறகு இந்தியாவெங்கும் பரவியது. காளிக்கோட்டம் என்ற தமிழ்ச் சொல்லே கல்கத்தா எனத் திரிந்தது. காளிக் கோட்டை என்பதே கள்ளிக் கோட்டை எனவும் திரிந்தது. காளம் என்ற தமிழ்ச்சொல் உலக மொழிகளிலும் அறியப்படுகின்றது. காளா என்ற தமிழ்ச் சொல்லே,கோலா (cola) என்று மேலை மொழிகளில் திரிந்துள்ளதை நோக்குக.

கிறித்துவர்கள் உயர்ந்த சாதியினராகக் கருதப்பட்டனர் என்பதையும் தெரிந்து கொண்டனர். வலியர் வட்டம் போன்ற சிற்றரசுகளையே கிறித்துவர் பெற்றிருந்தனர் என்பதும், கொச்சி மன்னரைச் சார்ந்தே கிறித்துவர்கள் வாழ்ந்திருந்தனர். என்பதும் தெளிவாகியது. இருப்பினும் தாங்கள் மேற்கொண்டிருந்த வணிகத் துறையில் கிறித்துவர்கள் புகழ்பெற்று விளங்கியது, போர்த்துக்கீசியர்களின் வணிகத் தொழிலுக்குப் பேருதவியாய் அமைந்தது. மேலும் கிறித்துவர்களின் பெரும்பான்மையோர் மிளகுத் தோட்டங்களுக்கு உரிமையாளராயிருந்தது. மிளகு வணிகத்தில் போர்த்துக்கீசியர்களுக்குக் கைகொடுத்தது.



## கிறித்துவ சமய வழிபாட்டு முறைகள்

கிறித்துவர்களுக்கான ஆயர்கள் (Bishps) சிரிய நாட்டி னின்றே வருவதும், அந்நாட்டினரை மட்டுமே சமயத்தலை வராக அவர்கள் ஏற்றுக் கொண்டிருந்ததும், போர்த்துக் கீசியர்களுக்கு பிடிக்கவில்லை.[420] தமிழோ மலையாளமோ தெரியாத சிரியன் ஆயர்கள், பொம்மைகளைப் போலவே இங்கு வலம் வந்தனர். இருந்தாலும் பூசைப்பலி (Holy Mass) போன்ற சமயச் சடங்குகளை ஆயர்கள் நிறைவேற்றும் போது அது தனித்தன்மை பெறுகிறது என்றும் கிறித்துவர்கள் நம்பினர். இயேசுவின் திருத்தூதர்கள் சிரிய நாட்டில் மட்டுமே பிறந் திருப்பதாகவும் எண்ணினர். போப்பாண்டவரால் திருநிலைப் படுத்தப்பட்ட ஐரோப்பியரான ஜோர்டானுஸ் என்ற ஆயரை யும் கூட கிறித்துவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை.

சமயச் சடங்குகளும் சிரிய நாட்டு முறைப்படியே அமைந் திருந்தன. சிரிய மொழியே வழிபாட்டிலும் பயன்படுத்தப் பட்டது. ஆயருக்கு மலையாளம் தெரியாது. மக்களுக்கோ சிரிய மொழி புரியாது. இருந்தாலும் சிரிய மொழி வழிபாட்டுக் கூட்டங்களில் கிறித்துவர்கள் கலந்து கொண்டனர். இதே நிலை கடந்த நூற்றாண்டு வரையிலும் தமிழகத்தில் இருந்தது. இலத்தீன் மொழியே கிறித்துவ வழிபாட்டு மொழியாக 1962ஆம் ஆண்டு வரையிலும் தமிழகத்தில் நீடித்தது. கேரளக் கிறித்து வர்கள் போன்றே, தமிழ் நாட்டுக் கிறித்துவர்களும் மொழி தெரியாத நிலையில் வழிபாடு செய்து வந்தனர். பிராமணர்கள்

420. Cola also kola: African Tree bearing black seeds Containing caffeine. A Carbonated drink (in black colour) flavoured with these.

இன்றும் கூட வடமொழியில் வழிபாடு செய்வதை மாற்றிக் கொள்ளவில்லை. இந்தியக் கிறித்துவம் பற்றி உயர்வான எண்ணங்களைக் கொண்டிருந்த போர்த்துக்கீசியர்களுக்கு, அவர்கள் காணநேர்ந்த வழிபாட்டுமுறை மனநிறைவைத் தருவ தாக இல்லை. சமய முறைகளும் வாழ்க்கை முறைகளும் முற்றிலு மாக வேறுபட்டன. சிரியன் கிறித்துவர்கள் மாட்டிறைச்சி, பன்றியிறைச்சி போன்ற கீழ்சாதியினர் உண்ணும் உணவு வகை களைத் தொடுவதில்லை. போர்துக்கீசியர்கள் இவையிரண்டை யும் விரும்பியுண்டதை சிரியன் கிறித்துவர்கள் வெறுத்தனர்.[421]

கத்தோலிக்கக் கிறித்துவச் சமயத்தவரான போர்த்துக்கீசியர் அச்சமயம் வலியுறுத்தியபடி வாழ்க்கை நடத்தவில்லை. இறைச்சி யுண்பதும் மதுவருந்துவதும் இந்தியக் கிறித்துவர்களுக்கு உடன் பாடாக அமையவில்லை. பொய்யுரைப்பது பித்தலாட்டம் செய்வது, குமுகாயச் சட்டங்களை மீறுவது என, தான்தோன்றித் தனமான வாழ்க்கை முறையைக் கைக்கொண்டிருந்த போர்த்துக் கீசியர், பாலியல் தொடர்பான ஒழுக்கக்கேடான செயல்களிலும் ஈடுபடலாயினர். இடது கையால் உணவை உண்பது, பல நாட்கள் நீராடாமல் இருப்பது, கண்ட இடங்களிலும் உணவருந்துவது, பொதுவிடங்களில் பிறர் பார்க்கும் வகையில் பாலியல் தொடர் பான முறைகேடுகளில் ஈடுபடுவது, உடலுறவு கொண்ட பின்பும் குளிக்காமல் பொது இடங்களுக்குச் செல்வது, தேவாலயங்களில் காலணியுடன் சென்று வழிபடுவது போன்ற தமிழ்ப் பண்பாட் டுக்கு எதிரான செயல்களில் ஈடுபட்டனர். தொடக்கத்தில் சிரியன் கிறித்துவர்களுடன் திருமண உறவுகள் கூட நிகழ்வுற்ற போதும், பிறகு இந்தியக் கிறித்துவர்கள் போர்த்துக்கீசியருடன் திருமண உறவுகள் கொள்வதை வெறுத்தனர்.[422]

நாளடைவில், வணிகத்தின் பொருட்டு, ஏராளமான போர்த்துக்கீசியர்கள் இந்தியாவுக்கு வருகை தந்தனர். அவர் களில் பணியாளர்கள், படைவீரர்கள், மீகாமர்கள், வணிகர்கள் எனப் பல்வேறு பிரிவினர் இருந்தனர். இவர்கள் ஆண்டுக் கணக்கில் தமது மனைவி மக்களைவிட்டுப் பிரிந்திருந்தனர். எனவே அவர்களால் ஒழுக்கமான வாழ்க்கை முறையைக்

---

420. Oxford Dictionary of Current English, p. 159.

421. Early Christianity in India, p. 76.

422. Ibid.

கடைப்பிடிக்க இயலவில்லை. உள்ளூரிலிருந்த பலபெண்களும் பணத்துக்காக போர்த்துக்கீசியர் தங்கியிருந்த குடியிருப்பு களுக்குச் சென்றுவரலாயினர். இப்பெண்களில் பலரை போர்த்துக் கீசியர்கள் தங்களுடன் எப்போதும் வைத்துக் கொண்டனர். சிலரைத் திருமணமும் செய்து கொண்டனர்.

போர்த்துக்கீசியர் தொடக்கத்தில் இந்தியாவுக்கு வந்த போது, அவர்களது சமயவழிபாட்டுக் கடன்களை நிறை வேற்றும் வகையில் சில குருமார்களையும் கூடவே அழைத்து வந்தனர். வாஸ்கோடகாமா தன்னுடன் ஒரு குருவானவரை (Dom Pedro de Covilham) அழைத்து வந்தார்[423] இக்குருமார் களுக்கான ஊதியம் போர்த்துக்கீசிய கப்பல் குழுமங்களால் தரப்பட்டன. இவர்களும் வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் கிறித்துவ சமயத்தைப் பிறருக்கு அறிவிக்கத் தொடங்கினர். இவ்வாறான நிகழ்வொன்றில் வாஸ்கோடகாமாவின் குருவானவர் கொலை செய்யப்பட்டார். இவர் கொலையுண்டபோது, காமா போர்த்துக்கல்லில் இருந்தார். கிறித்துவ சமயத்துக்காக உயிர் நீத்த முதல் பேர்த்துக்கல் சமயத்தொண்டர் தாம் பெத்ரே ட கொவிலாம் என்பவரே. காமா இந்தியா திரும்பியபோது, தமது குருவானரைக் கொலை செய்த கும்பலைத் தேடிப்பிடித்துக் கொலை செய்து, தமது பழியை காமா தீர்த்துக் கொண்டார்.[424]

மிளகைத் தேடி இந்தியாவுக்கு வந்த போர்த்துக்கீசியர்கள், வணிகத்தோடு தங்கள் சமயத்தையும் பரப்ப முயன்றனர். இவ்விரு பணிகளையும் ஒன்றாகவே செய்தனர். ஐரோப்பாவில் ஏற்பட்டிருந்த சமயமறுமலர்ச்சி, கிறித்துவின் நற்செய்தியை உலகெங்கும் அறிவிக்க வேண்டும் என்ற உணர்வுகளைத் தூண்டி விட்டது. இவ்வுணர்வுகளை முன்னெடுத்துச் சென்றவர்களில் முதன்மையானவர்கள் போர்த்துக்கீசியரே எனலாம்.



423. Ibid.

424. Ibid, p. 77.

## போர்த்துக்கீசியரும் கிறித்துவ சமயமும்

கி.பி. 300களில் உரோமர் ஆட்சிக்காலத்திலேயே கிறித்துவம் போர்த்துக்கல்லில் பரவத்தொடங்கியது. கி.பி. 1100 வரையிலும் போர்த்துக்கல் பல்வேறு குழுத்தலைவர்களால் ஆளப்பட்டு வந்தது. இக்காலத்தில் மூர்களை (Moors) எதிர்த்துப் போராட இக்குழுக்கள் ஒன்றுபட்டன. மிக வலிமை வாய்ந்த கப்பற்படை, கி.பி. 1385ஆம் ஆண்டில் யாவோ (Joao) தலைமையில், தனது வலிமையை மெய்ப்பித்தது.[425] ஏறக்குறைய 200 ஆண்டுகள் தன்னாட்சி நடத்திய போர்த்துக்கீசிய மன்னர்கள், கிறித்துவ சமயத்தைப் பெரிதும் போற்றினர்.

ஐரோப்பாவில் மார்ட்டின் லூதர் தலைமையில் சமய மறுமலர்ச்சி தோன்றியபோதும் போர்த்துக்கல் போப்பாண்டவரின் தலைமையிலேயே நீடித்தது. ஐரோப்பாவின் பல்வேறு நாடுகளில் மறுமலர்ச்சி இயக்கங்களின் தாக்கங்கள் அறியப்பட்டபோதும், போர்த்துக்கல் கத்தோலிக்கக் கிறித்துவ சமயத்தைக் காப்பதில் உறுதியாய் நின்றது. அருகிலுள்ள ஸ்பெயினும் அவ்வாறே உறுதி பூண்டிருந்தது. போப்பாண்டவரின் இரு கரங்களாக இவ்விரு நாடுகளும் செயல்பட்டன. கி.பி. 1450க்குப் பிறகு புதிய நாடுகளைக் கண்டுபிடிப்பதில் முனைப்பு காட்டிய போர்த்துக்கல்லும் ஸ்பெயினும், புதிய நாடுகளையும் தம்பிடியில் இணைத்துக் கொண்டன. கத்தோலிக்கக் கிறித்துவ நாடுகளான ஸ்பெயினும் போர்த்துக்கல்லும் வணிகம் மற்றும் நாடு பிடிக்கும் போட்டிகளில் தங்களுக்குள் சண்டையிட்டுக்

425. Fodor's Lisbon, p. 73.

கொள்ளா வண்ணம், போப்பாண்டவர் நான்காம் அலெக் சாந்தர், இவ்வுலகை இரண்டாகப்பிரித்து, அட்லாண்டிக் பேராழிக்கு மேற்கிலுள்ள வட தென்னமெரிக்க நாடுகளை ஸ்பெயினுக்கும், இந்தியா உள்ளிட்ட கிழக்கு நாடுகளைப் போர்த்துக்கல்லுக்கும் பிரித்துக் கொடுத்தார்[426]

பத்தாம் லியோ என்ற போப்பாண்டவர், போர்ச்சுக்கீசியர் களுக்குக் கிறித்துவ சமயத்தின்பால் இருந்த பற்றுதலையும் புதிய கடல்வழி கிழக்கு நாடுகளுக்குக் கண்டுபிடிக்கப்பட்ட தையும் கருத்தில் கொண்டு, கிறித்துவ சமயத்தைக் கீழை நாடு களில் பரப்ப, போர்த்துக்கீசியருக்கு அனுமதியளித்தார். கி.பி. 1514ஆம் ஆண்டில் அளிக்கப்பட்ட போப்பாண்டவரின் ஆணை, போர்த்துக்கல் மன்னருக்கும் போப்பாண்டவருக்கும் இடையே செய்து கொள்ளப்பட்ட ஒப்பந்தத்தை உள்ளடக்கியிருந்தது. பாத்ரோவாதோ (Padroado) என அழைக்கப்படும் இவ்வொப் பந்தம், சமயம் தொடர்பான சில உரிமைகளைப் போர்த்துக் கீசியர்களுக்கு வழங்கியது.[427] தோமார் (Tomar) பகுதியின் தலைமைக் குரு (Vicar general) இந்திய நாட்டுக்கான சமயத் தலைவராக (Ecclesiastical anthority) பொறுப்பளிக்கப்பட்டார். பின்னர் இப்பொறுப்பு பஞ்சல் (Funchal) மறைமாவட்டத்தின் (Diocese) கட்டுப்பாட்டுக்கு கி.பி. 1533ஆம் ஆண்டில் மாற்றம் செய்யப்பட்டது.

கி.பி. 1533 சனவரித் திங்கள் 31ஆம் நாள், கிழக்காசிய நாடுகளின் முதல் ஆயமாக கோவா உயர்த்தப்பட்டது. ஆனால் அவ்வாணையில் கையொப்பமிடுமுன்னரே போப் பாண்டவர் மறைந்துவிட்டார். அடுத்துப் பொறுப்பேற்ற மூன்றாம் பால் என்னும் போப்பாண்டவர் அவ்வாணையில் கையொப்பமிட் டார் (Agquum Reputamus). கி.பி. 1534 ஆண்டு நவம்பர்த் திங்கள் மூன்றாம் நாளில் டாம் பிரான்சிஸ்கோ - ட - மெல்லோ (Dom Francisco De Mello) கோவாவின் முதல் ஆயராகத் திருநிலைப் படுத்தப்பட்டார்.[428] இவ்விழா லிஸ்பன் நகரில் நடைபெற்றது. ஆனால் இந்தியாவுக்கு வருமுன்னரே, எவோரா நகரில், கி.பி.

---

426. Early Christianity in India, p. 50.
427. Ibid, p. 50.
428. Portuguese is the Tamil Coast, p. 277.

1536ஆம் ஆண்டு ஏப்பிரல் 27ஆம் நாளில் இறந்துபோனார். பின்னர் டாம் யாவோ அல்போஸ்சுஸ் ட அல்புகர்க் (Dom Joao Alphonsus Albuquerque) என்பார், கி.பி. 1538ஆம் ஆண்டில் ஆயராகத் திருநிலைப்படுத்தப்பட்டு மார்ச் திங்கள் 25ஆம் நாள் கி.பி. 1539ஆம் ஆண்டில் கோவா வந்திறங்கினார்.[429]

கத்தோலிக்கக் கிறித்துவ சமயத்தில் டயோசீஸ் (Diocese) எனப்படும் ஒரு பகுதியை ஆளும் சமயத் தலைவராக ஆயர் (Bishop) என்பவர் இருப்பார். இவருக்குக் கீழ் குருமார்களும் (Priests or Fathers), சமயச் சொல்லிகளும் (Catechists) பணி யாற்றுவர். ஒவ்வொரு ஊரும் அவ்வூருக்கு அருகிலுள்ள குடி யிருப்புகளும் ஒரு பணித்தளமாகக் (Parish) கருதப்படும். இப் பணித்தளத்தில் ஒரு குருவானவரும் ஒன்றிரண்டு சமயச் சொல்லிகளும் பணியாற்றுவர். அப்பகுதி மக்களின் சமயக் கடமைகளையாற்ற குருவானவர் உதவி செய்வார். இவ்வாறான குருக்களைக் கட்டுப்படுத்தவும், மாறுதல் செய்யவும், சமயம் தொடர்பான ஆணைகளைப் பிறப்பிக்கவும் ஆயருக்கு மேலாண்மை அளிக்கப்படும். ஆயர், சமயத் தொடர்பானவை களையும், சமயத்தின் பொறுப்பிலுள்ள அசையும் அசையாத சொத்துக்களையும் கண்காணிப்பார். சமயப் பணியாற்று வோருக்கு வாழ்க்கைச் செலவுக்கான உதவிகளைச் செய்வார். (இது ஊதியமோ சம்பளமோ அல்ல). கிறித்தவர்களிலே ஏற்படும் சமயம் தொடர்பான பிணக்குகளையும் தீர்த்து வைப் பார். இந்த ஆயர் போப்பாண்டவரால் நியமனம் செய்யப்படு கிறார். ஆயருடைய நடவடிக்கைகளில் தலையிட போப்பாண்ட வரைத் தவிர யாருக்கும் உரிமையில்லை. உலகம் தழுவிய மாபெரும் சமயத்தின் தலைவராக உள்ள போப்பாண்டவரால் நேரிடையாக எப்பகுதியின் மீதும் கவனம் செலுத்த இயலாது என்ற நிலையில், ஆயர்கள் அனைத்து அதிகாரங்களைப் பெற் றுள்ளனர். கிறித்துவ மக்கள் பெருமளவில் வாழும் பகுதிகளில் ஒன்றுக்கு மேற்பட்ட ஆயர்கள் இருப்பின், இவர்களில் ஒருவர் பேராயராகப் பணியாற்றுவார். இப்பேராயரும் (Arch - Bishop) போப்பாண்டவரால் நியமிக்கப்படுபவரே. தற்கால சீர்திருத்தத் திருச்சபைகள், தேர்தல் மூலம் தங்கள் சமயத் தலைவர்களைத் தேர்வு செய்து கொள்கின்றனர். உரோமன் கத்தோலிக்கத் திருச்

---

429. Ibid.

சபையின் அனைத்து அதிகாரங்களையும் பெற்றிருப்பவர் போப்பாண்டவரே. சமயம் தொடர்பான முடிவுகளை எடுப் பதில் போப்பாண்டவர் எப்போதும் தவறு செய்வதில்லை என்பது கத்தோலிக்கத் திருச்சபையின் நம்பிக்கையாகும்.[430] (The Bope dogma that the Pope could never sin in matters of the faith, established in 1870) அடியிற்கண்ட அடுக்குகளில் கத்தோலிக்கத் திருச்சபையின் சமயப் பணிகள் உள்ளன.[431]

போப் பாண்டவர் (Pope)



கர்தினால்கள் (Cardinals)
(போப்பாண்டவரைத் தேர்வு செய்யும்
ஆர்ச் பிஷப்புகளுக்கு மேல்
அதிகாரம் பெற்றவர்கள்)



ஆர்ச் பிஷப்புகள் (Arch bishop)
(சில பிஷப்புகளுக்கு மேலாண்மைப்
பொறுப்பிலிருப்பவர்கள்)



பிஷப்புகள் (Bishop)
(ஒரு குறிப்பிட்ட பகுதியின் சமய,
பொருளியல் துறைகளின் மேலாண்மையாளர்)



குருமார்கள் (Priest)
(ஊர்ப்புற, நகர்ப்புற பணித்தளங்களின் சமயப்
பொறுப்பாளர்கள்)



சமயச் சொல்லிகள் (Catechist)
(குருமார்களுக்குச் சமயச் சடங்குகளில்
உதவி செய்பவர்கள்)



கிறித்துவப் பொது நிலையினர். (Laiety)

மேற்கண்ட முறையானது கத்தோலிக்கத் திருச்சபையில் கி.பி. 14ஆம் நூற்றாண்டிலேயே நடைமுறையில் இருந்தது. இது போன்ற மேலாண்மை முறை இந்தியக் கிறித்துவத்தில் இல்லை. இந்தியக் கிறித்துவம் ஒரு ஆயரையும் சில குருக்களையும் கொண்டே செயல்பட்டு வந்தது. போப்பாண்டவர் என்ற ஒருவர் உரோமையில் உள்ளது பற்றியும், அவரே உயர்தலைவர் என்பது பற்றியும் இந்தியக் கிறித்துவர்களுக்குத் தெரியாது. இந்த ஐரோப்பிய மோண்மை முறை, போர்த்துக்கீசியர்கள் இந்தியா வுக்கு வந்த பிறகே செயல்படுத்தப்பட்டது.

ஆயர் அல்போன்சுஸ் அல்புகார்க் கோவா வந்திறங்கிய போது உடல்நலமற்று இருந்தார். அதனால் பொது வரவேற்பு எதுவும் அவருக்கு அளிக்கப்படவில்லை. கோவா மறை மாநிலம் **(ஆயம்)** (Diocese) என்பது இந்தியாவிலிருந்து ஜப்பான் வரையி லான அனைத்து நாடுகளையும் உள்ளடக்கியதாக அப்போ திருந்தது. போப்பாண்டவருக்கும் போர்த்துக்கீசிய மன்னருக்கும் இடையே செய்து கொள்ளப்பட்ட ஒப்பந்தத்தின்படி,[432]

1. கீழ்த்திசை நாடுகளின் சமயப்பணிகளை போர்த்துக்கல் மன்னர் கவனிப்பார்.
2. ஆயர் உள்ளிட்ட சமயத்தலைவர்களை, போப்பாண்ட வரின் அனுமதியுடன் போர்த்துக்கல் மன்னர் நியமனம் செய்துகொள்ளலாம்.
3. சமயப் பணியாளர்கள் போர்த்துக்கல் கப்பலில் மட்டுமே இந்தியாவுக்குச் செல்ல வேண்டும்.
4. இந்தியாவில் சமயப் பணியாற்றச் செல்வோருக்கு, இந்தியா விலுள்ள போர்த்துக்கல் ஆட்சியாளர்கள் பாதுகாப்பளிக்க வேண்டும்.
5. எந்த ஐரோப்பிய சமயப் பணியாளரும் போர்த்துக்கல் மன்னரின் உதவியுடன் இந்தியா செல்லலாம்.
6. இந்தியாவில் சமயப் பணியாற்றுவோருக்கு வழங்கப்படும் உதவித் தொகைகளை போர்த்துக்கல் மன்னர் ஏற்றுக் கொள்வார்.
7. இந்தியாவில் கட்டப்படும் தேவாலயங்களுக்கும் அதன் அன்றாட செலவுகளுக்கும், புதுப்பிக்கும் பணிகளுக்கும் போர்த்துக்கல் மன்னர் உதவுவார்.

8. பணித்தளங்களில் பணியாற்ற துறவிகளை (Priests) அனுப்பவும் திரும்பவும் அமைத்துக் கொள்ளவும் மன்னருக்கு உரிமையுண்டு.
9. இந்தியாவுக்குக் கிழக்கேயும் சமயப் பணியிடங்களை விரித்துக்கொள்ள மன்னருக்கு உரிமையுண்டு.
10. அந்நாடுகளை வெல்லவும், வென்றெடுத்த நாடுகளில் ஆட்சிசெய்யவும் (The non - Christian Countries) போர்த்துக்கல் மன்னருக்கு அனுமதி வழங்கப்பட்டது. இதனை ஐந்தாம் நிக்கலஸ் (1447 - 1455) அறிவித்தார். இதனை ஆணையாக (Dun Diversas), கி.பி. 1452, சூன் 18ஆம் நாள் வெளியிட்டார்.[433]
11. வென்றெடுக்கப்பட்ட நாடுகளின் சட்டவழி உரிமையாளாக (rightful owner) மன்னர் மற்றொரு ஆணைவழியே (Romanus Pontifex), 8 சனவரி, 1454 நாளில் அறிவிக்கப்பட்டார்.[434]
12. மேற்கண்ட ஆணை மறுபடியும் போப்பாண்டவர் மூன்றாம் கலிஸ்தூரஸ் (Pope Calixtus III) என்னும் போப்பாண்டவரால் உறுதி செய்யப்பட்டு (Inter Cactera), மார்ச் 13, 1455இல் ஆணை வெளியிடப்பட்டது.[435]
13. போப்பாண்டவர் நான்காம் சிக்ஸ்துஸ் (Sixtus IV), மேலும் ஒரு ஆணையை, (Acterni Regis), வென்றெடுக்கப்பட்ட நாடுகளின் மீது எல்லா உரிமைகளையும் வழங்கி, சூன் 21, 1481ஆம் ஆண்டில் வெளியிட்டார்.[436]
14. ஆறாம் அலெக்சாந்தர் (Pope Alexander VI) என்னும் போப்பாண்டவர், தனது 26 மார்ச், 1500 நாளிட்ட ஆணையின்படி, கிழக்கு நாடுகளின் தலைமை துறவிகளை (Apostalic Vicars)ப் பரிந்துரைக்க உரிமைகளை வழங்கினார்.[437]

---

430. History of Religion, p. 362.
431. கத்தோலிக்கத் திருச்சபையின் ஆளுமை அடுக்குமுறை - ஆசிரியர்.
432. Early Christianity in India and Pakistan, p. 50.
433. Portuguese in Tamil Coast, pp. 277-278.
434. Ibid.
435. Ibid.
436. Ibid.
437. Ibid.

15. *கிழக்கிந்திய நாடுகளில் சரியான சமய அறிவுரை* (Eposcopal Candidate) *சமய வழிகாட்டுதலுக்குத் தேர்வு செய்து கொள்ள தனியானதொரு ஆணையை* (Dum Fidei Constantium), *சூன் 7 1514ஆம் நாளில், போப்பாண்டவர் பத்தாம் லியோ* (Pope Leo X) *வெளியிட்டார்.*[438]

மேற்கண்ட ஆணைகள் யாவும் ஐந்தாம் லியோ என்ற போப் பாண்டவரும் போர்த்துக்கல் மன்னரும், கி.பி. 1514ஆம் ஆண்டில் செய்து கொண்ட பாத்ரோவோதா (Padrovodo) என்ற ஒப்பந்தத்தின் பிற்சேர்க்கைகளே ஆகும். **இந்த ஒப்பந்தம் பிற்காலத்தில் போப்பாண்டவருக்கே தலைவலியாக முடியப் போவதை அப்போது அவர் உணரவில்லை. இவ்வொப்பந்தச் சிக்கல், பல்வேறு குழப்பங்களையும், மனக்கசப்புகளையும் ஐரோப்பாவிலும் இந்தியாவிலும் தோற்றுவித்தன.**

வாஸ்கோடகாமா, இந்தியாவுக்குக் கடல்வழி கண்ட பிறகு, போர்த்துக்கல் மன்னரின் கருவூலம் (Treasury) நிரம்பி வழிந்தது. கடல் வாணிகத்தில் தனியொரு நாடாக போர்த்துக்கல் உயர்ந்து நின்றது. இதனால் போர்த்துக்கல் மன்னரின் மதிப்பு ஐரோப்பிய மன்னர்களிடையே பன்மடங்கு உயர்ந்து நின்றது. போப்பாண்டவரின் பார்வை மன்னர் மேல் விழுந்தது. கிறித்துவ சமயத்துக்காக வாரி வழங்கிய போர்த்துக்கல் மன்னரின் கொடையுணர்வு போப்பாண்டவரைப் புல்லரிக்க வைத்தது. வல்லார் பக்கத்தில் நிற்க நல்லார் மட்டுமின்றி சமயத் தலைமை யும் விரும்பியது. போர்த்துக்கல் மன்னரின் நட்பைப் பெற போப்பாண்டவரே முயற்சிகள் மேற்கொண்டார். மன்னரின் செல்வச் செழிப்பு போப்பாண்டவரையும் வளைத்துப் போட்டது.

வாஸ்கோடகாமா, இந்தியாவில் தங்கியிருந்தபோது, அவருடன் வந்தவர்களில் சிலர் திருமயிலைக்குச் சென்று தோமையாரின் கல்லறையைக் கண்டு மீண்டனர். அக்கல்லறை யின் மண்ணை அரும்பொருளாக எடுத்துவந்தனர். அம்மண் போர்த்துக்கல் மன்னர் தாம் மானுவலிடம் (Dom Manuel) சேர்ப்பிக்கப்பட்டது.[439] கடந்த நூற்றாண்டுகளில் மார்க்கோ போலோ, ஜோர்டானுஸ் போன்றவர்கள், தோமையாரின்

---

438. Ibid.

439. The Voyage of Pedro Alvares Cabrol to Brazil and India William B. Green Lee, London, 1938, p. 49.

கல்லறை பற்றிய செய்திகளையும், அங்கு நாளும் காணப்படும் அருஞ்செயல்கள் (Miracles) பற்றியும் ஐரோப்பாவில் வெளி யிட்டு, ஐரோப்பியர்களின் ஆவலைத் தூண்டியிருந்தனர். தற்போது தோமையாரின் கல்லறையின் மண் முதன் முறை யாக ஐரோப்பாவுக்கு வந்து சேர்ந்தது பற்றியும் அதனை அனுப்பி யிருந்த அவ்வாரஸ் பெத்ரோ கெப்ரல் (Pedro Alvares Cabral) என்பார், இந்தியாவிலிருந்து தோமையார் பற்றி அனுப்பி யிருந்த செய்திகள் பற்றியும், மன்னர் தாம் மானுவல், பிற ஐரோப்பியக் கிறித்துவ மன்னர்களுக்குக் கடிதம் எழுதி, தமது நாட்டினர் ஆற்றிய சமயத் தொண்டுபற்றி பூரித்துப் போனார். கடிதத்துடன் புனித மண்ணையும் (holy sand) அனுப்பி வைத்தார்.

கி.பி. 1498ஆம் ஆண்டில் இந்தியா வந்த வாஸ்கோட காமா, கள்ளிக்கோட்டை மன்னரின் அனுமதியுடன் மேற்குக் கரையில் ஒரு வணிகக் கூடம் அமைத்துக் கொண்டார். கி.பி. 1502ஆம் ஆண்டில் மீண்டும் இந்தியா வந்த காமா, தம்முடன் கிறித்துவச் சமயப் பணியாளர்களையும் அழைத்து வந்தார். தொடக்கத்தில் போர்த்துக்கீசிய வணிகக் கூடங்களிலேயே தங்கியிருந்த சமயப் பணியாற்ற வந்த துறவிகள், பிறகு தங்களது பணிகளை மேற்கொள்ள வெளியேறினர். கி.பி 1506ஆம் ஆண்டில், இந்தியாவின் போர்த்துக்கீசியத் தலைவராக (Vice-roy) **பிரான்சிஸ்கோட அல்மெய்டா** (Fransisco de Almeida) பொறுப்பேற்றுக் கொண்டார். இவர் கி.பி 1507ஆம் ஆண்டில், நால்வர் குழு வொன்றை மயிலாப்பூருக்கு அனுப்பி, தோமை யாரின் கல்லறை பற்றிய செய்தகளை அறிந்து வரச்செய்தார்.[440] வழியில் இருவர் இறந்துபட, இருவர் மட்டும் செய்திகளைத் திரட்டிக் கொண்டு வந்தனர். அந்த செய்திகள் அறிக்கையாகத் தொகுக்கப்பட்டு போர்த்துக்கல் மன்னருக்கு அனுப்பி வைக்கப் பட்டது. **பெந்ததேவோ** (Fr. Pentedao) என்ற குருவானவர், தோமையாரைப் பற்றிய அறிக்கையொன்றை சனவரி 6, 1515 நாளிட்ட செய்தியொன்றை, கொச்சியிலிருந்து போர்த்துக் கல்லுக்கு அனுப்பி வைத்தார்.[441] **கஸ்பார் கொரியா** என்பாரும்,

---

440. The Portuguese Settlement in Mylapore, Mathias Mundadam, Indian Church History Review, ICHR, Vol. III, 1969, pp. 103-114.

441. Ibid.

**பெரோ லோபஸ் என்பாரும்** (Gaspar Correia along with Pero Lopes), கி.பி. 1521ஆம் ஆண்டில் மயிலாப்பூரில் தங்களுக்குக் கிடைத்த உணர்வுமிக்க செய்திகளை அளித்துள்ளனர்.[442]

தோமையாரைப் பற்றியும் அவரது கல்லறை பற்றியும் ஐரோப்பாவுக்கு அனுப்பப்பட்ட செய்திகளை ஆர்வமும் பற்றுதலும் கலந்த உணர்வுடன் மக்கள் கேட்டறிந்தனர். தமிழகத்திலிருந்த போர்த்துக்கீசியர், தோமையார் கல்லறையைப் பற்றிய உண்மை நிலையை (Veracity) அறிய, சூன் 2ஆம் நாள் 1523ஆம் ஆண்டில் முடிவு செய்தனர். இதன் வழியே தோமையாரின் பெருமைகளை அறிவிக்க எண்ணினர். சென்னையை அடுத்த அனந்தராயன் பட்டிணத்தில் (Pulicat) இருந்த போர்த்துக்கீசியத் தலைவன் (Captain) **மனோயெல் ட ப்ரயாஸ்** (Manoel de Frias) என்பாரிடம் இப்பணியை ஒப்படைத்தனர். இதன்படி, **சூன் 6, 1523ஆம் ஆண்டில், தோமையாரின் கல்லறை தோண்டிப் பார்க்கப்பட்டது. அங்கு கண்ட செய்திகளை அறிக்கையாக போர்த்துக்கீசிய மன்னருக்கு அனுப்பி வைத்தனர். இதன்படி, அக்கல்லறை தோமையாருடையது தான் என உறுதி செய்யப்பட்டது. அந்த அறிக்கை இன்னும் உரோமை நகரிலுள்ள அருங்காட்சியகத்தில் காணக் கிடக்கின்றது**[443] (Archivum Romanum Societatis Jesu).

கி.பி. 1525ஆம் ஆண்டில் **அந்தோனியோ பெந்தியாதோ** (Fr. Antonio Pentedo) என்ற குருவானவர், தோமையார் கல்லறையையும் அதனை அடுத்திருந்த சிறு தேவாலயத்தையும் கண்காணிக்கும் பொறுப்பில் அமர்த்தப்பட்டார். அப்போது புலிக்காட் துறைமுகத்துக்கு வருகை தந்து கொண்டிருந்த போர்த்துக்கீசிய வணிகர்கள் தோமையார் கல்லறைக்கருகிலேயே குடியிருப்பும் அமைத்துக் கொண்டனர். **அந்தோனியோ** குருவானவர் வணிகர்களுக்காக பூசைப்பலி (Holymass) போன்ற சமயச் சடங்குகளை நிறைவேற்றி வந்தார். இவர் ஒருவரைக் கூட கிறித்துவராக மாற்றம் செய்ய முயற்சி செய்யவில்லை என

442. Barros. Joao De, Da Asia, op.cit. Decada 3, Livro 7, Capitulo 11, pp. 225-226., 1973.

443. Documentacao para a historia das missoes do Padroado Portugues do Oriente, Silva Rego, Antonio, op.cit. Vol. II, 1947, pp. 197 and 356.

444. Ibid.

மற்றொரு சமயப் பணியாளர் குறிப்பிடுகின்றார்.[444] கி.பி. 1530இல் **வின்சென்ட் ட லகுனா** (Vincente de Laguna) என்ற குருவானவர், தன்னை தோமையார் சிற்றாலயத்துக்கு (Chapel) மாற்றம் செய்து தரும்படி போர்த்துக்கல் அரசருக்கு மடல் ஒன்று எழுதியதாகச் செய்திகள் கூறுகின்றன.[445]

இந்தியாவுக்கு வந்த போர்த்துக்கீசியர் ஒவ்வொருவரும், மயிலாப்பூர் வந்து தோமையார் கல்லறையில் வேண்டுதல் நடத்த வேண்டும் என விருப்பம் கொண்டிருந்தனர் என்பதைப் பல்வேறு செய்திகள் வாயிலாக அறியலாம்.



445. Ibid, Vol. II, p. 197.

## போர்த்துக்கீசியரின் இந்தியக் குடியிருப்புகள்

கி.பி. 1505ஆம் ஆண்டில் வைசிராய் பொறுப்பேற்ற அல்மெய்டா, கடல் வாணிகத்தையே முதன்மையாகக் கருதி னார். அரசியல் நடவடிக்கைகளில் இறங்கினால் வாணிகம் தொய்வடையும் என எண்ணினார். இருப்பினும் வணிகம் தொடர்பாகச் சில போர்களில் ஈடுபட வேண்டியதாயிற்று. வாஸ்கோடகாமா வந்த நாளிலிருந்தே, இசுலாமியர்கள் ஐரோப் பியர்களை வெறுத்தனர். சாமரின் மன்னரிடம் போர்த்துக்கீசியர் களுக்கு வணிக உரிமைகள் வழங்கக் கூடாதென வலியுறுத்தினர். மன்னரும் இசுலாமியரின் சார்பாகவே இருந்ததைக் கண்ட போர்த்துக்கீசியர்கள் இசுலாமியரே இதற்குப் பின்னால் உள்ளனர் என்பதையும் அறிந்திருந்தனர். முடிவில் மன்னர் இசுலாமியரின் துணையுடன், போர்த்துக்கீசியக் கப்பல்களைத் தாக்கினார். அப்போது நிகழ்வுற்ற கடற்போரில், **அல்மெய்டா** மன்னரின் கப்பற்படையை மூழ்கடித்தார். இதனால் கலக்கமும் அச்சமும் கொண்டிருந்த இசுலாமியரை மீண்டும் டையு அருகில் அல் மெய்டா புறங் கண்டார். இசுலாமியர்களின் கடற்படையைக் காட்டிலும் போர்த்துக்கீசியப் படை வலிமையானது என இருமுறை மெய்ப்பிக்கப்பட்டது.

கி.பி.1509ஆம் ஆண்டில் **அல்போன்சா அல்புகர்க் என்பார்**, போர்த்துக்கீசிய மன்னரின் பதிலியாய் வந்தார். அவர் கோவா நகரை இசுலாமியர்களிடமிருந்து கி.பி. 1510ஆம் ஆண்டில் கைப்பற்றிக் கொண்டார். அல்புகர்க், போர்த்துக்கீசிய மன்னரின் மேலாண்மையை, இந்தியாவின் மேற்குக் கடற்கரையில் நிலை நாட்டினார். கோவா, போர்த்துக்கீசியர்களின் தலைமையிட மாயிற்று. அத்துடன் கிறித்துவ சமயத்தின் கிழக்கிந்திய நாடு களின் முதல் டயோசீஸ் என்ற பெருமையையும் பெற்றது. தமது

சமய நடவடிக்கைகளின் தலைமையிடமாக (Head quarters of the Ecclesiastical authority and missionary activities) கோவாவை உயர்த்திக் கொண்டனர்.[446]

கி.பி. 1506இல் போர்த்துக்கல் மன்னர் தமது இந்திய வணிகர்கள் மற்றும் சமயப் பணியாளர்களுக்கு விடுத்த அறிவுரை யில், தங்களுக்கென ஒரு கோட்டையைக் கட்டிக் கொள்ளவும், தங்கள் உயிருக்கும் உடைமைகளுக்கும் பாதுகாப்பு தேடிக் கொள்ளவும் வலியுறுத்தினார். இது போர் நடவடிக்கைகளை எதிர்பார்த்து எடுக்கப்பட்ட நடவடிக்கையன்று. ஏனெனில் அப்போதிருந்த சூழலில், இந்தியாவில் போரிட போர்த்துக் கீசியர்கள் விரும்பவில்லை. கி.பி. 1510ஆம் ஆண்டில் கோவா நகரம் புதிய கட்டிடங்களால் பொலிவூட்டப்பட்டது. போர்த்துக் கீசியர்களின் தலைமைச் செயலகம், கோவாவில் ஏற்படுத்தப் பட்டது. கிராங்கனூர், கொச்சி, கள்ளிக் கோட்டை ஆகிய நகரங்களில் துணைச் செயலகங்கள் தொடங்கப்பட்டன.[447]

வணிகம் சூடுபிடித்ததைக் கண்ட அரசுப் பணியிலிருந்த போர்த்துக்கீசியர்களே, தங்கள் அலுவலை விட்டு விட்டு, மேற்குக் கடற்கரையிலிருந்து சோழ மண்டலக் கடற்கரைக்கு ஓடிப் போனார்கள். அவ்வாறு ஓடிப்போனவர்களை ஒன்றும் செய்ய இயலவில்லை. தனிப்பட்ட முறையில் வணிகம் செய்து பொருளீட்டத் தொடங்கினர். உண்மையில் முறையான வணிகத் தைப் போர்த்துக்கீசியர் தொடங்கு முன்பே, ஓடிப்போனவர்களே சோழ மண்டலக் கரையில் முதலில் வணிகத்தைத் தொடங் கினர். அடுத்த பத்தாண்டுகளில், போர்த்துக்கீசிய அரசும் வணிகர் களும் கிழக்குக் கரையில் வாணிகம் செய்ய ஆர்வம் காட்ட வில்லை. கி.பி. 1520ஆம் ஆண்டு, கேப்டன் (Captain) பொறுப்பில் ஓர் உயர் அலுவலர் சோழ மண்டலத்துக்கு நியமனம் செய்யப் பட்டார்.[448] திருமயிலை முதல் குடியிருப்பாக மாறியது.[449]

---

446. Early Christianity in India and Pakistan, p. 50.

446. In 1534 Goa was raised to a Bishopric and in 1557 an Arch diocese with Cochin and Malucca as suffragans; the inquisition was established in 1560.

447. Ibid.

448. Ibid.

போர்த்துக்கீசியர்கள் மேற்குக் கரையில் வாணிகம் செய்த போது இந்தியாவுக்கு வந்த அரேபிய மற்றும் பாரசீக வணிகர் கள், மேற்குக்கரையை விடுத்து, கிழக்குக் கடற்கரையை நாடினர். இதனால் கிழக்குக் கரை வணிகர்களின் எண்ணிக்கை உயர்ந்தது. உடன், போர்த்துக்கீசியர்கள், கிழக்குக் கரையில் வணிகக் கூடங்களைத் தொடங்கினர். **வேதாளை, புன்னைக்காயல், தேவனாம் பட்டிணம், சாந்தோம், நாகப்பட்டிணம்** ஆகிய இடங்களில் கோட்டைகளைக் கட்டிக்கொண்டனர். இக்கால அளவுகளில் (கி.பி. 1520), **பிரான்சிஸ்கோ ரோட்ரிகுஸ் டி சில்வேய்ரா** (Fransico Rodrigues de Silveira) என்ற உயர் அலுவலர் உட்பட 300க்கும் மேற்பட்டோரார், கோவாவிலிருந்து சொல்லிக் கொள்ளாமல், கிழக்குக் கரைக்கு ஓடிவந்து விட்டனர்.[450] இவர்கள், நெல் மற்றும் சவளி (Textiles) வணிகத்தில் ஈடுபட் டனர். இவர்களைத் தமிழ்நாட்டிலிருந்த அரசோ, போர்த்துக்கல் அரசோ ஒருவரும் கண்டு கொள்ளவில்லையாதலால், இவர் களின் தனிப்பட்ட வணிகம் ஈட்டம் நிறைந்ததாக இருந்தது.

---

449. தமிழக வரலாற்றிலிருந்து எடுக்கப்பட்டவை - நூலாசிரியர்.

**திருமயிலை:** கி.பி. முதல் நூற்றாண்டில் திருவள்ளுவர் வாழ்ந்த தாக நம்பப்படுகின்றது. கிரேக்க வரலாற்றாசிரியர் தாலமி, மயிலாப்பூரை Maillarpha என்று குறிப்பிடுகின்றார். மயிலையை அடுத்த சைதாப்பேட்டையில், அகஸ்துஸ் மன்னன் (BC27 - 14AD) காலத்திய உரோம நாணயங்கள் ஒரு பானையில் (770 எண்ணிக்கை யில்) கிடைத்துள்ளன. மயிலையை அடுத்த உட்பகுதிகள் கோட்டூர் நாடு, புலியூர்க் கோட்டம் என அக்காலத்தில் அழைக்கப்பட்டன. குலோத்துங்கச் சோழன் காலத்தில் கிடைத்த குறிப்பொன்று (கி.பி. 1178) இவ்வூரை, திருமயிலாப்பூர் என குறிப்பிடுகின்றது. ஊரவர் என்ற ஊர்மக்களின் தலைவர்களைப் பற்றிய செய்தி 13ஆம் நூற்றாண்டுச் செய்தியில் காணப்படுகின்றது. நந்திவர்மன் என்ற பல்லவ மன்னன், மயிலைக்காவலன் என அழைக்கப்பட்ட தாக, நந்திக் கலம்பகம் கூறுகிறது. “இருளகற்றும் சோதித்தொன் மயிலை”, என்று சுந்தரர் பாடுகின்றார். அருணகிரிநாதரும் திருப்புகழில் மயிலையைப் பற்றிப் பாடுகின்றார். மயில்கள் பெருமளவில் காணப்பட்டதாகவும், அவை ஆர்ப்பரிக்கும் குரல்கள் நாள் முழுக்கக் கேட்கப்பட்டதாகவும் சொல்லப்படுவதால், மயில் + ஆர்ப்பூர் என்பதே மயிலாப்பூர் எனத் திரிந்ததாகக் கூறுவர். தோமையாரின் கல்லறை அப்பகுதியில் இருந்ததால் ஐரோப்பிய நாடுகளில் மயிலாப்பூரின் புகழ் பரவிற்று.

450. Portuguese in the Tamil, pp. 241-245.

புலிகாட் என்ற அனந்தராயன் பட்டிணம், சாந்தோம், தேவனாம் பட்டிணம், நாகப்பட்டிணம் போன்ற பகுதிகள், நாயக்கத் தலைவர்களின் ஆளுகையின் கீழ் இருந்தன.

### சாந்தோம்

தூய தோமையார் என்று தமிழிலும் செயிண்ட் தாமஸ் என்று ஆங்கிலத்திலும் சொல்லப்பட்ட பெயரின் போர்த்துக் கீசிய வடிவமே சாந்தோம் (San Thome) என்பதாகும். போர்த்துக் கீசியர்களைக் கவர்ந்த முதல் இடம் இதுவே. தோமையாரின் கல்லறை அங்குள்ளதால், கோவா வரும் போர்த்துக்கீசியர்கள் அனைவரும் ஒருமுறை சாந்தோம் வந்து போவது, சமயக் கடமை போல் அவர்களுக்கு அமைந்திருந்தது. போர்த்துக் கீசியர்கள் இங்கு வருமுன்பே அர்மீனியர்கள் (பாரசீகத்துக்கும் வடக்கேயிருந்த நாட்டின் கிறித்துவ வணிகர்கள்) சாந்தோமில் தங்கி வணிகம் செய்து வந்தனர். இன்றும் சென்னையில் அர்மீ னியன் தெரு என அழைக்கப்படும் பகுதியுள்ளது. சாந்தோமில் போர்த்துக்கீசியர்கள், தோமையார் கல்லறையிருக்குமிடம் என்ற கரணியத்தால் மட்டும் குடியேறவில்லை. மேற்கேயிருந்த கடற்கொள்கைக்காரர்களின் கெடுபிடிகள் சாந்தோம் பகுதி யில் இல்லை என்பதுமாகும். கி.பி.1520 ஆம் ஆண்டில் வெறிச் சோடிக்கிடந்த பல இடங்கள், 1534 ஆம் ஆண்டில் தெருக்க ளாகவும், பல குடியிருப்புகளாகவும் மாறியிருந்தன என்று **கஸ்பார் கொரியா** என்போரின் குறிப்புகள் தெரிவிக்கின்றன. நாளடைவில் கோவாவினின்றும் பல போர்த்துக்கீசியர்கள் கிழக்குக் கரையை நாடிச் சென்றதால், மேற்கே, போர்த்துக் கீசியர்கள் எண்ணிக்கை குறையத் தொடங்கியது. போர்த்துக் கீசியர்கள் பரவலாக எங்கும் சிதறி வாழ்வது பாதுகாப்பின்மை யைத் தோற்றுவிக்கும் என்பதால், சாந்தோம் உள்ளிட்ட கிழக் குக் கரையில் வாழ்ந்திருந்தவர்களை கோவாவுக்குத் திரும்பு மாறு ஆணையிடப்பட்டது. ஆனால், தனிப்பட்ட முறையில் பொருளீட்டம் கண்ட போர்த்துக்கீசியர்கள் திரும்பிச் செல்ல மறுத்துவிட்டனர். **பிரான்சீஸ் கேவியர்** தனது கடிதத்தில் (10.11.1545), சாந்தோமில் 500க்கு மேற்பட்ட போர்த்துக்கீசியர்கள் வாழ்ந்திருந்ததாகக் குறிப்பிடுகின்றார்.[451] நாளடைவில் உயர்ந்து கொண்டே சென்ற எண்ணிக்கை கி.பி. 1563 ஆம் ஆண்டில்

451. Ibid.

4000யும் தாண்டிச் சென்றது என்று அறியப்படுகின்றது.[452] இதனால் சாந்தோம் பகுதியிலிருந்த பலர் கிறித்துவ சமயத்துக்கு மாற்றம் செய்யப்பட வாய்ப்புகள் ஏற்பட்டன.

## *தமிழகத்தின் முதல் நகராட்சி* (Municipality)

இதனிடையே, சாந்தோமில் (மயிலை) தங்கியிருந்த பல போர்த்துக்கீசியர், தமிழ்ப் பெண்களை மணந்து கொண்டனர். ஐரோப்பிய நாகரிகத்துக்கு அப்பெண்களும் அப்பெண்கள் வழிவந்த குழந்தைகளும் அழைத்துச் செல்லப்பட்டனர். பெரும் எண்ணிக்கையில் இக்கலப்பு இனம் தோன்றியது. கி.பி. 1609 ஆம் ஆண்டில், போர்த்துக்கல் மன்னர், மயிலாப்பூரை ஒரு நகராட்சி அளவிற்கு உயர்த்தி ஆணையிட்டார்.[453] கோவா ஏற்கனவே நகராட்சியாக அறிவிக்கப்பட்ட நிலையில், **தமிழகத்தின் முதல் நகராட்சியாக மைலாப்பூர் உருவானது.** தெருக்களும் குடியிருப்புகளும் போர்த்துக்கல் நாட்டிலிருந்த எவோரே (Evora) என்ற நகரின் அமைப்பைப் போன்றே, மைலாப்பூரிலும் கட்டப்பட்டன.[454] தமிழர்களும் இக்குடியிருப்புகளில் சேர்ந்து வாழ்ந்திருந்தனர். காவல்துறையும் சிறைக்கூடமும் (Prison) மயிலாப்பூரில் செயல்படத் தொடங்கின. கி.பி. 1614ஆம் ஆண்டில் மயிலையைச் சுற்றியுள்ள குடியிருப்புகளின் மக்கள் தொகைக் கணக்கெடுப்பும் நடைபெற்றதாகக் கூறப்படுகிறது. விசய நகரத்தை ஆண்டுகொண்டிருந்த அச்சுத தேவராயர், மயிலையில் போர்த்துக்கீசியர் குடியிருப்புக்கான அனைத்து உதவிகளையும் தனது பணியாட்கள் வழியே செய்து கொடுத்த தாக போர்த்துக்கீசிய குறிப்புகள் கூறுகின்றன. தற்காலச் சென்னையின் கிறித்துவர் குடியிருப்புகளுக்கு போர்த்துகீசியர் காலத்தில்தான் அடித்தளமிடப்பட்டது.

## தேவனாம் பட்டிணம்

கடிலம் என்ற ஆறு கடலில் கலக்கும் அல்லது கூடும் இடம் கூடலூர் எனப்பட்டது. கூடலூர் என்பதே இதன் பழங்காலப் பெயராகும். கடிலம் என்பது, கலுழி என்ற தமிழ்ச் சொல்லின்

---

452. Ibid.

453. Ibid.

454. Ibid.

திரிபாக இருக்கவேண்டும். கலுழி - கலுழம் - கடிலம் எனத் திரிந்தது. கலுழி என்பதற்கு, கலங்கலான நீரைக் கொண்டு வரும் ஆறு எனப் பொருள்படும். கலுழ்த்தல் = கலத்தல். தற்காலத்து கடலூர் பழைய நகர் என அழைக்கப் படும் ஊரே, தொடக்க காலத்துப் போர்த்துக்கீசியர்கள் தங்கியிருந்த இடமாகும். பின்னர் வந்த ஆங்கிலேயர் காலத்தில் இத்துறைமுகமும் கோட்டையும் விரிவுபடுத்தப்பட்டன. செஞ்சியை ஆண்ட நாயக்க மன்னன் விசயப்பகிருஷ்ணப்ப நாயக்கன் காலத்தில் (கி.பி. 1580-1593) இங்கு போர்த்துக்கீசியர்களால் கோட்டை கட்டப்பட்டது.[455]

தொடக்கத்தில் (கி.பி. 1543) போர்த்துக்கீசியர்கள் இங்கு முதன் முதலில் குடியேறியபோது மண்கோட்டையைக் கட்டிக் கொண்டனர். தென்மாவட்டப் பகுதியிலிருந்த மீனவர்களை இங்கு குடியேற்றிக் கொண்டனர். இவை போர்த்துக்கீசிய சமயத் தொண்டர்களின் குறிப்புகளில் காணப்படுகின்றன. கேப்டன் பொறுப்பிலிருந்த அலுவலர் இக்கோட்டையைக் கண்காணித்து வந்தார். பின்னர் அருகிலிருந்த ஊர்களான **மஞ்சக்குப்பம், திருப்பாதிரிப் புலியூர், திருவந்திபுரம், வண்டிப் பாளையம், வரகல்பட்டு, சூரப்பன்சாவடி, சிங்காரத் தோப்பு** போன்றவைகளை விலைக்கு வாங்கி, தங்கள் ஆளுகையில் இணைத்துக் கொண்டனர். மேற்கண்ட பகுதிகள் யாவும் தற்போது கடலூர் புது நகர் என அழைக்கப்படுகின்றன. பிற் காலத்தில் டச்சுக்காரர்களும், ஆங்கிலேயர்களும் இப்பகுதி களுக்கு உரிமையாளர்களாக விளங்கினர்.

## நாகப்பட்டினம்

இடைக்காலச் சோழர்கள் காலத்தில் சிறப்புற்றிருந்த நாகப்பட்டிணம் துறைமுகம், அடுத்த சில நூற்றாண்டுகளில் பொலிவிழந்து காணப்பட்டது. போர்த்துக்கீசியர்கள் தஞ்சை யை ஆண்ட மன்னன் செவ்வப்ப நாயக்கனிடமிருந்து (கி.பி. 1532-1576) நாகப்பட்டணத்தில் பண்டகச்சாலையை அமைத்துக் கொண்டு வணிகம் செய்ய உரிமை பெற்றனர். கடற்கரைக்கு

---

455. Jan Company in Coromandel Coast, Tapan Raychandri, The Hague, 1962, p. 92.

மிக அருகில் அமைக்கப்பட்ட பண்டக சாலையும், அதனை யொட்டி ஏற்படுத்தப்பட்ட குடியிருப்புகளும், வடக்கே உப்ப னாற்றுக்கும் தெற்கே குடவையாற்றுக்கும் இடையே அமைந் திருந்தன. போர்த்துக்கீசியர்களின் வணிக நடவடிக்கைகளை மேலாண்மை செய்யவும், உள்ளூர் தமிழ்க் கிறித்துவர்களின் நலன் காக்கவும், கேப்டன் பதவியிலிருந்த அலுவலர் ஒருவரை நியமனம் செய்தனர்.[456] கி.பி. 1642ஆம் ஆண்டில், போர்த்துக்கல் அரசரின் நேரடிக் கண்காணிப்பில் நாகப்பட்டிணம் விளங்கியது. கி.பி. 1577ஆம் ஆண்டில் 300 கிறித்துவர்கள் அங்கு வாழ்ந் திருந்ததாக அறியலாம்.[457]



456. Letter of Fr. Henriques written From Vember, Dt. 31.10.1548.
457. Ibid.

## தமிழ்ச்செட்டிகளும் போர்த்துக்கீசியரும்

வாஸ்கோடகாமா இந்தியாவுக்குவந்த போது, கள்ளிக் கோட்டை மன்னர் காமாவின் வருகை பற்றிய நோக்கம் யாது எனக்கேட்டபோது, இந்தியாவிலுள்ள கிறித்துவர்களைக் காணவும், மிளகை ஐரோப்பாவிற்கு வாங்கிச் செல்லவுமே வந்ததாகக் கூறினார் என்பர். முதன் முறையாக (கி.பி.1498) காமா இந்தியாவுக்கு வந்தபோது, தூத்துக்குடி பகுதியில் விளையும் முத்துக்கள் பற்றிக் கேள்விப்பட்டிருந்தாலும், தன்னுடன் முத்துக்கள் எதனையும் எடுத்துச்செல்லவில்லை. போர்த்துக் கீசியர்களும் மிளகின்மேல் கொண்டிருந்த விருப்பத்தைவிட முத்தின்மேல் ஆர்வம் காட்டவில்லை. கிழக்குக்கடற்கரைப் பகுதியில் பெருமளவில் விளையும் நெல்லை வாங்கி, மேற்குக் கடற்கரை மிளகு வணிகர்களிடம் விற்கலாம் என்ற எண்ணம் தோன்றியது. இதனால் நெல் கொள்முதலில் ஒரு ஈட்டமும், மிளகு வணிகத்தில் ஒரு ஈட்டமும் என இரட்டை ஈட்டம் (Double Profits) பெற முனைந்தனர். கி.பி. 1507 ஆம் ஆண்டில், போத்துக்கீசிய வைசிராய் அல்மெய்டா நால்வர் குழுவொன்றை கிழக்குக் கரைக்கு அனுப்பி, நெல் கொள்முதல் பற்றிய செய்தி களைத் திரட்டினர். அப்போது கூட முத்து வணிகம் பற்றி அவர்கள் கருதவில்லை. அக்காலத்தில் அரேபிய வணிகர்கள், தமிழ்நாட்டில் சவளி (Textile) வணிகத்தில் ஈடுபட்டிருந்தனர். தமிழ்நாட்டுத் துணிகளை மலாக்காவிற்குக் கொண்டு சென்று விற்பனை செய்து வந்தனர். கி.பி.1511 ஆம் ஆண்டில் போர்த்துக் கீசிய வணிகர்கள் தமிழ்ச் செட்டிகளிடம் தொடர்பு கொண்டு, மலாக்காவில் தமது வணிகத்தைத் தொடங்கினர்.[458]

---

458. Pulicat Based shipping and Trade 1500- 1530, Jayaseelan Stephen, S., Portuguese in the Tamil Coast, p. 137.

மலாக்காவிலிருந்த இசுலாமிய சுல்தான், தமிழ்ச் செட்டிகளைப் புறக்கணித்து குசராத்துப் பகுதி வணிகர்களையே ஊக்குவித்து வந்தான். இதனால் வணிக வாய்ப்புக்களையிழந்த தமிழ்ச் செட்டிகள், போர்த்துக்கீசியரை அணுகி, மலாக்கா சுல்தானில் ஆற்றலற்ற கடற்படை பற்றி விளக்கிக்கூறி, சுல்தான் மீது போர் தொடுக்குமாறு கூறினர். இதற்கான போர்த் தந்திரங்கள், சுல்தானைத் தாக்கும் முறைகள், போன்ற மறைபொருளான செய்திகளையும் செட்டிகள் அளித்தனர். நயினார் செட்டி[459] என்ற புகழ்மிக்க தமிழ்வணிகன் போர்த்துக்கீசியருக்கு உதவி செய்ய, மலாக்காவை போர்த்துக்கீசியர் கையகப்படுத்திக் கொண்டு, துணி வணிகத்தில் பெரும் ஈட்டம் தேடிக் கொண்டனர். **ஜார்ஜ் ட அல்புகர்க்** என்ற போர்த்துக்கீசிய கேப்டன், தமக்கு உதவிய தமிழ்ச் செட்டிகளுக்கு மலாக்காவில் குடியிருப்புகளையும், வணிகச் சலுகைகளையும் வாரி வழங்கினான். **இதற்கு நன்றி தெரிவித்து போர்த்துக்கல் மன்னருக்கு மலாக்காவிலிருந்து தமிழ்ச் செட்டிகள் எழுதிய மடல் ஒன்று இன்றும் போர்த்துக்கல் நாட்டு ஆவணக் காப்பகத்தில் உள்ளது. 10.9.1527ஆம் நாளிட்ட அந்த மடல் போர்த்துக்கீசிய மொழியில் எழுதப்பட்டு. ஒன்பது வணிகர்களின் தமிழில் கையொப்பத்துடன் உள்ளது.**[460]

❖❖❖

459. Ibid.

460. Portuguese in the Tamil Coast, Copy of a letter sent by the Tamil Merchants to the king of Portugal, Dt. 10.9.1527., p. 138.

## பரவர்கள்

தமிழகத்தின் கிறித்துவ வரலாற்றில் காயல், கீழக்கரை, தூத்துக்குடிப் பகுதியில் வாழ்ந்திருந்த பரவர்களின் வரலாறு பின்னிப் பிணைந்துள்ளது. தமிழ்க் கிறித்துவர்களின் எண்ணிக்கை பெருமளவில் உயர்ந்ததற்கு அப்பகுதிப் பரவர்களே கரணிய மாவர். பரவர்கள் கிறித்துவ சமயத்தில் இணைந்ததற்குப் பிறகு, கிறித்துவத்துக்கேயொரு சிறப்பு கிட்டியது எனலாம். மிளகு, துணி, நெல் என்ற அளவில் வாணிகம் செய்து வந்த போர்த்துக் கீசியரை, முத்துவணிகத்தோடு இயற்கையே இணைத்தது என லாம். முத்து வணிகத்தில் தொடக்கத்தில் ஆர்வம் காட்டாத போர்த்துக்கீசியர், இசுலாமியருடன் நடைபெற்ற வணிகப் போட்டியில் நுழைந்து, முத்து வணிகத்தையும் கைப்பற்றினர்.

**பரமக்குடியின் தலைவனான தம்பிச்சி நாயக்கனுக்குப் புரவிகளை இறக்குமதி செய்து கொடுத்து அதற்கீடாக முத்துக் களை அள்ளிக் கொள்ளும் உரிமையை போர்த்துக்கீசியர் பெற்றனர்.**[461] அப்போது இசுலாமியர்களை மதுரை நாயக்கர்கள் நட்புறவாகக் கொண்டிருந்தனர். அப்பகுதியிலிருந்த பரவர் களை இசுலாமிய வணிகர்களும், நாயக்க மன்னர்களும் அடிமை கள் போலவே நடத்திக் கொண்டிருந்தனர். மிகக் குறைந்த ஊதியத்தைக் கொடுத்து பரவர்களின் உழைப்பைச் சுரண்டிக் கொண்டிருந்தனர். பரவர்கள் அக்காலத்தில் தீண்டத்தகாத தாழ்ந்த சாதிக்காரர்களாகக் கருதப்பட்டனர். மீன்பிடித்தலும் முத்துக் குளித்தலுமே அவர்களது தொழிலாயிருந்தன. பரவர் கள் ஏழைகளாகவும், தங்கள் வாழ்க்கைக்குத் தேவையான வற்றிற்காக அரேபிய வணிகர்களிடம் கையேந்துபவர்களாகவு மிருந்தனர். தொடக்கத்தில் அரேபியர்களும் பாண்டிய மன்னர் களும் நட்புறவாயிருந்தனர். அக்காலம் தொட்டு நாயக்கர்

காலம் வரையிலும் பரவர்கள் ஆளும் வகுப்பாருக்கும் அரேபிய வணிகர்களுக்கும் கொத்தடிமைகளாகவேயிருந்தனர்.[462] பரவரின் அடிப்படை உரிமைகள் மறுக்கப்பட்டன. நாளடைவில் அரேபியர்கள் மீது பரவர்களுக்கு வெறுப்புணர்வு ஏற்பட்டு, அது என்று பெரிதாக வெடித்துவிடுமோ என்ற நிலைமை இருந்து வந்தது. இந்த இரட்டை ஆட்சிகளுக்கிடையே, கடற் கொள்ளைக்காரர்கள் பலர், பரவர்களின் குடியிருப்புகளில் நுழைந்து, ஆண்களையும் அழகான பெண்களையும் தூக்கிக் கொண்டு போய் அடிமைகளாக வணிகர்களிடம் விற்று வந்தனர்.[463] எவ்வகையிலும், பாதுகாப்பற்ற வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்த பரவர்களிடையே, பரவக்குடி தம்பிச்சி நாயக்கன் வழியே, போர்த்துக்கீசியர்கள் அறிமுகமாயினர். முதலில் போர்த்துக்கீசிய வணிகர்களிடம் பணியிலமர்ந்தால், அரேபியர்களின் கொடுமைக்கு ஆளாக நேரிடும் என அஞ்சிய பரவர்களில் சிலரே துணிந்து போர்த்துக்கீசியரிடம் வந்தனர்.

### *காதுச் சண்டை*

கி.பி. 1739 ஆம் ஆண்டில், **இராபர்ட் ஜென்சின்ஸ்** (Captain Robert Jenkins) என்ற ஆங்கிலேயரின், காதை ஸ்பானிய நாட்டு கடற்படைக் காரர்கள் அறுத்தெறிந்ததனால் ஐரோப்பாவில் குறிப்பாக ஆஸ்திரியாவில் தோன்றிய மரபுரிமைச் சண்டை வரலாற்றில் புகழ் பெற்றதைப் போல,[464] **பரதவர் – அரேபியர் காதுச் சண்டை, தென்தமிழகத்தில் கொந்தளிப்பை ஏற்படுத்தியது**. போர்த்துக்கீசியரின் செல்வாக்கு கிழக்குக் கடற்கரையில் பரவி வந்த காலத்தில், பரவர்களுக்கும் அரேபிய வணிகர்களின் கங்காணிகளுக்கும் (Overseers) ஆங்காங்கே பிணக்குகள் தோன்றுவதுண்டு. இவ்வாறு தோன்றும் பிணக்குகளில், போர்த் துக்கீசியர்களும், தோமினிக்கன் கிறித்துவத் துறவிகளும் வலியச் சென்று, பரவர்களின் சார்பில் பேசுவதுண்டு. ஒருநாள் பரவப் பெண்ணொருத்தி பணியாரம் (Rice Cake) வாங்கிக் கொண் டிருந்த போது, இசுலாமியன் ஒருவனால் பாலியல் கொடுமைக்கு

461. Ibid p. 371.

462. Early Christianity in India and Pakistan, p. 51.

463. Ibid.

464. Cambridge Encyclopedia, p. 589.

உள்ளானாள். இதனைத் தன் கணவனிடம் முறையிட்ட பரவப் பெண், மற்றவர்களிடமும் எடுத்துரைத்தாள். அப்பெண்ணின் கணவன் சினங்கொண்டு, அவ்விசுலாமியனிடம் சண்டைக்குச் சென்றான். பரவனின் காதை இசுலாமியன் அறுத் தெறிந்தான். (சில குறிப்புகள் இசுலாமியன் காதை பரவன் வெட்டியதாகவும் கூறுகின்றன) எப்படியோ காது வெட்டப்பட்டது. பரவப் பெண் கற்பழிக்கப்பட்டாள் என்றும், அவள் கணவனின் காது துண்டிக்கப்பட்டது என்றும் செய்தி பரவவே, அனைத்துப் பரவ மக்களும் சேர்ந்து சில இசுலாமியர்களைக் கொன்று போட்டனர்.[465]

இதனால் சினமுற்ற அரேபிய இசுலாமியர், பரவர்களை வேட்டையாடினர். மதுரை நாயக்க மன்னன் இசுலாமியர் பக்கம் இருந்ததால் துணிவு கொண்ட இசுலாமியர், பரவர் களைக் கொன்று குவித்தனர். காடுகளில் ஓடி ஒளிந்த பரவர் களையும் கண்டுபிடித்துக் கொன்றனர். **பரவன் ஒருவனின் தலையை வெட்டிக் கொண்டு வருபவனுக்கு, ஐந்து பணம் வெகுமதியாக அளிக்கப்பட்டது**. (ஒரு பணம் என்பது 8 அணா மதிப்புள்ள வெள்ளி நாணயமாகும்). கொண்டு வரப்படும் பரவர்களின் தலைகளின் எண்ணிக்கை உயரவே, ஐந்து பணம் என்பது கட்டுப்படியாகாமல், தலைக்கு ஒரு பணம் என அறிவித்தனர்.[466] அப்போதும் தலைகள் குறையவில்லை. விலங்கு களைப் போல் வேட்டையாடப்பட்ட பரவர்களைக் காக்க எவரும் முன்வரவில்லை.

அவ்வேளையில் **ஜாவோ டகுருஸ்** (Jovo de Cruz) என்ற கள்ளிக் கோட்டையைச் சேர்ந்த வணிகன் பரவர்கள் முன் தோன்றினான்.[467] பிறப்பால் பிராமணனான இவ்வணிகன் கிறித்துவ சமயத்தில் சேர்ந்து கொண்டிருந்தான். மிகச் சிறந்த அறிவாளியான அப்பிராமணனை, சாமரின் மன்னர், கடல் வணிகம் பற்றிப் படித்துவர லிஸ்பன் நகருக்கு கி.பி. 1513இல் அனுப்பிவைத்தார். லிஸ்பன் நகரில் வாணிகமும் பொரு ளியலும் கற்ற அப்பிராமணன், கிறித்துவ மெய்யியலையும் கற்றான். கிறித்துவனாக மாறினான். ஜோவோட குருஸ் என்றும்

---

465. Early Christianity in India and Pakistan, p. 52.

466. Ibid.

467. Ibid.

பெயர்சூடிக் கொண்டான். போர்த்துக்கல் மன்னன், குரூசின் அறிவுத்திறமையையும் போர்த்துக்சீசிய மொழியில் அவனுக் கிருந்த திறனையும் கண்டு அவனைப் பெருமைப் படுத்தினான். இந்தியா திரும்பிய குரூஸ், கள்ளிக் கோட்டை மன்னன் தான் கிறித்துவனாக மாறியதால் வெறுப்படைந்து கொண்டு, மன்ன னைப் பல்வழிகளிலும் தன் வழியில் மாற்ற முயன்று தோற்றான். இறுதியில் தனியாளாக வணிகத்துறையில் இறங்கினான். சில போர்த்துக்சீசிய வணிகர்கள் குருசுக்கு உதவி செய்யவும் முன் வந்தனர். ஆனால் எதிர்க் கூறுகள் (misfortunes) அவனைத் துரத்தின. குருசின் பல கப்பல்கள் கடலில் உடைந்துபோயின. குரூசும் கூட கப்பலில் பயணம் மேற்கொண்டபோது, கப்பல் உடைந்து மூழ்கிய போது, நற்கூறால் (good fortune) தப்பித்துக் கொண்டான். ஆனால் தனது மனைவி மக்களைக் கடலில் இழந்தான். பெரும் கடன்காரனானான். கோவாவிலிருந்த போர்த்துக்கல் கருவூலத்துக்குப் பெருந்தொகையைத் திருப்பிச் செலுத்த வேண்டியிருந்தது. செலுத்த இயலாமற்போகவே, சிறையிலும் கூட வாடினான்.[468]

போர்த்துக்கல் மன்னர் ஜான் என்பாருக்குப் பணிவான விண்ணப்ப மடல் ஒன்றை குருஸ் எழுதினான். மன்னர் மன மிரங்கி அவனை விடுதலை செய்ததோடு, பொருளுதவியும் செய்தார்.[469] அந்த முதலீட்டைக் கொண்டு, குதிரை வணிகம் செய்யத் தொடங்கினான். கன்னிக்குமரி முனையில் தங்கியிருந்த குருசுக்கு, பரவர்களின் நிலைமை பற்றிய செய்தி எட்டியது. குமரியில் தனது குதிரைகளையெல்லாம் விட்டுவிட்டு, பரவர் களின் நிலைகண்டு மனமிரங்கி அவர்களுக்கு ஏதாவது செய்ய வேண்டும் என்ற நல்லெண்ணத்தில், பரவர் பகுதிக்குச் சென்றான். காட்டில் பதுங்கியிருந்த பரவர் தலைவனைக் கண்டுபிடித்தான். அவர்களுக்கு நல் அறிவுரை கூறினான்.

அரேபியர்களிடமிருந்து தங்கள் உயிர்களையும் உடைமை களையும் காத்துக் கொள்ளவும், வலிமை மிக்க அரேபியரை எதிர்த்துத் தொழில் செய்யவும், போர்த்துக்கீசியருடன் இணைந்து கொண்டு, கிறித்துவத்தை ஏற்றுக் கொள்ளுமாறு குருஸ் கூறிய

468. Ibid.

469. Ibid.

அறிவுரையைப் பரவர்கள் ஏற்றுக் கொண்டனர். முதற் செயலாக, பதினைந்து பரவர்கள் கொச்சிக்குச் சென்று திருமுழுக்குப் பெற்றனர். உடனடியாக கிறித்துவ சமயத் தொண்டர்கள் பரவர் பகுதிக்குச் சென்று 20000க்கு மேற்பட்டவரைக் கிறித்துவராக மாற்றினர்.[470] கிறித்துவப் பரவர்கள் அனைவரும் போர்த்துக்கீசியர் பாதுகாப்பில் உள்ளவர்கள் என்றும், அவரை எதிர்ப்போர், போர்த்துக்கீசிய மன்னரையே எதிர்ப்போர் என்றும் அறிவித்தனர். **அக்காலத்திய வரலாற்றாசிரியர் ஒருவர் இவ்வாறு எழுதினார். "நமது ஆண்டவர், ஒரு அறுபட்ட காதின் வழியாக, பலருக்கு மீட்பளித்தார்."** (Our Lord saved so many souls by means of one torn ear - Lobe).[471]

பரவர்களின் சமய மாற்றத்தைக் கண்ட அரேபிய வணிகர்கள் அதிர்ச்சியடைந்தனர். பரவர்களிடம் தனிப்பட்ட முறையில் ஏற்பட்ட சிறுபூசலால், பரவக் கூட்டமே கட்சிமாறிப் போனதால், தங்களுடைய வணிகம் தடைப்படும் என உணரலாயினர். பொன்முட்டையிடும் வாத்துகளாக இருந்த பரவர்களை இழந்துவிட்டதில் இசுலாமியர் ஏமாற்றமடைந்தனர். வெளிப்படையான மோதலை போர்த்துக்கீசியர்களுடன் நிகழ்த்த இசுலாமியர் உறுதிபூண்டனர். இரு தரப்பாரும் சந்தித்துக் கொள்ளும் இடங்களிலெல்லாம் பூசல்கள் வெடித்தன. சாமரின் மன்னரைத் துணைக்கு வைத்துக்கொண்டு, போர்த்துக்கீசியருக்கு எதிரான திட்டத்தில் ஈடுபட்டனர். கப்பற்படையொன்றை புதுப்பித்தனர். அரேபியக் கடலில் இசுலாமியர்களின் கடற்படை அணிவகுத்தது. போருக்குப் பிறகு வெற்றியைக் கொண்டாட, சாமரின் மன்னரை நாள் குறிக்குமாறு கேட்டுக் கொண்டனர். இப்போருடன் போர்த்துக்கீசியரின் வரலாறு இந்தியாவில் முடிந்து விடும் எனச் சூளுரைத்தனர்.[472]

போர்த்துக்கீசியர்களும் எதிரணியில் திரண்டனர். கொச்சி அரசரைத் தங்களது அணியில் சேர்த்துக் கொண்டனர். எப்போதும் போரிடக் காத்திருக்கும் 20000க்கு மேற்பட்ட இந்தியக் கிறித்துவப் படையையும் இணைத்துக் கொண்டனர்.

---

470. Ibid.

471. Ibid, p. 53.

472. Ibid.

பரவர்களின் ஒத்துழைப்பும் கிட்டியது. ஏனெனில் கடலின் ஒவ்வொரு அசைவையும் அறியக்கூடிய ஆற்றல் பெற்றிருந் தவர்கள் பரவர்களே. இறுதியாக வேதாளை[473] (Vedalai) என்னு மிடத்தில், அரேபியக் கப்பற்படையை எதிர்கொண்டனர். மிக எளிதான வெற்றியை போர்த்துக்கீசியர் ஈட்டினர். சாமரின் மற்றும் அரேபிய இசுலாம் கூட்டுப்படை சின்னாபின்னமாகச் சிதறிப்போயிற்று. அரேபியக் கடலில், இசுலாமியருடைய செல்வாக்கு முற்றிலுமாகத் துடைத்தெறியப்பட்டது. சாமரின் மன்னர் மனமுடைந்து போனார். போர்த்துக்கீசியரின் வலிமை யைத் தவறாகக் கணக்கிட்டு விட்டதற்காக வருந்தினர். போர்த்துக் கீசியரிடம் நட்பு கொள்ள தூதர்களை அனுப்பினார். இச்செய் கையால் இசுலாமியர் மேலும் துவண்டுபோயினர். வேதாளை யில் போர்த்துக்கீசியருக்குக் கிடைத்த வெற்றியை ஐரோப்பா விலும் இந்தியாவிலும் கொண்டாடி மகிழ்ந்தனர்.[474] இப்போருக் குப் பிறகு சாமரின் மன்னரின் செல்வாக்குக் குறைந்து, கொச்சி மன்னரின் புகழ் ஓங்கிற்று. போர்த்துக்கீசியர்கள், அரசியலிலும் வாணிகத்திலும் எதிர்ப்பற்ற நிலையைத் தேடிக் கொண்டனர்.



473. Ibid, p. 54.
474. Ibid.

## போர்த்துக்கீசியர்களின் கிறித்துவ சமயப் பணிகள்

*"கத்தோலிக்கத் திருச்சபையில் இந்திய மக்களை இணைப் பதே எனது முதல் நோக்கமாக இருக்கின்றது."*

போர்த்துக்கீசிய மன்னன் மூன்றாம் ஜான், கோவா வைசிராய் பெத்ரோ மாஸ்கரனேசுக்கு, 4.8.1539 ஆண்டு எழுதிய கடிதத்தில், மேற்கண்டவாறு குறிப்பிடுகின்றான். வணிக நோக்கத்தையும் விட சமயத்தைப் பரப்பவேண்டும் என்ற நோக்கமே மன்ன னிடம் இருந்ததை இச்செய்தி வெளிப்படுத்துகின்றது. கி.பி. 1514ஆம் ஆண்டில் செய்துகொள்ளப்பட்ட பாத்ரவோதோ (Padroado) ஒப்பந்தத்தின்படி, எந்த ஐரோப்பிய நாட்டுக் கத்தோலிக்கச் சமயத் தொண்டரையும் போர்த்துக்கீசிய மன்னர் விரும்பினால், இந்தியாவுக்கு அனுப்பிவைக்க வழி காணப்பட் டிருந்தது. இதன்படி, ஸ்பெயின் இத்தாலி, பிரான்ஸ் உள்ளிட்ட ஐரோப்பிய நாட்டினர் பலரும் இந்தியாவுக்கு வர வாய்ப் பிருந்தது. இதன் அடிப்படையில், கி.பி. 1532ஆம் ஆண்டு முடிய இந்தியாவுக்கு வந்த சமயத் தொண்டர்கள் சிலர் பற்றி ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. இச்சமயத் தொண்டர்களில் முதலில் வருகை தந்தவர்கள் பிரான்சிஸ்கள் அவையைச் சார்ந்தவர்களே.[475]

---

475. Franciscans : Religions orders founded by St. Francis of Assi in the early 13th. The first order, of Frairs Minor, is now divided into three groups; the observants (OFM), the Conventuals (OFM Conv.) and the Capuchins (OFM Cap.) These lead active lives preaching to the poor and needy. The second order is made up of nuns, known as the Poor clares (PC). The third order is a lay fraternity. Together they constitute the largest religions order in the Roman Catholic Church, notable for missionary and social work, - Cambridge Encyclopedia, p. 435.

காதறுப்புச்சண்டை முடிந்தபிறகு 2000க்கு மேற்பட்ட பரவர்கள் கிறித்துவ சமயத்தைத் தழுவினர். தொடர்ந்து அங்கு பணியாற்றி வந்த மூன்று பிரான்சிங்கன் துறவிகள், எஞ்சியிருந்த பரவர்களையும் கிறித்துவத்துக்கு மாற்றினர். ஒவ்வொரு நாளும் பூசெய்ப்பலி (Holy Mass) என்ற சமயச் சடங்கை நிறைவேற்றினர். ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமைகளிலும் வினைகேட்பு நிகழ்வு களையும் (Conessions), சிறுவர்களுக்கு மறைக் கல்வி (Catechism) யைக் கற்பித்தலையும் தொடர்ந்து நடத்தினர். பிற்காலத்தில் பரவர்களின் பகுதியில் பணியாற்ற வந்த சமயத் தொண்டர் களுக்கு முன்னோடிகளாக விளங்கியவர்கள் பிரான்சிஸ்கன் துறவிகளே. குறிப்பாக, புன்னைக் காயல் தூத்துக்குடிப் பகுதி களில், கிறித்துவத்தை விதைத்தவர்கள் இவர்களே என்பது மிகைச் செய்தியன்று.

பரவர் பகுதிக்கு வருமுன்னர், மயிலாப்பூரில் தங்களுக் கென ஒரு குடியிருப்பை அமைத்துக் கொண்டு, முழுநேரப் பணிகளில் அங்கு ஈடுபடலாயினர் (1539). அப்பகுதியை அவர்கள் இரு கரணியங்களுக்காகத் தேர்வு செய்து கொண் டனர். தோமையாரின் கல்லறையிருந்ததாலும், மயிலையின் குளிர் வெப்பச் சூழல் போர்த்துக்கீசியர்களுக்கு இடையூறு செய்யாமல் இருந்ததாலும் இங்கு குடியேறினர் எனலாம். குறைவான எண்ணிக்கையிலேயே குருமார்கள் (Priests) இருந் தமையால், அவர்களுக்கு போர்த்துக்கீசியர்களின் சமயக் கடன் களை எதிர்கொள்ளவே நேரமிருந்தது. கடற்கரையில் கிறித்துவ சமயத்தைத் தழுவிய பரவர்களுக்கு, கிறித்துவ சமயத்தின் அடிப்படையான திருமந்திரங்களைக் கூட அவர்கள் சொல்லிக் கொடுக்கவில்லை.

கிறித்துவ சமயத்தார் அடிக்கடி சொல்லும் செபங்களா னவை மூன்றாகும். (செபம் என்ற வடசொல், செப்புதல் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே). முதலில் சொல்லப்படும் அடிப் படையான செபம், இயேசு கிறித்துவே சொல்லித் தந்ததாகும். கடந்த நூற்றாண்டுகளில் மணிப்பிரவாள நடையில் இருந்த அச்செபமாவது,[476]

---

476. கடந்த ஆண்டுகளில் இந்த மணிப்பிரவாள மந்திரங்கள் தமிழ்ப் படுத்தப்பட்டுள்ளன. - நூலாசிரியர்.

"பரமண்டலங்களில் இருக்கிற எங்கள் பிதாவே, உமது நாமம் அர்ச்சிக்கப்படுவதாக! உம்முடைய ராஜ்ஜியம் வருக! உமது சித்தம் பரலோகத்தில் செய்யப்படுமாப்போல பூலோகத்திலும் செய்யப்படுவதாக! அன்றன்றுள்ள அப்பத்தை எங்களுக்கு இன்றுதாரும்! எங்கள் கடன்காரர்களை நாங்கள் பொறுக்குமாப்போல, எங்கள் கடன்களையும் பொறுத் தருளும். எங்களைச் சோதனையிலே பிரவேசிப்பியாதேயும். தின்மையினின்று எங்களை இரட்சித்துக் கொள்ளும்! ஆமென்!"

இச் செபத்தை, பாத்தர் நோஸ்தர் (Pater Noster) என இலத்தீனில் கூறுவர்.

கன்னிமறியாளைப் புகழ்ந்து சொல்லப்படும் செபமாவது,

"பிரியதத்தத்தினாலே பூரணமான மரியாயே! கர்த்தர் உம் முடனே! பெண் சாதிகளுக்குள் ஆசீர்வதிக்கப்பட்டவன் நீரே" என்றவாறு செல்லும். (Ave Maria) ஒவ்வொரு முறையும் மேற்கண்ட இரு செபங்களையும் தொடங்கு முன்பும் முடித்த பிறகும்," பிதாவுக்கும் சுதனுக்கும் ஸ்பிரித்து சாந்துவுக்கும் ஸ்தோத்திரம் உண்டாகக் கடவது! ஆதியிலே இருந்தது போல் இப்போதும் எப்போதும் சர்வசதாகாலமும் இருப்பதாக! ஆமென்". என்று சொல்லப்பட வேண்டும்.

மேற்கண்ட மூன்று திருமந்திரங்களையும் நாளும் பல முறை செபிக்க வேண்டும். இந்த மூன்று மந்திரங்களையும் மனப்பாடமாகச் சொல்லாத எவரும் கிறித்துவராகவே இருக்க இயலாது. இதனின்றி சின்னக் குறிப்பிடம், பெரிய குறிப்பிடம் என்ற இரு நூல்கள், கேள்வி - பதில் முறையில் இருக்கும். ஒருவரே கேள்வியையும் கேட்டுக் கொண்டு பதிலையும் கூற வேண்டும்.

எ.கா. "சர்வத்துக்கும் கர்த்தாவாயிருக்கிறவர் ஆர்?"

"சர்வேசுரன்."

"எத்தனை சர்வேசுரன்?"

"ஒரே சர்வேசுரன்"

"இயேசு நாதர் சுவாமி எந்த சுபாவத்திலே பாடுபட்டார்,"

"மனுஷ சுபாத்திலே பாடுபட்டார்".

மேற்கண்ட கேள்வி - பதில் குறிப்பிடங்கள், கிறித்துவ சமயத்தின் மெய்யியல் கொள்கைகளை விளக்குவனவாகும். (இந்தக் குறிப் பிடங்களை இராபர்ட் - டி - நொபிலி ஒழுங்குபடுத்தியதாகக் கூறுவர்)

## பிரான்சிஸ்கன் சமயத் துறவிகள்

பிரான்ஸ்சிஸ்கன் குருக்களால் திருமுழுக்குப் பெற்ற பரவக் கிறத்துவர்களுக்கு மேற்சொல்லப்பட்ட செய்திகள் எவையுமே தெரியாது என்பதை, சமயத்தொண்டர்களின் கடிதக் குறிப்பு களே தெரிவிக்கின்றன. பூசெய்ப்பலி போன்ற வழிபாடுகளுக் குக் கூட்டமாக வருவார்கள். அமர்ந்திருப்பார்கள். முடிந்ததும் சென்றுவிடுவார்கள். கிறித்துவம் தடை செய்திருந்த சாதகம் பார்த்தல், திருஷ்டி சுற்றுதல், நல்ல நேரம் பார்த்தல் போன்ற வைகளை, கிறித்துவம் ஏற்காது என்பது கூட அவர்களுக்குத் தெரிந்திருக்கவில்லை. காலம் காலமாகக் கட்டுப்பாடின்றி வாழ்ந்து வந்த பரவர்களை, கிறித்துவ வாழ்க்கை நெறிகளுக்கும் சூழலுக்கும் கொண்டு வர பிரான்சிஸ்கன் குருக்கள் படாதபாடு பட்டனர். மேற்கண்டவைகள் எல்லாம் மூடநம்பிக்கைகளே என்பதைச் சொல்லி, பரவர்களுக்குப் புரியவைக்க, தமிழ் மொழி யைச் சரிவரப்பேச இயலாத குருமார்களால் முடியவில்லை.

கி.பி. 1540ஆம் ஆண்டில், அருள் திரு **அந்தோனியோட பத்ரோ** (Fr. Antonio de Padro) என்ற குருவானவர் மயிலாப்பூர் வந்து, கிறித்துவின் நற்செய்திகளை (Gospel) பிற சமயத்தாரிடம் எடுத்துரைத்தார். பலரைக் கிறித்துவ சமயத்துக்கு மாற்றினார். அவர்களுக்கென ஒரு சிற்றாலயமும் கட்டினார்.[477] பிரான் சிஸ்கன் குருமார்கள் தங்களுக்கென குடியிருப்புகளைக் கட்டிக் கொள்ளவும், மயிலாப்பூரைச் சுற்றியுள்ள பகுதிகளில் நற் செய்தியை அறிவிக்கவும் அனுமதிக்கப்பட்டதாக, அருள் திரு **பெல்கிர் ட லிஸ்போவா** (Fr. Belchir de Lisboa) தனது 27.3.1559 ஆம் நாளிட்ட மடலில் குறிப்பிடுகின்றார். கி.பி. 1595ஆம் ஆண்டில் பிரான்சிஸ்கன் சமயப் பணியாளர்கள், தூத்துக்குடி யில் தங்கியிருந்து பணிகளைச் செய்ய ஆணையிடப்பட்டனர்.[478]

---

477. Chronica Serafica da Provincia de Portugal. Fr. Fernando Felix lopez, Lopez. Lisboa, 1885, Livro 3, Capitulo 21, p. 738.
478. The Franciscans in Tamilnad, Achilles Meersmen, Schoneck Beckenried, 1962.

கொச்சியின் ஆயர் (Dom Andre De S. Maria) பிரான்சிஸ்கன் குருக்களை தூத்துக்குடியில் வரவேற்று, இறைவனின் அன்னை என்ற இல்லத்தை (Madre de Mems) அவர்களுக்கு அளித்தார்.[479] தூத்துக்குடியில் தங்கியிருக்கும் குருமார்களை அருள் திரு. **கஸ்தோஸ்** (Fr. Custos) தேர்வு செய்தார் எனக் குறிப்புகள் கூறுகின்றன.[480]

## *இயேசு அவையினர்* (Society of Jesus)

இவ்வுலகில் மக்கள் இன்பத்திற்காக வாழும் போது, இயேசுவுக்காக வாழச் சிலர் சங்கம் அமைத்தனர். இக்னேஷியஸ் லயோலா (இயற்பெயர் Inigo Lopez de Recal de என்பதாகும்) என்பார், ஸ்பெயின் நாட்டில், பாங்க் மாநிலத்தில் லயோலா என்னுமிடத்தில் கி.பி. 1491ஆம் ஆண்டில் பிறந்தார். போர்ப் படையில் சேர்ந்து ஒரு பெருங் குழுவின் தலைவராக (General) முன்னேறினார். மன்னருக்காகப் போரிட்ட இக்னேஷியஸ் போர்க்களத்தில் காயமுற்று ஒரு காலையிழந்தார். **"உலகை யெல்லாம் தன் உடைமையாக்கிக் கொண்டாலும் ஒருவன் தனது உயிரினும் மேலான ஆன்மாவை இழந்து போனால், அதனால் பயன் என்ன?"**, என்று இயேசு பெருமான் கேட்ட கேள்வி, அவரது நெஞ்சை ஊடுருவியது. மன்னருக்காகப் போரிடுவதை விடுத்து, இயேசுவுக்காகவும், அவர்தம் உரோமன் கத்தோலிக்கத் திருச்சபைக்காகவும் போராடத் துணிந்தார். கி.பி. 1522ஆம் ஆண்டில், எருசலேம் நகருக்குத் திருப்பயண

479. Ibid.
480. Ibid.
481. Cambridge Encyclopedia, p. 590.
481. Society of Jesus : Shortly Jesuits. A religious order founded in 1540 A.D. by Ignatitus de Loyola. A non - contemplative order, it demands strict obedience, compliance with Ignatitus's spiritual exercises and special loyalty to the Pope. Its aim is missionary in the brodest sense, ministering to society in many ways, especially in education, where it has founded several colleges and universities throughout the world. Jesuits have been leading apologists for the Roman Catholic church, particularly at the time of the counter - reformation.

மாகச் சென்றார். இயேசு பிறந்து, வாழ்ந்து வலம் வந்த திரு விடங்களைக் கண்டு தொழுதார். கி.பி. 1534ஆம் ஆண்டில், தனது உற்ற நண்பர்கள் அறுவருடன் (பிரான்சிஸ் சேவியர் உள்ளிட்ட) இயேசு அவை என்ற புதிய சங்கத்தைத் தொடங்கி னார்.[481] கி.பி. 1539ஆம் ஆண்டில் உரோமை நகருக்குச் சென்று, போப்பாண்டவரின் ஒப்புதலை வேண்டினார். கி.பி. 1540ஆம் ஆண்டு, செப்தம்பர்த் திங்கள் 27ஆம் நாளில், போப்பாண்டவர் மூன்றாம் பால், தனது ஆணையின் (Reginis Militanis Ecclesiae) மூலம், இயேசு அவையை[482] உலகறிய அறிவித்தார்.

கி.பி. 1542ஆம் ஆண்டில், இயேசு அவையினர் பரவர் பகுதிகளுக்கு வந்தனர். பரவர்களின் வாழ்க்கை முறையைக் கவனித்த அவையினர், திருமுழுக்கு பெற்றதைத் தவிர வேறெந்த கிறித்துவ நடைமுறைகளையும் அவர்கள் பெற்றிருக்க வில்லை யென்பதை அறிந்தனர். கடந்த பத்தாண்டுகளில் அவர்கள் பெயருக்கு மட்டுமே கிறித்துவர்களாயிருப்பதைக் கண்டு வருந் தினர். எனவே முறையான கிறித்துவ சமயக் கல்வியையும், திருமந்திரங்களையும் சிறுவர் சிறுமிகளுக்கு முதலில் அளிக்க முடிவு செய்தனர். ஒவ்வொரு நாளும் காலையும் மாலையும் வகுப்புகள் நடத்தப்பட்டன. இரு சமயச் சொல்லிகளை (Catechists) ஒவ்வொரு ஊருக்கும் ஏற்பாடு செய்தனர். ஒருவர் குழந்தைகளை அழைத்துவரவும், மற்றவர் பாடம் நடத்தவும் என நியமனம் செய்தனர்.[482] கோவாவிலிருந்த போர்த்துக்கீசிய ஆளுநர் ஆண்டொன்றுக்கு 4000 பொற்காசுகளை (Gold Panams) அனுமதித்து, அதனை சமயச் சொல்லிகளுக்கு சம்பளமாகக் கொடுக்க ஏற்பாடு செய்தார்.

ஒவ்வொரு ஆண்டும் கொண்டாடப்படும் ஈஸ்டர் பண்டி கையின் போது, கிறித்துவர்கள் அனைவரும் சமயக் கடன் களை முடிக்க வலியுறுத்தப்பட்டது. சனிக்கிழமைகளில் பெண் களுக்குச் சிறப்பான சமயக்கல்வி அளிக்கப்பட்டது. முதலாளி கள் சிலரிடம் பணிகள் செய்து வந்த கிறித்துவப் பரவர்களை ஞாயிற்றுக் கிழமைகளில் விடுவிக்க வேண்டுமென அம்முதலாளி யிடம் கேட்டுக் கொள்ளப்பட்டது. போர்த்துக்கீசியர்களின் எதிர்ப்பைத் தேடிக் கொள்ள விரும்பாத அம்முதலாளிகளும்

---

482. Letter of Fr. Henriques written from Punnaikayal Dt., 6.12. 1547 DI, Vol. I, pp. 225-226.

அக் கோரிக்கையை ஏற்றுக் கொண்டனர்.[483] பிரான்சிஸ்கன் துறவிகள் தொடங்கி வைத்த இப்பணிகளை இயேசு அவையினர் தொடர்ந்தனர்.[484] கற்பிப்பதில் அவர்களுக்கிருந்த ஆர்வமும் பட்டறிவும், முறையான திட்டங்களை வகுத்து, அத்திட்டங்கள் நிறைவேற முயற்சிகள் மேற்கொண்ட நடைமுறைகளும், அடுத்த பத்தாண்டுகளில், கிறித்துவ நெறிக்கு பரவர்களைத் திருப்பின எனலாம்.[485]

கிபி. 1560ஆம் ஆண்டில், அருள் திரு **ஹென்றிக்** (Fr. Henrique Henriques) பரவர் பகுதிகளில் தமது சமயப் பணிகளைத் தொடங்கினார். சிறுவர்களுக்குச் சமயத்தில் உள்ள செய்திகளை விளக்கவும், கிறித்துவ நெறியில் நம்பிக்கை கொள்ளவும் குழுக் களை (Sodalities) அமைத்தார். புன்னைக் காயல் தூத்துக்குடி ஆகிய ஊர்களில் இக் குழுக்கள் அமைக்கப்பட்டன. கத்தோலிக்க சமயத்தின் கடந்த கால வரலாறுகள், கிறித்துவ இலக்கியங்கள், தூயவர்களின் (Saints) வாழ்க்கை நெறிகள் பற்றி கற்பிக்கப் பட்டன. ஹென்றிக் பரவர் அல்லாத பல்வேறு இனப்பிரிவு களையும் கிறித்துவ சமயத்தில் சேர்த்தார். தமிழகத்தில் வேரூன் றிப் போயிருந்த சாதிகள் அமைப்புகள், ஏற்றத்தாழ்வுகள் போன்ற சமூக வேறுபாடுகளில் கிறித்துவத்துக்கு நம்பிக்கை யில்லையென்றாலும், அப்போதைய சூழலில் அதுபற்றிய சிந்தனைகளில் கிறித்துவம் தலையிடவில்லை. இருப்பினும் **அக்காலத்திலேயே பிரான்சிஸ் சேவியர், மக்களைச் சாதி களால் பிரித்துப் பார்க்கும் கொடுமைகளைக் கடுமையாக எதிர்த்தார்.**

பரவர் வாழ்ந்த பகுதிகளில் கிறித்துவர்களின் எண்ணிக்கை பெருமளவில் உயர்ந்து போகவே "**பட்டங்கட்டி**" என்ற பொறுப்புகளுடன் பலர், சமயப் பணிகளுக்காக நியமனம் செய்யப்பட்டனர். **லாசரோ வாஸ், மானுயெல் டகுருஸ் போன்ற பட்டங்கட்டிகள்**, சமயத் தலைவர்கள் வர இயலாத காலங் களில், புன்னைக் காயல் தூத்துக்குடி போன்ற ஊர்களில்

---

483. Letter of Fr. Henriques written from Vembar, Dt. 31.10.1548.

484. Letter of Francis Xavier written from Cochin Dt. 31.12.1543.

485. The Life and Letters of St. Francis Xavier, Henry James Coleridge, 2 Vols. London., 1881, pp. 153-155.

பணியாற்றினர்.[486] சமயப் பணியாளர்களின் செயல்பாடுகள், எதிர்ப்படும் இடைஞ்சல்கள், அவை சரிசெய்யப்பட்டனவா, சரி செய்யப்படாவிடில் அதனை எப்படி எதிர்கொள்வது போன்ற அனைத்து நிகழ்வுகளையும், அறிக்கைகள் வாயிலாக போர்த்துக்கல்லுக்கு அடிக்கடி அனுப்பி வைத்தனர்.[487]

**பாத்ரே ரூய் விசென்ட்** (Fr. Ruy Vicente) என்னும் போப் பாண்டவரின் தூதர், கி.பி. 1582ஆம் ஆண்டில் தூத்துக்குடி, புன்னைக்காயல் பகுதிகளைப் பார்வையிட வந்தார். அப்பகுதி யில், பரவர் இன கத்தோலிக்க மக்கள், நல்ல கத்தோலிக்கர் களாக இருப்பதாகவும், சமயக் கடமைகள் பற்றியும், சமயத்தின் மெய்யியல் கோட்பாடுகள் பற்றி புரிந்து கொண்டிருப்பதாகவும், சமயத்தலைவர்களோடு நல்லுறவை மேற் கொண்டிருப்பதாக வும், ஐரோப்பிய சமயப் பணியாளர்கள், தங்கள் தகுதிக்கும் உழைப்புக்கும் மீறிய பணிகளில் ஈடுபட்டு, சிறப்பாகச் செயல் பட்டு வருவதாகவும், கத்தோலிக்க சமயம் அப்பகுதிகளில் சரியான அடித்தளத்துடன் நிலை பெற்றுவிட்டதாகவும், போப் பாண்டவரிடம் அறிக்கை கொடுத்தார்.[488] அவ்வறிக்கை, சமயப் பணியாற்றியவர்களுக்கும் மற்றவர்களுக்கும் மகிழ்ச்சியை ஏற்படுத்தியது எனக் கூறவும் வேண்டுமோ!



486. Letter of Fr. Fransico Perez to Fr. Miguel de Torres de Sao Roque, Dt. 1.1.1558, written from Cochin.
487. Ibid.
488. Annual letter sent from Punnaikkael to Rome. Now available in Archivum Romanum Societatis Jesu, Rome. 1582, p. 3.

## தூய பிரான்சிஸ் சேவியர்

## (St. Francis Xavier)

**ஐரோப்பாவிலிருந்து உலகெங்கும் சென்று கிறித்துவ சமயப் பரப்புப் பணிகள் மேற்கொண்டவர்களில், தனக்கு ஒப்பாருமிக்காருமில்லாத உயர்ந்த இடத்தில் வைத்துப் போற்றப்படுபவுர் பிரான்சிஸ் சேவியர் எனும் இயேசு அவைத் துறவியாவார்**. குறிப்பாகக் கீழை நாடுகளில், சமயப் பணிகளை மேற்கொண்டவர்களில், பிரான்சிஸ் சேவியரின் இடத்தை நிரப்ப, அவருக்குப் பின்வந்த எந்தத் தொண்டராலும் இயலவில்லை என்றே கூறலாம். சவேரியார் எனத் தமிழக மக்களால் அன்புடன் அழைக்கப்படும் சேவியர், கத்தோலிக்கத் திருச்சபை ஈன்றெடுத்த தலைசிறந்த தொண்டர்களில் ஒருவரா வார். இந்தியாவில் தோமையாரிட்ட அடித்தளத்தில் அழகிய மாளிகையைக் கட்டியவர் பிரான்சிஸ் சேவியர் என்பது சரியே.

பிரான்சிஸ் சேவியரின் பெயர் ஸ்பானிய மொழியில் Francisco Javier என்று அழைக்கப்படுகின்றது. சேவியர் என்பது ஆங்கில ஒலிப்பாகும். இதனை ஹாவியர் (Haviair) என்றவா று ஸ்பானிய மொழியில் ஒலிப்பர்.[489] ஸ்பெயின் நாட்டின் நவரே (Navarre) என்னும் நகரில் சேவியர் கி.பி. 1506ஆம் ஆண்டில் பிறந்தார். இவர் பாரிஸ் நகரில் படித்துப் பட்டம் பெற்றார். முதுகலைப்பட்டம் (M.A.) பெற்ற சேவியர் சில காலம் அப்பல் கலையில் பேராசிரியராகவும் பணியாற்றினார். லயோலா இக்னேஷிட!ஸ் சில காலம் அப்பல்லையில் பேராசிரியராகவும் பணியாற்றினார். லயோலா இக்னேஷியஸ், இயேசு அவையைத்

489. Cambridge Encyclopedia, p. 435.

தொடங்கிய காலத்தில், அவருக்கு உற்ற நண்பராயும் துணைவ ராயுமிருந்தார். இயேசு அவையைத் தொடக்கிய முதல் அறு வருள் சேவியரும் ஒருவராவார். கி.பி. 1542ஆம் ஆண்டில், கோவா வந்தடைந்தார். கி.பி. 1545ஆம் ஆண்டில் மலேயா விலும், 1549ஆம் ஆண்டில் சப்பானிலும் சமயப் பணியாற்றி னார். சீன நாட்டுக்குள் செல்ல விரும்பிய காலை, கி.பி. 1552ஆம் ஆண்டில் கடும் வெப்பக் காய்ச்சலால் உயிர் நீத்தார்.[490] கி.பி. 1662ஆம் ஆண்டில், கத்தோலிக்கத் திருச்சபை வழங்கும் மிகப் பெரும் விருதுப்பட்டமான தூயவர் (saint) என்ற புகழினைப் பெற்றார். கி.பி. 1927ஆம் ஆண்டில், உலகெங்கிலும் பணியாற்றும் கிறித்துவ சமயத் தொண்டர்களின் பாதுகாவலராக (Patron saint of all Missionaries), திருச்சபையால் உயர்த்தப்பட்டார்.[491]

பூத உடல் மறைந்தாலும் புகழ் உடலோடு வாழ்வதாக உயர்ந்தோரைப் பற்றிக் கூறுவர். ஆனால் சவேரியர் தனது பூத உடலோடும் வாழ்ந்து கொண்டிருக்கிறார். கோவா நகரில் அவருடைய உடல் இன்றும் பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளது. உரோமன் கத்தோலிக்கத் திருச்சபை, ஒவ்வொரு ஆண்டும் டிசம்பர் திங்கள் மூன்றாம் நாளை, பிரான்சீஸ் சேவியரின் நினைவுத் திருவிழா நாளாகக் கொண்டாடி வருகின்றது. கேரளத் கிறித்துவர்கள் தோமையாருக்குச் செலுத்தும் வணக்கம் போல, தமிழகத்தின் பரவக் கிறித்துவர்கள் சேவியருக்கு வணக்கம் செலுத்தி வருகின்றனர்.

பிரான்சிஸ் சேவியர், நவரே நகரின் பிரபுக்கள் எனப்படும் மேட்டுக்குடியில் பிறந்தவர். செல்வச் செழிப்பும், சீர் மிகுந்த வாழ்க்கையும் சேவியரைத் தொடவில்லை. ஸ்பெயினில் பிறந்த சேவியர், பிரான்சில் உள்ள பாரிஸ் பல்கலையில் பயின்றார். அப்பல்கலையின் முதல் மாணாக்கராகத் தேர்வு பெற்றார். தத்துவ இயல் (Philosophy) பேராசிரியராக அப்பல்கலையில் பணியாற்றினார். மிகச் சிறந்த பேரறிஞரான சேவியர், பல்கலை யில் தொடர்ந்து பணியாற்றியிருந்தால், பல அறிஞர் பெரு மக்களை உருவாக்கியிருப்பார் எனக் கூறுவர். பல்கலைக் கழக வட்டாரங்கள் இவரைப் போற்றிப் புகழ்ந்து கொண்டிருந்த காலத்தில், எவரும் எதிர்பாரா வண்ணம் தமது பேராசிரியர்

490. Ibid.

491. Ibid

பணியைத் துறந்தார். அமைதியான கல்விப் பணியாற்றும் சூழலை விடுத்து ஆரவாரம் மிக்க சமயப் பணியைத் தேர்ந்தெடுத்தார்.

## கோவாவில் சேவியர்

இந்தியா வந்த போர்த்துக்கீசியக் கப்பலில் பயணம் மேற் கொண்டு, கி.பி. 1542 ஆம் ஆண்டில் கோவா வந்திறங்கினார். கோவா அக்காலத்தில் செல்வமிக்கத் துறைமுகமாக விளங்கியது. போர்த்துக்கீசிய வைசிராய் தன்னிகரற்ற செல்வாக்குடன் கோவா நகரில் மேலாண்மை செய்து வந்தார். கீழ்த்திசை நாடு களான மலாக்கா, சீனா போன்ற நாடுகளுக்குச் செல்லும் கப்பல்களுக்கு சுங்கவரி விதிக்கவும், அதனை உயர்த்தவும் வைசியராய் வலிமை பெற்றிருந்தார். மேலை நாட்டிலிருந்த மெக்கா என்ற திருப்பயண நகருக்குச் செல்லும் இசுலாமியரிட மிருந்தும் வரி தண்டப்பட்டது. கோவா நகரம் அக்காலத்தில் பன்னாட்டு மக்கள் வாழும் மிகப் பெரிய துறைமுகமாய் விளங் கியது. இந்துக்கள், இசுலாமியர், கிறித்துவர், போர்த்துக்கீசியர், ஆர்மீனியர், பன்னாட்டு வணிகர் என, அப்பட்டியல் நீளும். கோவா நகரம் இவர்களின் தேவைகளைப் போக்க, கட்டிடக் கட்டுமானப் பணிகளால் ஆரவாரமாய்க் காட்சியளித்தது. வணிகக் கூடங்களும், கோட்டைகளும், குடியிருப்புகளும், தேவாலயங்களும், துறவிக்களுக்கான மடங்களும் என, கட்டு மானப் பணிகள் எங்கும் நடைபெற்றன. இவ்வாறான புகழ் மிக்க நகரை ஆண்டுவந்த போர்த்துக்கீசிய வைசிராய், அந்நகரின் எதிர்க் கேள்வி கேட்பாரில்லாத தலைவனாயிருந்தான்.[492]

இந்தியாவுக்கு வருமுன்னர், போர்த்துக்கல் மன்னர் ஜானை (John) சேவியர் சந்தித்தார். மன்னர் ஜான் ஆழ்ந்த சமயப் பற்றுள்ள கத்தோலிக்கராவார். சேவியரின் மேட்டுக் குடித் தகுதியையும் அறிந்தவர். கத்தோலிக்கச் சமயத்துக்காக செல்வங்கள் அனைத் தையும் துறந்தவர் என்பதையும், புகழ்மிக்கப் பேராசிரியர் பணியையும் விட்டுவிட்டவர் என்பதையும் மன்னர் அறிவார். எனவே, இந்தியாவில் சேவியருக்குத் தகுந்த பாதுகாப்பளிக்கும் படியும், அவர் கேட்கும் உதவிகள் அனைத்தையும் செய்து தரும்படியும் இந்திய வைசிராய்க்கு மடல் எழுதினார்.[493] போப்

492. Early Christianity in India and Pakistan, p. 55.

493. Ibid.

பாண்டவர் தன்பங்கிற்கு, சேவியரைத் தமது தூதுவராகவும் (Papal Nuncio), தொலைகிழக்கு நாடுகளுக்கும், அங்கிருந்த மறைத் தொண்டர்கள், தேவாலயங்கள், சமயப் பணிகள் தொடர்பானவற்றிற்குத் தமது ஆளுமையைச் செயல்படுத்திக் கொள்ளவும் அனுமதியளித்தார்.[494] அரசியல் வட்டத்திலும், சமய உலகிலும் ஒருசேர மதிக்கப்பெற்ற சேவியர், மன்னருடைய பரிந்துரையோ, போப்பாண்டவரின் வாழ்த்துதல்களையோ பெற்றுக் கொண்டதனால் பெருமை கொள்ளாமல், தமது பணிவு, சமயப் பணிகளில் உறுதி மிக்க நாட்டம், கடின உழைப்பு, மாந்த நேய மனப்பாங்கு போன்ற அருங்குணங்களால் பணிகள் செய்ய முற்பட்டார்.

சேவியரின் வருகையை முன்பே அறிந்திருந்த அரசியல் தலைவர்களும், சமயத் தலைவர்களும் ஒருசேர கடற்கரைக்கு வந்திருந்து வரவேற்றனர். எவருக்கும் கிடைக்காத வரவேற்பு, மக்கள் வெள்ளம் குழுமியிருந்த அக்கூட்டத்தில் சேவியருக்குக் கிடைத்தது. கலை நயத்துடன் விளங்கிய அழகிய பல்லக்கு சேவியரைச் சுமந்துவரக் காத்திருந்தது. கப்பலிலிருந்து இறங்கிய சேவியரைக் கண்ட தலைவர்களும் மக்களும் அவரது எளிமை யான தோற்றத்தைக் கண்டு புருவங்களை உயர்த்தினர். கிழிந்த இடங்களில் ஒட்டுப் போட்டுத் தைத்த ஆடையும் (அங்கி), செருப்பில்லாத கால்களுமாய் சேவியர் நடந்து வந்தார். அவர் முகத்தைச் சுற்றி வீசிய ஒளி, கூட்டத்தாரை வியப்பிற்குள்ளாக் கியது. கூட்டத்தினர், இவர் மாந்தப் பிறவியே அல்லர் என்றும், அதற்கும் அப்பாற்பட்ட ஆற்றல் அவர் கண்களில் தெரிவதாக வும் கருதினர். காத்திருந்த பல்லக்கில் ஏற மறுத்த சேவியர், செருப்பில்லா வெறுங்கால்களுடன் மருத்துவ மனையிருக்கும் இடம் நோக்கி நடந்தார்.[495] எங்கும் அமைதி நிலவியது. என்ன செய்வதென்று அறியாத அரசியல் மற்றும் சமயத்தலைவர் அனைவரும், மக்கள் கூட்டமும் அவர் பின்னால் நடந்து சென்றது.

எதற்காகத் தாம் இந்தியா வந்திருக்கிறோம் என்பதை சேவியர் மக்களுக்குத் தமது செயலால் உணர்த்தினார். மருத்துவ மனையிலிருந்த தொழு நோயாளிகளின் ஆறாதப் புண்களை

494. Ibid.

495. Ibid.

தமது அன்புக்கரங்களால் கழுவமுற்பட்டார். கழுவி முத்த மிட்டார்.[496] இக்காட்சிகளைக் கண்ட மக்கள் கூட்டம் சேவியர் வாழ்கவென ஆர்ப்பரித்தது. மாறாக, தம்மை இந்தியாவுக்கு அனுப்பத் திருவுளங்கொண்ட இயேசுவை வாழ்த்துமாறு மக்களைப் பார்த்து சேவியர் கூறினார். இவ்வாறு கழுவப்பட்ட தொழுநோயாளிப் பலர் குணமடைந்து விட்டதாகச் செவி வழிச் செய்திகள் கூறுகின்றன. சேவியரின் வருகை கோவா நகரமெங்கும் எதிரொலித்தது. மக்கள் கூட்டம் கூட்டமாக வருவது பெருகவே, அரசு அலுவலர்கள் பாதுகாப்பாக சேவி யரைத் தனியிடத்துக்கு அழைத்துச் சென்றுவிட்டதாகவும் கூறப்படுகின்றது.

## *சேவியரை வருத்திய சாதிப்பிரிவுகள்*

சேவியர் இந்தியாவுக்கு வந்த கால அளவுகளில், இங்கு சாதிப்பாகுபாடுகள் வேரூன்றிப் போயிருந்தன. தொடக்கத்தில் இந்தியாவிலிருந்த சாதிப் பாகுபாடுகள் பற்றிய ஆழம் ஐரோப் பியர்களான சமயப் பணியர்களுக்குப் புரியவில்லை. ஐரோப்பிய வரலாற்றில் அடிமைகள் என்ற பிரிவினர் உரோமப் பேரரசு காலத்தில் வாழ்ந்திருந்தனர். அவர்கள் ஏழைகள் என்ற தகுதி யால் மட்டுமே அடிமைகளாயிருந்தனர். தோற்கடிக்கப்பட்ட நாடுகளிலிருந்து கொண்டு வரப்பட்ட பிணையாளர்களும் அடிமைகளாயிருந்தனர். அங்கும் கூட ஏழாண்டுக்குப் பிறகு அவர்களை விடுவிக்க வேண்டுமென்ற சட்டம் வழக்கிலிருந்தது.[497] மக்களில் உயர்ந்தவர்கள் தீண்டத்தகாதவர்கள் என்ற பிரிவு உலகில் இந்தியாவைத் தவிர வேறெங்கும் இருந்ததில்லை. விவிலியத்தில் கூறப்படும் சமாரியர்கள் என்ற இனத்தவர் வேறு கடவுளரை வழிபட்டதால், யூதர்கள் அவர்களை ஒதுக்கி வைத் தனர். பிற இனத்தார் என அறியப்பட்டவர்கள் எல்லாம் சிலை வழிபாடு செய்பவர்கள் என்ற அடிப்படையில் யூதர்களால் ஒதுக்கப்பட்டிருந்தனர்.

ஆனால் ஒரே கடவுளை வழிபடும் ஒரு நாட்டு மக்களி டையே உயர்ந்தவர் தாழ்ந்தவர், ஒதுக்கப்பட்டவர் என்ற பாகுபாடு உலகில் எந்த நாட்டு வரலாற்றிலும் இடம் பெற

---

496. Ibid.

497. History of Religion, p. 294.

வில்லை. இந்தியாவில் குறிப்பாகக் கேரளத்திலும் தமிழகத்திலும் நடைமுறையிலிருந்த தீண்டாமையைக் கண்டு சேவியர் அதிர்ச்சி யடைந்தார். பிராமணர்களே உயர்ந்த சாதியினர் என்று கூறிக் கொண்டிருந்த இந்திய நடைமுறைகளை[498] மாந்த நேயமற்றவை என்பதை சேவியர் எடுத்துரைத்தார். இந்துக்களில் சாதிப்பாகு பாடுகள் இருந்தது போன்றே, இசுலாமியரிடமும், கிறித்துவ ரிடமும் சாதிப் பிரிவினைகள்[499] இருந்ததையறிந்த சேவியர், தாழ்த்தப்பட்ட மக்களாகக் கருதப்பட்ட அனைத்து சமயத்து மக்களையும் அரவணைத்தார். இந்து சமயத்தின் தீண்டப்படாத மக்கள் வாழ்ந்திருந்த பகுதிகளுக்கு அடிக்கடி சென்றுவந்தார். அவர்களுடன் அமர்ந்து உணவு உட்கொண்டார். இயேசுவின் நற்செய்தியை அவர்களுக்கு எடுத்துரைத்தார். இறைவன் படைத்த மக்களில் உயர்ந்தோர் தாழ்ந்தோரென ஒருவருமில்லை என்பதை அறிவித்தார். சேவியரின் இந்த அன்பான அணுகு முறையால், தாழ்த்தப்பட்ட மக்களாகக் கருதப்பட்டோர் கிறித்துவ சமயத்தைத் தழுவினர்.

கிறித்துவ மக்களிடையே காணப்பட்ட சாதிப்பிரிவினை களையும் சேவியர் கடுமையாகச் சாடினார். ஒரு கட்டத்தில், கிறித்துவர்களிடையே தம்மை உயர்ந்தோர் எனக் கூறிக் கொள் ளும் இனத்தாரை, கிறித்துவர்களே அல்லர் என்று கூறினார். சாதிப் பாகுபாட்டை ஏற்றுக் கொள்பவர்கள் இயேசுவின் உண்மைத் தொண்டர்களாக இருக்கவே முடியாது எனச் சாடினார். விலங்குகளைப் போல் நடத்தப்பட்ட அம் மக்களுக் காகத் தமிழகத்தில் முதன் முதலாகக் குரல் கொடுத்தவர் சேவியர்தான் என்பது வரலாறு பதிவு செய்துள்ள உண்மை[500] யாகும். எந்தக் காலத்தும், எதற்காகவும், சாதிப்பிரிவினையை கிறித்துவம் ஏற்றுக் கொள்ளவே முடியாது என்று திட்டவட்ட மாக அறிவித்தார்.

சேவியருக்கு முன்பும் பின்பும் வாழ்ந்திருந்த ஐரோப்பிய சமயப் பணியாளர்கள், சாதிப் பிரிவினை பற்றிப் பேசவே

---

498. Letter of Fr. Bethasar De Costa in Jean Castets, L' Ancienne Mission du Madure des Origenes et ses Historic, MPJa., pp. 111-115.

499. Early Christianity in India and Pakistan, p. 56.

500. Ibid.

அச்சப்பட்டனர். சாதிகள் பற்றிய தமது கருத்தை வெளிப் படையாகக் கூறினால், மேல் சாதியினர் கிறித்துவ சமயத்தில் சேராமல் போய்விடுவரோ என்று எண்ணிய சமயப் பணியாளர் களில் பலர் சாதிப் பாகுபாட்டைக் கூட வெளிப்படையாக வரவேற்றனர். தலைகளின் எண்ணிக்கையை கருத்தில் கொண்டு, கிறித்துவ சமயத்தை வளர்க்க சேவியர் உடன்படவில்லை. கிறித்துவர்களில் தாழ்த்தப்பட்டவர்களை ஏற்றுக் கொள்ளாத மேல்சாதியினர் கிறித்துவ சமயத்துக்குத் தேவையே இல்லை என்றும், இப்படிப்பட்டவர்கள் இச்சமயத்தில் இணைவதை விட, இணையாதிருப்பது மேல் என்றும் சேவியர் கருதினார். கிறித்துவர்களில் சாதிப்பாகுபாடு காண்பவர்களும், தங்களு டைய வேண்டுதல்களில் "எங்களுக்கு இன்னலும் இடையூறும் செய்தவர்களைக் கூட நாங்கள் மன்னிப்பது போல, இயேசுவே! எங்களையும் மன்னிப்பீராக" என்று கூறுவது, இயேசுவையே ஏமாற்றுவது போன்ற கயமைச் செயலாகுமென சேவியர் சுட்டிக் காட்டினார்.

சேவியரின் இந்த அதிரடியான போக்கையுணர்ந்த பிற சமயப் பணியாளர்கள், அதிர்ந்து போயினர். சேவியரிடம் பேசுவதற்கே அச்சப்பட்டனர். அவருடன் பணியாற்றிய பலர் தெரிவிக்கும் செய்திகளின்படி, சேவியரின் பேச்சும் செயலும் எந்தக் குறையும் காணவியலாததாகவே இருந்தன. உண்மையில், சேவியரிடம் உண்மையும் நேர்மையும் உழைப்பும், வறியார்க்கு இரங்கும் மனப்பான்மையும் குடிகொண்டிருந்தன. எல்லா வற்றிற்கும் மேலாக, தெய்வீக ஆற்றல் சேவியரிடம் நிறைந்திருந்த தாக, அவருடனிருந்தவர்கள் கூறுகின்றனர்.[502] இந்த ஆற்றல் முற்றும் கடந்த முனிவர்களுக்கு கைகூடும் என்பது தமிழ்ச் சித்தர்கள் கூறும் செய்தியாகும். இவ்வாறான ஒரு சித்தராகவே சேவியர் வாழ்ந்திருந்தார் என்பது வெள்ளிடை மலை.

### *பரவர்களிடையே சேவியரின் பணி*

கோவாவிலிருந்து சின்னாட்களில், புதிதாகக் கிறித்து வத்தை ஏற்றுக்கொண்ட தென்தமிழ்நாட்டுப் பரவர் பகுதிக்குச் சேவியர் விரைந்தார். பரவர்களின் அறியாமையும், ஏழ்மையும்,

---

501. Letter of Fr, Balthasar de Costa,

502. Ibid.

படிப்பறிவின்மையும் அவர்களது பகைவர்களாக இருக்கின்றன என்பதை சேவியர் உணர்ந்தார். தனது சமயப் பணிகலூடே, பரவர்களின் உழைப்புக்கேற்ற ஊதியத்தைப் பெற்றுத் தருதல், முதலாளிகளின் கொடுமைகளிலிருந்து மீட்டல், உயர் சாதி யினரின் அச்சுறுத்தலிலிருந்து அவர்களைக் காத்தல் போன்ற குமுகாயப் பணிகளிலும் சேவியர் ஈடுபட்டார்.[503] இதனால் பிற சமயத்தைச் சார்ந்த மக்களின் அன்பினையும் பெற்றார். இயேசு வின் அன்பு, நாடு மொழி இன எல்லைகளைக் கடந்தது என்ப தைத் தனது வாழ்க்கை முறைமைகளால் எடுத்துக் காட்டினார்.

இந்துக்களாயிருந்த பரவர்கள், கிறித்துவ சமயத்துக்கு மாறிய பிறகு, இசுலாமிய வணிகர்களிடம் பணியாற்றுவதை நிறுத்திக் கொண்டிருந்தனர். இசுலாமிய வணிகர்கள், பாண்டிய குறுநில மன்னனுக்குப் புரவிகள் வழங்கவும், அதற்கீடாக முத்துக்களை எடுக்க உரிமம் பெறவும் ஒப்பந்தம் செய்திருந் தனர். இவ்வொப்பந்தப்படி, முழுமையான முத்துக் குளித்தல் நடைபெறவில்லை. இசுலாமியர், தமது நட்பு மன்னரிடம் இதுபற்றி முறையிட்டனர். இதனால் பாண்டிய மன்னன் பரவர் கள் மீது சினங்கொண்டிருந்தான். ஒரு நேரத்தில் பரவர் பகுதி களில் பாண்டியப் படைகள் முற்றுகையிட்டன. செய்வதறியாது தவித்த பரவர் மக்கள், அருகிலிருந்த தீவுகளிலும், காடுகளிலும் அஞ்சிப் புகுந்தனர். பலர் கடற்கரைக் குடியிருப்புகளை விட்டு விட்டு திருவிதாங்கூர் மன்னரிடம் சென்று அடைக்கலம் நாடினர். மனமிரங்கிய மன்னர், பரவ மக்களுக்கு அடைக்கலம் கொடுத்தார். இச்செயலால் சினமுற்ற பாண்டிய மன்னன், இசுலாமியப் படைகளின் துணையோடு திருவிதாங்கூர் மேல் படையெடுத்தான்.[504]

ஆரல்வாய் மொழி என்ற இடத்தைச் சேர்ந்த பாண்டியப் படைகள், அக்கணவாய் அருகே துறவியொருவர் நின்று கொண்டிருப்பதைக் கண்டனர். அவர் வேறு யாருமல்லர் சேவியரே என்று சொல்லப்படுகின்றது. பரவர்களுக்கு அடைக் கலம் கொடுத்ததற்காக திருவிதாங்கூர் மன்னர்மேல் படை யெடுப்பது முறையற்றது என்று, படைத்தலைவர்களிடம் சேவியர் கூறியதாகவும், அதனை பாண்டியப் படைத்தலைவன்

503. Early Christianity in India, p. 56.

504. Ibid. pp. 55-58.

ஏற்கவில்லையென்றும் கூறப்படுகின்றது. பின்னர், என்னைக் கடந்து உங்கள் படைகள் செல்லட்டும் என சேவியர் கூறியதாகவும், சிறிது நேரத்தில் மூன்று தென்னை மர உயரத்துக்கு சேவியரின் உயரமான உருவம் தெரிந்ததாகவும், இப்பேருருவைக் கண்ட பாண்டியனின் படைகள் அச்சம் கொண்டு, சேவியரிடம் ஏதோவொரு ஆற்றல் இருப்பதாகவும், அதனை மீறிச் சென்றால் அழிந்து போவோம் எனக்கருதி, படைகள் திரும்பின என்றும் செவிவழிச் செய்திகள் கூறுகின்றன. உண்மையில், சேவியர் ஏதோவோர் அருஞ்செயலை (Miracle) தமது ஆற்றலால் நிகழ்த்திக் காட்டியதாகவும், அச்செயல் மாந்தனால் நிகழ்த்த இயலாதவொன்று என்றும் கூறப்படுகின்றது.[505] இது சமயக் கண்ணோட்டத்தில் கூறப்பட்ட செய்தி என்பாருமுளர்.

ஆனால் வரலாற்றாசிரியர்கள் வேறு வகையிலான செய்தியைத் தருகின்றனர். பரவர்களின் ஏழ்மை, கடும் உழைப்பு போன்ற விளக்கங்கள் படைத்தலைவர்களுக்கு எடுத்துக் கூறி, பரவர்களைப் பழிவாங்க நினைப்பது முறையற்றது என்ற கருத்தினை அவர்கள் ஏற்றுக் கொள்ளும் வகையில் விளக்கம் தந்து, போரை நிறுத்திவிட்டார் எனக் கூறுகின்றனர். எப்படியிருப்பினும், பரவர்களுக்கெதிரான போரை, சேவியர் தடுத்து நிறுத்தி விட்டார் என்பதை மறுப்பதற்கில்லை. பாண்டியப் படைகளை சேவியர் திருப்பியனுப்பிவிட்டார் என்ற செய்தியறிந்த பரவர்களும், திருவிதாங்கூர் மன்னரும் மகிழ்ந்தனர். சேவியரைத் திருவிதாங்கூருக்கு அழைத்து அவருக்குச் சிறப்புகள் செய்ததாகவும், பரவர்களைக் காக்க மன்னர் மேற்கொண்ட நடவடிக்கைகளுக்கு சேவியர் நன்றி கூறியதாகவும் செய்திகள் கூறுகின்றன.[505]

போர் நடவடிக்கைகள் தடுக்கப்பட்டதாலும், ஆயிரக்கணக்கான மக்களின் உயிருக்கும் உடைமைகளுக்கும் ஏற்படவிருந்த இடையூறுகள் தவிர்க்கப்பட்டதாலும் மகிழ்ந்துபோன திருவிதாங்கூர் மன்னர், சேவியரின் சமயப் பணிகள் தமது நாட்டில் தொடர அனுமதியளித்தார். சேவியர் தனது சமய மற்றும் குமுகாயப் பணிகளை கடற்கரையையொட்டிய பகுதிகளிலேயே மையப்படுத்தியிருந்தார். உள்நாட்டில் வாழும் மக்களைக் காட்டிலும் ஏழ்மையில் உழலும் கடற்கரைப் பரவ

---

505. Ibid.

மக்களுக்குத் தொண்டாற்றுவதே முதற்கடமையென்றும் கருதினார். பரவர்களுக்கு ஏற்படும் இன்னல்களை உடனுக்குடன் தீர்த்து வைக்குமாறு போர்த்துக்கீசிய உயர் அலுவலர்களையும் கேட்டுக் கொண்டார்.[506]

## சேவியரும் சிரியன் கிறித்துவர்களும்

சேவியருக்கு முன்பு வந்த கிறித்துவ சமயப் பணியாளர்களுக்கும், தோமையார் வழி கிறித்துவர்களுக்கும் நல்லுறவு அமையவில்லை. சிரியன் கிறித்துவர்களின் ஆயர்கள், சிரிய நாட்டினின்று வருவதும், அந்த ஆயர்களுக்கே கட்டுப்பட்டு அம்மக்கள் சமயவழிபாடுகளை நடத்துவதும், ஐரோப்பிய சமயத் தொண்டர்களுக்குப் பிடிக்கவில்லை. சிரியன் கிறித்துவர்கள் உயர்சாதியினர் வழியில் வாழ்க்கை நடத்துவதும், இந்தியப் பண்பாட்டுக் கூறுகளும் தாக்கங்களும் அவர்களது சமய வழிபாடுகளில் கடைப்பிடிக்கப் படுவதும் என, ஐரோப்பிய வழிபாட்டு முறைகளுக்கு மாறுபட்டு இருந்தன. ஐரோப்பிய சமயத் தொண்டர்களின் அறிவுரைகளை சிரியன் கிறித்துவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. கோவாவில் உள்ள பேராயரின் வழிகாட்டுதலில் சிரியன் கிறித்துவர்களைக் கொண்டுவர எடுக்கப்பட்ட முயற்சிகளும் வெற்றி பெறவில்லை.[507]

மற்ற சமயத் தொண்டர்கள், சிரியன் கிறித்துவர்களோடு கருத்து வேறுபாடுகள் கொண்டிருந்தாலும், சேவியர் சிரியன் கிறித்துவர்களிடம் நட்புறவாக இருந்தார். அவர்களைப் பற்றியும் அவர்களது ஆயர் பற்றியும் நல்லெண்ணமே கொண்டிருந்தார். சிரியன் கிறித்துவர்களும் கிறித்துவர்களே என்றும், இயேசுவையே இறைவனாக ஏற்றுக் கொண்டவர்கள் என்றும், அவர்கள் மரபுவழிப்படி அவர்கள் வழிபாடு செய்கிறார்கள் என்றும், குறுகிய எண்ணங்கள், சடங்குகள், விதிமுறைகள் என்ற வட்டத்துக்குள் சிரியன் கிறித்துவர்களை அடைத்துவிடக் கூடாதென்றும் சேவியர் கூறினார்.[508] சேவியரின் மாறுபட்டப் பார்வை சிரியன் கிறித்துவர்களாலும் போற்றப்பட்டது.

---

506. Ibid.

507. Ibid.

508. Ibid.

எல்லாவற்றிற்கும் மேலாக, மாந்த நேயமே இயேசுவின் நல்லரசைக் கொண்டுவரும் என்பது சேவியரின் அசைக்க முடியாத நம்பிக்கையாகும். தேவைப்படாத சொற்போர்களும் கருத்துச் சண்டைகளும், எந்த வணக்கமுறை உயர்ந்தது என்பது போன்ற குறுகிய நோக்கும், காலத்தையும் நேரத்தையுமே வீணாக்கும் என்று சேவியர் கருதினார்.[509] சேவியர் மக்களின் இதயங்களை ஊடுருவிப் பார்த்தாரேயன்றி, வறட்டுக் கொள்கைகளை அவர் என்றுமே ஒரு பொருட்டாக எண்ணியதில்லை. இவ்வாறான மாறுபட்ட மாந்த நேய அணுகுமுறைகளால்தான், சேவியர், யாரும் தொடமுடியாத உயர்ந்த இலக்கைத் தொட்டு நிற்கிறார் எனலாம்.

## *தலைமன்னார் மீனவர்கள்*

இராமேசுவரத்திற்கு நேர் எதிரிலுள்ள இலங்கையின் மன்னார் பகுதியில் வாழும் மீனவர்கள், தூத்துக்குடி - காயல் பட்டிணம் பகுதியில் உள்ள பரவர்களுக்கு சேவியர் ஆற்றிவரும் பணிகள் குறித்துக் கேட்டறிந்தனர். போர்த்துக்கீசியர்களின் கண்காணிப்பிலும், சேவியரின் வழிகாட்டுதலிலும் பரவர்களின் வாழ்க்கை மேப்பட்டிருப்பதை அறிந்த மன்னார் மீனவர்கள், ஒரு குழுவினரை அனுப்பி, சேவியரைத் தலைமன்னார் வருமாறு கேட்டுக் கொண்டனர். அக்காலை, சேவியர் திருவிதாங்கூர்ப் பகுதிகளில் ஓய்வின்றிச் சமயப் பணிகளில் ஈடுபட்டிருந்தார். அதனால் அங்கு செல்ல இயலாத நிலையில் ஒரு குருவானவரை மன்னாருக்கு அனுப்பிவைத்தார். அக்குருவானவர் தலைமன்னாரில் ஏராளமான மீனவர்களுக்கு திருமுழுக்கு அளித்து கிறித்துவ சமயத்தில் இணைத்தார்.[510] இந்த மீனவர்கள் அனைவரும் யாழ்ப்பாணத்து மன்னனுக்குக் கட்டுப்பட்ட குடிமக்களாவர்.

மன்னன், மீனவர்களின் சமய மாற்றத்தைக் கேள்விப்பட்டு அஞ்சினான். அரசியலில் தனக்குத் தலைவலியாக இக்கிறித்துவர்கள் இருப்பார்கள் எனக் கருதினான். அதற்கேற்ற வகையில், போர்த்துக் கீசிய குருக்களால் கிறித்துவர்களாக மாறிய மீனவர்கள் மீது போர்த்துக்கீசிய அரசு கவனம் செலுத்தும் என்றும்,

---

509. Ibid.

510. Ibid.

அம்மக்கள் தங்கள் அரசுக்கே கட்டுப்பட்டவர்கள் என்றும் கூறினர். இதனால் கலக்கமுற்ற யாழ்ப்பாணத்து மன்னன், அரேபிய இசுலாமியரைப் போலவும், சாமரின் மன்னனைப் போலவும், தம்மையும் நசுக்கி விடுவார்களோ என்றும் அஞ்சினான். எனவே ஒரு சிறுபடையை மன்னாருக்கு அனுப்பி, கிறித்துவர்களான மீனவர்களை மீண்டும் தங்களது பழைய சமயத்துக்குத் திரும்புமாறு பணித்தான். ஆனால் அந்தக் கிறித்துவ மீனவர்கள், மன்னனின் ஆணையை ஏற்க மறுத்து விட்டனர். அப்பகுதியில் 1000க்கு மேற்பட்ட மீனவர்கள் கிறித்துவ சமயத்தை தழுவியதாக செய்திகள் கூறுகின்றன. இதனால் வெறுப்புற்ற மன்னன் அக்கிறித்துவர்கள் மீது அடக்கு முறைகளை ஏவினான், சிலரையும் கொன்று குவித்தான். உயிர் பிழைத்திருந்த 700க்கு மேற்பட்டவர்கள் கிறித்துவ சமயத்தில் துணிச்சலுடன் நின்றனர்.[511]

மன்னாரில் நிகழ்வுற்ற செய்திகளையறிந்த சேவியர், உடனடியாக கோவா சென்றார். இதனையறிந்த யாழ்ப்பாணத்து இளவரசன், கிறித்துவ மீனவர்களிடம் பரிவு காட்டியதோடு படைகளையும் திரும்ப அழைத்துக் கொண்டான். யாழ்ப்பாணத்தில் நுழைய போர்த்துக்கீசியர்களுக்குச் சரியான கரணியம் கிடைத்திருந்தது. கோவா நகரத்து வைசிராய் என்ன கரணியம் பற்றியோ தனது முடிவை மாற்றிக் கொண்டான். சேவியரின் நம்பிக்கை தளர்ந்து போயிற்று. இருப்பினும் மன்னாரில் எந்த அச்சுறுத்தலும் அதற்குப் பிறகு நிகழவில்லை. தமிழகத்தின் தென்மாவட்டக் கடற்கரைப் பகுதிகள் போலவே, மன்னார் கட்ற்கரைப் பகுதிகளும் கிறித்துவ சமயத்தோடு இணைந்தன.[512]

## சேவியரின் கிழக்குப் பயணம்

இந்தியாவையும் தாண்டி தொலை கிழக்கு நாடுகளுக்குச் செல்ல வேண்டுமென்ற ஆர்வம் சேவியருக்கு ஏற்கனவே இருந்தது. மலாக்கா தீவுக்குப் பயணம் சென்றார். மலாக்கா தீவில் மூன்றாண்டுகள் சமயப் பணியாற்றினார். மலாக்கா தீவிலும்

511. Ibid.

512. Ibid.

ஏராளமான மக்களை கிறித்துவ சமயத்துக்குத் திரும்பினார். சப்பான் செல்ல வேண்டுமென்ற ஆர்வமிருந்த போதும், ஏற்கனவே தம்மால் அன்பு செய்யப்பட்ட தமிழகத்துப் பரவ மக்களைக் காணும் விருப்பத்தில் இந்தியா திரும்பினார். கி.பி. 1545-1548 ஆண்டுகளில், சேவியர் மலாக்காவில் இருந்ததாகச் செய்திகள் கூறுகின்றன.[513]

தமிழகம் திரும்பிய சேவியர், இங்கு 15 மாதங்களே பணியாற்றினார். பின்னர் கி.பி. 1549 ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்களில், கதிரவன் தோன்றும் நாடான சப்பானுக்குச் சென்றார். சப்பானில் சேவியரின் பணிகள் மிகவும் சிறப்புற்றிருந்ததாகவும், கத்தோலிக்கத் திருச்சபையை முதல் முதலில் சப்பானில் நிறுவியதாகவும் சேவியருடைய வரலாறு கூறுகின்றது. கிழக்கிந்திய நாடுகளில் சேவியரின் பணிகள் பற்றிய செய்திகள் இந்நூலில் இடம் பெறவில்லை. மீண்டும் கி.பி. 1552 ஆம் ஆண்டில் சேவியர் இந்தியா திரும்பி, கொச்சித் துறை முகத்தில் வந்திறங்கினார்.[514]

## இயேசு அவையில் சீர்திருத்தங்கள்

சேவியர் இந்தியாவை விட்டு கிழக்கு நாடுகளுக்குச் சென்றிருந்த காலங்களில், கோவாவைத் தலைமையிடமாகக் கொண்டு செயல்பட்டு வந்த இயேசு அவையினர், பல்வேறு முறைகேடுகளில் ஈடுபடலாயினர். தகுதியும் திறமையுமற்றவர்கள் உயர்பொறுப்புகளைப் பெற்றுக் கொண்டு பதவிக்காகவும் புகழுக்காகவும் சண்டையிட்டுக் கொண்டிருந்தனர். சமயத் தலைவர்களும் (Clergy) பொதுநிலையினரும் (Laity) குறுக்கு வழியில் பதவியில் அமர்ந்து, முறைகேடுகளில் திளைத்தனர். ஊழல்களில் மூழ்கிப்போயினர். அக்காலத்திலேயே இவ்வாறான ஊழல்கள் இயேசு அவையில் நிகழ்வுற்றன என்பது வியப்புக்குரிய செய்தியாகவே உள்ளது. இந்த ஊழல் பேர்வழிகளையெல்லாம் கண்டு சேவியர் மனம் நொந்தார். உடனடியான நடவடிக்கை மேற் கொள்ளப்படவில்லையெனில், மறைபரப்புப் பணியே தடைப்படும் என்பதையுணர்ந்தார். தான் ஒரு சமயத்

---

513. Ibid.

514. Ibid.

தொண்டர் மட்டுமல்லாது, தலைசிறந்த ஆளுமைத் திறன் கொண்டவர் என்பதையும், ஒழுங்கையும் கட்டுப்பாடுகளையும் நிலை நிறுத்தக் கூடியவர் என்பதையும் தனது அதிரடி நடவடிக்கைகள் மூலம் மெய்பித்தார். ஊழலையும் முறைகேடுகளையும் முற்றிலுமாகக் களைந்தார். தகுதியானவர்களைப் பொறுப்பில் அமர்த்தி, சமயத்தை வணிகமாகக் கைக் கொண்டிருந்தவர்களை நீக்கினார். மிகக் குறுகிய காலத்தில் இயேசு அவையின் செயல்பாடுகளில் முறைமைகளைக் கொண்டு வந்தார்.[515]

**சீனப் பயணம்**

கிழக்கிந்திய நாடுகளில் சீனாவை கடந்த 150 ஆண்டுகளில் எந்த ஐரோப்பிய சமயத் தொண்டரும் சென்றடைந்ததில்லை. சேவியருக்கு முன்னதாக, **மோந்தே கோர்வினோ ஜான்** என்ற ஐரோப்பியர், போப்பாண்டவர் நான்காம் நிக்கலஸ் என்பவரால், பீகிங் நகர ஆயராக (கி.பி. 1307) அனுப்பி வைக்கப்பட்ட செய்தி ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. அதற்குப் பிறகு சீனாவில் ஏற்பட்ட அரசியல் மாறுதல்களால் மிங் மரபு (Ming dynasty), கி.பி, 1368 முதல் 1644 வரை அரசாண்டது. சேவியர் சீனா சென்ற காலத்தில் மிங் மரபே ஆட்சியிலிருந்தது. இக்காலத்தில் ஐரோப்பியரை சீனாவுக்குள் அனுமதிக்கத் தடையிருந்தது.[516] சீனாவுக்குச் செல்லும் விருப்பத்தை கோவாவிலுள்ள உயர் அலுவலர்களிடம் சேவியர் தெரியப்படுத்தினார். சீனப்பயணம் உயிருக்குப் பாதுகாப்பாற்றதென்றும், சீனர்கள் ஐரோப்பியர்களையும் குறிப்பாகப் போர்த்துக்கீசியர்களையும் தங்கள் நாட்டுக்கு நுழையவிடுவதில்லை என்பதையும் அலுவலர்கள் சேவியருக்கு எடுத்துரைத்தனர். இன்னல்களும் இடுக்கண்களும் நிறைந்த சீனப் பயணத்தைக் கைவிடவும் கோரினர். ஆனால் சேவியர் தனது முடிவை மாற்றிக் கொள்ளவில்லை.

இறுதியாக, கி.பி. 1552ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் சீனா செல்லும் வணிகக் கப்பலில் சேவியர் பயணம் மேற்கொண்டார். தான் மிகவும் அன்பு செலுத்திய தமிழகத்தின் பரவ மக்களையும், தமிழகக் கிறித்துவர்களையும் இனியும் சந்திக்க இயலாத இறுதிக் கப்பல் பயணம் இதுவே என சேவியர்

515. Ibid.

516. Cambridge Encyclopedia, p. 732.

அறிந்திருந்தரோ என்பது தெரியவில்லை. பல்வேறு இன்னல்கள் இடுக்கண்களை வென்று, இயேசு கிறித்துவின் திருத்தூதரான சேவியர், காண்டன் நகரத்துக்கு வெளியே இருந்த **சான்சியன்** (Sancian) தீவில் இறங்கினார்.[517] காண்டன் நகரம், கல்கத்தா நகரைப் போன்று கடலினின்றும் உள்வாங்கியிருந்த துறைமுக நகராகும். பெருங்கழிமுகப் பகுதிகள் நிறைந்திருந்த அப்பகுதி யிலுள்ள ஒரு தீவே சான்சியன் என்பதாகும். சீன நாட்டின் நிலப்பகுதிக்கு மிக அருகில் இருந்தது சான்சியன் தீவு. வெளி நாட்டவர் இங்கே கப்பலிறங்கி, பிறகு ஆட்சியாளர்களின் அனுமதி பெற்ற பின்பே சீன நாட்டுக்குள் நுழைய வேண்டும்.

சீன நாட்டுக்குள் செல்லவும், அங்கு மேற் கொள்ளப்படும் சமயப் பணிகளை எவ்வாறு செய்ய வேண்டும் என்ற திட்டங் களை வகுத்துக் கொண்டிருந்த சேவியரை அவரது தலைவரான இயேசு கிறித்து, "உழைத்தது போதும் உறக்கம் கொள்", எனக் கூறி தன்னிடம் அழைத்துக் கொண்டார் என அவரது வரலாற்றை எழுதியவர்கள் தெரிவிக்கின்றனர். ஆம்! கி.பி. 1552 ஆம் ஆண்டு, திசம்பர்த் திங்கள் இரண்டாம் நாள், இவ்வுலக வாழ்வை நீத்தார்.[518] தனது தாய் நாடான ஸ்பெய்னுக்குப் பல ஆயிரம் மைல்கள் தொலைவில், தனது உறவினர்களையும் நண்பர்களையும் கூட பத்தாண்டுகளுக்கு மேலாகக் காணவிய லாத நிலையில், கடுங்குளிர் வாட்டிய கான்சியன் தீவில் பிரான்சிஸ் சேவியர் தனது இறுதி மூச்சை வெளிப்படுத்தினார். பிரபுக் குடும்பத்தில் மேட்டுக் குடி செல்வராகவும், தத்துவப் பேரறிஞராகவும், தலைசிறந்த ஆளுமைத் திறன் கொண்ட வராகவும், மாந்த நேய மாண்பாளராகவும், இயேசு கிறித்துவின் இறைத் தூதராகவும் விளங்கிய பிரான்சீஸ் சேவியர், எவருமே அவரைக் கண்டு கொள்ளாத தனியொரு தீவில் இறைவனோடு இணைந்தார் என வரலாற்றாசிரியர்கள் அவரது இறப்பைப் பற்றி எழுதுகின்றனர். வாழ்க்கையின் இறுதிக்காலத்தில் அவரைக் கவனித்துக் கொள்ளவும் ஆறுதல் சொல்லவும் ஒருவரும் இல்லாமற் போயினர். ஆனால் அவரது வாழ்க்கையை ஆய்வு செய்த இயேசு அவைத் துறவிகள், இறைவன் அவருடைய

516. Early Christianity in India, pp. 60-62.

517. Ibid.

518. Ibid.

இறப்பின் நேரத்தை அவருக்கு அறிவித்திருந்ததாகவும், அவருடைய இறுதி நேரத்தில் அவர் இயேசுவோடு உறவாடிக் கொண்டிருந்ததாகவும், தமது முடிவை மிகுந்த மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டதாகவும், எக்காலத்திலும் வாழ்வளிக்கும் இறைவனை (Eternal Comforter) அவர் நாடிச் சென்றுவிட்டதாகவும் தெரிவிக்கின்றனர்.[519]

சேவியரின் இறப்பு, இந்தியாவிலும் ஐரோப்பாவிலும் பலராலும் இரங்கலுடன் உணரப்பட்டது. **சேவியருடைய தூய்மையான மாந்த நேயமுடைய வாழ்க்கை, மறுஉலக வெகு மதிக்கு ஆசைப்பட்டோ, கொடிய நரகத்தின் அச்சத்திற்குட்பட்டோ அமைந்திருக்கவில்லை. வாடிய மக்களுக்காக இரங்கிய மனப்பாங்கும், இயேசுவிடம் அவர் கொண்டிருந்த அளவிலா அன்புமே அவரது வெற்றிக்கான கரணியங்களாக கருதப்படுகின்றன.**

பல நேரங்களில் தனித்திருந்து வேண்டுதல் செய்வது அவருக்குப் பிடித்தமான ஒன்று. தனிமையில் இருந்தாலும் யாருடனோ பேசிக் கொண்டிருப்பது போலவே அடிக்கடி தென்படுவார். உள்ளே அவரைத் தவிர யாருமில்லை என்பதைப் பலரும் பல முறையும் உறுதி செய்துள்ளனர். சில நேரங்களில் “போதும் ஆண்டவரே! எனக்கு இதுபோதும்!” என்று உரத்த குரலில் பேசுவதைப் பலர் செவிமடுத்துள்ளனர். இந்நிகழ்வுகளால் சேவியர் நாளும் இறைவனிடம் நேருக்கு நேர் பேசும் வழக்கத்தைக் கொண்டிருந்தார் என்றும், தேவனுடைய ஆணையின்படியே அவர் செயல்பட்டார் என்றும், தனக்கேற்படும் ஐயங்களையும் எதிர் காலத்திட்டங்களையும் இறைவனிடமே பேசிப் பகிர்ந்து கொள்வார் என்றும் அவருடன் பணியாற்றியவர் கூறினர். அவர் முகத்தில் விவரிக்க இயலாத ஒளியும், மகிழ்வும் எப்போதும் குடி கொண்டிருந்ததாகவும், அவரை வசைபாடவும் துன்புறுத்தவும் வந்தவர்களும் கூட அவரது ஒளியுமிழும் முகத்தைக் கண்டு தாம் எதற்காக சேவியரிடம் வந்தோம் என்பதைக் கூட மறந்து போவார்கள் என்றும் கூறப்படுகின்றது. சேவியரிடம் யாரும் பொய்சொல்ல இயலாது என்றும், எதிரில் நிற்பவர் என்ன நினைக்கிறார் என்பதை சேவியர் அப்படியே கூறிவிடுவார் என்றும் கூறுகின்றனர்.

519. Ibid.

சேவியர் தனது பத்தாண்டு கால சமயப் பரப்பு வாழ்வில் 70,000 பேரை கிறித்துவ மறைக்கு மாற்றியிருப்பதாகக் கூறு கின்றனர்.[520] உலகில் எந்த கிறித்துவ ஊழியரும் செய்திராத அரும்பெரும் சாதனையாக இது கருதப்படுகின்றது. ஆண்டுக்கு 7000 பேர் என்ற கணக்கில் நாளொன்று 20 பேரை கிறித்துவத் துக்கு அழைத்து வந்துள்ளார்.

ஈன்ற பொழுதினும் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோ னெனக் கேட்ட தாய்

என்ற வள்ளுவரின் கருத்துப் படி, தாயாகிய கத்தோலிக்கத் திருச்சபை, தூய பிரான்சிஸ் சேவியர் என்ற சவேரியாரை எண்ணி பெரிதுவக்கின்றது எனக் கருதலாம்.



520. Ibid.

## சிரியன் கிறித்துவரும் இயேசு அவையினரும்

போர்த்துக்கீசியர்கள் வருகைக்குப் பிறகு, தமிழகத்தின் மேற்குக் கடற்கரையில் இயேசு அவையினர் (Society of Jesus) பெருமளவில் வந்திறங்கினர். போர்த்துக்கீசிய மன்னரின் அரவணைப்பிலும், கோவா நகரிலிருந்த மன்னரின் அலுவலர்களின் ஒத்துழைப்பிலும், கிறித்துவ சமயத்தின் பரப்புதல் பணியை மேற்கொண்டனர். அங்கு ஏற்கனவே வாழ்ந்திருந்த கிறித்துவர்கள் தோமையாரின் வழிவந்தவராவர். கி.பி. 3ஆம் நூற்றாண்டில் தமிழகம் வந்த சிரிய நாட்டுக் கிறித்தவர்களும், தமிழகத்தின் தோமையார் வழிக் கிறித்துவர்களும் காலப் போக்கில் ஓரினமாக உருவெடுத்து விட்டனர். போர்த்துக்கீசியர் இந்தியாவுக்கு வந்தபோது சிரியன் கிறித்துவர்களே மேலைக் கடற்கரைப் பகுதிகளில் வாழ்ந்திருந்தனர். தொடக்கத்தில் போர்த்துக்கீசியர்கள், சிரியன் கிறித்துவர்களைத் தமது நட்புக் குரியவராக ஆக்கிக் கொண்டனர். சிரியன் திருச்சபையின் தலைமையிடம் சிரிய நாட்டின் அந்தியோக் (Antioch) நகரில் இருந்தது. அங்கிருந்த சமயத் தலைவர் (Partiarch of Antioch), கி.பி. இரண்டாம் நூற்றாண்டு முதல் செயல்பட்டு வந்தார். இயேசு கிறித்துவின் நேரிடையான தொண்டர்களோடு இத் திருச்சபை தொடர்புடையது என்பதால், உலகின் முதல் கிறித்துவ சமயத் தலைமையாக சிரியன் திருச்சபைத் தலைமை யைக் கருதலாம். தோமையாரும் கூட இம்மக்களோடு தொடர்பு கொண்டவரே.

சிரியன் கிறித்துவத் திருச்சபையினர் தொடக்கத்தில் நடைமுறையில் அறிமுகப்படுத்திய வழிபாட்டு முறைகளையே

பிற்கால ஐரோப்பியக் கிறித்துவம் ஏற்றுக் கொண்டு, பல மாறுதல்களைச் செய்து கொண்டது. ஐரோப்பிய வழிபாட்டு முறைகளின் மூலமும் வேரும் சிரியன் திருச்சபைச் சடங்குகளி லிருந்தே தொடங்குகின்றன. இவ்வாறான பெருமைகளைக் கொண்டிருந்த சிரியன் திருச்சபையினர், தங்களை தொடக்க காலக் கிறித்துவர் என்றும், தோமையார் வழிக் கிறித்துவர் என்றும், இயேசு காலத்துத் தொண்டர்கள் வழிக் கிறித்துவர் என்றும் பெருமைபட்டுக் கொண்டனர். தமிழகத்தின் மேற்குக் கரையில் கிறித்துவம் விதைக்கப்பட்டதற்கு 400 ஆண்டுகளுக்குப் பிறகே, போர்த்துக்கல் போன்ற நாடுகளில் கிறித்துவம் அறியப் பட்டது. எனவே, கிறித்துவத்தில் போர்த்துக்கீசியரிலும் முதன்மையானவர், மூப்புடையோர் என்ற எண்ணமும் சிரியன் திருச்சபைக்கு உண்டு.

கி.பி. 14ஆம் நூற்றாண்டு வரையில் இவ்வுலக வரலாற்றில் இடம்பெறாத போர்த்துக்கல், இந்தியாவுக்குக் கடல் வழியைக் கண்டுபிடித்ததின் வாயிலாக அனைவரையும் கவர்ந்ததோடு, கடல் வணிகத்தால் புதிய செல்வராயினர். திடீரென பெருக் கெடுத்த செல்வத்தால் திக்குமுக்காடிப் போன போர்த்துக்கல், உரோமையின் கவனத்தையும் ஈர்த்துக் கொண்டது. அது நாள் வரையிலும் போர்த்துக்கல் மன்னர்களைக் கண்டுகொள்ளாம லிருந்த போப்பாண்டவர் கூட, ஐரோப்பிய மன்னர்களைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு, போர்த்துக்கல் மன்னருடன் நெருங் கிய உறவுகள் மேற்கொண்டார். கிறித்துவ சமயத் துறவிகளை மறை பரப்புப் பணிக்கென தங்களது கப்பல்களில் அழைத்துச் செல்லவும், அதற்கான செலவை ஏற்கவும் முன்வந்தபோது, போப்பாண்டவர் மனம் மகிழ்ந்து போனார். போப்பாண்ட வருடன் ஏற்பட்ட உறவால் செருக்குற்ற போர்த்துக்கல் நாட்டு மன்னர், போர்த்துக்கீசியர் வணிகம் செய்யும் நாடுகளுக்குச் சமயத் தொண்டர்களை அனுப்புவதால், அந்தந்த நாட்டிலுள்ள கிறித்துவர்களும் தங்களுக்குக் கடமைப்பட்டவரே என்றும், மன்னரால் அனுப்பப்படும் குருமார்களுக்கும், ஆயர்களுக்கும் கீழ்ப்படிந்து நடக்க வேண்டியது அந்நாட்டுக் கிறித்துவர்களின் கடமையென்றும் கூறினார்.

அக்காலங்களில், தமிழகத்தில் மட்டுமே கிறித்துவர்கள் இருந்ததாலும், மேற்குக் கரையிலிருந்த சிரியன் திருச்சபை

யினரும் போர்த்துக்கல் ஆயர்களுக்குக் கட்டுப்பட்டவர்களே என அறிவித்ததாலும், தமிழகத்திலும் (கேரளம் உள்ளிட்ட) பிற பகுதிகளிலும் வாழ்ந்திருந்த தோமையார் வழிக் கிறித்து வர்களும் கொதிப்படைந்தனர். குறிப்பாகக் கேரளக் கிறித்துவத் தலைமையிலிருந்தவர்கள் ஊன் உண்ணாமலும், மது அருந் தாமலும், கட்டுப்பாடான ஒழுக்கமுறையிலான வாழ்க்கையை மேற்கொண்டிருந்தவர்கள். மாட்டிறைச்சி, பன்றியிறைச்சி என கட்டுப்பாடு இல்லாமல் உண்ணும் போர்த்துக்கீசியர்களை தூய்மையற்றவர்கள் (unclean) என்றும், முறையான வாழ்க்கை முறைகளைக் கடைப்பிடிக்காதவர்கள் என்றும் கருதினர். குறிப்பாக இந்துக்கள் போர்த்துக்கீசியரைத் தீண்டத்தகாத பரங்கியர்[521] என்றும் குருமார்களைப் பாதிரிகள் என்றும் இழித்துரைத்தனர். பாத்ரே[522] (Padre) என்ற போர்த்துக்கீசியச் சொல்லுக்கு குருமார்கள் என்பது பொருளாகும். அதே ஒலிப்பைத் தமிழில் பாதிரி என்று திரித்துக் கொண்டனர். பாதிரி என்ற தமிழ்ச் சொல்லுக்கு குழல்மலர்[523] (trumpet flower) என்பதே பொருளாகும். பாதிரியாருக்கும் பாதிரி மலருக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. பாதிரிமலருக்குப் பாடலம்[524] என்ற பெயரும் உண்டு. (திருப்பாதிரிப் புலியூரில் அமர்ந்துள்ள பாடலீஸ்வரர் பற்றிய செய்தியைக் காண்க). கேரளத்து சிரியன் கிறித்துவப் பெண்கள், இன்றும் கூட நம்பூதிரிப் பிராமணப் பெண்கள் போன்றே உடையிலும் வாழ்க்கை முறைமைகளிலும் நடந்து கொண்டிருப்பவர்கள் என்பதாலும், 500 ஆண்டுகளுக்கு முன்பு எப்படி பிராமண வாழ்க்கை முறையில் வாழ்ந்திருப்பர் என்றும் கருதலாம். போர்த்துக்கீசியருடன், அவர்கள் கிறித்து வர்கள் என்ற போதிலும், திருமண உறவுகளை சிரியன் கிறித்து வர்கள் தவிர்த்தனர்.

---

521. Winslow's Comprehensive Tamil - English Dictionary, p. 746.

521. பறங்கியர்கள் = ஐரோப்பியர்கள். One of European descent, a Frank or Portuguese. Frank - probably derived from brancs - white. Also said as Feringhi.

522. Tamil Lexicon, Vaiyapuri Pillai, University of Madras, 1982.

523. Winslow's Dictionary, p. 758.

524. Ibid.

போர்த்துக்கீசியர்கள், தங்கள் கடலாண்மையையும், செல்வப் பெருக்கையும் கருத்தில் கொண்டும், தங்களிடம் உள்ள கப்பற்படையின் வலிமை கொண்டும், இசுலாமிய வணிகர்களைத் தோற்கடித்த செருக்கின் நிலைப்பாட்டிலும், இந்திய மன்னர்கள் தங்களுடன் நட்புறவு கொள்ள முயன்ற அணுகுமுறைகளைக் கொண்டும், இப்படிப்பட்ட தகுதிகள் ஏதுமில்லாத சிரியன் கிறித்துவர்கள், தங்களது மேலாண்மை யை ஏற்றுக் கொள்ள வேண்டும் என எதிர்பார்த்தனர். சிரியன் கிறித்துவர்களிடம் 20000க்கு மேற்பட்ட போர்ப் பயிற்சி பெற்ற வீறர்கள், இந்திய மன்னர் ஒருவரின் துணையுடன் போர்த்துக் கீசியரை எதிர்கொண்டிருந்தால், போர்த்துக்கீசியர்கள் தங்கள் வணிகத்துக்கும் ஆட்சிக்கும் மூடுவிழா நடத்த வேண்டியிருந் திருக்கும் என்ற உண்மையை போர்த்துக்கீசியர்கள் உணர வில்லை. போர்த்துக்கீசியர்கள் பரந்த சமய நோக்கத்தை விடுத்து, தன்மான எண்ணங்களுக்கு இடமளித்ததே இவ்விருவருக்கு மிடையே ஏற்பட்ட கருத்து வேறுபாடுகளுக்குக் கரணியமாகும். பிரான்சிஸ் சேவியர் சிரியன் கிறித்துவ மக்களிடம் அன்போடு பழகினார். சிரியன் கிறித்துவ ஆயர்கள், குருமார் களுக்கு உரிய மதிப்பினை போர்த்துக்கீசிய ஆட்சியாளர் அளிக்க வேண்டு மென்பதை வலியுறுத்தி, போர்த்துக்கீசிய மன்னருக்குக் கடிதம் எழுதினார்.

போர்த்துக்கீசியர் - சிரியன் கிறித்துவர் உறவு பிரான்சீஸ் சேவியர் காலத்தில் சிறப்பாகவேயிருந்தது. ஏனெனில் அப்போ திருந்த ஆட்சியாளர்களும் சமயத் தலைவர்களும் பிரான்சிஸ் சேவியரை எதிர்த்துப் பேசவோ, அவருக்கு அறிவுரை கூறவோ அறிவும் பெற்றிருந்ததில்லை துணிச்சலும் கொண்டிருந்த தில்லை. சேவியரின் மறைவுக்குப் பின் மீண்டும் சிக்கல் தலை தூக்கியது. கொச்சி அரசருக்குக் கட்டுப்பட்டவர்களே சிரியன் கிறித்துவர்கள் என்றும், அவர்களது கிறித்துவ வாழ்க்கை முறை, புறவினத்தாருடைய (Pagans) நெறிமுறைகளைப் போலவே உள்ளதென்றும், ஐரோப்பிய நடைமுறைகளை அறியாத அறிவிலிகள் என்றும் போர்த்துக்கீசியரின் எண்ணங்கள் இருந் தன. வரலாற்றாசிரியர்கள், சிரியன் கிறித்துவர் - போர்த்துக் கீசியர் கூட்டணி ஏற்பட்டு, அது அரசியல் நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்தால், தென்னிந்தியாவில் வலிமை மிக்கதோர்

கிறித்துவ அரசை நிறுவியிருக்க முடியும் எனக் கருதுகின் றனர்.[525] அந்நல்வாய்ப்பைப் போர்த்துக்கீசியர்கள் தங்களது செருக்காலும் இறுமாப்பாலும் இழந்துவிட்டனர் என்பதே ஆய்வாளர்களின் கருத்துரையாகும்.

அதே வேளையில், சிரியன் கிறித்துவத் திருச்சபையிலும் மாறுதல்கள் தேவைப்பட்டன. சிரியன் கிறித்துவத் தலைமை அந்தியோக் நகரில் இருந்தது. அத்தலைமை உரோமத் திருச் சபைக்குக் கட்டுப்பட்டிருந்தாலும், நடைமுறை அலுவல் களைக் கண்காணிப்பவராக அந்தியோக் நகரத் தலைமைப் பாதுகாவலரே (Patriarch) இருந்தார். கி.பி. மூன்றாம் நூற்றாண்டு முதல், இந்தியக் கிறித்துவத்துக்கும் அவரே தலைவராயிருந் தார். தமிழகத்திலும் கேரளத்திலுமுள்ள கிறித்துவர்களின் ஆயர்களாக, அந்தியோக் நகரிலிருந்த சிரியன் ஆயர்களே இந்தியாவின் பொறுப்பிலிருந்தனர். வழிபாட்டு முறைகளில் சிரியாக் என்னும் மொழியே பயன்படுத்தப்பட்டு வந்தது. (இம்மொழி இயேசு கிறித்து பேசி வந்த அறமாயிக் (Aramaic) என்னும் மொழியோடு தொடர்பு கொண்டது. தற்காலத்துத் தமிழும் மலையாளமும் போல எனக் கொள்ளலாம்). மாறாக, போர்த்துக்கீசியர் இலத்தீன் மொழியைப் பயன்படுத்தி வந்தனர்.

---

525. Early Christianity in India and Pakistan, p. 76.

Discerning men among the Portuguese both among the clergy and laiety had visions of a fusion of the two communities to the advantage of both. The Syrians had excellent military traditions and could put in the field in an emergency a respectable army of 20000 fighting men and with the superior discipline and equipment of the Portugese a combined army could be quite formidable both on land and sea. A Syrian community loyal to the Portuguese could also obviate the need for drawing recruits from Portugal, a tedious process at the time because of the difficulties of communication; in an emergency the Portugeuse were usually at a loss to know how to raise a reliable army in India. Intermarriages and free social contacts between the Portugese and Syrians would have created quite a powerful Christian Kingdom in India. - Early Christianity in India and Pakistan.

இந்தியக் கிறித்துவர்களுக்கு சிரியாக் மொழியோ இலத்தீன் மொழியோ தெரியாது என்பது வேறு செய்திகளாகும்.

ஒரு சிரியன் திருச்சபை ஆயர் இறந்து போனால், அவரிடத்தில் பணியாற்ற மற்றொரு ஆயர் சிரிய நாட்டிலிருந்தே வரவேண்டும். அவ்வாறு அவர் வருவதற்கு இரண்டு மூன்றாண்டுகள் கூட ஆகலாம். இசுலாமியரின் எழுச்சிக்குப் பிறகு பல ஆண்டுகள் கூட ஆயரின்றியே செயல்படும் நிலைமைகள் இருந்தன. இவ்விடைவெளியில், சிரியன் கிறித்துவர்களில் சிலர் தலைமைப் பொறுப்பேற்றிருந்தனர். இவர்களை, கட்டனார் (Cattanar) என அழைத்தனர்.[526] இக்கட்டனார்கள், முறையாக ஆயர்கள் இருந்த காலத்தும் ஆயர்களுக்கு உதவியாய் இருந்தனர். இக்கட்டனார்கள் மரபு வழியாக வருபவர்களாவர். இவ்வாறு ஒவ்வொரு பகுதிகளிலும் கட்டனார்கள் இருந்தனர். ஆயர்கள் மேலை நாட்டைச் சார்ந்தவராக இருப்பதால், தமிழோ மலையாளமோ அவர்களுக்குத் தெரியாத நிலையில், மக்களோடு நேரிடையாக தொடர்புடையவர்கள் இந்தக் கட்டனார்களே ஆவர். இக்கட்டனார்களின் தலைமையாக (Archdecons), பகலோமட்டம்[527] (Pakalomattam) என்ற குடும்பம் மரபு வழியில் பொறுப்பு வகித்தது. ஒரு சமயத்தில் மரபுவழிப் பொறுப்பு என்பது நல்ல நடைமுறைகளை உருவாக்காது என்பது திண்ணம். இவர்களுக்கும் பிராமணர்களுக்கும் பல நூற்றாண்டுத் தொடர்புகள் இருந்ததாலும், பல பிராமணக் குடும்பங்களே சிரியன் கிறித்துவர்களாக மாறியிருந்ததினாலும், பிராமணீயத்தின் பல கூறுகள் சிரியன் கிறித்துவர்களிடமிருந்தன. இவை கிறித்துவத்தின் மெய்யியல் கொள்கைகளோடு முரண்பட்டவைகளாகவும் இருந்தன.

இம்முரண்பாடுகளையெல்லாம் பிரான்சிஸ் சேவியரும் அறிவார். ஆனாலும் இம்முரண்பாடுகளைப் போக்குவதில் காலத்தை வீணடிப்பதை விட, மறை பரப்புப் பணியில் ஈடுபடுவதே அக்காலத்துக்கு ஏற்றதாக அவர் உணர்ந்தார். சிரியன் கிறித்துவ ஆயர் மார் யாக்கோபு அபுனா (Mar Jacob Abuna) என்பாருக்குத் தனது சிறப்பான மதிப்புணர்வுகளை வெளிப்

---

526. Ibid.

527. Ibid.

படுத்தினார். போர்த்துக்கீசியர்கள் அபுனாவிற்குத் தொல்லைகள் கொடுத்து வந்த காலத்தில் சேவியர், அபுனாவிற்காக மன்னருக்கு மடல் ஒன்றை எழுதினார்.[528] அரசு அலுவலர்கள், அபுனாவுக்கு உரிய மேலாண்மையை ஏற்றுக்கொள்ள வேண்டும் எனப் பரிந்துரைத்தார்.



528. "Your Highness should write to him recommending him very much to recommend you to God, for your Highness needs more to be favoused by the Bishop in his prayers than the Bishop needs the temporal favour of your Highness. He has been working much amongst the St. Thomas Christians and now in his old age he is very obedient to the customs of the Holy mother the Church of Rome". Letter sent by Francis Xavier to the King of Portugal.

## மோதல் முற்றியது

மார் யாக்கோபு அபுனா ஆயர், சிரியன் திருச்சபையிலும் மாற்றங்கள் தேவை என்பதை உணர்ந்திருந்தார். இதற்கிடையில் கி.பி. 1545ஆம் ஆண்டில் பிரான்சிஸ்கள் துறவிகள், கிராங்கனூரில் கல்லூரி ஒன்றைத் தொடங்கினர். அங்கு சிரியன் கிறித்துவ இளைஞர்களுக்கு ஐரோப்பிய வழிபாட்டு முறைப் பயிற்சி (Latin rite) அளிக்கப்பட்டது. பயிற்சி முடிந்து, இலத்தீன் மொழி வழி வழிபாட்டு முறையை சிரியன் திருச்சபையினரிடையே விளக்கச் சென்றவர்களை, சிரியன் திருச்சபை பொதுக்குழு சமய விலக்கம் (Excommunication) செய்ததோடு, இலத்தீன் மொழிவழி ஐரோப்பிய வழிபாட்டு முறைகளையும் ஏற்க மறுத்தது.[529] இச்சூழலில், இந்திய மறை பரப்புப் பணி, முற்றிலுமாக இயேசு அவையினர் பொறுப்பில் ஒப்படைக்கப் பட்டது. இவர்கள் தாங்களே கிறித்துவ சமயத்தின் மேலாண்மை பெற்றவர்கள் என்ற எண்ணத்தில் இருந்தனர். இதனால் ஐரோப்பிய - சிரியன் திருச்சபைகளுக்கு இடையே பிளவுகள் வெடிக்கத் தொடங்கின.

கி.பி. 1549ஆம் ஆண்டில் அபுனா ஆயர் இறந்து போனார். இந்நிலையில் புதிய ஆயராக மார்ஜோசப் சிரியன் திருச்சபைத் தலைமையால் நியமிக்கப்பட்டு, இந்தியாவுக்கு அனுப்பி வைக்கப்பட்டார்.[530] பாத்ரவாதோ (Padrovado) ஒப்பந்தத்தின் படி, புதிய ஆயரை நியமிக்கத் தாங்களே உரிமை பெற்றவர்கள் என இயேசு அவையினர் முழங்கினர். ஆனால் சிரியன் திருச்சபையினரோ, இயேசு அவையின் சமயமாற்றம் செய்த

529. Ibid.
530. Ibid.

**இந்தியக் கிறித்துவர்கள் மீது தங்கள் மேலாண்மையை வைத்துக் கொள்ளட்டும் என்றும், பாத்ரவாதோ ஒப்பந்தம் தங்களைக் கட்டுப்படுத்தாது என்றும் தெரிவித்துவிட்டனர்.**[531] கி.பி. 1556ஆம் ஆண்டு நவம்பரில், மார்ஜோசப் என்ற சிரிய நாட்டு ஆயர் இந்தியாவுக்கு அனுப்பி வைக்கப்பட்டார். போர்த்துக்கீசியர்கள் அவரை, கோவா துறைமுகத்தில் வலுக் கட்டாயமாக இறக்கி, சிறை வைத்தனர்.[532] இயேசு அவையைச் சார்ந்த துறவிகள், மார்ஜோசப்பிடம் பல்வேறு முறைகளில் பேச்சுவார்த்தை நடத்தினர்.

கப்பலில் வந்து கொண்டிருப்பதாக அறிவிக்கப்பட்ட ஆயர் மார்ஜோசப், வராதது கண்ட சிரியன் திருச்சபையினர் திகைப்புற்றனர். அவர் கோவாவில் சிறைபிடிக்கப்பட்ட செய்தி அவர்களுக்குத் தெரியவில்லை. இதற்கிடையில் மார்ஜோசப் ஆயரை குறுக்குவழியில், மடக்கி, சிரியன் திருச்சபையின் கொள்கை கிறித்துவத்துக்கு எதிரானது என மெய்ப்பித்து விட, இயேசு அவையினர் முயன்றனர். ஆயரிடம் பன்முறை பேசிய இயேசு அவையின் குருவானவர் **அண்டோனியே ட போர்ட்டோ** (Father Antonio da Porto) என்பார், தான் ஆயரிடம் பேசிய வழியில் தாம் அறிந்து கொண்ட செய்தியை, போர்த்துக்கல் மன்னருக்கு மடல் ஒன்றில் வெளிப்படுத்தினார். அம்மடலின் சுருக்கமாவது,[533]

"நான் விவிலியத்தின் பழைய - புதிய ஏற்பாட்டுப் பகுதிகள் பலவற்றையும் கிறித்துவ சமயத்தின் மெய்யியல் (doctrines) கூறுகளையும் பற்றி மார்ஜோசப் ஆயரிடம் பேசினேன். நம்மைக் காட்டிலும் உள்ளார்ந்த நற்செய்தி விளக்கங்களை ஆயர் கூறுகிறார். சிரியன் திருச்சபையின் முன்னோர்கள், நற்செய்தி அறிவிக்கப்பட்ட பகுதிகளில் வாழ்ந்திருந்தவராதலால், நம்மிலும் பல நுட்பமான செய்திகளை அவர்கள் அறிந்துள்ளனர். கன்னி மறியாளைப் பற்றியும், ஏழு சமயக் கடமைகள் (Sacreuments) பற்றியும் தெளிவான அறிவைக் கொண்

531. Ibid.
532. Ibid.
533. Ibid.

டுள்ளனர். நமது நம்பிக்கைக்கும் அவர்களுக்கும் துளியும் வேறுபாடு காண இயலவில்லை. சிரியன் திருச்சபையினர், தூய்மையான கிறித்துவ வாழ்வைக் கடைப்பிடித்து வருகின் றனர். இசுலாமியர்களே கூட இவர்களின் சமய வாழ்க்கை முறைகளைக் கண்டு வியப்படைகின்றனர். சிரியன் திருச்சபை யின் சமயத் தலைவர்கள் ஊன் உண்பதில்லை, உண்ணாநோன்பு (fasting) நாட்களிலும் மீன் உண்பதில்லை. மது அருந்துவதில்லை. ஒரு நாளின் பெரும்பகுதியை நற்செய்தியோடு சமய நூல் களைப் படிப்பதிலும், தொழுகை (worship) நடத்துவதிலும், வேண்டுதல்கள் (prayer) செய்வதிலும் செலவிடுகின்றனர். தனிப் பட்ட முறையில் சிலர் இலத்தீன் மொழியை கற்றறிந்துள்ளனர். சமய நம்பிக்கைகள், கருத்துகள் தொடர்பாக, சிரியன் திருச் சபையினர் தெளிவாக உள்ளனர். அவர்கள் நம் ஆளுகையின் கீழ் வர மறுக்கிறார்கள் என்ற நிலைப்பாட்டைத் தவிர அவர் களிடம் குறைகாண ஒன்றுமில்லை".

இயேசு அவைக் குருவானர் ஒருவர் எழுதிய மடலே, சிரியன் திருச்சபையினரின் செயல்களைப் புகழ்கின்றது என்ப தால், இயேசு அவையினர் மேலாண்மை மனப்பான்மையே இவ்விரு திருச்சபையினரிடையே தோன்றிய கருத்து வேறுபாடு களுக்குக் கரணியம் என்று கருதலாம். 1500 ஆண்டுகளாகக் கட்டுக் கோப்புடன் இயங்கி வரும் சிரியன் திருச்சபையை ஒரே நாளில் தங்கள் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர எண்ணிய இயேசு அவையினரின் செயலை, பிரான்சிஸ் சேவியர் உள்ளிட்ட இயேசு அவையினரே ஏற்றுக் கொள்ளவில்லை என்ற செய்தி களும் அறியக் கிடக்கின்றன.

இதனிடையே புதிதாகச் சிரியன் ஆயர் ஒருவர் சிரியன் திருச்சபையினரிடையே தோன்றினார். அவர் எவ்வழியாக வந்து சேர்ந்தார் என அறிய இயலவில்லை. தமது மக்களிடம், சிரியன் திருச்சபையின் மரபு வழிக் கொள்கைகளையும் வழிபாட்டு முறைகளையும் விளக்கிக் கூறிவந்தார். இச்செய்தி போர்த்துக்கீசியர்களின் திட்டங்களைத் தவிடு பொடியாக்கி விட்டது. புதிய ஆயரைக் காட்டிலும் பழைய ஆயர் மார்ஜோசப் மேலானவர் (Mar Joseph is a lesser evil than the newly seen Bishop) என்று கருதினர்.[534] எனவே, மார்ஜோசப் ஆயரை போர்த்துக்

534. Ibid.

கீசியர் விடுதலை செய்தனர். மார்ஜோசப் தமது மக்களிடையே சென்று சேர்ந்த போது, புதிய ஆயரை என்ன செய்வது என்ற கேள்வி எழுந்தது. மார்ஜோசப் புதிய ஆயரைத் திருப்பியனுப் பினார்.

சிரியன் திருச்சபைக்குச் சீர்திருத்தங்கள் தேவைப்படுவதை யுணர்ந்த மார்ஜோசப், அதற்கான நடவடிக்கைகளில் இறங் கினார். இந்த நடவடிக்கைகளின் போக்கு விரைவாக இல்லை யென்றும், உடனடியான மாற்றங்கள் தேவையென்றும் இயேசு அவையினர் வலியுறுத்தி, **கார்னிரோ** (Fr. Carneyro) என்ற தங்கள் சமயப் பணியாளரை, சிரியன் மக்கள் வாழும் பகுதிகளுக்கு அனுப்பி, ஐரோப்பிய முறைகள் பற்றிய விளக்கங்கள் அளிக்க ஏற்பாடு செய்தனர். இதனால் வெறுப்புற்ற சிரியன் மக்களும் ஆயரும், கார்னிரோவை திரும்பிப் போகுமாறு கேட்டுக் கொண் டனர். கொச்சி நகரை வந்தடைந்த கார்னி ரோவை, அடை யாளம் தெரியாத ஒருவர், அம்பெய்து காயப் படுத்தினார்.[535] போர்த்துக்கீசியர்கள், மார்ஜோசப் ஆயர்தான் இக்கொலை முயற்சியில் ஈடுபட்டதாக குற்றம் சாட்டினர். மேலும் பல குற்றச் சாட்டுகளையும் அடுக்கி, உடனடியாகப் போர்த்துக்கல் நாட்டு மன்னரைச் சென்று பார்க்குமாறு பணித்தனர். ஆயர் இவர்களுடைய கோரிக்கையை ஏற்றுக் கொண்டார்.

மார்ஜோசப் லிஸ்பனுக்குக் கப்பலேறினார். மார்ஜோசப் மிகச்சிறந்த சமயவியல் அறிஞர். புகழ்மிக்க சிந்தனையாளர். சமயக் கொள்கைகளில் நேருக்கு நேர் அவரிடம் வாதிட்டு வெல்வதென்பது இயலாதவொன்று. இம்முயற்சிகளில் தோற்றுப் போன போர்த்துக்கீசியர் வேறுவழியின்றி அவரைப் போர்த்துக் கல்லுக்கு அனுப்பி வைத்தனர். அங்கு அவர் மனமாற்றம் செய்யப்படுவார் என்றும் நம்பினர். லிஸ்பன் நகர் சென்ற டைந்த ஆயர், அங்கு **கார்டினல் ஹென்றியை** (Cardinal Henry)ச் சந்தித்தார். அவருடன் உரையாடிய மார்ஜோசப், தனது திருச்சபையின் கொள்கை விளக்கங்களை எடுத்துரைத்தார். மார்ஜோசப் ஆயரின் அறிவாற்றலையும், கொள்கை விளக்கங் களையும் அறிந்த கார்டினல், மனநிறைவு கொண்டு, **அரசி கேத்தரினுக்கு** ஆயரை அறிமுகம் செய்து வைத்தார். அரசியாரும்

535. Ibid.

ஆயரின்பால் பரிவு கொண்டார். அவரை உரோமைக்கும் அனுப்பி வைக்க வேண்டும் என்ற போர்த்துக்கீசிய கோவா நகரத்து ஆளுநரின் கோரிக்கையைப் புறந்தள்ளி, ஆயரை மீண்டும் இந்தியாவுக்கு அனுப்பி வைக்க ஏற்பாடு செய்தார். ஆயரின் சமயப் பணிகளில் குறுக்கிடக் கூடாதென்றும், சிரியன் மக்களிடம் தேவையற்ற மோதல்களை உருவாக்க வேண்டா மென்றும் கோவா ஆளுநருக்குப் போர்த்துக்கீசிய அரசு அறிவுரை வழங்கியது.[536]

கி.பி. 1565ஆம் ஆண்டு மார்ஜோசப் இந்தியா திரும்பி னார். அரசின் ஆணையைக் கண்ட போர்த்துக்கீசியர் அதிர்ச்சி யுற்றனர். எப்படியும் ஆயரைப் பழி வாங்கத் துடித்த கோவா ஆளுநர், அதற்கான காலத்தை எதிர்பார்த்துக் காத்திருந்தார். சின்னாட்களில், மார்ஜோசப் மீது புதிய குற்றச்சாட்டுகளைச் சுமத்தி அம்மடலை, உரோமைக்கு அனுப்பி வைத்தனர். போப்பாண்டவர், கி.பி. 1567ஆம் ஆண்டு, கோவாவில் கூட விருந்த முதல் குழுக் கூட்டத்தில், மார்ஜோசப் தனது விளக்கங் களை அளிக்க வேண்டும் என ஆணையிட்டார். கூட்டத்தில் ஆயர் மீதுள்ள குற்றச்சாட்டுகள் மெய்ப்பிக்கப்பட்டதாக அவர்களே முடிவு செய்து, ஆயரை மீண்டும் லிஸ்பனுக்கும் உரோமைக்கும் செல்லுமாறு பணித்தனர்.[537]

மார்ஜோசப் லிஸ்பன் சென்றார். கோவா கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட குற்றச் சாட்டுகளுக்கு விளக்கமளித்தார். இயேசு அவையினருக்கு இந்தியாவைப் பற்றியும், இந்திய நாட்டுப் பண்பாட்டு ஆழம் பற்றியும் புரியவில்லை யென்றும், இந்தியர்கள் தோமையார் வழிக் கிறித்துவர்கள் என்றும், இந்திய வழிப் பண்பாட்டில் அவர்கள் வாழ்க்கை முறை அமைந் திருப்பதாகவும், சமூக நடைமுறைகளுக்கும் சமயத்துக்கும் தொடர்பில்லையென்றும், இந்தியக் கிறித்துவர்களை ஐரோப் பிய வாழ்க்கை முறைகளுக்குத் திருப்ப இயேசு அவையினர் மேற்கொள்ளும் முயற்சிகள், கிறித்துவ சமய வளர்ச்சியை தடுத்து நிறுத்திவிடும் என்றும், இந்தியர்களின் எண்ணங்களை சரிவரப் புரிந்து கொள்ளாத போர்த்துக்கீசியர்களால், இந்தியா

536. Ibid.

537. Ibid.

வில் கிறித்துவ சமயத்தை பரப்புவது இயலாது என்பதோடு தற்போதுள்ள நடைமுறைகளும் பாழ்பட்டுப் போகுமென்றும், தனது திறமையான பேச்சாலும் அணுகுமுறையாலும் எடுத்துரைத்து போர்த்துக்கீசிய சமயத் தலைமை மற்றும் அரசு வட்டாரங்களைக் கவர்ந்தார். மார்ஜோசப் மீது குற்றமேது மில்லை என அறிந்த அரசு, ஆயரை கோவாவில் கூறப்பட்ட குற்றச்சாட்டுகளினின்றும் விடுதலை செய்தது.[538]

உரோமை சென்ற மார்ஜோசப் ஆயரின் அறிவுத் திறமையைக் கண்டு வியந்த போப்பாண்டவர், அவரை கார்டினல் என்ற உயர் பொறுப்புக்கும் உயர்த்த எண்ணினார். இயேசு அவையினரும் கோவா ஆளுநரும் கூறிய குற்றச் சாட்டுகளின்றும் ஆயரை விடுவித்தார். போப்பாண்டவரின் நன்மதிப்பையும் நல்லாசியையும் பெற்றுக் கொண்டு, ஆயர் இந்தியா திரும்பினார். கி.பி. 1550 முதல் 1565 வரையிலான 15 ஆண்டுகளில், மார்ஜோசப் என்ற மாபெரும் சமய அறிஞரை, கோவாவிலிருந்த போர்த்துக்கீசியர்களும் இயேசு அவையினரும், ஐரோப்பாவுக்கும் இந்தியாவுக்குமென பந்தாடிக் கொண்டிருந்தனர். இதனால், தமக்குரிய ஆயர் பணிகளை மார்ஜோசப் ஆயரால் சரிவர செய்ய இயலாமற் போயிற்று. முதல் முறையாக லிஸ்பனுக்கு மார்ஜோசப் சென்ற போது, மாற்று ஆயர் ஒருவரை உடனடியாக அனுப்பி வைக்குமாறு அந்தியோக் நகருக்குச் செய்தியனுப்பப்பட்டது. சிரியன் திருச்சபைத் தலைமை மார் அபிறகாம் என்பாரை அனுப்பி வைத்தது. இவர் மார்ஜோசப் அளவுக்கு அறிஞர் இல்லையென்றாலும், ஓயாது உழைக்கவும், திறமையாகப் பேசவும் அறிந்தவர். போர்த்துக்கீசியர்கள் என்னென்ன வகைகளில் சூழ்ச்சியில் ஈடுபட்டனரோ, அதே முறையை இவரும் கையாண்டவர். கடற்கரையோரங்களிலிருந்து விலகி உள்நாட்டில் சேரா என்ற பகுதிக்கு அபிறகாம் சென்றுவிட்டார்.[539] அப்பகுதி வேளாண் குடி கிறித்துவர்கள் வாழ்ந்த பகுதியாகும். இதனால் போர்த்துக்கீசியரின் தொல்லைகள் தொடரவில்லை.

இதற்கிடையில் மார்ஜோசப் ஐரோப்பாவிலிருந்து இந்தியா திரும்பிய போது, மார் அபிறகாமுக்கு என்ன பொறுப்பளிப்பது

538. Ibid.

539. Ibid.

எனத் தெரியவில்லை. அபிறகாம், கேரள சிரியன் திருச்சபையை இருபகுதிகளாக்கி (Two dioceses) அதில் ஒரு பகுதிக்குத் தம்மை ஆயராக இருக்க அனுமதிக்க வேண்டும் என விரும்பினார். இவ்வாறு புதிய சமயப் பகுதியை உருவாக்கிக் கொள்ளும் உரிமை மார் ஜோசப்புக்கு இல்லை என்பதோடு, இரு ஆயர்கள் ஒரு திருச்சபையை வழி நடத்துவது இயலாதது என்பதை யுணர்ந்த மார்ஜோசப், மீண்டும் அபிறகாமை சிரியா சென்று, தலைமையிடம் கலந்து வருமாறு அனுப்பிவைத்தார். மார் அபிறகாம் செய்வதறியாது நிற்கையில், போர்த்துக்கீசியர் அபிறகாமைச் சிறைபிடித்து அவர்மீது அடுக்கடுக்கான குற்றச் சாட்டுகளைச் சுமத்தி, அவரை லிஸ்பன் நகருக்கு அனுப்பி வைத்தனர்.[540] வழியில் ஏதோவொரு துறைமுகத்தில் நின்றிருந்த கப்பலிலிருந்து இறங்கிய, அபிறகாம் சிரிய நாட்டுக்குத் தப்பிச் சென்றுவிட்டார். சிரியன் திருச்சபைத் தலைமை, அபிறகாமை உரோம் நகருக்கு அனுப்பி வைத்தது. போப்பாண்டவர், முடிவில்லாது நீண்டு கொண்டே போகும் இச்சிக்கலுக்கு, சிரியன் தலைமையே தீர்வு கண்டு, அதனை கோவா கவர்ன ருக்குத் தெரிவித்து விடும்படியும், கோவா கவர்னர் அதனைச் செயல்படுத்தும்படியும் ஆணையிட்டார்.[541]

சிரியத் தலைமை, மலபார் திருச்சபையின் ஆளுமையை இரண்டாகப் பிரித்து, அங்கமலி (Angamali) என்ற புதிய மறைப்பகுதியை (Diocese) உருவாக்கி, அதன் ஆயராக மார் அபிறகாமை அமர்த்தியது. இதற்கான போப்பாண்டவரின் ஆணையும், சிரியத் தலைமையின் அறிவிப்பும், கோவா ஆளுநருக்கும், மார்ஜோசப் ஆயருக்கும் அனுப்பி வைக்கப் பட்டன. அபிறகாம் இவ்வாணைகளை எடுத்துக் கொண்டு கி.பி. 1568ஆம் ஆண்டில் கோவா வந்திறங்கிய போது தான், மார்ஜோசப் இரண்டாம் முறையாக ஸ்பெயின் சென்றிருந்தார். எந்தவொரு ஆயரையும் ஏற்றுக் கொள்ளும் நிலையிலிருந்த சிரியன் மக்களுக்கு அபிறகாமின் வருகை மகிழ்ச்சியைத் தந்தது.

எப்போதும் வல்லடி செய்து கொண்டிருந்த போர்த்துக் கீசியர்கள், அபிறகாமின் இரு ஆணைகளையும் பார்த்தனர்.

---

540. Ibid.

541. Ibid.

சிரியத் திருச்சபை, அபிறகாமை ஆயராக நியமித்த கடிதம் போலியானது என்றும் அதை ஏற்பதற்கில்லையென்றும் கூறிவிட்டனர். போப்பாண்டவருக்குத் தவறான தகவல்களைக் கொடுத்து, போப்பாண்டவரை ஏமாற்றி இந்த ஆணை பெறப் பட்டிருப்பதாகவும், இதில் உண்மை பொய் எதுவெனக் கண்டு பிடிக்கப்படும் வரையில் அபிறகாமை ஆயராக ஏற்க முடியாது என்றும் கூறி, அபிறகாமை தொமினிக்கன் மடம் ஒன்றில் சிறை வைத்துவிட்டனர். அபிறகாம் திகைத்துப் போனார். உண்மை யான மடல்களைக் காட்டிய பிறகும் வேண்டுமென்றே பொய்க் கரணியங்களைக் கூறி தம்மைச் சிறைப்படுத்தியது போர்த்துக் கீசியரின் கீழ்த்தரமான செயல் என்று கருதினார்.[542]

பாம்பின் கால் பாம்பறியும் என்பதைப் போல, சூழ்ச்சி யைச் சூழ்ச்சியால் வெல்ல முடிவு செய்த அபிறகாம், கோவா விலிருந்து இரவோடிரவாகத் தப்பி கொச்சி வந்தடைந்தார். கொச்சியிலுள்ள போர்த்துக்கீசிய துணை ஆணையர், இவ்விரு மடல்களையும் கண்டு, கோவாவில் நடந்த செய்திகளையறி யாமல், அவரைச் சேரா (Serra) பகுதிக்குச் செல்ல அனுமதி யளித்தார். அதற்கான பயண ஏற்பாடுகளையும் நிறைவாகச் செய்து கொடுத்தார். சேரா சென்றடைந்த அபிறகாம், மலபார் பகுதியின் தலைமை ஆயராகப் (Archbishop) பொறுப்பேற்றுக் கொண்டார். அங்கமலி (Angamali)ப் பகுதியையும் தனது சமய ஆட்சிக்குட்படுத்திக் கொண்டார். இப்பகுதி, போர்த்துக் கீசியர்கள் நுழைய இயலாத மலைப் பகுதியாகும். அபிறகாம் கொச்சியை விட்டு விலகிப் போனபிறகு, கோவாவிலிருந்து அபிறகாமைக் கைது செய்யும்படி ஆணை வந்து சேர்ந்தது.

அபிறகாமை எப்படியும் பழிவாங்கி விட வேண்டும் என்ற எண்ணத்தில் போர்த்துக்கீசியர்கள் இருந்தனர். கி.பி. 1575ஆம் ஆண்டில் கோவாவில் இரண்டாவது சமயக் கூட்டம் (Second council) கூட்டப்பட்டது. அக்கூட்டத்தில் கலந்து கொள்ளும் படி, கோவா நகரத்து போர்த்துக்கீசியப் பேராயர் (Arch bishop), அபிறகாம் என்ற சிரியன் திருச்சபைப் பேராயருக்குத் தன் கைச்சாத்திட்ட மடல் ஒன்றை அனுப்பினார். அம்மடலில், பேராயர் அபிறகாம் அக்கூட்டத்தில் தவறாது கலந்து கொள்ள

542. Ibid.

வேண்டுமென்றும், அங்கமலிப் பேராயம் (Archdiocese), கோவா வுக்குக் கட்டுப்பட்டதே என்ற கருத்து வலியுறுத்தப்பட் டிருந்தது.[543]

கூட்டம் என்ற பெயரால் தம்மை மீண்டும் கைது செய்யக் காத்திருக்கும் சூழ்ச்சியை அறிந்த பேராயர் அபிறகாம், திருத்தந்தை போப்பாண்டவருக்குத் தனது நிலை பற்றிய விளக்கங்களை அளித்து மடல் ஒன்றை எழுதியனுப்பி, தாம் ஏன் கூட்டத்தில் கலந்து கொள்ள இயலாது என்பதற்கான கடந்த கால நிகழ்வுகளையும் குறிப்பிட்டிருந்தார். மேலும் கொச்சி அரசரை அணுகி, திருத்தந்தை போப்பாண்டவருக்கு அரசு சார்பில் மடல் ஒன்றை விடுக்கவும் கேட்டுக் கொண்டார். கொச்சி அரசர், போப்பாண்டவருக்கு எழுதிய மடலில், மார் அபிறகாம் திருத்தந்தையின் நம்பிக்கைக்கும் கீழ்ப்படிதலுக்கும் உரிய தாழ்மையான மகன் என்றும், கோவாவில் கூட்டப்படும் கூட்டத்தில் மார் அபிறகாமைக் கைது செய்து சிறையில் அடைக்கப் போர்த்துக்கீசியர்களும், இயேசு அவையினரும் திட்டமிட்டுள்ளனர் என்றும், கூட்டத்தில் கலந்து கொள்ளும் அபிறகாமின் உயிருக்குப் பாதுகாப்பில்லையென்றும் விளக்கி, போர்த்துக்கீசியர்களின் முறைகேடான இச்செயல்களைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்றும், கேட்டுக் கொண்டார்.[544]

கி.பி. 1585ஆம் ஆண்டில் மூன்றாவது சமயக் கூட்டத்தை கோவாவில் கூட்டினர். அபிறகாமை அக்கூட்டத்துக்கு அழைத்தனர். பேராயருக்கு உரிய அனைத்து சிறப்புகளும் வழங்கப்படும் என்ற உறுதியும் அளிக்கப்பட்டது. வலிஞானி (Valignani) என்ற குருவானவர் பேராயரின் பயணத்துக்கு உதவி யாளராக நியமிக்கப்பட்டார். (வலி ஞானி என்ற சொல்லுக்கு பெரிய அறிஞர் என்பதே மலையாளத்தில் பொருளாகும்). கூட்டத்தில் எதிர்பார்க்கப்பட்ட மாறுதல்களை, சிரியன் திருச் சபையில் செயல்படுத்த வேண்டும் என்று முடிவு செய்யப் பட்டது. பின்னர், இச்சீர்திருத்தங்களை அபிறகாம் மேற்கொள்ள வில்லை என்ற புதிய குற்றச்சாட்டை இயேசு அவையினர் எழுப்பி, போப்பாண்டவருக்கு மடல் எழுதினர். திருத்தந்தை மூன்றாம் கிளைமெண்ட் (Pope Clement III), அபிறகாம் மீது

---

543. Ibid.

544. Ibid.

உரிய மேல் நடவடிக்கை மேற்கொள்ளுமாறு கோவா பேராய ருக்கு ஆணை பிறப்பித்தார்.[545] இது போன்ற ஆணையை எதிர் பார்த்திருந்த இயேசு அவையினர், பேராயர் மீது நட வடிக்கை மேற்கொள்ளு முன்னர் அபிறகாம் உடல் நலம் குன்றினார். இதனால் திருத்தந்தையின் ஆணையை அனுப்பி வைக்காமல் சில காலம் நிறுத்தி வைத்தனர். இறுதியில் அவ்வாணையை எதிர்கொள்ளாமலேயே பேராயர் மார் அபிறகாம் கி.பி. 1597ஆம் ஆண்டில் இயற்கையெய்தினார்.[546]

கி.பி. 1597 முதல் 1640 வரையில் தொடர்ந்து நடைபெற்ற இழுபறியான போராட்டங்கள், சிரியன் திருச்சபை - இயேசு அவையினரிடையே மேலும் மனக் கசப்புகளையே தோற்று வித்தன. இக்கால அளவுகளில் நடைபெற்ற நிகழ்வுகள் யாவும், புகழ் மிக்க கிறித்துவ சமயத்தின் பெருமைக்குக் களங்கம் ஏற்படுத்துபவைகளே ஆகும். கி.பி. 1653ஆம் ஆண்டில், சிரியன் திருச்சபையின் தலைவரே (Patriarch) மைலாப்பூரில் வந்திறங்கி னார். இச்செய்தி சிரியன் கிறித்துவர்களுக்குப் பெரு மகிழ்வை ஏற்படுத்தியது. அவர் கொச்சிக்குப் புறப்பட்டுவிட்டதாக வந்த தகவலையடுத்து, சிரியன் கிறித்துவப் படையினர் (Syrian Army) 40000 பேர் உள்ளிட்ட ஓரிலக்கத்துக்கும் (1,00,000) கூடுதலா னோர் கொச்சித் துறைமுகத்தில் வரவேற்கக் குழுமினர். இதனை யறிந்த போர்த்துக்கீசியர், தலைவர் வந்த கப்பலை நிலத்துக்கு வரவிடாமல், கடலிலேயே நங்கூரமிடச் செய்து நிறுத்தி வைத் தனர். மேலும் போர்த்துக்கீசியப் படையினர் தங்களது பீரங்கி, துப்பாக்கி போன்ற போர்க் கருவிகளை, சிரியன் கிறித்துவர்கள் மீது திருப்பி வைத்து, போர்ச் சூழலை உருவாக்கினர். இதற் கிடையே சிரியன் திருச்சபைத் தலைவர் கப்பலில் கொலை செய்யப்பட்டு அவரது உடல் கடலில் எறியப்பட்டு விட்டது என்ற ஊகச் செய்திகள் பரவின. இச்செய்தியால் வெகுண் டெழுந்த சிரியன் கிறித்துவர்கள், போர்த்துக்கீசிய கோட்டை யைத் தாக்க முயன்றனர். நிலைமை கட்டுமீறிப் போவதை யுணர்ந்த சிரியன் கிறித்துவத் தலைவர்களில் சிலர், கூட்டத் தினரை அமைதிப்படுத்தி மட்டஞ்சேரிப் பக்கம் அழைத்துச் சென்றனர்.[547]

---

545. Ibid.

546. Ibid.

547. Ibid.

மட்டஞ்சேரி தேவாலயத்தின் சிலுவை (குறுக்கம்) அக்காலத்தில் புகழ் பெற்றது. மட்டஞ்சேரியிலிருந்த கூட்டம், அச்சிலுவையின் மீது ஒவ்வொருவரும் கையை வைத்து, கோவாவினுடையவும், போர்த்துக்கீசியருடையவும் ஆளுமையை ஏற்றுக் கொள்ள மாட்டோம் என்றும், சிரியன் திருச்சபையில் தலையிடும் இயேசு அவையினரின் செயல்பாடுகளைப் புறந்தள்ளுவோம் என்றும் உறுதி பூண்டனர். அதன்பிறகு யாரோ ஒருவர் கொடுத்த அறிவுரையின் படி, சிலுவையையொரு நூலில் கட்டி கழுத்தில் அணிந்து கொள்வது என்று முடிவு செய்தனர். இந்நிகழ்ச்சியைச் சிலுவைப் புரட்சி என்று (Revolt of the Coonen cross) குறிப்பிடுவர்.[548] பின்னர், மலபார் பகுதி சிரியன் திருச்சபையினர், கட்டனார்கள் என்ற மரபு வழித் தலைவர்கள் பன்னிருவரைத் (இயேசு தேர்வு செய்து தொண்டவர்களைப் போல) தங்களது அறிவுரையாளர்களாகத் தேர்வு செய்து கொண்டனர். இப்பன்னிருவரும் அப்போதைய தலைமைக் குழு (Archdeacon) தாமஸ் என்பவரையே ஆயராகத் தேர்வு செய்து கொண்டனர். ஆயர் தாமஸ், மார்தோமா I (Mar Thoma I) என்ற பட்டப் பெயரில், தம் மக்களின் முதல் இந்திய ஆயராகப் பொறுப்பேற்றுக் கொண்டார். இதற்குப் பிறகு புதிய பார்வையிலும் நடைமுறைகளிலும், புதுக்காலம் (Modern age) நோக்கி சிரியன் திருச்சபை முன்னேறத் தொடங்கியது.[549]

சிலுவைப் புரட்சி பற்றிய செய்தி உரோமைக்கு எட்டியதும் திருத்தந்தை ஏழாம் அலெக்சாந்தர், கார்மேல் மடத்தைச் சார்ந்த துறவிகள் அடங்கிய குழுவொன்றை கொச்சிக்கு அனுப்பி வைத்தார். கி.பி. 1657ஆம் ஆண்டில் கொச்சி வந்தடைந்த அக்குழுவின் ஆயர் மார்தோமாவைச் சந்தித்துப் பேசினர். சிரியன் திருச்சபையினர், தாங்கள் எப்போதும் போப்பாண்டவரின் ஆளுகைக்குட்பட்டவர்களே என்பதை மீண்டும் வலியுறுத்தி கடந்த நூற்றாண்டில் போர்த்துக்கீசியரும் இயேசு அவையினரும் தங்களை அடிமைப்படுத்த நினைத்த நிகழ்வுகளை எடுத்துக் கூறி, என்றும் இயேசு அவையினரின் ஆளுமையையோ, அறிவுரைகளையோ, சிரியன் திருச்சபை ஏற்றுக்

548. Ibid.

549. Ibid.

கொள்ளாது என்று திட்டவட்டமாகத் தெரிவித்து, போப் பாண்டவரால் ஒறுக்கப்பட வேண்டியவர்கள் இயேசு அவை யினரே என்பதை அறிவித்தனர். இயேசு அவையினர் இயேசுவின் நற்செய்தியை அறிவிக்க வந்து, அப்பணிகளை விடுத்து, தங்களை இன்னல்படுத்திய வரலாறுகளை எடுத்துரைத்தனர். இயேசு அவைத் துறவிகளில் பிரான்சிஸ் சேவியர் போன்றவர்கள் தங்களுடன் கொண்டிருந்த நல்லுறவைப் பற்றியும் கூறினர். போப்பாண்டவரின் குழுவினர் சிரியன் மக்களின் மனநிலையை அறிந்து மகிழ்ச்சியடைந்தனர்.[550]

இச்சூழலில் போர்த்துக்கீசியரின் அரசியல் செல்வாக்கு குறையத் தொடங்கியது. உலாந்து நாட்டுக்காரர்கள் (டச்சு) கோவாவையும் கொச்சியையும் கைப்பற்றிக் கொண்டு, போர்த் துக்கீசிய (இயேசு அவை உள்ளிட்ட)த் தொடர்புடையோர் அனைவரையும் துரத்தியடித்தனர். உலாந்து நாட்டுக்காரர்கள் கத்தோலிக்கத் திருச்சபையின் தலைமையை வெறுப்பவர்கள் என்பதால், ஐரோப்பிய சமயப் பணியாளர்களாக வந்த கத்தோலிக்கச் சமயப் பரப்பாளர்களை விரட்டினர். இயற்கை யாகவே போர்த்துக்கீசியரின் தாக்குதலிலிருந்து விடுபட்ட சிரியன் திருச்சபையினர் மகிழ்வுற்றனர். டச்சுக்காரர்கள், இந்திய சிரியன் திருச்சபையினர் மீது எந்த தாக்குதலையும் தொடுக்க வில்லை. மாறாக, இத்திருச்சபையின் ஒரு பகுதியினரை சீர்திருத்தச் சபையில் (Protestant) மாற்ற முயற்சிகள் மேற்கொண்டனர்.[551]

இதற்கிடையே, சிறிது காலம் காணாமற் போயிருந்த இயேசு அவையினர் மீண்டும் ஒவ்வொருவராக வந்து பணி களைத் தொடர்ந்தனர். கார்மேல் அவையினரை போப்பாண் டவர் தூதுக்குழுவாக அனுப்பியதிலிருந்து, அவர்களும் இந்தியாவில் தமது மையங்களை ஏற்படுத்திக் கொண்டனர். கி.பி. 1698ஆம் ஆண்டில் விரப்போலி (Verapoly)யில் அனைத்து கத்தோலிக்கர்களுக்குமென ஒரு ஆயர் நியமிக்கப்பட்டார். கொச்சியில் சிரியன் ஆயரும், திருவாங்கூரில் (லத்தீன் பிரிவு) ஓர் ஆயரும் பணியாற்றினர். விரப்போலியில் இருந்த ஆயரு டைய மேலாண்மையை ஏற்றுக் கொள்ளாத இயேசு அவை

550. Ibid.

551. Ibid.

யினர், கிராங்கனூரில் (Cranganoor) தங்களுக்கென ஓர் ஆயரை ஏற்படுத்திக் கொண்டனர்.

கி.பி. 1838ஆம் ஆண்டில், போப்பாண்டவர் ஏற்கனவே தடை செய்திருந்த இயேசு அவையினரை, இந்தியப் பகுதிகளில் செயல்படாவண்ணம் தடுத்து நிறுத்தினார். போப்பாண்டவரின் ஆணைப்படி (Papal Bull Multa Proceclare) பாத்ரோவேதா (Padrovado) ஒப்பந்தம் நீக்கப்பட்டுவிட்டதால், கொச்சி கிராங் கனூர், வெரப்போலி, கொழும்பு ஆகிய பகுதிகளில் பணியாற்றி வந்த இயேசு அவையினர் அனைவரையும் தங்கள் பணியிடங் களை விட்டு வெளியேறுமாறு போப்பாண்டவர் ஆணை யிட்டார். அது நாள்வரையில் போப்பாண்டவரே தங்களது தலைவர் எனக் கூறி வந்த இயேசு அவையினர், தாங்கள் போர்த்துக்கீசிய மன்னருக்கு மட்டுமே கட்டுப்பட்டவர்கள் என்றும், போப்பாண்டவரின் ஆணை தங்களைக் கட்டுப் படுத்தாது என்றும் கூறிவிட்டனர்.[552] இவ்வாறான குழப்பங்கள் கி.பி. 1886 வரையிலும் நீடித்திருந்தது. அதே ஆண்டில் திருத் தந்தை பதின்மூன்றாம் லியோ, இயேசு அவையினரின் பணி களை இறுதியாக முடக்கி, சிரியன் கத்தோலிக்கத் திருச்சபை யின் அனைத்துப் பொறுப்புக்களையும் வெரப்போலி ஆயரிடம் ஒப்படைத்தார். பிறகு சிரியன் கத்தோலிக்கத் திருச்சபைக்கு வெரப்போலி உள்ளிட்ட திருச்சூர், எர்ணாகுளம், செங்கணாஞ் சேரி, கோட்டயம் போன்ற ஆயங்கள் (Dioceses) தோற்றுவிக்கப் பட்டன. இவைகள் இலத்தீன் (ஐரோப்பிய) கத்தோலிக்கர் உள்ளிட்டவையே.

மார்தோமா என்ற புதிய இந்திய ஆயர் தேர்வு செய்யப் பட்ட நிகழ்வுகள் ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளன. இவர் வழி வந்த சில சிரியன் கிறித்துவர்கள் போப்பாண்டவரின் தலைமை யை ஏற்க மறுத்தனர். இதனால் தொன்றுதொட்டு ஓரினமாக அறியப்பட்ட சிரியன் கத்தோலிக்கத் திருச்சபை, புதிய குழு (Puthencoor), பழைய குழு (Pazhayacoor) என்று பிரிந்தன. ஒரே தலைமையில், ஒரே ஊரில், ஒரே தேவாலயத்தில் இணைந் திருந்த இவர்கள், இருகுழுக்களாகப் பிரிந்து போனதால், ஒவ்வொரு ஊரிலும் குழப்பங்கள் தோன்றின. தேவாலயத்தின் கட்டுப்பாட்டைக் கைக்கொள்வதில் முரண்பாடுகள் தோன்றின.

தேவாலயத்தில் இரு குழுக்களும் ஒரே நேரத்தில் வழிபாடு நடத்த முயன்றன. பொருளியல் அடிப்படையில் பழைய குழு வலுவுள்ளதாயிருந்தது. திப்பு சுல்தான் படை எடுப்பின் போது, புதிய குழு முற்றிலுமாகத் தமது வீடுகள், நிலங்கள் போன்ற வற்றை இழந்து நின்றது.[552]

திப்புவின் படையெடுப்பு கொச்சி மற்றும் திருவாங்கூர் அரசுகளை வலுவிழக்கச் செய்தது. இதனால் சிரியன் கிறித்துவர் களின் சிறப்புகளும் குறைந்து போயின. திப்புவின் படை யெடுப்பால் பல்வேறு இடங்களுக்கும் ஓடிப்போன சிரியன் கிறித்துவர்கள் திருவாங்கூர்ப் பகுதியிலும் குடியேறினர். கொச்சி அரசு போன்று திருவாங்கூர் அரசு சிரியன் மக்களுக்குச் சார்புடையதாக இல்லை. எனினும் கர்னல் மன்றோ (Col. Munro) என்னும் ஆங்கிலேய ஆளுநர், சிரியன் மக்களுக்குப் பல்வேறு உதவிகளை இரு அரசுகளிடமிருந்தும் பெற்றுத் தந்தார். மார்தோமா தலைமையிலான, போப்பாண்டவரைப் புறக்கணித்த புதிய குழுவினரை (Puthencoor) சீர்திருத்தச் சபை யில் இணைக்கப் பெரிதும் முயன்றார். அம்முயற்சிக்கு கி.பி. 1836 ஆம் ஆண்டு மாவேலிக் கரையில் நடைபெற்ற கூட்டம் (Synod) ஒப்புதல் அளிக்கவில்லையாயினும், சீர்திருத்தச் சபையின் சில நடைமுறைகள், சிரியன் கிறித்துவர்களுக்கு ஏற்புடையதாயிருந் தன. கட்டனார் என்ற சமயத் தலைவர்கள் திருமணம் செய்து கொள்ளக் கூடாது என்று அறிவுறுத்தப் பட்ட நிலையில், சீர்திருத்ச் சபை கட்டனார்களின் திருமணத் துக்கு ஏற்பளித்த தால் பல கட்டனார்கள் சீர்திருத்தச் சபைக்கு மாறிப் போயி னர். மன்றோ பிரபு ஒவ்வொரு திருமணம் செய்து கொள்ளும் கட்டனாருக்கும் ரூ. 400 அன்பளிப்பாக வழங்கினார்.[553]

அபிறகாம் என்ற கட்டனார் புதிய சீர்திருத்தத் திருச்சபை யைத் தோற்றுவித்தார். அத்திருச்சபை (The Wickliffe of the Syrian church) தனக்கென மந்திரங்களை மலையாள மொழியில் ஏற்படுத்திக் கொண்டது. இச்சபையினர் பிறகு "மார்தோமா சிரியன்" என்ற பெயரால் அழைக்கப்பட்டனர். இப்படியாக, ஒன்றாகவிருந்த சிரியன் திருச்சபை,

---

552. Ibid.
553. Ibid.

1. சிரியன் கத்தோலிக்கத் திருச்சபை என்றும், (The Catholics),
2. சிரியன் யாக்கோபியத் திருச்சபை என்றும் (The Jacobites),
3. சிரியன் மார்தோமா திருச்சபை என்றும் (Mar Thomaites)

என பிரிந்து போயிற்று.[554]

தொன்மை மிக்க சிரியன் கிறித்துவ திருச்சபை கி.பி. மூன்றாம் நூற்றாண்டிலேயே தொடங்கப்பட்டதாகும். தமிழகத்தில் கிறித்துவம் அதே கால அளவில் வேரூன்றியிருந்த போதிலும், இடைக்காலங்களில் ஏற்பட்ட அரசியல் மாறுதல்களால், தமிழ்நாட்டுக் கிறித்துவர்கள் தங்கள் பாதுகாப்பை நாடி, சேரநாட்டுக்குக் குடிபெயர்ந்தனர். தமிழ்நாட்டில் மீண்டும் கிறித்துவ சமயம், ஐரோப்பியரின் வருகைக்குப் பிறகே வளர்ச்சியடைந்தது. இன்றைய தமிழ்நாட்டுக் கிறித்துவம் ஐரோப்பியக் கிறித்துவமே என அறியலாம். ஆனால் சிரியன் கிறித்துவர்கள் வழிவழி வந்த தங்கள் மரபுகளில் ஊறிப் போனவர்களாவர். சிரியன் கிறித்துவத்திலும் அவர்களது வாழ்க்கை நடைமுறைகளிலும் பிராமணர்களின் வாழ்க்கை முறை படிந்துள்ளதைக் காணலாம். தொடக்க கால சிரியன் கிறித்துவர்கள் பிராமணர்களே என்பதும் ஒரு கருத்து. சிரிய நாட்டினின்றும் கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் இந்தியாவுக்கு வந்த கிறித்துவர்களும், சேர நாட்டு பிராமண மற்றும் தமிழ்க் குடி கிறித்துவர்களும் பிற்காலத்தில் இணைந்தனர். இருப்பினும் மேட்டுக்குடி மனப்பான்மை இன்றும் சிரியன் கிறித்துவர்களிடையே காணப்படுகிறது.

---

554.1. Christians and Christianity in India and Pakistan, Thomas, P., George Allen and Union Ltd.l, Ruskin House, London, 1954.

2. Tribes and Castes of Cochin, Anantha Krishna Ayyar, L.K., Cosmo Publications, New Delhi, 1981.

3. A History of Christianity in Kerala from the Mission of St. Thomas to the Arrival of Vasco da Gama, 52 A.D. to 1498 A.D., Cheriyan, A.C., Kottayam, 1973.

4. The Jesuits in Malabar, Vol. I, Ferroli, D., Bangalore, 1939.

5. India and the Apostle St. Thomas, Medlycott, Bishop, A.E., London, 1905, Reprinted in the Indian Church History Classics.

6. A Survey of Kerala History, Sreedhara Menon, A., National Book Stall, Kottayam, 1967.

சிரியன் கிறித்துவர்கள், தாழ்த்தப்பட்ட மக்களிடையே எந்த உறவும் வைத்துக் கொள்வதில்லை. அவர்களை கிறித்துவ சமயத்திலும் சேர்த்துக் கொள்ளவில்லை. அவ்வாறு இணைந்த தாழ்த்தப்பட்ட கிறித்துவர்களோடு எல்லாத் தொடர்புகளையும் தவிர்த்தனர்.

நம்பூதிரிகளின் வாழ்க்கை முறைகள் சிரியன் கிறித்துவர்களிடம் காணப்படுவதை மேல் நாட்டு சமயப் பணியாளர்களில் பலர் கண்டனம் செய்துள்ளனர். இறப்பு, குழந்தை பிறப்பு போன்ற சமயங்களில் நம்பூதிரிகள் கடைப்பிடிக்கும் தூய்மையாக்கும் சடங்குகள் (Purificatory Ceremonics) சிரியன் கிறித்துவர்களிடம் காணப்படுகின்றன. சிரியன் மக்கள் திருமணத்தின் போது தாலி கட்டிக் கொள்வது இன்றும் வழக்கமாக உள்ளது. தாலி அணிவது பிராமணர் நடைமுறையேயன்றி தமிழர் வழக்கன்று. தொல்தமிழ்த் திருமணத்தில் தாலி கட்டுதல் இடம் பெறவில்லை. இன்றைய தமிழகக் கிறித்துவர்களும் தாலிச் சடங்கை நடத்திக் கொள்கின்றனர். கிறித்துவக் குருவானவர் தாலியை வைத்து சமயச் சடங்கு செய்து, ஆசியை வழங்கி, மணமகனிடம் அளித்து மணமகளின் கழுத்தில் கட்டச் செய்வது இன்றைய இந்தியத் திருமண முறையாக கிறித்துவத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. தாலி கட்டுவதென்பது பிராமண நெறிப்படி, பெண்ணை ஆணுக்கு அடிமைப்படுத்துவது என்பதை கிறித்துவர்கள் அறிந்து கொள்ளவில்லை எனலாம். கிறித்துவம் பெண்ணை ஆணுக்கு அடிமையாகக் கருதவில்லை. விவிலியம் ஆதாமை மாந்தன் என்றும் (Man) ஏவாளை மனைவி (Wife) என்றும் கூறுவதை நோக்குக. ஆண் - பெண் என்று கூட ஆதாம் ஏவாளை விவிலியம் கூறவில்லை.

சிரியன் கிறித்துவர்களில் ஆண்கள், நம்பூதிரிகளைப் போன்றே ஆடை அணிகின்றனர். பெண்களின் உடை நம்பூதிரிப் பெண்கள் உடைக்கு மாறுபட்டது. இரவிக்கையணியும் முறை தொன்று தொட்டு சிரியன் பெண்களிடம் காணப்படுகிறது. இடுப்பில் அணியும் ஆடை, உலகில் எந்த இனமும் அணியாத முறையில் உள்ளதைக் காணலாம். வெள்ளை நிறமுள்ள, 4 அடி உயரமும் 10 அடி நீளமுள்ள ஆடையை இடுப்பைச் சுற்றி உடுத்துகின்றனர். பின்பக்கத்தை மறைக்க

விசிறி மடிப்பு போன்ற அல்லது மயில் தோகை வடிவில், அரை வட்ட மடிப்பு தொங்குவதைக் காணலாம். நகைகள் யாவும் நம்பூதிரிப் பெண்களின் அணிகலன்களாகவே உள்ளன. இசுலாமியப் பெண்களைப் போன்று, முகத்தை மறைக்கும் ஆடையை அல்லது துண்டுத் துணியை சிரியன் பெண்கள் உடுத்துவதில்லை. தற்காலத்து ஆண்களும் பெண்களும் மரபு வழி ஆடைகளை அணிவதில்லையென்றாலும் 50க்கு மேற்பட்ட அகவையுள்ள பெண்கள் இன்றும் கூட விசிறி மடிப்பு ஆடையையே உடுத்துகின்றனர். இந்தியக் கிறித்துவ சமய வரலாற்றில், சிரியன் கிறித்துவர்களின் பதிவுகள் என்றும் நிலைத்திருக்கக் கூடியவைகளாகும்.



# தமிழகத்தில் ஐரோப்பியக் கிறித்துவம்

தோமையார் காலத்திலேயே தமிழகத்தில் கிறித்துவத்துக்கு வித்தூன்றப்பட்டது. இன்னும் சொல்லப் போனால், உரோமை நகருக்கு கிறித்துவம் செல்லுமுன்பே தமிழகத்தில் அறியப் பட்டது எனலாம். தமிழகக் கடற்கரைப் பகுதிகளில் தோமை யாரின் சமயப்பணிகளால் ஏராளமானவர்கள் கிறித்துவத்தைத் தழுவினர். மயிலாப்பூரைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் தோமை யாரின் முயற்சிகளால் கிறித்துவ சமயத்தைப் பலர் தழுவினர். தோமையார் காலத்தில் 70000 பேருக்குக் குறையாத கிறித்து வர்கள் தமிழகத்தில் இருந்தனர் என்று சொல்லப்படுகின்றது. தோமையாரின் மறைவுக்குப் பிறகு நாள்தோறும் அவரது கல்லறையைக் காணவும், அங்கு சமயச் சடங்குகளை மேற் கொள்ளவும் பலர் வந்த வண்ணமிருந்தனர். சில நூற்றாண்டு களில், கிறித்துவர்களான மக்களின் சமய நெறிகளை முறைப் படுத்தவும் அறிவுரைகள் வழங்கவும் சமயத் தலைவர்கள் மயிலையில் இல்லாமற்போயினர். சேர நாட்டில் முறையான சமயத் தலைமையும், பின்னர் வந்த சிரிய நாட்டு வணிகர்களும், கிறித்துவ சமயத்திற்குப் புத்துயிர் ஊட்டிவந்தனர். அவ்வாறான முறையான வழிகாட்டுதல்கள் இல்லாத நிலையில், அடுத்து வந்த பல்வேறு இடர்ப்பாடுகளால், கிறித்துவர்களில் பலர் சேர நாட்டுக்குச் சென்று தமது சமயத்தாருடன் இணைந்து கொண் டனர். சிலர் கிறித்துவ சமயத்தை விட்டுவிலகிப் போயினர். சைவச் சமயக் குரவர்கள், பலரை மீளவும் சிவநெறிக்கு மாற்றினர். சேர நாட்டுக் கிறித்துவர்கள், சேர மன்னர்களிடம் நட்புறவு கொண்டு, போர்க்காலங்களிலும் படைகளைக் கொடுத்து உதவியதால், சோழ பாண்டிய மன்னர்கள், அரசியர் கண் ணோட்டத்தில் கிறித்துவர்களை வெறுத்தனர், ஒறுத்தனர். இவ்வாறான பல்வேறு சூழல்களால், தமிழ்நாட்டில் கிறித்துவம் அருகிப் போயிற்று. கி.பி. 10ஆம் நூற்றாண்டு வாக்கில்,

மயிலையிலும் நாகப்பட்டினத்துக் கருகிலுள்ள மணிகிராமம் போன்ற பகுதிகளிலும் தான் சிறிய எண்ணிக்கையில் கிறித்து வர்கள் இருந்ததாக அறிய முடிகின்றது. ஏறக்குறைய சோழ, பல்லவ, பாண்டிய நாடுகளில் கிறித்துவமே இல்லை என்றும் கூறலாம்.

முந்தைய பகுதிகளில், கி.பி. 1400 ஆண்டுகளுக்குப் பிறகு மயிலாப்பூர், கிழக்குக் கடற்கரை நகரங்களில் பிரான்சிஸ்கன் மற்றும் இயேசு அவைத் துறவிகள் பணியாற்றியது பற்றிய விளக்கங்கள் அளிக்கப்பட்டுள்ளன. தமிழகத்தின் புதிய கிறித் துவப் பணியிடங்கள் யாவும் கொச்சி ஆயத்தின் (Diocese) கீழ் இடம் பெற்றிருந்தன. மேற்குக் கரையிலிருந்த கொச்சியிலிருந்து கிழக்குக் கரையிலுள்ள பகுதிகள் தொலைவில் இருந்ததாலும், உடனுக்குடன் ஆணைகளைப் பெற இயலாமற் போனதாலும், கி.பி. 1606 ஆம் ஆண்டு சனவரித் திங்கள் 9 ஆம் நாளில் போர்த்துக்கல் மன்னர் கேட்டுக் கொண்டதற்கிணங்க, திருத் தந்தை ஐந்தாம் பால் மைலயிலாப்பூரை தனி ஆயமாக உயர்த்தி ஆணையிட்டார்.[555]

மயிலையின் முதல் ஆயராக, **தாம் செபஸ்தியாவோ ட பெத்ரோ** என்ற அகஸ்தினியத் துறவி நியமிக்கப்பட்டார். தோமையாரின் தேவாலயம், ஆயப்பேரலாயமாக (Cathedral) உயர்த்தப்பட்டது. மயிலாப்பூர் ஆயத்தில் தமிழகம், ஒரிஸ்ஸா, வங்காளம் பீகார் போன்ற பகுதிகள் இணைக்கப்பட்டன. தமிழகம் தவிர்த்த பிற பகுதிகள், கோவா பேராயத்தில் அமைந் திருந்தன. போர்த்துக்கீசிய மன்னர், மயிலை ஆயத்துக்கு ஆண் டொன்றுக்கு 7,00,000 ரெயிஸ் (Reis) கிடைக்குமாறு ஆணை யிட்டார். இத்தொகை கோவா கருவூலத்திலிருந்து பெற்றுக் கொள்ள ஏற்பாடு செய்யப்பட்டது.[556] (ரெயிஸ் என்பது போர்த்துக்கீசிய நாணயத்தின் சிறு பகுதி. நமது நாணயத்தின் ஒரு பைசா போலக் கணக்கிடலாம்.)

---

555. Mylapore: His Majesty's petition (Dom Filippe II) was prested to the Pope (Paul V) by Cardinal Eduaro. The Mylapore Diocese was erected on 9 January, A.D. 1606 according to the desire of the Portugal king by issuing the Papal Bull "Cedula Consistorialis".

556. Portugese in the Tamil Coast, p. 284.

தமிழகத்தின் வடபகுதியில் மயிலாப்பூர் ஓராயமாக்கப் பட்ட காலத்தில், மதுரையில் சமயப் பணித்தளம் (Mission in Madurai) நிறுவப்பட்டது. இயேசு அவைத் துறவிகள் பொறுப் பில் இப்பகுதி விடப்பட்டது.[557] இதற்கான செலவினங்களை, மயிலை ஆயர், கோவா கருவூலத்தில் பெற்றளிக்கும் வகையில், கி.பி. 1612 ஆம் ஆண்டு செப்தம்பர் 7 ஆம் நாள், கோவா ஆளுநர் ஏற்பாடு செய்தார்.[558] ஏற்கனவே மதுரைக்குக் கிழக்கே யிருந்த கடற்கரைப் பகுதிகளில் பரவர்களை கிறித்துவ சமயத் துக்கு மாற்றியதில், இயேசு அவையினர் பெரும் பணியாற்றினர். பரவர்கள் அக்காலத்தில் தாழ்த்தப்பட்ட கீழ்சாதி மக்களாகக் கருதப்பட்டனர். கீழ்சாதி மக்களுடன் உறவாடிய போர்த்துக் கீசியர்களையும், துறவிகளையும், பரங்கியர் என்றும், அவர் களும் கீழ்சாதியினரே என்றும் தமிழக மக்கள் கருதினர். இவர் களைத் தங்கள் ஊர்களில் அனுமதிக்கவும் தயங்கினர். இதனால் கிறித்துவ சமயம் என்பது, கீழ்சாதிக்காரர்களின் சமயம் என்று பரவலாக அறியப்பட்டது. மாட்டிறைச்சி, பன்றியிறைச்சி, யுண்ணுதல், மது அருந்துதல் நாளும் குளிக்கா திருத்தல், இடதுகையாலும் சாப்பிடுதல் போன்ற தமிழர்கள் வெறுக்கும் செயல்களைப் போர்த்துக்கீசியர்கள் செய்து வந்தனர்.[559]

பிராமணர் வேளாளர் போன்ற உயர்குடி மக்கள், கிறித்துவ சமயத்தில் சேர தயக்கம் காட்டினர். சில அரசியல் நன்மை களைப் பெறுவதற்காக பிராமணர்களில் சிலர் கிறித்துவ சமயத்தில் விருப்பமுள்ளவர்கள் போல் நடித்தனர். இயேசு அவையினர், தமிழகத்தின் உயர்குடி மக்களை கிறித்துவத்தில் இணைப்பதில் உள்ள இடர்ப்பாடுகளை உணர்ந்திருந்தனர். கிறித்துவ சமயம் கீழ்சாதிச் சமயமன்று என்பதை நிலை நிறுத் தவும் முயன்றனர். பிராமணர் போன்றவர்களை கிறித்துவத்தில் இணைக்காதவரை, சமயப் பணிகள் முழுமை பெறமாட்டா என்பதையும் உணர்ந்திருந்தனர்.[560] அக்காலத்தில் பிராமணர் களே கல்விக் கூடங்களில் ஆசிரியர்களாக இருந்தனர். ஒவ்வொரு துறையிலும் அறிவுரை வழங்குபவர்களும் அவர்களே. அவர்

557. Ibid, p. 285.

558. Ibid.

559. Ibid.

560. Early Christianity in India and Pakistan, p. 61.

களின் அறிவும் மதிநுட்பமும் மக்களாலும் மன்னராலும் போற்றப்பட்டன. எத்துறையில் தோன்றும் ஐயப்பாடுகளுக்கும் விளக்கம் சொல்லத் தகுதியுடையவர்கள் பிராமணர்களே. வேதம், அறிவியல், வானியல், கணிதவியல், அரசியல், வாழ்வியல், கலை, இலக்கியம் என்று இன்னோரென்ன துறைகளிலும் தெளிவு பெற்றிருந்தவர்கள் பிராமணர்களே. இந்த அறிவின் மக்களை (People of wisdom), கிறித்துவ சமயத்துக்கு மாற்றம் செய்ய முயலுவது மிகவும் கடினமான பணி என்பதையும் இயேசு அவையினர் உணர்ந்திருந்தனர். பிராமணர்கள் அக்காலத்தில் தமிழ், சமஸ்கிருதம், தெலுங்கு போன்ற மொழிகளில் விற்பன்னர்களாயிருந்தனர். தமிழைத் தட்டுத் தடுமாறிப் பேசும் கிறித்துவத் துறவிகளுக்கு, பிராமணர்களிடம் உரையாடுவதற்கே தகுதியில்லாமலிருந்தது. இத்தகைய பிராமணர்களை கிறித்துவ சமயத்துக்கு மாற்றிவிட்டால், மற்ற மக்களும் பெருமளவில் கிறித்துவத்தில் இணைவார்கள் என்பதை இயேசு அவையினர் உணர்ந்திருந்தனர்.[561] இச்சூழலில் வாராது வந்த மாமணி போல், இராபர்ட் - டி - நொபிலி என்னும் இத்தாலிய இயேசு அவைத்துறவி மதுரைக்கு வந்து சேர்ந்தார்.



561. Ibid. p. 64.

## இராபர்ட் – டி – நொபிலி

இராபர்ட் - டி - நொபிலி என்னும் இயேசு அவைத்துறவி, இத்தாலியிலுள்ள உரோம் நகரில் செப்தம்பர் 1567ஆம் ஆண்டில் ஒரு மேட்டுக் குடியில் பிறந்தார். கி.பி. 1597ஆம் ஆண்டு நேப்பிள்ஸ் நகரில் உள்ள இயேசு அவையினரின் துறவிகள் மடத்திலிருந்து, குருவானவராக வெளிவந்தார். கிழக்கு நாடுகளில் கிறித்துவின் நற்செய்தியை அறிவிக்க வேண்டும் என்ற ஆவலினால், போர்த்துக்கல் மன்னர் உதவியுடன், கி.பி. 1605ஆம் ஆண்டு கோவா வந்து சேர்ந்தார். அடுத்த ஆண்டில் கொச்சி சென்று அங்கிருந்து கிழக்குக் கடற்கரையை அடைந் தார். பரவ மக்களுடன் ஆறு மாதங்கள் தங்கி சமயப் பணிக ளாற்றினார். நவம்பர் 15, 1606ஆம் ஆண்டில் மதுரை வந்து சேர்ந்தார். மதுரையில் இருமுறை சிறைபிடிக்கப்பட்டார். 1640-41 ஆண்டுகளில் சிறையிலிருந்தார். 1645ஆம் ஆண்டு தனது உடல் நிலையைக் கருத்தில் கொண்டு, யாழ்ப்பாணம் சென்றார். பிறகு 1648ஆம் ஆண்டில் மயிலாப்பூர் சென்றடைந் தார். அங்கு 1656 ஆம் ஆண்டு சனவரி 16ஆம் நாள் தனது வாழ்வை நீத்தார்.[562]

நொபிலி இத்தாலியில் பிறந்தவராதலால், கிறித்துவ சமயம் தொடர்பான முறையான கல்வியைப் பயின்றவராவார். மிகப் பெரிய அறிஞரான நொபிலி, இந்தியாவுக்கு வந்த சமயப் பணியாளர்களில் வீரமாமுனிவருடன் ஒப்பிடக் கூடியவராவார். பன்மொழி அறிஞரான நொபிலி, இந்திய மொழிகளான தமிழ், தெலுங்கு, சமஸ்கிருதம் ஆகியவற்றையும் கற்றுத் தேர்ந் தார். வேதங்களின் பொருளையுணர்ந்து அவை பற்றி கற்றறிந்த பிராமணர்களிடமே எதிர் உரையாடல் மேற்கொண்டார். **தத்துவ போதகர் சுவாமி** என்ற பெயரால் அழைக்கப்பட்ட

562. Fr. Robert De Nobili, Rajamanickam, Fr. Ed. St. Xavier's College, Palayam Kottai, 1971., p. 213.

நொபிலி, இந்திய மொழிகளில் பல நூல்களை எழுதியுள்ளார். நொபிலி வாழ்ந்திருந்த காலத்தில், தமிழ் மொழியில் வட மொழியின் கலப்பு மிகுந்திருந்தது. பிராமணர்களே கற்றறிந் தவர்களாகக் கருதப்பட்டதால், அவர்கள் வடமொழி கலந்தே தமிழை எழுதினர். வடமொழி கலந்து தமிழை எழுதுவது அக்காலத்தில் புலமையை வெளிப்படுத்துவதாகக் கருதப் பட்டது. அவ்வழியிலேயே நொபிலியும் பல நூல்களை எழுதி னார். சமய விளக்கங்களைப் பற்றியும் இந்திய மெய்யியல் பற்றியும் தனது நண்பர்களுக்கு விளக்கி, இலத்தீன் மொழியில் அவர் எழுதியவை மிகவும் புகழ் பெற்றவைகளாகும். **மிகவும் சிக்கலான ஒரு பொருளை, மிகச் சரியான தெளிவான சிந்தனையுடன் நொபிலி அணுகுவார். அப்பொருளைப் பிறர் அறியும் வகையிலும் புரிந்து கொள்ளவும், அவர் கையாண்ட எழுத்து முறையும் அணுகுமுறையும் எளிமையாக இருக்கும். புரிந்து கொள்ள இயலாத மெய்யியல் கருத்துகளையெல் லாம் தனது பேச்சாற்றலால் மிக எளிதாகப் புரியவைப்பார். அவருடைய பகைவர்களும் கூட பல நேரங்களில் அவரிடம் நேருக்கு நேர் வாதிட முன்வருவதில்லை.**

நொபிலிக்கு இயற்கையிலேயே பேரரறிவு வாய்த்திருந்தது. பொதுவாகச் சமயப் பணியாளர்களுக்கும், துறவிகளுக்கும் மக்களைப் புரிந்து கொள்ளுதல் என்பது இயலாத ஒன்றாகவே இருக்கும். மக்களின் மன ஓட்டங்களைத் தெளிவாகப் புரிந்து கொண்டவர் போல் பேசுவர். ஆனால் பெரும்பாலான சமயத் தலைவர்களுக்கு உலக அறிவு என்ற பட்டறிவு குறைந்தே காணப்படும். நொபிலி ஒரு பட்டறிவாளர். மக்களின் பார்வை யில் பல செய்திகளை அணுகுவார். மக்களைப் பற்றி இயேசு அவையினர் சரியாகப் புரிந்து கொள்ளாததால் பல தவறுகளை அவர்கள் செய்ய நேர்ந்து. அத்தவறுகளையெல்லாம் சுட்டிக் காட்டிய நொபிலி, அவைகளை எவ்வாறு களைவது என்றும் வழிகாட்டினார். இவ்வாறாக பத்தாண்டுகளுக்கும் மேலாக, தனது பணித் தளத்திலுள்ள பிற இயேசு அவைத் துறவிகளு டனும், தலைவர்களுடனும், கொள்கை வழியில் எதிர்த்துப் போரிட வேண்டியிருந்தது. குறிப்பாக **அந்தோணி பெர்னாண் டஸ், பிரான்சிஸ் ட வெர்கரா** (Frs. Antony Fernandez and Francis de Vergara) ஆகியோர் மதுரையிலும், தூய பால் கல்லூரியின்

தலைவரும் பேராசிரியர்களும் (Rector and Professors of St. Paul's Cellege) கொச்சியிலும், நொபிலிக்குக் கடும் எதிர்ப்பாளர்களா யிருந்தனர்.[563]

**இந்தியாவிலிருந்த சாதீயத்தின் ஆழம், ஐரோப்பியர் களான இயேசு அவையினருக்குப் புரியவில்லை**. தாழ்த்தப் பட்ட மக்களிடம் சென்றால் உயர்சாதியினர் வெறுப்படை வதும், உயர் சாதியினரை இணைத்தால், மற்றவர் விலகுவதும் என்ற தமிழ் நாட்டுச் சூழலில், இரு பிரிவினரையும் இணைத்துச் சமயப் பணியாற்றும் வழி தெரியாமல் இயேசு அவையினர் தடுமாறினர். சாதீயத்தின் ஆழத்தைச் சரியாகப் புரிந்து கொண் டவர் நொபிலி மட்டுமே எனலாம். பிராமணர்களின் மேலாண்மை குமுகாயத்தின் அனைத்துத் துறைகளிலும் ஊடுருவியிருப்பதை நொபிலி உணர்ந்தார். பிராமணீயத்தின் அடிப்படைக் கூறுகளையும் தமிழகத்தின் குமுகாயக் கட்டமைப்புகளையும் வேதங்களைக் கற்றதின் வாயிலாகப் புரிந்து கொண்டார். இயேசு கிறித்துவுக்கு கோட்டும் சூட்டும் பூட்சுகளும் போட்டு, ஐரோப்பிய முறையில் அவர் சாப்பிட்டு, குடித்து உடுத்தி, குளித்து, வாழ்பவராக தமிழக மக்களுக்கு இயேசு கிறித்துவை அறிமுகம் செய்வதை நொபிலி விரும்பவில்லை (உண்மையில் இயேசுவின் பாலத்தீனப் பண்பாடுகளை கிறித்துவ சமயத்தி லிருந்து விடுவித்தவர்கள் ஐரோப்பியர்களே என்பது வேறு செய்தி) **தமிழர், தமிழராக இருந்து கொண்டு இயேசுவை ஏற்றுக்கொள்ள அனுமதிக்க வேண்டும் என்பதை நொபிலி வலியுறுத்தினார்**. சாதிப்பாகுபாடுகள், குமுகாயத்தில் ஏற்றத் தாழ்வுகளை உண்டாக்கியிருந்ததை நொபிலி அறிவார். இறைவன், தான் படைத்த மக்களை, உயர்ந்தோர் தாழ்ந்தோராகப் படைக்கவில்லை என்பதையும் நொபிலி உணர்ந்திருந்தார். இந்தியாவில் சாதி என்ற பெயரால் ஏற்றத்தாழ்வுகளை மக்க ளிடையே உருவாக்கியவர்கள் பிராமணர்களே என்பதையும், இதனைத் தங்களது வாழ்க்கை நலனுக்காகவே உண்டாக்கி யிருந்தனர் என்பதையும் நொபிலி அறிந்திருந்தார். இருப்பினும் அக்காலச் சூழலில், தமது பணி இயேசுவின் நற்செய்தியை அறிவிப்பதே என்பதையும், ஆயிரம் ஆண்டுகளாக இருந்து வரும் வர்ணாசிரம முறையை மாற்ற முயற்சிப்பதன்று என்பதை

563. Ibid, p. 210.

யும் நொபிலி அறிந்திருந்தார். **இன்றும் கூட நிலை பெற்றிருக்கும் சாதிப் பாகுபாடுகளைக் காணும்போது. அக்காலத்தில் சாதிச்சீர்திருத்தம் செய்ய நொபிலி முயன்றிருந்தால் அவர் தோல்வியடைந்திருப்பார் என்பதே உண்மை நிலையாகும்.**

## *நொபிலி காலத்தில் மதுரை*
## (Robert - de- Nobili, in Madurai)

நொபிலி மதுரை வந்த போது, மதுரையை நாயக்க மன்னர்கள் ஆண்டு கொண்டிருந்தனர். **வீரப்ப நாயக்கனின்** ஆட்சி *(கி.பி. 1572-1595)* மறைந்து, **முத்து கிருஷ்ணப்ப நாயக்கனின்** ஆட்சி *(கி.பி. 1601-1609)* நடைபெற்றுக் கொண்டிருந்த போது, நொபிலி தனது உதவியாளர் **விகோ** (Fr. Vico) என்பவருடன் மதுரைக்கு வந்தார்.[564] ஏற்கனவே **பெர்ணாண்டஸ்** என்ற பாதிரியார் மதுரைப் பகுதியில் சமயப் பணியாற்றி வந்தார். இவர், சாதீயக் கொடுமைகளை எதிர்க்கும் நோக்கம் கொண்டவர். கிறித்துவத்தில் ஏற்றத்தாழ்வுகளை இருக்கக் கூடாது என்ற நிலைப்பாட்டில் உறுதியாக இருந்தவர். இவர் காலத்தில் கிறித்துவம் பரங்கியர்களின் சமயமே என்ற கருத்து பரவலாக இருந்ததாலும், பரவர்கள் போன்ற தாழ்த்தப்பட்ட மக்கள் கிறித்துவ சமயத்தில் இணைந்திருந்ததாலும், கிறித்துவம் கீழ்ச்சாதிக் காரர்களின் சமயம் என்ற எண்ணம் மக்களிடையே காணப்பட்டது. இதனால் உயர்சாதிக் காரர்கள் கிறித்துவ சமயத்தில் இணையத் தயங்கினர். இதனால் பெர்ணாண்டசின் முயற்சி வெற்றி பெறவில்லை. கி.பி. *1606* ஆம் ஆண்டில் நொபிலி மதுரை வந்த போது இச்சூழலே நிலவியது.[565]

நொபிலி மதுரை வந்த போது, முற்றிலும் வேறுபட்ட உருவத்தில் காட்சியளித்தார். தூய காவி ஆடையில், தமிழகத்தின் பிராமண சமயத் தொண்டர் போலும், நெற்றியில் சந்தனப் பொட்டும், மார்பில் பூநூலும், அப்பூநூலில் தொங்கிய சிலுவையுமாக மாறியிருந்தார். தாழ்த்தப்பட்ட மக்கள் வாழும் பகுதிகளை விடுத்து, பிராமணர்கள் வாழும் பகுதியில் தனது

---

564. History of the Nayaks of Madura, Sathyanatha Aiyar, University of Madras, First Published 1924, Reprinted in 1980. p. 65.

565. Ibid, p. 98.

குடியிருப்பைத் தேர்வு செய்து கொண்டார். வெள்ளைக்காரர் ஒருவர், இந்தியத் துறவு ஆடையில் வந்திருப்பதைக்கண்ட மக்கள் வியப்புடன் நொபிலியைப் பார்த்தனர். தனது இருப் பிடத்தை, பிராமண சமயத் துறவிகள் வாழும் இடம் போல் (ஆசிரமம்) மாற்றிக் கொண்டார்.[566]

மதுரையில் அக்காலத்தில் பிராமணர்களின் மேலாண்மை கொடிகட்டிப் பறந்தது. மதுரை மீனாட்சியம்மன் திருக்கோயி லும், அதனைச் சுற்றியுள்ள வீதிகளும் பிராமணர்களின் கட்டுப் பாட்டில் இருந்தன. நாயக்கர்களின் உதவியால் பிராமணர் களுக்கான ஆகமக் கல்விக் கூடம் ஒன்றும் இயங்கி வந்தது. கற்றறிந்த பல பிராமணர்கள் அங்கு பேராசிரியர்களாய்ப் பணி யாற்றி வந்தனர். பிராமணப் பேராசிரியர்களின் கவனத்தை ஈர்த்த நொபிலியிடம் கலந்துரையாட, பிராணர்கள் விரும்பினர். முற்றிலும் மாறுபட்ட தோற்றத்துடன் காணப்படும் நொபிலி யிடம், அவர்தம் சமயக் கொள்கை பற்றி விளக்கம் கேட்க விரும்பினர். தொடக்கத்தில், நொபிலி ஆழ்ந்த தியானத்தில் (தியோ - Deo என்ற சொல்லின் பொருளில், தேவனுடன் ஒன்றுபட்டிருத்தலைத் தியா - தியானம் என்றனர். தியோ என்ற மேலைநாட்டுச் சொல், தேவன் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே என்க) ஈடுபட்டிருப்பதாகவும், ஓக நிலையிலிருந்து (யோகா) நொபிலி விடுபட சில காலம் ஆகுமென்றும், அவரது தொண்டர்கள், வருவோரிடம் கூறி வந்தனர். பல நாட்கள் நொபிலியை யாராலும் காண இயலவில்லை. இதனால் மதுரை பிராமணர்களுக்கு நொபிலியின் பாலுள்ள ஆர்வம் மேலும் மேலும் உயர்ந்தது. பிராமணர்களைக் கவர, நொபிலி மேற் கொண்ட தந்திரம் (தன்+திறம் = தந்திரம் - தமிழ்ச் சொல்லே) இதுவென்பதை, பிராமணர்கள் அறியவில்லை.

நாளடைவில் மக்கள் கூட்டம் வெள்ளைத் துறவியைக் காண அலை மோதியது. தமிழ் மொழியில் மிகத் தெளிவாக நொபிலி உரையாடியதைக் கண்ட மக்கள் வியப்புற்றனர். பிராமணர்களிடம் தெளிவான சமஸ்கிருதத்தில் உரையாடி, அவர்களை அதிர்ச்சிக் குள்ளாக்கினார். வேதங்களின் சூத்திரங் களை (சூத்திறம் தமிழ்ச் சொல்லே) விளக்கமாக எடுத்துச் சொன்ன நொபிலியின் வடமொழியறிவைக்கண்ட பிராமணர்

566. Early Christianity in India and Pakistan, p. 65.

கள் வியந்து போயினர். மன்னருடைய அலுவலர்கள் வந்த போது (அவர்கள் தெலுங்கர்கள் என்பதால்) அழகான தெலுங்கில் நொபிலி உரையாடினார். தான் உரோமை நகரிலிருந்து வந்த பிராமணன் என்றும், தனது முன்னோர்கள் வட இந்தியாவிலிருந்து இத்தாலிக்குக் குடி பெயர்ந்த பிராமணர்களே என்றும் கூறினார்.[567] (ஐரோப்பாவுக்கும் பாபிலோனுக்கும் கி.மு. 5000 ஆண்டுகட்கு முன்பிருந்த தொடர்பு பற்றிய செய்திகள் இன்று வெளிப்படுகின்றன. பாபிலோனியரும் சுமேரியரும் தமிழரே என்ற கூற்று நொபிலி காலத்தில் வெளிப்படுத்தப்படவில்லை.) போர்த்துக்கீசியருக்கும் தமக்கும் எந்தத் தொடர்பும் இல்லையென்றும் மறுத்தார். தான் பரங்கி இல்லை என்பதைத் தெளிவு படுத்தினார் (இதனால் போர்த்துக்கீசியர்கள் நொபிலி பால் வெறுப்புற்றனர் என்பது வேறு செய்தி.) பிராமணன்[568] என்ற சொல், துறவிகளைக் குறித்த சொல்லே என்பதை விளக்கினார். (மேலும் விளக்கங்களுக்கு ஆசிரியரின் சமஸ்கிருதத்துக்கும் தாய் மொழி தமிழே என்ற நூலை காண்க).

## நொபிலியும் பிராமணர்களும்

இந்தியப் பிராமணர்கள் போன்ற வாழ்க்கை முறையைக் கைக்கொண்ட நொபிலி, ஊனுணவை (meat)த் தவிர்த்தார். மதுவையும் வெறுத்தார். மீனையும் உண்பதில்லை. ஐரோப்பிய முறையிலான காலணியை (shoe) விடுத்து, மரக்கட்டைகளாலான செருப்பை அணிந்தார். இதற்குப் பாதிரிக் கட்டை என்ற பெயர் இருந்ததாக சொல்லப்படுகின்றது. பார்வையாளர்

---

567. சமற்கிருதத்தின் தாய் மொழி தமிழே, ம.சோ. விக்டர், 2004.
உரோமானியர்கள் இந்தோ - ஐரோப்பிய மரபினேரே என்ற அடிப்படையில், ஆரியருக்கும் உரோமானியருக்கும் உள்ள உறவை வெளிப்படுத்தும் வகையில், நொபிலி அவ்வாறு கூறியிருக்க வேண்டும். - நூலாசிரியர்

568. பிராமணன்: பிராமணன் பிரம்மாவின் தலையில் பிறந்ததாக மனு நூல் கூறுகிறது. பிராமணன் என்ற சொல் தமிழ்ச் சொல்லே. பிர என்ற வட சொற்களின் முன்னொட்டுச் சொல் (Prefix) பெரும் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே என்பது பாவாணரின் கருத்து. பிர+மணா என்பது, பெரும் அமணன் என்பதே. அமணன் = அரைகுறை ஆடையுடன் திரியும் துறவி. பெரும் அமணன் = பெரிய துறவி

களுக்கு முன்பு (பத்மாசனம் என்ற ஒக நிலையில்) கால்களைக் குறுக்காகத் தொடையிலிட்டபடி (Cross legged) அமர்ந்திருப் பார்.[569] தனது ஆசிரமத்தில் பெண்களை அவர் அனுமதிப்ப தில்லை. பெண்களை அவர் ஏரெடுத்தும் பார்ப்பதில்லை. ஒரு முறை அரண்மனையிலிருந்து நொபிலிக்கு அழைப்பு வந்த போது, பகல் வேளையில் தெருவில் பெண்களின் நடமாட்டம் இருப்பதால், தற்போது வர இயலாது என்று சொல்லப்பட்டது.[570] மேற்கண்ட செய்திகளால், நொபிலி தனது துறவுநிலையால், எவ்வாறெல்லாம் மக்களைக் கவர்ந்தார் என அறியலாம். (நொபிலி நாடகமாடுகிறார் என்றும், தேவையற்றவைகளுக் கெல்லாம் முதன்மையிடம் தருகிறார் என்றும் இயேசு அவைத் துறவிகளே அவர்மீது குற்றம் சாட்டினர்).

நொபிலி, மதுரையில் ஒரு வியப்புக்குரிய துறவியாகவே கருதப்பட்டார் என்பது உண்மையே. வேதங்களிலும் பிராமணங் களிலும் நொபிலி பெற்றிருந்த தேர்ச்சி, பிராமணர்களையே திகைக்க வைத்தது. வேறுவழியின்றி நொபிலியை, உரோமானிய பிராமணர் என்று பிராமணர்கள் ஏற்றுக் கொண்டனர். **நான்கு வேதங்களை அறிந்திருந்த பிராமணர்களிடம் ஐந்தாவது வேதம் என்று கிறித்துவ சமயத்தை அறிமுகம் செய்தார்.**[571] நொபிலிக்கு பலரும் தொண்டராயினர். அத்தொண்டர்கள் அனைவரும் மேல்சாதியினரேயாவர். நொபிலி வெளியே செல்லும் போது அவரது தொண்டர்கள் புடை சூழச் செல்வார். அவரது தொண்டர்களே மதுரையில், நொபிலியின் பெருமைகளை பறைசாற்றும் தூதுவர்களாயிருந்தனர். வீதியில் நடந்து செல் லும் போது, பெண்கள் எதிர்ப்பட்டால், அவர்களை ஒதுங்கிச் செல்லும்படி தொண்டர்கள் கூறுவார்கள். தமிழகத்தைப் பொறுத்தவரையிலும், துறவிகள் தாங்கள் சொல்லும் முறைப் படி வாழ்கின்றார்களா என்பதையே மக்கள் கூர்ந்து கவனிப் பார்கள். நொபிலியின் கிறித்துவ சமயம் பற்றி அறியாதவர்கள் கூட, அவரது தூய்மையான வாழ்க்கையைக் கண்டு, உண்மை யில் இவர் பெரிய துறவிதான் என ஒப்புக் கொண்டனர்.

இத்துறவு வாழ்க்கையால் மதுரை மக்களைப் பெரிதும் கவர்ந்த நொபிலிக்கு, நாயக்க மன்னர்களிடமும் செல்வாக்கு ஏற்பட்டது. ஆள்வோரும் பிராமணர்களும் கூட நொபிலி

569. Early Christianity in India, p. 67.

யைத் துறவியாகவும் ஒழுக்கமுடைய பெரியோராகவும் ஏற்றுக் கொண்ட வேளையில், கிறித்துவ சமயத்தில் நொபிலிக்குக் கடும் எதிர்ப்பு கிளம்பியது. பெர்ணாண்டஸ் பாதிரியார் நொபிலி யைக் கடுமையாக எதிர்த்தார். **பிராமணர்களைக் கிறித்துவர் களாக்குவதாகச் சொல்லிக்கொண்டு. கிறித்துவத்தை பிராமண சமயமாக்குவதாகக் கூறினார்.**[572] ஞானஸ்நானம் என்ற திரு முழுக்கு (ஞானஸ் நானம் என்ற வடசொல்லுக்கு அறிவுக் குளியல் என்பதே சரியான தமிழ்ப் பொருளாகும்) பெற்ற பிராமணர் உள்ளிட்ட அனைவரும் கிறித்துவர்களாகும் போது, தங்கள் சாதியை அவர்கள் இழந்து விடுகிறார்கள் என்று பெர்னாண்டஸ் கூறினார். பெர்னாண்டஸ் கூறியது முற்றிலும் உண்மையே என்பதும், கிறித்துவக் கண்ணோட்டத்தில், கிறித்து வத்தில் சாதிகள் இல்லை என்பதும், எழுதிவைத்துப் படித்துப் பார்க்க நன்றாக இருந்ததேயன்றி, நடைமுறைக்கு ஒத்துவர வில்லை என்பது வேறு செய்தியாகும். நொபிலி உண்மையில் ஒரு பரங்கிதானென்றும், தன்னை உரோமப் பிராமணன் என்று பொய் சொல்லுகிறார் என்றும், பெர்னாண்டஸ் போட்டு உடைத்தார்.[573]

ஒரு நாள், பெர்னாண்டஸ் பாதிரியாரால் கிறித்துவ சமயத்துக்கு கொண்டு வரப்பட்ட சில பரவர்கள் மதுரைக்கு வந்தனர். அவர்கள் நொபிலி மீது குற்றம் சுமத்தினர். நொபிலி உண்மையில் ஒரு பரங்கியே என்றும், கிறித்துவர்கள் கொண்டை போட்டுக் கொள்ளும் வகையில் மயிர் வளர்த்துக் கொள்வது கிறித்துவத்துக்கு எதிரானது என்றும், கிறித்துவர்கள், ஐரோப் பியப் போர்த்துக் கீசியரைப் போல் மயிர்வெட்டிக் கொள்ள வேண்டும் என்றும், பூநூல் அணிவது கிறித்துவத்துக்கு எதிரானது என்றும், இவைகளெல்லாம் சரியே என்று கூறும்

---

570. Ibid. pp. 67-69.

571. Ibid.

572. Ibid.

572. Robert de Nobili was trying to convert Brahmins to Christianity but he was in reality converting Christianity to Brahminism.

573. Ibid.

574. Ibid.

நொபிலி, கிறித்துவ சமயத்தின் பகைவர் என்றும் சாடினர். தன்னை உரோமப் பிராமணன் என்று நொபிலி கூறுவது அப்பட்டமான பொய்யே என்றும் கூறினர்.[574] கிறித்துவர்களே இவ்வாறு கூறியதைக் கேட்ட நொபிலியின் அணுக்கத் தொண்டர்கள், நொபிலியிடம் உண்மையை உரைக்குமாறு கூக்குர லிட்டனர்.

நொபிலி, "நான் ஒரு பரங்கி அல்லன். பரங்கியர்களான போர்த்துக்கீசியர் நாட்டில் நான் பிறக்கவில்லை. என்னுடைய முன்னோர் ஆரிய இனத்துடன் தொடர்புடையவரேயன்றி, பரங்கியருடன் தொடர்பு கொண்டவரல்லர். நான் பொய் கூறினால், கடவுள் என்னை ஒறுப்பார், தீயுலகில் (நரகத்தில்) என்னை வீழ்த்துவார். நான் உரோமையில் பிறந்தவன். எனது குடும்பத்தார் மன்னர்கள் மரபில் தோன்றியவர்கள். இறைவனே எல்லா சாதி மக்களுக்கும் கடவுளாயிருக்கிறார்", என்று பதிலுரைத்து அதனை தனது எதிர்ப்பாளர்களுக்கு எழுதிக் கொடுத்தார்.[575]

**சாதிகளைப் பற்றி நொபிலி சொன்ன விளக்கங்களும் வியப்புக்குரியதாகவும் புதுமையானதாகவுமிருந்ததாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். நொபிலி மேற்கொண்ட செயல்பாடுகள் சரியானவைதானா என்ற சிந்தனை இன்றும் கூட ஆய்வாளர்களால் அலசப்படுகின்றன. நொபிலியின், "இந்திய முறையில் கிறித்துவப் பணிகள்" என்பது தவறானது என்றும் சமய அறிஞர்களால் சொல்ல இயலவில்லை. இவ்வாறு சமயச் சிந்தனையாளர்களையே இரு கூறாக்கிய பெருமை, நொபிலியின் அணுகுமுறைக்கு உண்டு. நொபிலி தான் மேற்கொண்டது சமயப் பணியேயன்றி சமுதாயப் பணியன்று என்பதைப் பல முறை விளக்கியுள்ளார். தான் தமிழகம் வந்தது கிறித்துவை அறிவிக்கவேயன்றி, சாதி களைக் களைவதற்கன்று என்பதை திட்டவட்டமாக நொபிலி விளக்குகிறார்.**

**ஜே. ஹஃப் (J. Hough), ஜே. டபிள்பு காயே (J.W. Kaye)** என்ற வரலாற்று ஆசிரியர்கள், நொபிலியின் பிராமணீய அணுகுமுறையை எதிர்த்தாலும், அதில் ஒருண்மையுள்ளதாக வும், அன்றைய சூழலில் நொபிலிக்கு அதைத் தவிர வேறுவழிகள்

---

575. Ibid.

தெரிய வில்லையென்றும், நொபிலியைத் தாங்கிப் பிடிக்கின் றனர்.[576] **ஜே.எஸ். சாண்ட்லர்** (J.S. Chandler) நொபிலியின் அணுகுமுறையைத் தவறென்று கூறத் தயங்குகிறார்.[577] நொபிலி ஐரோப்பாவிலிருக்கும் போதே, இந்தியச் சூழல்களைப் பற்றி அறிந்திருந்தார் என்றும் "என்னை இந்தியனாக்கிக் கொண்டு, இந்தியர்களைக் காப்பேன்", என்று நொபிலி உறுதி பூண்டி ருந்தார் என்றும், தூய பால் தொண்டரைப் போல் பணியாற்ற விழைந்தார் என்றும் பெர்ராண்ட் (Fr.J. Bertrand) கூறுகிறார்.[578] கி.பி. 1606 ஆண்டு டிசம்பர்த் திங்களில் மதுரைவந்த நொபிலி, தனது தியானத்தின் வழியாக, தனது புதிய அணுகுமுறைக்கான தேவகட்டளையைப் பெற்றுக் கொண்டதாகவும் சொல்லப் படுகின்றது. தனது புதிய இந்திய அணுகுமுறையை **"தேவசித்தம்"** (Divine will) முழுவதுமாக ஏற்றுக்கொண்டதாக, நொபிலி உறுதியாக நம்பினார். **வேடதாரிகளான சில துறவிகளைப் போலில்லாமல், உண்மையிலேயே கிறித்துவிடம் ஆழ்ந்த பற்றுதலும், தூய வாழ்க்கையையும் மேற்கொண்டிருந்த நொபிலியிடம் இறையருள் குடிகொண்டிருந்தது என்று கிறித்தவ சமயப் பெரியார்கள் பலரும் கருதுகின்றனர்.**

மதுரையில் தமது சமயப் பணிகளைத் தொடங்கிய நொபிலி, பிராமணர்கள் உள்ளிட்ட பல மேட்டுக் குடி மக்களை கிறித்துவத்தின் பால் திருப்பினார். மதுரையெங்கும் நொபிலி யைப் பற்றிய பேச்சே அறியப்பட்ட நிலையில், நாயக்கர் களிடமிருந்து வந்த அழைப்பைப் பலமுறை ஏற்க மறுத்தார். இதனால் அரண்மனை வட்டாரத்தில் நொபிலியின் பெருமை உயர்ந்ததாகக் கூறப்படுகின்றது. இந்நிலையில் எருமைக்கட்டி யிலிருந்த பாளையக்காரர் நொபிலிக்கு உதவிய செய்திகளும் அறியப்படுகின்றன.[579] 15.1.1609 ஆண்டு நொபிலி எழுதியுள்ள குறிப்புகளின்படி, பிராமணர்களின் எதிர்ப்பு முறியடிக்கப்

---

576. History of The Nayaks of Madura, p. 69.
     History of Christianity in India - J. Hough.
     Christianity in India - J.W. Kaye.

577. The Jesuit Mission in Madura - Rev. J.S. Chandler.

577. Ibid.

578. La Mission du Madure, Bertrand, Fr. J., 1847-54, Vol. I-IV, II, p. 3.

579. Ibid, Vol. II, p. 26.

பட்டதாகக் கூறுகிறார்.[580] தொடக்கத்தில் கிடைத்த வெற்றி களால் ஊக்கமடைந்த நொபிலி, மதுரையில் 1610 ஆம் ஆண்டில் தேவாலயம் ஒன்றை எழுப்பினார்.[581] ஏற்கனவே உயர்சாதிக் கிறித்துவத் தொண்டர்களைப் பெற்றிருந்த நொபிலிக்கு உதவி யாக அந்தோனியோ விகோ என்பார், 15.10.1610 ஆண்டில் வந்து சேர்ந்தார்.[582]

இக்காலத்தில் மதுரையை ஆண்டுகொண்டிருந்த முத்து வீரப்ப நாயக்கன் (கி.பி. 1609-23) பல்வேறு அரசியல் கரணியங் களால், நொபிலியை அச்சுறுத்தத் தொடங்கினான்.

8.2.1610 நாளிட்ட லயேர்சியோ (Laerzio) என்பாரின் மடல் படி, கிறித்துவர்களை ஒறுக்கும் நடவடிக்கைகள் மேற் கொள்ளப்பட்டன.[583] அதற்கடுத்த 1611 ஆம் ஆண்டிலும் இதே நிலை தொடர்ந்து (25.12.1611 நாளிட்ட மடல்).[584] எருமைக்கட்டி பாளையத்தில் நொபிலிக்குச் சார்பான நிலை இருந்தது. எல்லாவற்றைக் காட்டிலும் பெர்னாண்டஸ் கொடுத்த இடை யூறுகளே நொபிலியை இடர்ப்படுத்தின. திருச்சபையின் மேலாண்மை பெற்ற தலைவர்களுக்கு, நொபிலியின் கிறித்துவம், புறவினத்தாருடைய (Pagan) கிறித்துவமாக உள்ளதெனத் தெரிவித்தார். ஆனால் கிராங்கனூர் ஆயர் (இவர் பற்றி பின்னால் விளக்கப்படும்) நொபிலிக்கு உறுதுணையாயிருந்தார். மலபார் பகுதியின் சமயத் தலைவர் (Provincial) நொபிலியின் புதிய அணுகு முறைக்கு வரவேற்பு தெரிவித்தார். லயேர்சியோ என்றும் இத்தலைவர் மாற்றலாகிச் சென்றவிடத்து வந்து சேர்ந்த புதிய தலைவர் பெர்னாண்டசின் நிலைப்பாட்டை விரும்பினார். இம்முறை பெர்னாண்டஸ் வெற்றியடைந்தார் என்றே கருதலாம்.

நொபிலி, கோவாவில் கூடவிருந்த உயர்நிலைக்குழுவின் கூட்டத்துக்கு (Synod) வருமாறு பணிக்கப்பட்டார். அக்கூட் டத்தில் எல்லோராலும் ஏற்றுக்கொள்ளக்கூடிய முடிவை எட்ட இயலவில்லை. நொபிலி அளித்த விளக்கம் பலரை அவர் கொள்கையில் திருப்பியது என்றாலும், ஒருமித்த கருத்து

580. Ibid.

581. Ibid.

582. Ibid, II, p. 92.

583. Ibid, II, p. 92.

584. Ibid, p. 94.

உருவாகாததால், இறுதி முடிவைப் பெற, உரோமைக்கு எழுதி யனுப்பினர். அக்காலத்தில், **பெல்லார்மின் நொபிலி** என்ற கார்டினல் (Cardinal) உரோமையிலிருந்தார். இவர், நொபிலியின் அண்ணன் என்று சொல்லப்படுகிறார். தம்பியினுடைய பணி களில் குறை சொல்லப்பட்டதால் வருத்தமுற்ற அண்ணன், தம்பிக்கு (நொபிலிக்கு) மடல் எழுதி, உடனடியாகப் பணி களை நிறுத்திக் கொள்ளுமாறு கேட்டுக் கொண்டார். அடுத்த பத்தாண்டுகளில், நொபிலி தனது பணிகளிலிருந்து விலகியிருந் தார். **இறுதியாக, 31.1.1623 ஆண்டு, திருத்தத்தை 15 ஆம் கிரகரி, நொபிலி மீதிருந்த குற்றச் சாட்டுகளிலிருந்து முற்றிலு மாக அவரை விடுவித்து, அவருடைய இந்திய அணுகுமுறை சரியானதே என்று ஆணை பிறப்பித்தார்.**[585]

பேரறிஞரான நொபிலிக்கு எதிரான குற்றச் சாட்டுகளால் மனமுடைந்து போனவர், தனது சிந்தனைக்கு ஏற்பட்ட தோல்வி யாக அதனைக் கருதினார். தனக்குச் சார்பாக ஆணை வழங்கப் பட்ட போதிலும் தனக்கேற்பட்ட இழிவுகளை அவரால் தாங்கிக் கொள்ள இயலவில்லை. தந்தை விகோ அவர்கள் கூறுவதைப் போல, ஒரு சமயப் பணியாளருக்கு மதுரையில் ஏற்பட்டது போன்ற இடையூறுகள் வேறு எங்குமே ஏற்படக் கூடா என்பது சரியான நிலையாகும்.[586] மதுரையில் தனக்கேற்பட்ட இடை யூறுகளால் நொந்துபோன நொபிலி, மதுரையை விட்டு விலகி னார். முத்துவீரப்ப நாயக்கனின் ஆட்சி பற்றிய வீகோவின் மடலில்[587] முத்து வீரப்ப நாயக்கன் கிறித்துவர்கள் பால் பரிவும் இரக்கமும் காட்டவில்லை. அதே வேளையில் கடுமையான அச்சுறுத்தலிலும் ஈடுபடவில்லை. முத்து வீரப்பனின் கவனம் விசய நகரப் பேரரசின்பால் இருந்ததாலும், மைசூர் மன்னரின் படையெடுப்பு அச்சுறுத்தல் இருந்து கொண்டிருந்ததாலும் கிறித்துவர்கள் பற்றிய தெளிவான கொள்கை எதனையும் அவன் கொண்டிருக்கவில்லை. பேரரசுக்குச் செலுத்த வேண்டிய திறை நிலுவைகள் பெருமளவில் இருந்ததால், அத்திறையைப்

---

585. Ibid. p. 197.

586. Ibid, II, p. 226.

586. Vico admits in his letter of 1624 that "One will never encounter anywhere obstacles ot great as in Madura".

587. Ibid, p. 124. Vide Appendix A, Letter No. 10.

பொதுமக்களிடம் பெற கடுமையான நடவடிக்கைகளில் ஈடுபட்டான். திறை செலுத்த இயலாமல் மக்கள் துன்புற்றனர். முத்துக் கிருஷ்ணப்ப நாயக்கனை விட கொடுங்கோலாட்சியை முத்து வீரப்ப நாயக்கண் கொண்டிருந்தான் என வீகோவின் மடல் தெரிவிக்கின்றது.[588]

கி.பி. 1624ஆம் ஆண்டில் மதுரை பணித்தளம் முன்னேற்றப் பாதை நோக்கிச் சென்று கொண்டிருந்தது. நொபிலி நிறைய படிப்பினைகளை மதுரையில் கற்றுக் கொண்டார். இவ் வேளையில் மனத்துயர் மிகுந்த மதுரையை விட்டு வடக்கு நோக்கிச் செல்ல நொபிலி எண்ணினார். மதுரையின் அரசியல் இடர்ப்பாடுகளும் இதற்கான கரணியங்களுள் ஒன்றாகும். இறுதியாக ஜூன் 1623ஆம் ஆண்டில் நொபிலி மதுரையை விட்டுப் புறப்பட்டார். திருச்சியில் நொபிலிக்கு எதிர்ப்புகள் வலுத்தன. எனவே சேந்தமங்கலம் சென்றார். அங்கு ஆண்டு கொண்டிருந்த மதுரையின் நாயக்க மன்னனுக்குட்பட்ட சிற்றரசன் இராமச் சந்திர நாயக்கன் நொபிலியை அன்புடன் வரவேற்றான். மீண்டும் சேந்த மங்கலம் வருவதாகக் கூறி, நொபிலி சாலப்பட்டி நாயக்கன் ஆண்டு கொண்டிருந்த சேலத் திற்குச் சென்றார். எதிர்பார்த்ததைவிட சேலம் கொடுமைகள் நிறைந்த நகராயிருந்தது. நொபிலிக்கு எதிர்ப்புகள் வலுத்தன. இவ்வேளையில் சாலப்பட்டி நாயக்கனின் தம்பியை நொபிலி கிறித்துவனாக்கினார். இதனால் சேலத்தில் நிலைமைச் சீரடைந்தது. நாயக்க மன்னன் நொபிலிக்கு நண்பனானான்.

சிலர், மதுரையிலிருந்து நொபிலி விரட்டப்பட்டார் என்றும், அவர் ஒரு பரங்கி என்றும் சாலப்பட்டி நாயக்கனிடம் குற்றம் சாட்டினர். ஆனால் நாயக்கன் அவைகளுக்குக் காது கொடுக்கவில்லை. இடையில், கொச்சியிலிருந்து வந்த அழைப்பை ஏற்று சென்றிருந்த நொபிலி, அதே ஆண்டில் சேலம் திரும்பினார். சேலம் நாயக்கனுக்கும் அண்டை நாயக்கர்களுக்குமிடையேயிருந்த அரசியல் பிணக்குகளையும் நொபிலி தீர்த்துவைத்தார் என்று சில குறிப்புகள் கூறுகின்றன.[589] இதற்கிடையில், மதுரையிலிருந்த தனது அன்பிற்குரிய விகோ பாதிரியார் நோய்வாய்ப்பட்டுள்ளார் என்ற செய்தியறிந்து,

---

588. Ibid.

589. Ibid, II, pp. 225-51, Letters of Vico dated 1624 and 1625.

அவரைக் காண மதுரை புறப்பட்டார். திருச்சி வந்து சேர்ந்த போது, விகோ நலமடைந்து வருவதாக அறிந்து திருச்சியிலேயே தங்கி விட்டார்.[590] திருச்சியில் சிலகாலம் சமயப் பணியைத் தொடர்ந்தார். இவ்வாறாக வடக்கே நொபிலியும் தெற்கே வீகோவும் இடர்ப்பாடுகளின்றி சமயப் பணியாற்றினர். மேற் கண்ட செய்திகளை விகோவின் 1626ஆம் ஆண்டு மடல் விளக்குகின்றது.[591]

## திருச்சியில் நொபிலி

திருச்சியில் நொபிலியின் பணிகளுக்கு நாயக்கர்கள் தடை விதித்தனர். நொபிலியைச் சிறையில் அடைத்ததாகவும் செய்தி கள் கூறுகின்றன. கி.பி. 1627 முதல் 1638 வரையிலான காலத்தில் நொபிலி எழுதிய பல மடல்கள் கிடைக்காமற் போயின. விகோவின் 1632 ஆம் ஆண்டின் குறிப்புகளின் படி திருச்சியில் பல ஆண்டுகள் கிறித்துவர்களுக்கெதிரான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன என அறியலாம்.[592] இக்காலங்களில் மைசூர் மற்றும் திருவாங்கூர் மன்னர்களுடன் திருமலை நாயக்கர் போரிட்டுக் கொண்டிருந்தார். இராமநாதபுரத்திலும் சேதுபதியுடன் பிணக்குகள் தொடர்ந்தன. திருச்சியில் நொபிலி தங்கியிருந்த போது, திருச்சியைச் சுற்றியிருந்த ஊர்களிலும் சமயப்பணிகள் மேற்கொண்டார். குறிப்பாக வடுகர்பேட்டை, வந்தலை ஆகிய ஊர்களில் நொபிலியின் பணிகள் அறியப்படு கின்றன. வடுகர் பேட்டை என்ற ஊரில் நாயக்க மன்னர்களின் உறவினர்களும், விசய நகரப் பேரரசிலிருந்து வந்திருந்த அலுவலர்களும் தங்கியிருந்ததாகக் கூறப்படுகின்றது. நொபிலி தொடங்கிய சமயப்பணியை 100 ஆண்டுகளுக்குப் பிறகு அங்கு வந்த வீரமாமுனிவர் விரிவுபடுத்தினார்.

நொபிலி திருச்சிக்கருகே தொடங்கிய சமயப் பணிகள், அதே நூற்றாண்டில் (1600-1700) பல்லாற்றானும் பயனை அளித்தன. திருச்சியை ஒட்டியிருந்த பச்சூர் (1655), வடுகர் பேட்டை, வந்தலை (1659), தொட்டியம் சந்நியாசி மடம் (1663), கல்பாளையம் (1670), புறத்தாக்குடி (1675), கோக்குடி (1675),

---

590. Ibid, pp. 261-271, Nobili's letter of 1627.

591. Ibid, pp. 251-61.

போன்றவை, நொபிலி சமயப்பணிகள் மேற்கண்ட ஊர்களாக அறியப்படுகின்றன.[593]

கி.பி. 1638 ஆம் ஆண்டில், நொபிலியின் உற்ற நண்பர் விகோ பாதிரியார் இறந்துபட்டார். இதனால் தளர்வுற்ற நொபிலி, விகோவின் இடத்திற்குப் புதியவர் ஒருவரை அழைக்க வேண்டி, அதே ஆண்டு அக்டோபர்த் திங்களில் கொச்சிக்குச் சென்றார். கொச்சியிலிருந்து திருச்சி திரும்பிய நொபிலியுடன் மாட்டின்ஸ் (Fr. Martinz) பாதிரியார் பணியாற்றி வந்தார். மாட்டின்ஸ் பாதிரியாரின் பல குறிப்புகள், திருமலை நாயக் கரின் ஆட்சி பற்றியும், கிறித்துவ சமயப் பணிகள் பற்றியும் விளக்கமாக எடுத்துரைக்கின்றன. திருமலை நாயக்கரின் கெடு பிடிகள் பற்றி கோவாவிலிருந்த போர்த்துக்கீசிய ஆளுநருக்குத் தகவல் தெரிவிக்கப்பட்டதைத் தொடந்து, 13.8.1639 ஆம் நாள், திருமலை நாயக்கர் ஆளுநருக்கு எழுதிய மடலில், தனது ஆளுகைக்குட்பட்ட பகுதிகளில் கிறித்துவ சமயப் பணிகளுக்கு அனுமதி அளித்திருப்பதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த உறுதிமொழியையும் மீறி, 1640-44 ஆண்டுகளில் திருச்சியில் கிறித்துவர்கள் கைது செய்யப்பட்டனர்.[594] இதனால், திருமலை நாயக்கரை நேரில் சந்திப்பதென நொபிலி முடிவு செய்து, மன்னனைச் சந்தித்தார். திருமலை, நொபிலியை அன்புடன் வரவேற்று, அரசவையில் பெருமைகள் செய்தார். ஒருவழியாக திருச்சியில் சமயப்பணிகள் தடையின்றி நடைபெற நொபிலி வழிவகை செய்தார்.[595]

ஐரோப்பாவில் மேல்தட்டு மக்களின் உயர்வான உணவை உண்டுவந்த நொபிலி, மதுரை வந்த போது, ஐரோப்பிய உணவு முறைகளை விடுத்து இந்திய உணவு முறையை மேற்கொண் டார். ஒரு நாளைக்கு ஒருவேளை மட்டுமே (மாலை 4 மணி யளவில்) உண்ணும் வழக்கத்தைக் கைக்கொண்டார்.[596] ஆனால் உழைப்போ ஓய்வின்றியிருந்ததால், உடல் நலம் குறையப் பெற் றார். சரியான சாலைகளும் வழிகளுமில்லாத இடங்களிலும்,

592. Bertrand, II, pp. 27-80.

593. குடந்தை மறைமாவட்ட பொன்விழா மலர், 1949, எ. 7.

594. Bertrand, II, p. 346.

595. Ibid, p. 351.

596. Early Christianity in India, p. 66.

காடு மேடு, மலை என்று ஓயாது சுற்றிருந்ததாலும், தொடர்ந்து உடல் நலத்தைப் பேணாமல் விடுத்ததாலும், கி.பி. 1648 ஆம் ஆண்டில், மிகவும் நலிவுற்றார். மருத்துவ உதவிகள் தேவைப் பட்ட நிலையில் அதே ஆண்டில் யாழ்ப்பாணம் சென்றார்.[597] தொடர்ந்து மயிலாப்பூர் வந்தடைந்தார்.

மயிலையில் உடல் நலம் சிறிது முன்னேற்றம் கண்டது. தொடர்ந்து ஓரிடத்தில் நிலையாகவில்லாமல், தமது தொண் டர்களுடன் வடதமிழகம் எங்கும் சுற்றித் திரிந்தார். அடுத்த பத்தாண்டுகளில் பலரை கிறித்துவ மறைக்குத் திருப்பினார். இராபர்ட் - டி - நொபிலி தனது உழைப்பால் ஒரு இலக்கம் (1, 00,000) பேரைக் கிறித்துவ சமயத்தில் இணைத்தார் என்று கூறப்படுகின்றது.[598] தனது வாழ்நாளின் இறுதிக் காலத்தில் கண்பார்வை குறைந்து போயிற்று. மயிலையில் ஒரு மண் குடிசையில் வாழ்ந்திருந்த நொபிலி, பார்வையற்ற நிலையிலும் பல இலக்கியங்களையும் சமய நூல்களையும் இயற்றினார். நொபிலி சொல்லச் சொல்ல, கற்றுச் சொல்லிகள் (Copy writers) எழுதிக் கொண்டனர்[596] (நொபிலியின் நூல்கள் பற்றிய செய்தி கள் பின்னால் விளக்கப்படும்). **1606 முதல் 1656 வரையில், 50 ஆண்டுகள் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் சுற்றித் திரிந்து கிறித்துவ சமயத்தை எடுத்துரைத்த இராபர்ட் – டி – நொபிலி எனும் தத்துவ போதகர் சுவாமி, தனது 80ஆம் அகவையில், திருமயிலையில், தோமையாரின் அரவணைப் பில் காலமானார்.**[600]

நொபிலியின் வாழ்க்கை பல்வேறு மயிர்க் கூச்செறியும் திருப்பங்கள் கொண்ட வரலாறாகும். கத்தோலிக்க சமயத்தில் ஆழ்ந்த பற்றுள்ள மரபில் தோன்றிய நொபிலி பிறவிப் பேரறிஞ ராவார். எளிய, தூய வாழ்க்கையால் பிறருக்கு எடுத்துக்காட் டாக விளங்கியவர். கிறித்துவின் பால் ஆழ்ந்த பற்றுதல் கொண் டிருந்த நொபிலி, எவ்வகையிலேனும் கிறித்துவின் நற்செய்தி யைத் தமிழகத்தில் பரப்ப எண்ணினார். ஒரு துறவிக்குரிய கடமைகளை இயேசு அவையின் விதிகளின்படி ஒவ்வொரு

597. Ibid.

598. Ibid, p. 72.

599. Ibid.

600. Ibid.

நாளும் செய்து முடிப்பார். இரவில் நடுநிசியையும் தாண்டி நேரத்தில் தனித்திருந்து வேண்டுதல் செய்வார். தமிழ் மொழி யையும் தமிழக மக்களையும் உளமார்ந்த நேயத்தோடு நோக்கி னார். யாழ்ப்பாணத்தில் சில காலம் இருந்த போதும், தமிழ் மக்களின் நினைவால், தமிழகத்துக்கு உடன் திரும்பினார். தன்னை எதிர்த்த இயேசு அவைக் குருக்களை பகைவர்களாகக் கருதாமல், அவர்களுக்கு விளக்கமளித்து தன் வழிக்குக் கொணர முயன்றார். **தமிழகக் கிறித்துவ வரலாற்றில் இராபர்ட்-டி-நொபிலி மங்காத விண்மீன் போல் இன்றும் காட்சி தருகின்றார்.**

## *நொபிலியின் கொள்கைப் போர்*

**"நொபிலியின் எதிர்காலம் ஒரு நூலில் தொங்கிக் கொண்டிருக்கிறது. அந்நூல் அறுந்து போனால் நொபிலியும் வீழ்வார்."**

மேற்கண்ட சொற்றொடர் வரலாற்றாசிரியர்களால் நொபிலியின் இந்திய அணுகுமுறை குறித்து எழுதப்பட்டது. நூல் என்று அவர் சொன்னது பூநூலைத்தான் என்க.

தொன்மைக்காலத் தமிழர்கள் தலைமயிரை சிரைப்ப தில்லை. குறிப்பாக ஆண்கள் தங்களது தலையில் மழிக்கும் கத்தியை அனுமதிப்பதில்லை. மாறாக முகத்தை மழித்துக் கொள்வதோடு பலவகையில் தோற்றமளிக்கும் மீசையை வைத்துக் கொண்டனர். மீசையில்லாத தமிழன் அக்காலத்தில் இல்லை. மீசையில்லாமை ஆண்மைக்கு இழுக்கு எனக் கருதினர். ஆண்களின் கூந்தல், பெண்களின் கூந்தலைவிட நீளமாக இருந்தது பற்றிய செய்திகள் உள்ளன. ஆனால் பெண்களின் கூந்தலுக்கு இயற்கையிலேயே மணம் இருந்தது பற்றிய கருத்து மாறுபாடுகள் தோன்றி, அதில் சிவபெருமானே தலையிட்டுப் பாடல் ஒன்றையெழுதியதாக குறுந்தொகை கூறுகிறது. ஆண் கள் தங்கள் மயிர்க்கற்றையை தலைக்குப் பின்புறமாக கொண் டையிட்டுக் கொள்வர். அக்கொண்டை பல நேரங்களில் மல்லாந்து படுக்கும்போது தலையணையாகவும் பயன்பட்டது. மூளையின் பின்பகுதியான முகுளம் என்ற நினைவுப்பகுதியை, புறத்தாக்குதலிலிருந்து காப்பதற்குக் கொண்டை பயன்பட்டது. கொண்டையிட்ட தலையில் முண்டாசு என்ற தலைப்பாகை யைக் கட்டிக் கொண்டனர். இத்தலைப் பாகை தலைக்குப் பாது காப்பாயிருந்ததோடல்லாமல், மயிர் காற்றில் பரப்பதையும்

தடுத்தது. குறிப்பாக உணவு உண்ணும்போது, தலைப் பாகையை அவிழ்த்து உதறிய பின்பு மீண்டும் கட்டிக் கொண்டனர். உணவுண்ணும் போது தொல்தமிழர் தலைப்பாகையுடன் தான் உணவுண்டனர்.

பிற்காலத்தில், உணவுண்ணும்போது தலைப்பாகையை அணிந்து கொள்ளக் கூடாது என்று பிராமணர்கள் தடை விதித்தனர். தமிழர்களும் அத்தடைக்கான கரணியத்தை அறிந்து கொள்ளாது ஏற்றுக் கொண்டனர். ஐரோப்பியர் வருகைக்குப் பிறகு கிறித்துவர்களில் சிலர் தலைமுடியை வெட்டிக் கொண்டனர். ஏற்கனவே சிரியன் கிறித்துவர்கள், பிராமணர் களைப் போன்று மொட்டையடித்துக் கொண்டனர். தமிழர் மரபு வழியில் வந்த யூதர்களும் தலைமயிரை மழிப்பதில்லை. தலைமயிரை மழிப்பதால் ஆண்களின் ஆற்றல் குறைந்து போகுமென யூதர்களும் நம்பினர். பழைய ஏற்பாட்டு நூலில் வரும் சாம்சன் என்ற வீறனின் ஆற்றல் அவன் மயிர் மழிக்கப் பட்டதால் விடுபட்டுப் போயிற்று என்று சொல்லப்படுகிறது. தமிழரைப் போலல்லாது, யூதரும் ஃபோனீசியரும் பாபிலோனி யரும் தாடி மீசையையும் வளர்த்துக் கொண்டனர்.

மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்த தொழிந்து விடின் – குறள், 601

இக்குறளுக்கு மெய்யான பொருள் யாதெனில், உலக மக்கள் பழித்த செயலைக் கைவிட்டுவிட்டால், தமிழரைப் போல் தலைமுடியை வளர்க்கவும் வேண்டியதில்லை, பிராமணர் களைப் போல் மழிக்கவும் வேண்டியதில்லை என்பதே. எனவே வள்ளுவர் காலத்திலேயே பிராமணர்கள் தங்களைத் தமிழரிட மிருந்து வேறுபடுத்திக் காட்ட, தலையையும் முகத்தையும் மழித்துக் கொண்டு, உச்சந்தலையில் ஒருசிறு மயிர்க்கற்றையை (குடுமியை) வைத்துக் கொண்டனர். குடுமி என்பது தலை மீதுள்ள சிறு மயிர்க் கற்றையென்றும், கொண்டையென்பது தலையிலுள்ள முழுமயிர்ச் சுற்றல் என்பதும் தெளிவு. எனவே, கொண்டை போட்டுக் கொள்வதென்பது தமிழரின் தனித் தகுதியாகவேயிருந்தது. புத்த சமண சமயங்கள் தமிழகம் வந்துற்ற போது, அதன் துறவிகள் பிராமணர்களைப் போன்று (குடுமியல்லாது) மழித்துக் கொண்டனர் எனலாம். இருப்பினும் அச்சமயத்தில் இணைந்த தமிழர்கள், கொண்டையுடன் தானி

ருந்தனர் என்பது தெளிவு. தமிழருடைய கொண்டை, கி.பி. 1950ஆம் ஆண்டுகள் வரையில் கூட காணப்பட்டு, 20ஆம் நூற்றாண்டில் இறுதியில் அருகிப் போயிற்று. எனவே கொண்டை போட்டுக் கொள்ளும் ஆண்களின் வழக்கு சமயம் கடந்து அனைத்துத் தமிழ் ஆடவரிடமும் காணப்பட்டது.

பூநூல் அணியும் முறையென்பது முற்றிலுமாகப் பிராமணர் களால் தமிழகத்தில் அறிமுகம் செய்யப்பட்டதாகும்.

> சாதுர்வர்ணயம் மயா ஸ்ருஷ்டம் குணகர்ம விபாகச
> தஸ்ய கர்த்தாரமபி மாம் வித்ய கர்த்தார மவ்யயம்
>
> – பகவத்கீதை[602]

**நான்கு வர்ணங்களும் (சாதிகளும்) என்னால் உண் டாக்கப்பட்டவைகளாகும். அந்தந்த சாதிக்காரர்களும் அவரவருக்குரிய கருமங்களைச் செய்ய வேண்டும். அதனை மாற்றியமைக்க படைத்த கடவுளான என்னால் கூட இயலாது** என்கிறது பகவத் கீதை. இதன்படி, சாதியை உண்டாக்கியவர் கடவுள் என்பதால், மக்கள் யாவரும் சாதிகளின் விதிப்படியே நடந்து கொள்ள வேண்டும்.

கடவுள் ஆணும் பெண்ணுமாக மக்களைப் படைத்தார் என்று விவிலியம் கூறுகிறது. சாதிகள் பற்றிய செய்திகள் விவிலியத்தில் இல்லையாதலால், கிறித்துவத்தில் சாதிகள் இல்லை என்பது அடிப்படையில் ஏற்றுக் கொள்ள வேண்டிய கொள்கையாகும். இந்த உண்மை நிலையைத்தான் இயேசு அவையினர் (பெர்னாண்டஸ் பாதிரியார் போன்றவர்கள்) எடுத்துரைத்தனர். பிரம்மாவின் தலையிலிருந்து பிராமணனும், வயிற்றிலிருந்து சத்திரியனும், தொடையிலிருந்து வைசியனும், காலிலிருந்து சூத்திரனும் பிறந்ததாக மனுஸ்மிருதி கூறுகிறது. மாந்தனின் உடலில் உள்ள இடங்களின் சிறப்பைக் கருதி, சாதிகள் பிறந்தன என்பது பிராமணர்களின் கூற்று.

உவமைக் கவிஞர் சுரதா அடிக்கடி குறிப்பிடுவார். ஒரு முறை பாரதிதாசன் தனது ஆசான் பாரதியாரிடம், "ஐயா, மக்கள் பிரம்மாவின் உடலுறுப்புகளினின்றும் பிறந்ததாக மனுநீதி நூல் கூறுகிறதே! நான்கு சாதிகளோடு ஐந்தாம் சாதி

---

601. திருக்குறள்.

602. ஸ்ரீமத் பகவத் கீதை, சுவாமி சித்பவானந்தர், ஸ்ரீராமகிருஷ்ணத போவனம், திருப்பராய்த்துறை, 1993, அத். 4., சுலோகம்:13.

யாகக் கருதப்படும் பஞ்சமன் என்பான், எவ்விடத்திலிருந்து பிறந்தான்?" என்று கேட்டார். பாரதியார் (என்ற பிராமணர்) அதற்கு மறுமொழியாக, "அவன்தான் இயற்கையாகப் பெண்ணின் பிறக்க வேண்டிய இடத்திலிருந்து பிறந்திருப்பான் போல் தெரிகிறது" என்றார். நகைச்சுவையாகத் தென்பட்டாலும், பாரதியார் சாதிகள் பற்றிக் கொண்டிருந்த நிலைப்பாட்டை மேற்கண்ட செய்தி விளக்குகிறது எனலாம்.

> "வேதத்தைக் கற்காத பிராமணனும், வேதத்தைக் கற்ற
> சூத்திரனும் அசம்விருத நரகத்தில் போய் வீழ்வர்."
>
> – மனுதர்மம்[603]

வேதத்தைக் கற்கச் சூத்திரனுக்குத் தடையிருந்ததாலும், பிராமணன் வேதம் சொல்வதைக் கேட்கும் சூத்திரனின் காதுகளில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்ற வேண்டும் என்று மனுதர்மம் கூறுவதாலும், சூத்திரர்கள் மனுதர்மத்தில் என்ன சொல்லப் பட்டிருக்கிறது என்பதையே அறியாதிருந்தனர்.

"பிராமணன், சத்திரியன், வைசியன் மூவரும் இரு பிறப்பாளர்களே (துவிஜர்)[604] இம்மூவரும் இயற்கையில் பிறந்தது ஒரு பிறப்பு. உபநயனம் என்ற பூநூலை அணியும் போது பிறப்பது மற்றொரு பிறப்பு என்பதால் அவர்கள் இருபிறப்பாளர் எனப்பட்டனர். சூத்திரர் எனப்படுபவர் பூநூல் அணியக் கூடாது என்பதால் அவர் ஒரு பிறப்பாளராகவே கருதப்பட்டனர். எனவே பூநூல் அணிதல் என்பது, பிராமணர்களின் தலைமையை ஏற்றுக் கொள்ளவும், மனுதர்மத்தை ஒப்புக் கொள்ளுதலும், நான்கு சாதிகளின் பாகுபாட்டை உண்மையென நம்புவதும் ஆன சமய நம்பிக்கையை ஏற்றுக் கொள்ளும் அடையாளமே ஆகும். பூநூல் அணிவதற்கு உண்மையான பொருள், பிராமணர்களின் சமயத்தை ஏற்றுக் கொள்வதோடு, பிராமணர்களுக்குக் கீழான மக்களாகத் தங்களைத் தாமே அறிவித்துக் கொள்ளுதலுமாகும். பூநூல் என்பது சமய அடையாளமேயன்றி, கொண்டை போட்டுக் கொள்வது போன்ற சமுதாய வழக்கன்று என்பதை அக்காலத்திலிருந்த (நொபிலி) மக்கள் அறிந்திருக்கவில்லை.

---

603. மனுதர்மம், பதி. தமிழ்நாடன், குயில் பண்ணை, சேலம், 1987, பிராமணர் இல்லறம், எண் 165, ப. 88.

604. மேலதே, வருணங்கள் தலைப்பு 11, எண் 1, ப. 205.

"பிராமணன் மீசை, தாடி, முடி, நகம் ஆகியவற்றைக் களைந்து, தூய ஆடை உடுத்தி, பூநூல், தருப்பை, மூங்கில் கோல், கமண்டலம், மோதிரம், காதில் கடுக்கண் ஆகியவை களைக் கொண்டிருத்தல் வேண்டும்." - மனுதர்மம்[605]

மேற்கண்ட செய்தியின் வழியில், பிராமணர்கள் மொட்டை போட்டுக் கொள்ளும் வழக்கு நடை முறையிலிருந்ததை அறிய லாம். மொட்டை போட்டு, உச்சந்தலையில் நான்கு மயிர்க் கற்றையைக் குடுமியாக வைத்துக் கொள்வது பிராமணர் வழக்கு. கொண்டை போட்டுக் கொள்வது தமிழர் வழக்கே என்பதும் தெளிவு.

"பிராமணன் பஞ்சினாலும், சத்திரியன் சணல் நாரினாலும், வைசியன் வெள்ளாட்டு மயிரினாலும் நூலிழைத்து, மூன்று வடமாகத் திரிந்து பூநூல் அணிய வேண்டும்." - மனுதர்மம்[606]

"இடத்தோளிலிருந்து வலக்கையின் கீழ்வரையில் துவளப் போடும் பூநூல் வலம் (உபவீதம்) என்றும், மாற்றிப் போடுதல் (பிராசினாவீதம்) இடம் என்றும், கழுத்தில் மாலையாகவும் போடுதலை நிவீதம் என்றும் சொல்வர்." - மனுதர்மம்[607]

"பூநூல் மாசுபட்டால், சேதமுற்றால் ஓடும் நீரில் விட்டு விட்டு, பின் மந்திரம் ஓதி புதிய பூநூல் அணிக. மிஞ்சி, மேலாடை, தண்டம் (கழி) இவற்றிற்கும் இதுவே முறை." - மனுதர்மம்[608]

பூநூல் பிராமண சமயத்தின் சின்னமே என்பதை மேற்கண்ட மனுதர்ம விளக்கம் கூறுவதை நோக்குக.

பிற்காலத்தில் ஐவினைஞர்கள் என்ற கம்மாளர்கள், தாங்களே பிராமணர்களைக் காட்டிலும் உயர்வானவர்கள் (விசுவ பிராமணன்) எனக் கூறிக் கொண்டு, பூநூலை அணிந்து கொண்டனர். மூவுலகத்தையும் படைக்குமுன், பிரம்மாவுக்கு அவை எப்படிப் படைக்கப்பட வேண்டும் என்று தெரியாமல் இருந்தது. அவைகளை வடிவமைத்துக் கொடுத்தவன் (design), விசுவ பிராமணனே (தெக்ஷா என்று இரிக்கு வேதம் கூறுகிறது)

605. மேலதே, பிராமணர் இல்லறம், எண் 28, ப. 73.

606. மேலதே, உடையும் பிறவும், எண் 34, ப. 31.

607. மேலதே, ப. 36. எண் 73.

608. மேலதே, எண் 74.

என்பது கம்மாளர்களின் கூற்று.[609] இராமானுசர் என்ற வைணவப் பெரியார், தான் கூறிய விசிட்டா துவைதக் கொள்கையை பிராமணர்களுக்கு அறிவித்த போது அவர்கள் அச்செய்தியை செவிமடுக்கவில்லை. இதனால் வெறுப்புற்ற இராமானுசர் பறையர்களுக்கும், பள்ளர்களுக்கும், பள்ளிகளுக்கும் (படையாச்சி) பூநூலை அணிவித்து, பிராமணர்களாக்கினார் என்ற செய்தி இராமானுசரின் வாழ்க்கையில் காணப்படுகிறது. எனவே, பிற்காலத்தில் சமூகத்தில் உயர்வானதொரு இடத்தைப் பெற விரும்பிய பலரும் பூநூல் அணிந்து கொண்டனர் என்பது தெளிவாகிறது. இன்றும் வன்னியர்கள் எனப்படும் மரபினரும், வள்ளுவர் என்ற மரபினரும் பூநூல் அணிந்திருப்பதைக் காண லாம். கிறித்துவத்துக்கு மாறிய கம்மாளர்களும் பூநூல் அணிந்து கொண்டுள்ளனர். எனவே, பூநூலின் உட்பொருள் பற்றி அறியாத வர்களும், வேதங்களைக் கல்லாதவரும் கூட, சமூகத்தில் பெருமை தேடிக்கொள்ள பூநூல் அணிந்து கொண்டனர்.

சூத்திரர்கள் திருமணத்துக்கு வரும் பிராமணப் புரோகி தர்கள், மணமகனுக்கு பூநூலை அணிவிப்பார்கள். இதன் பொருள் என்னவெனில், சூத்திரனாகிய மணமகன் மனுதர்மத் தின்படி திருமணம் செய்து கொள்ளத் தகுதியற்றவன். அவன் திருமணத் தகுதி பெற வேண்டுமானால் அவன் பிராமணனாக மாறியாக வேண்டும். அவ்வாறு மாற்ற இயலாது என்பதால், தாலிகட்டும் வேளைக்கு மட்டும் மணமகனை பிராமணனாகப் புரோகிதர் மாற்றுவார். அதன்படி அவன் தாலிகட்டும் வரை யிலும் அவனுக்குப் பூநூல் அணிவிப்பார். இதனை மந்திர மாகவே புரோகிதர் சொல்லுவார். "மணமகனே! நீ சூத்திரனுக் குப் பிறந்தவன். உனக்குத் திருமணம் செய்து கொள்ள தகுதி யில்லை. சூத்திரச்சியை நீ திருமணம் செய்து கொள்ள இயலாது. அவள் மேல்தட்டு மூன்று சாதியாருக்கும் பணிவிடை செய்யப் பிறந்தவள். அவர்களுக்கு வைப்பாட்டியாக இருக்கவே சூத்திரச்சி தகுதி பெற்றவள். இருந்தாலும் உன்னை பிராமணனாக மாற்றி, இப்பூநூலை அணிவித்து, உனக்குத் திருமணம் செய்து வைக் கிறேன்", என்று சமஸ்கிருதத்தில் சொல்லப்படும் மந்திரங் களின் பொருள் புரியாதவர்கள், மந்திரங்களில் யாதொன்றையும்

609. Rig Veda Sanhita, H.H. Wilson (Ed.) Vol. 6 (II): II: VII: IV, Sukta IV (XXXVI):3.

Rediscovering India, Indian Philosophy, Cosmo Publications, New Delhi, 1987, first print 1850.

மறந்து போய் விட்டு விடாதீர்கள்; முழு மந்திரத்தையும் சொல்லுங்கள் எனக் கூறுவதை இன்றும் காணலாம். கிறித்துவர்களின் படையாச்சி மரபினரின் திருமண நிகழ்விலும், உபதேசியார் என்ற சமய உதவியாளர், மணமகன் கழுத்தில் பூநூல் அணிவிக்கும் நடைமுறையை இன்றும் காணலாம். **எனவே, பிற்காலத்தில் பூநூல் என்பது, சமுதாய உயர்வைத் தெரிவிக்கும் அடையாளமாக மாறிவிட்டது என்ற கருத்திலும் உண்மையுண்டு. இவ்வாறு கொண்டையும் பூநூலும் அறியப் பட்ட நிலையில் நொபிலியின் மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டு களை இனி காணலாம்.**

## *நொபிலியின் மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டுகள்*[610]

நொபிலி மதுரை வந்த போது, பிராமணத் துறவி போன்று காட்சியளித்தார். இந்திய முறைப்படி கிறித்துவத்தை மாற்றிக் கொண்டார் என்ற அளவில் பெர்ணான்டஸ் பாதிரியார் உள்ளிட்ட பல இயேசு அவைத் துறவிகள் நொபிலி மீது அடுக் கடுக்கான குற்றங்களைச் சுமத்தினர்.

1. இயேசு அவைத் துறவிகளுக்குரிய வெள்ளாடையைத் துறந்து, காவி உடையில் இந்து சமயச் சந்நியாசி ஆடை அணிந்து கொண்டார். இவ்வாறான ஆடை மாற்றத்துக்கு அவர் மேலிடத்தில் அனுமதி பெறவில்லை.
2. தலைமுடியை வளர்த்துக் கொண்டு அதன்மேல் காவித் துணியால் தலைப்பாகை பொன்றை அணிந்து கொண்டார். ஐரோப்பிய முறைப்படி தலைமயிரை வெட்டிக் கொள்ள வில்லை.
3. பிராமணர்களைப் போன்று பூநூல் அணிந்து கொண்டார். அப்பூநூல் வெளியில் தெரியும் வகையில் மேல்சட்டை அணியாமல் ஒரு துண்டை போர்த்திக் கொண்டார். பிரா மணச் சமயச் சின்னத்தை அணிந்து கொண்டதின் வாயி லாக, சிலைவழி பாட்டாளர்களின் (idol worshippers) முறை யைப் பின்பற்றினார்.
4. பூநூலில் ஒரு சிலுவையைக் கோர்த்து அணிந்து கொண்டார்.
5. நெற்றியில் சந்தனப் பொட்டு வைத்திருந்தார். பொட்டு வைத்துக் கொள்ளுதல் பிராமண சமயத்தின் சின்னமாகும்.

---

610. Early Christianity in India and Pakistan, pp. 68-73.

6. இந்துக் கோவில்களைப் போன்ற வடிவில் கிறித்துவ ஆலயத்தை அமைத்தார்.
7. நின்றவாறு செய்யப்படும் பூசெய் (Mass)ப் பலியை அமர்ந்த வாறே செய்தார்.
8. காதுகளில் கடுக்கனும் வளையங்களையும் அணிந்து கொண்டார்.
9. கிறித்து சமயத்துக்கு மாறும் பிற சமயத்தவரை குறிப்பாகப் பிராமணர்களைப் பூநூல் அணிந்துகொள்ள அனுமதித்தார்.
10. பரதவர் போன்ற கிறித்துவர்களைத் தன் இருப்பிடத்தில் சந்திக்க மறுத்தார்.
11. கிறித்துவத்தில் சாதிப்பாகுபாடுகளை உருவாக்கி, பரதவர் - பறையர் - பள்ளர் போன்றவர்களுக்காக பண்டார சாமி என்ற சமயப்பதவிகளை உருவாக்கினார்.
12. கிறித்துவ சமயத்தைப் பிராமண சமயமாக மாற்றிவிட்டார்.
13. தன்னைப் பரங்கியன் அல்லன் என்று பொய்யுரைத்தார்.
14. தன்னை உரோமபுரிப் பிராமணன் என்றும் பொய்யான செய்தியை அறிவித்தார்.
15. போர்த்துக்கீசிய மன்னரின் உதவியால் இந்தியாவுக்கு வந்த நொபிலி, போர்த்துக்கீசியருக்கும் தனக்கும் எந்தத் தொடர்பும் இல்லையென்று கூறி தம்மை ஐரோப்பியர்களிலேயே மேல் சாதிக்காரர் எனக் கூறிக் கொண்டார்.
16. தமக்கு மேலுள்ள சமயத்தலைவர்களைக் கலக்காமல் தன்வழியில் பல முடிவுகளை மேற்கொண்டதின் வாயிலாக, (மதுரைப் பணித்தளத்தின்) திருச்சபைக்குத் தலைவர் தாமே என்ற கருத்தை மக்களிடையே உருவாக்கினார்.

இன்னும் பல குற்றச் சாட்டுகள் நொபிலி மீது சுமத்தப் பட்டன.

கோவாவில் தங்கியிருந்த பேராயர், சமய அறிஞர்கள் (theologians), கிறித்துவ சமயத்துறவிகள் (Priests) அனைவரும் நொபிலியை எதிர்த்து ஓரணியில் நின்றனர். நொபிலி மீது எழுப்பப்பட்ட குற்றச்சாட்டுகளைக் கண்டறிய, போப் பாண்டவர் 5ஆம் பால் ஆணையின்படி 4.2.1619ஆம் நாளில், கோவாவில் கூட்டம் நடைபெற்றது.[611] கோவாவின் பேராயர்

611. Fr. Robert De Nobili, Fr. Rajamanickam (Ed.) Preface, p. V.

**கிறிஸ்தோபர் ட சா** தலைமை தாங்கினார். மாநாட்டின் நோக்கம், இந்தியாவில் கிறித்துவின் நற்செய்தியை அறிவிப்பதிலும், கிறித்துவ சமயத்தைப் பரப்புவதிலும் என்னென்ன எளிய முறைகளைக் கையாளலாம் என்பதாகச் சொல்லப்பட்டாலும், உண்மையில் நொபிலியை குற்றவாளிக் கூண்டில் நிறுத்தி அவருடைய பணிகளைத் தடைசெய்வதே முதன்மையாகக் கருதப்பட்டது. **பேராசிரியர் இராசமாணிக்கம் அடிகளார் கூறியதைப் போன்று. இந்தியாவில் கிறித்துவின் மீட்புப்பணி. ஒரு நூலில் தொங்கிக் கொண்டிருந்தது** (At Goa, the Salvation of India would, as it were, be hanging by a thread) என்பதே உண்மை நிலையாகும்.[612]

**இந்த மாநாட்டில் நொபிலிக்கு எதிராக எடுக்க வேண்டிய முடிவுகள் ஏற்கனவே தீர்மானிக்கப்பட்டு விட்டன.** கோவாவின் சமய அறிஞர்களும், போப்பாண்டவரின் தூதராக அம்மா நாட்டுக்கு வந்திருந்த **ஆண்ட்ரூ பல்மெய்ரோவும்**, மாநாட்டின் முடிவுக்கு ஏற்கனவே ஒப்புதலும் அளித்திருந்தனர். உண்மையில் இம்மாநாடு ஒரு கண்துடைப்பு நிகழ்வே என்பதை அனைவரும் அறிவர். மதுரைப் பணித்தளத்தின் பொறுப்பிலிருந்த கிராங்கனூர் ஆயர் ரோஸ் (Roz), தனது உடல் நிலையைக் கருத்தில் கொண்டு, மாநாட்டுக்கு வராமலிருக்க விலக்களிக்கப்பட்டிருந்தார்.[613] இவர் ஏற்கனவே சிரியன் கிறித்துவர்களுடைய ஆயர், மார் அபிறகாமிடம் போர்த்துக்கல் தலைவர்கள் காட்டி வந்த பகைமையைக் குறைக்க முற்பட்டவர். மிகவும் கற்றறிந்த அறிஞர் பெருமகனாவார். கி.பி. 1583ஆம் ஆண்டு அங்கமலையில் நடந்த சிரியன் கிறித்துவர் மாநாட்டில் கலந்துகொண்டு அம் மக்களை அமைதிப்படுத்தியவர்.[614] கற்றாரைக் கற்றாரே காமுறுவர் என்றபடி, நொபிலியின் சீர்திருத்த முறைகளை ஏற்றுக் கொண்டிருந்த ஒரே ஒருவர் ஆயர் ரோஸ் அவர்கள் மட்டுமே எனலாம்.

உடல் நலம் குன்றிய நிலையிலும் நொபிலியுடன் கோவா மாநாட்டில் கலந்து கொண்டார். அம்மாநாட்டில் நொபிலி

---

612. Ibid.

613. Ibid.

614. Early Christianity in India and Pakistan, p. 85.

ஒரு நீண்ட தன்னிலை விளக்க அறிக்கையை[615] அளித்தார். அவ்வறிக்கையில் ஆயர் ரோஸ் மேற்கையொப்பமிட்டிருந்தார். இவ்வறிக்கையின் படிகள் (Copies) மாநாட்டிற்கு வந்தவர்களிடம் கொடுக்கப்பட்டன. இந்த அறிக்கையை **இராச மாணிக்கம் அடிகளார்** உரோம் நகரில் கண்டெடுத்து அறிக்கையின் சிறப்பை அறிந்து கொண்டார்.[617] அறிக்கையைச் சிந்தித்து

---

615. Narratio Fundamentorum Quibus Madurensis Missionis Institutim Caeptum est et hucusque Consisit (An Exposotion of the Basic principles which inspíred the founding of the Madurai Mission and continue to guide it.

- Fr. Robert De Nobili.

616. Ibid.

617. Ibid, p. VII.

617. The Original: Such a treatise, which made so many great men change their opinion, was missing till today inspite of all the untiring efforts of Frs. Besse, Dahmen, Sauliere and others, who were in search of all Nobili's writings. I have been fortunate to discover two copies of that treatise, One of them at Chantilly in France and the other in Rome. The Roman copy has 38 (ff. 286-304) pages, while the copy at Chantilly has 109 (ff. 93-147) pages; when typed the treatise occupies about 74 pages. We got a microfilm of the Roman copy; Fr. Rocaries was kind enough to get a microfilm of the Roman Copy; Fr. Rocaries was kind enough to get a copy at Chantilly Xerographed and sent to me. Fr. Pujo has deciphered that text and translated it from Latin into English. This document is so important that I pass over the other documents I was able to find in Rome and elsewhere. Though Nibili had written several treatises on the method of adaptation he followed, this is perhpas the best of them. But before we proceed to analyse the document we shall give some documentary evidence to prove that it was written by De Nobili and not by Mgr. Roz.

**De Nibili is the author**: The evidence is from the Primate of Goa who was bitterly opposed to Nibili. This is what he writes to Pope Paul V on Feb: 22, 1619 after the conference was over. "When the Archbishop of Granganore came here, he brought with him a treatise which had been written by Fr. Robert De Nibili, as the eatter admitted at the Conference."

எழுதியவர் நொபிலியே என்றும் உறுதிபடுத்தப்பட்டுள்ளது. வரலாற்றுச் சிறப்புமிக்க இந்த ஆவணம் பிரான்சிலும், உரோம் நகரிலும் பாதுகாக்கப்பட்டுள்ளது.

## நொபிலியின் அறிக்கை

மதுரை பணித்தளத்தில் மேற்கொள்ளப்பட்டுள்ள சமயப் பணிகளை முதற்பகுதியும், நொபிலி மீது சுமத்தப்பட்டுள்ள குற்றச்சாட்டுகளை மறுத்து விளக்க அறிக்கை இரண்டாவது பகுதியிலும் தரப்பட்டுள்ளன.

## நொபிலியின் விளக்கங்களாவன[618]

1. திருச்சபை பல்வேறு நாடுகளில், பல்வேறு வழக்குகளையும் மரபுகளையும் ஏற்றுக் கொண்டுள்ளது. திருச்சபையின் அடிப்படைக்கு மாறுபடாத அந்தந்த நாட்டு மரபுகளை ஏற்றுக் கொள்வதில் தவறில்லை என்று தெரிவித்துள்ளது. இம்மரபுகளில் சில மூடநம்பிக்கைகளாகவும், சில வழக்காறுகளாகவும் இருந்துள்ளன. இங்கிலாந்தில் இருந்த பிறசமயத்தாரின் கோவிலை இடிக்க வேண்டாம் என்றும் அக்கோயிலை தேவாலயமாக மாற்றிக் கொள்ளும்படியும் ஆயர் அகஸ்தீன் என்பாருக்கு போப்பாண்டவர் கிரகிரி ஆணையிட்டதை நொபிலி எடுத்துக் காட்டினார். விலங்குகளை வெட்டிக் கொன்ற பலிபீடத்தில் சிலுவையை நாட்டும்படியும் கூறப்பட்டதை நினைவு கூர்ந்தார். இதே போன்ற நடைமுறைகள் சில மதுரையில் நிகழ்வுற்றதற்கு ஆயர் ரோஸ் அனுமதியளித்திருந்தார்.

---

Nibili himself writing from Goa on Feb. 20, 1619 to his brother Sforza de Nobili who was about to be made a Cardinal, this is what he says, "As for the arguments in favour of the Madurai Mission, they will appear more clearly from the treatise Iam also sending, which, though written by me was for good reasons signed by another (domesticae minervae sed alieno certa quadam de causa cohenestatum nomine)"

Fr. Antony de Proenca who as quoted above affirms: it was on that occasion that he composed the remarkable treatise entitled, "Narratio Fundementorum quibus Missio Madurensis stabilitur." - Fr. Rajamanickam, S.J., Palayamkottai,

618. இராபர்ட் - டி - நொபிலியைப் பற்றி அருள்திரு இராச மாணிக்கம் அடிகளார் ஆங்கிலத்தில் எழுதியுள்ள செய்திகளின் தொகுப்பு, நொபிலியின் விளக்கங்கள் என்ற தலைப்பில் அளிக்கப்பட்டுள்ளன.

2. பூநூல் அணிவதும், குடுமி வைத்துக் கொள்வதும் சமயம் சார்ந்ததல்ல என்றும், அவை சமூக நடைமுறையென்றும் நொபிலி விளக்கினார். பிராமணர் அல்லாத பிற சாதி யினரும் (கம்மாளர், செக்கார் போன்றவர்கள்) பூநூல் அணிந்து கொள்வதை நொபிலி எடுத்துக் காட்டினார். கடவுள் மறுப்புக் கொள்கை கொண்டவர்களும் (Atheists) பூநூல் அணிந்திருந்ததை விளக்கிக் கூறிய நொபிலி, பூநூல் சமயம் சார்ந்ததல்ல என்றும், சமூக உயர்வைக் காட்டும் அடையாளம் என்பதையும் எடுத்துக் கூறினார்.

3. பிராமணர்களில் குற்றம் புரிந்தவர்களை ஒறுக்கும் வகை யில், அவர்களது குடுமி மற்றும் பூநூலை அகற்றுவது மரபாக உள்ளதென்றும், கிறித்துவ சமயத்தில் சேரும் பிராமணர்களுக்கு பூநூலும் குடுமியும் மறுக்கப்பட்டால், அவர்கள் ஒறுக்கப்பட்டதாகவே கருதப்படுவர் என்பதால், கிறித்துவ சமயத்தில் இணையும் பிராமணர்களை குற்றம் புரிந்தர்வகள் என கிறித்துவ சமயத்தினரே கூறலாமா என்ற வினாவைத் தொடுத்தார்.

4. தமிழ்நாட்டில் சில அறிவாளர்கள், சிலைவழிபாட்டில் நம்பிக்கையில்லாமல் உள்ளனர் என்றும், ஆனால் அவர் கள் ஒரே கடவுட் கொள்கையை கொண்டிருப்பதாகவும், அவர்களும் பூநூலையும் குடுமியையும் அகற்றிக் கொள்ள வில்லை என்பதையும் நொபிலி எடுத்துரைத்தார்.

5. ஒருவரை ஒருவர் எதிர்க்கும் சில சமயக் குழுக்கள் (religious sects), பூநூல் குடுமி போன்ற சமூக மரபுகளில் ஒற்றுமை யாக உள்ளனர் என்பதைச் சுட்டிக் காட்டினார்.

6. மனு என்ற பிராமண சட்ட ஆசிரியன், ஒவ்வொரு சாதி யினருக்குமிடையே பூநூல் வேறுபடுவதையும், நூலின் எண்ணிக்கை வயதிற்கும் பொறுப்புக்கும் ஏற்றவகையில் மாறுபடுவதையும் பற்றிக் கூறுகிறார். பிராமணத் துறவி களுக்கும் அல்லாதவருக்கும் பூநூல் அமைப்பில் வேறுபாடு இல்லை.

7. திருமணத்தின் போது, மணமகனுக்குப் பிராமணப் புரோ கிதன் பூநூல் அணிவித்து 3¾ நாழிகை அவனை பிராமண னாக்கி, மணப்பெண்ணுக்குத் தாலிகட்ட வைப்பது, சமயச் சார்புடையதல்ல. சமயச் சார்புடையதாயின், பிராமணன் அவ்வுரிமையை மற்றவருக்கு விட்டுத்தர மாட்டான்.

8. கேரளத்தில் தோமையார் கிறித்துவர்கள் பூநூல் அணிந்து திருமணம் செய்துகொள்ளும் வழக்கை இன்றும் கூடக்

கைவிடவில்லை. இவ்வாறு பூநூல் அணிந்து கொள்ளும் உரிமையை செப்புப்பட்டயத்தில் உறுதி செய்து சேர மன்னர்கள் அளித்துள்ளனர்.

9. முப்புரிப் பூநூலில், முதல் நூல் ஒருவனது மரபையும் (கோத்திரத்தையும்), இரண்டாவது நூல் திருமணத் தகுதியையும், மூன்றாவது நூல் மேலாடையையும் குறிக்கின்றன. ஒவ்வொரு பத்தாண்டுக்கும் தனது அகவைக்கேற்றார்ப் போல் நூல்களின் எண்ணிக்கை 4, 5 எனக் கூடுகிறது.

10. ஒவ்வொரு மரபினரும் தமது குல வழக்கப்படியே பூநூல் அணிந்து திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்ற சட்டம் தமிழ்நாட்டில் உள்ளது. அதை மீறி நடைபெறும் திருமணங்கள் செல்லத்தக்கவையன்று என பெரியோர்கள் கூறுகின்றனர்.

11. பூநூல் என்பது ஒருவனுடைய தொழில் தகுதியை அடிப்படையாகக் கொண்டது. பிராமணனுக்கு அவன் கற்ற கல்வியையும், கம்மாளனுக்குக் கைத்தொழிலையும் குறிக்கும்.

12. பூநூல் அணிந்தவனெல்லாம் குருக்கள் அல்லது பூசாரிகளாகக் கருதப்படுவதில்லை. பிராமணன் அல்லாத பூநூல் அணிந்த சிலரும் சமயச் சடங்குகளை நிறைவேற்றுகின்றனர். குதிரையைப் பலியிடும் அசுவமேத யாகம் என்ற சடங்கினை மன்னனே முன்னின்று நடத்துகிறான். பிராமணர் அங்கு பார்வையாளராக இருக்கின்றனர்.

13. வேதம் என்பதற்குக் கல்வியென்பதே பொருளாகும். கல்வியின் வழியே பெறும் அறிவு வேதம் எனப்படும். வேதம் என்ற சொல் சமயத்துடன் தொடர்புடையதன்று. ஆயுர் வேதம் (மருத்துவம்), கந்தர்வ வேதம் (இசை), வேதாந்தம் (அறிவியல் தொடர்பானவை) போன்ற சொற்களில் காணப்படும் வேதம் என்பது அறிவைச் சுட்டுவதேயாகும்.

14. நமது கிறித்துவ குருக்கள் கால் செருப்புடனும், மெழுகுத் திரி கொளுத்தியும் பூசெய்ப் பலி (Mass) சொல்கின்றனர். செருப்பும் மெழுகு திரியும் சமயத்தின் அடையாளங்களாகக் கருதப்படுகின்றனவா?

15. பூநூல் பிரம்மாவிடமிருந்து வந்தது என்பதை ஏற்க இயலாது. அது மூடநம்பிக்கை கொண்ட கட்டுக் கதை. பிரம்மா என்ற கடவுளை பெரும்பாலான தமிழ் மக்கள் ஏற்றுக் கொள்ளவில்லை.

16. உபநயனம் செய்யப்படும்போது (முதன்முதல் பூநூல் அணிவித்தல்), மந்திரங்கள் சொல்லப்படுகின்றன என்ப

தால், பூநூல் சமயச் சின்னம் ஆகிவிடாது. தமிழர்கள் சாப்பிடு முன்பும், குழந்தைக்குப் பெயர் வைக்கும் போதும், புத்தாடைகள் அணியும் போதும் ஏதோ மந்திரங்கள் சொல்லிக் கொண்டுதானிருக்கிறார்கள். உணவும் உடைகளும் சமயச் சின்னங்களாகிவிடுமா?

17. கிறித்துவ சமய வல்லுநர்கள் (Thelogians) பூநூலும் குடுமியும் மூடநம்பிக்கையென்றும், அதனை ஏற்பதற் கில்லையென்றும் கூறுகின்றனர். கொச்சியின் பேராயர் மெனசிஸ் (Menezes), கொச்சி மன்னரின் உறவினர் ஒருவர் கிறித்துவ சமயத்தில் சேர்க்கப்பட்டபோது, அவரது பூநூலும் குடுமியும் அகற்றப்படவில்லை. மன்னரின் உறவினரிடம் பூநூலையும் குடுமியையும் எடுத்துவிடுங்கள் என்று பேராயர் ஞானஸ்நான நிகழ்வின்போது ஏன் சொல்லவில்லை?

18. ஒவ்வொரு நாளும் காலையில் நீராடுவதையும், நீராடிய பின்பு சந்தனப் பொட்டை இட்டுக் கொள்வதையும் கிறித்துவம் ஏற்காது என்று கூறுகின்றனர். கிறித்துவத்தின் தொடக்க காலத்தில் நமது முன்னோர் இவ்வழக்கை மேற் கொண்டுள்ளனர். கிறித்துவின் தொண்டர் தூய அருளப்பர் (St. John), கற்புடைப் பெண் சிசிலி (Cecily), போன்றோரும், தூய அகஸ்தினாரும் நீராடும் வழக்கைக் கொண்டிருந்தனர். தன் மனைவியுடன் துயின்ற எவனும் நீராடவேண்டும் என்றும், நீராடாமல் தேவாலயத்துக்குள் நுழையக் கூடாது என்றும் சட்டம் உள்ளதை மறந்து விட்டீர்களா? இந்தியர் கள் அவர்கள் எந்தச் சாதியினராயினும் உணவு கொள்ளு முன் கை கழுவுகின்றனர். இறுதி உணவு கொண்ட (Last Supper) வேளையில் இயேசு தனது தொண்டர்களின் கால் களைக் கழுவியதை நினைவில் கொள்ளுங்கள். நீராடுவது என்பது தூய்மையைச் சொல்லும் சமூகச் சடங்கேயன்றி, சமயத்தொடர்புடையது அன்று.

19. ஆடை ஒருவனது உடலை அழகு செய்வதைப் போல, பொட்டு அவனது நெற்றியை அழகு செய்கிறது. ஐரோப் பியர்கள் தலையில் தொப்பி அணிந்து கொள்வது சமயத் தொடர்புடையதா? தொப்பி அணிந்தவன்தான் கிறித்துவன் என்று கூற இயலுமா? ஐரோப்பியருக்குத் தொப்பியைப் போல், இந்தியருக்குச் சந்தனப் பொட்டு என்று ஏன் கருதக் கூடாது?

கோவாவில் நடைபெற்ற கூட்டத்தில் நொபிலியின் அறிக்கையையும் அவ்வறிக்கைக்கும் சான்றுகளாக வைத்திருந்த

ஆவணங்களையும் கண்டு, கேட்டவர்கள் வியப்புற்றனர். ஆயர் ரோஸ் ஒருவரைத் தவிர, நொபிலிக்குச் சார்பானவர் ஒருவரும் அக்கூட்டத்தில் இல்லை. நொபிலியின் பணிகளை கூட்டத் திற்கு பிறகு முடக்கிப் போடுவது என்ற முடிவுடன் வந்திருந்த சமயத் தலைவர்கள், நொபிலியின் விளக்கத்தைக் கேட்டதும் வாய் பேசாத ஊமைகளாயினர். நொபிலியின் ஆற்றல் அக் கூட்டத்தில் வெளிப்பட்டது. இந்தியா பற்றியும் இந்தியர்கள் பற்றியும் நொபிலி விளக்கிக் கூறிய செய்திகள், அதுவரையில் அக்கூட்டத்தார் கேள்விப்படாதன. இந்திய சமயங்களிலும், இந்தியர்களின் பண்பாட்டிலும் நொபிலி பெற்றிருந்த அறிவு கூட்டத்தினை அவர்பால் திருப்பியது. தங்களது அறியாமை யை நொந்து கொண்டனர். **போப்பாண்டவருடைய தூதரும், போர்த்துக்கல் நாட்டின் சமயவியல் முதுகலைக் கல்லூரியின் தலைவரும், கூட்டத்தின் சிறப்பு அழைப்பாளருமான பல் மைரோ, நொபிலியிடம் தனது மன்னிப்பைக் கோரினார்.** பள்ளியறையில் ஆசிரியர் கற்பிக்கும் போது அமர்ந்து கேட்டுக் கொண்டிருக்கும் மாணவர்கள் நிலையிலேயே அன்றைய கூட்டத்தினர் இருந்ததாகப் பல்மைரா கூறினார். கோவாவிலுள்ள சமய அறிஞர்கள் இந்திய சமயங்களைப் பற்றி எதுவுமே தெரி யாமல் இருக்கின்றனரே என நொந்து கொண்டார். நொபிலியின் அறிக்கையை போப்பாண்டவரிடம் சேர்ப்பேன் என உறுதி கூறினார். நொபிலியின் அறிவுத் திறமையையும் ஆற்றலையும் வெளிப்படுத்தும் கூடமாக, கோவா மாநாடு அமைந்திருந்தது.

**நொபிலியின் இந்திய அணுகுமுறையை சமயத் தலைவர் கள் ஏற்றுக் கொண்டனர். கிறித்துவ சமயத்துக்கு புதிதாக மாற்றப்படுபவர்கள், பூநூலையும் குடுமியையும் வைத்துக் கொள்ளலாம் என்று அனுமதி வழங்கப்பட்டது.** இந்தியாவில் கிறித்துவ சமயப் பணியில் ஒரு புதிய தொடக்கம் ஏற்பட்டது. சரியாக 100 ஆண்டுகளுக்குப் பிறகு தமிழகம் வந்த இத்தாலியத் துறவி பெஸ்கி என்ற வீரமாமுனிவர், நொபிலியின் தொடக் கத்தைப் பின்பற்றினார் என்க. கோவா கூட்டத்தின் மூலமாக, ஐரோப்பியர்களில் பலரும் கேள்விப்பட்டிராத இராபர்ட் - டி - நொபிலி, ஐரோப்பாவெங்கும் பேசப்பட்டார். தமிழகத்தின் கிறித்துவ சமய வரலாற்றில் நொபிலியின் சமயப் பணிகள் வரலாற்றுச் சிறப்பு மிக்கவைகளாகும்.



## ஜான்–டி–பிரிட்டோ
## (John-de-Britto)

நொபிலி காலத்திலேயே மதுரையில் பணியாற்றிய **பல்த்த சார் டி கொஸ்தா. அல்வாரெஸ் புரொயென்சா** போன்ற இயேசு அவைத்துறவிகள், பல்வேறு இன்னல்களுக்குள்ளாயினர்.[619] திருமலை நாயக்கன் மதுரையிலிருந்த காலத்தில் அவனது ஆளுநர்கள் திருச்சி, சேந்தமங்கலம், சேலம், தொட்டியம் போன்ற பகுதிகளில் கோலோச்சினர். மன்னனுக்கு மாறாக இத்தலைவர்கள், கிறித்துவர்பால் வன்முறைகளை ஏவிவிட்டனர். திருச்சிக்கருகே இருந்த காந்தலூரில் பெரும் எண்ணிக்கையிலான பறையர்கள் கிறித்துவ சமயத்தைத் தழுவினர்.[620] இதனால் வெறுப்புற்ற திருச்சி ஆளுநர், அம்மக்களைக் கொடுமைப்படுத்தினான். அல்வாரெஸ் ஆளுநரிடம் முறையிட்டும் கொடுமை நிறுத்தப்படவில்லை. புராயென்சா தமது குறிப்பொன்றில் (கி.பி. 1659) மேற்கண்ட செய்தியை உறுதிப்படுத்துகிறார்.[621]

இக்கொடுமைகளுக்கு முடிவு கட்ட, பல்தசார் டிகொஸ்தா மதுரை சென்று திருமலை நாயக்கரைச் சந்தித்தார். டிகொஸ்தாவை நன்முறையில் வரவேற்ற மன்னன், கிறித்துவர்கள்பால் பரிவுடன் நடந்து கொள்ளவும், துறவிகளின் சமயப்பணிகளில் குறுக்கிட வேண்டாம் என்றும் மன்னன் தனது ஆளுநர்களுக்குக் கட்டளையிட்டான்.[622] இயேசு அவைத் துறவிகளின் மடல்கள்

619. History of the Nayaks of Madura, p. 107.

620. Bertrand, III, pp. 9-10.

621. Ibid, p. 55.

622. Ibid, pp. 56-60.

மற்றும் குறிப்புகளின்படி, திருமலை நாயக்கன் கிறித்துவர் கள்பால் பரிவுடன் நடந்து கொண்டதாகவே கருதலாம். புரொயென்சா, இன்னும் ஒருபடி மேலே சென்று, கிறித்துவ சமயத்தின் காவலனாகவே திருமலையைப் புகழ்கின்றார்.[623] திருமலை நாயக்கன் கிறித்துவ சமயத்தில் சேர்ந்துவிட்டதாகச் சொல்லப்படும் செய்திக்குச் சான்றுகள் இல்லை. கிறித்துவ சமயத்தாரின் குறிப்புகளிலும் இச்செய்தி காணப்படவில்லை.

## ஜான்-டி-பிரிட்டோ

பிரான்சிஸ் சேவியர், இராபர்ட்-டி-நொபிலி வரிசையில் வைத்துக் கருதப்படும் மூன்றாவது சிறப்புக்குரிய இயேசு அவைத்துறவி, ஜான்-டி-பிரிட்டோ ஆவார். போர்த்துக்கல் நாட்டில் லிஸ்பன் நகரில் கி.பி. 1647ஆம் ஆண்டில் பிறந்த பிரிட்டோ, மன்னர் குடும்பத்தோடு இணைந்த மேட்டுக்குடியின் மகனாவார். இளவரசருக்கு அரண்மனையில் தனி ஆசிரியரால் கல்வி கற்பிக்கப்பட்டபோது, இளவரசருக்குத் துணையாக அமர்ந்து கல்வி பயின்றவர் பிரிட்டோ. கி.பி. 1662ஆம் ஆண்டில் இயேசு அவைக் குடும்பத்தில் சேர்ந்தார். அப்போதிருந்தே இந்தியாவில் கிறித்துவ சமயப்பணியாற்ற வேண்டுமென உறுதி பூண்டார்.[624] குருவானர் தகுதியைப் பெற்று, கி.பி. 1672ஆம் ஆண்டில் தமது நண்பரும் இயேசு அவைக் குருவானவருமான ஆந்த்ரே பிரேயர் என்பாருடனும் பல்த்தசார் டிகொஸ்தா என்பாருடனும் இந்தியா புறப்பட்டார். பல்த்தசார், பிரிட்டோ வின் ஆசான் எனப்படுபவராவார். இவரே பிரிட்டோவுக்கு சமயப்பணியாற்றும் ஆர்வத்தைத் தூண்டியவராவார். பல்த்தசார் நொபிலிக்கு அறிமுகமானவர். தமிழ்நாடெங்கும் திரிந்த துறவி. கடற் பயணத்தின் போது பல்தசார் இறந்து போனார்.[625] தனது வழிகாட்டி இறந்துபோனதால் வருத்தமுற்ற பிரிட்டோ, பிரேய ருடன் கோவா வந்து சேர்ந்தார். சில மாதங்கள் அம்பலக்காட் டில் ஓய்வு மேற்கொண்டு, ஆந்த்ரே பிரேயருடன் தனது முதல் பணித்தளமான கொழை என்ற ஊருக்குப் பயணமானார்.

---

623. Ibid, p. 50, Vide Appendix A, Letter No. 1.

624. History of The Nayaks of Madura, p. 150.

625. வரலாறும் வழக்காறும் - வரதராசன் பேட்டை ஒரு பார்வை, மரியசூசை, அ. கும்பகோணம் மறைமாவட்ட நூற்றாண்டு நினைவு வெளியீடு, 1999, ப. 31.

## கொழையில் பிரிட்டோ

கொழை என்னும் ஊர், பல்த்தசார் டிகொஸ்தாவால் கிறித்துவர்களின் குடியிருப்பாக மாற்றப்பட்டவொரு காட்டுப் பகுதியாகும்.[626] இவ்வூர் தற்போது கடலூர் மாவட்டம் திரு முட்டம் (ஸ்ரீமுஷ்ணம்) என்ற வைணவ திருத்தலத்துக்கு அருகி லும், அரியலூர் மாவட்டம், உடையார் பாளையம் வட்டத் தின் வடகிழக்கு எல்லையிலும் உள்ளது. கொழை என்ற பெயரை ஒலிக்க இயலாத ஐரோப்பியர்கள், கொலை (Colai) என்றே தங்கள் கடிதங்களில் பதிவு செய்துள்ளனர். குழை என்பதே இவ்வூரின் சரியான பெயராகும். குழை என்பதற்கு, காட்டுவழி என்பது பொருளாகும். குழை - கொழையாகி - கொலை என்று சொல்லப்பட்டது.

கொழை, உடையார் பாளையம் மன்னரது ஆளுகைக்கு வெளியிலிருந்த ஊராகும். அது செஞ்சி ஆளுகையின் கீழிருந்தது. உடையார் பாளையம் மன்னர் தமது பகுதியில் கிறித்துவ சமயத்தைத் தடை செய்திருந்ததால், டிகொஸ்தா, கொழையைத் தேர்வு செய்தார். கொழையில் தங்கியிருந்த கிறித்துவர்கள், டிகொஸ்தா போன்றவர்களால் அண்மைக் காலத்தில் கிறித்துவ சமயத்தில் இணைக்கப்பட்டவர்களாவர். இவர்களில் பெரும் பாலான குடும்பங்கள், **கங்கை கொண்ட சோழபுரம், கோடாலி கருப்பூர், வாணதிரையன் பட்டணம், பரணம், இலைக்கடம்பூர், பொன்பரப்பி** ஆகிய உடையார்பாளைய மன்னரின் ஆளுகைக் குட்பட்ட ஊர்களைச் சார்ந்தவராவர். மன்னரின் அடக்கு முறைக்கு அஞ்சி இக்குடும்பங்களையெல்லாம் டிகொஸ்தா, கொழையில் குடியேற்றியிருந்தார். கொழையில் மேலும் பல ஊர்களிலிருந்து வந்தவர்களும் குடியமர்த்தப்பட்டனர். **சின்ன சேலம், விருத்தாசலம், வேட்டவலம், கடலூர், பந்த நல்லூர், மயிலாடுதுறை, குத்தாலம்** போன்ற ஊர்களிலிருந்து கிறித்துவர் கள் இங்கு குடியேற்றப்பட்டனர்.[627] கொழை என்பது புதிய கிறித்துவர்களின் குடியேற்ற ஊர் என்பது சரியே.

---

626. மேலதே.

627. ஆய்வுக்கட்டுரை, ம.சோ. விக்டர்.

இந்த ஊருக்கு மிக அருகில் உடையார்பாளையம் பகுதியில் (1 கி.மீ இடைவெளி) கைக்கோளர்கள் பெருமளவில் வாழ்ந்திருந்தனர். இவர்களிடம் துணிகளை வாங்க தமிழகத்திலிருந்த வணிகர்கள் இங்கு வருவது உண்டு. இங்கு பெரும் துணிச் சந்தை நடைபெற்றதற்கான சான்றுகளும் உள்ளன. கி.பி. 1500 ஆண்டுகளில் தமிழகத்தில் சிறப்பாகக் கருதப்பட்ட துணிச் சந்தைகளில் இவ்வூரும் உண்டு. இவ்வூர் அக்காலத்தில் அய்யம்பேட்டை (அண்மைக்காலம் வரையிலும்) என அழைக்கப்பட்டு வந்தது. பேட்டை என முடியும் ஊர்கள், சந்தைக் கூடுமிடங்களே.[628] வரலாறு குறிப்பிடும் இடைக்காலத் துணிச் சந்தை உண்மையில் அய்யம் பேட்டையில் நடைபெற்றதே. ஆனால் அருகிலிருந்த ஊரான திருமுட்டம் என்று பதிவு செய்யப்பட்டுவிட்டது.[629] அய்யம்பேட்டையில் கைக்கோளர்கள் வாழ்ந்திருந்ததற்கான சான்றுகள் உள்ளன. இவர்கள் டியூப்ளே காலத்தில் அகரம் என்ற ஊரில் தங்கி தொழில் செய்தனர்.

அய்யம் பேட்டையில் கைக்கோளர்கள் வாழ்ந்த காலத்தில், அவ்வூரில் கிறித்துவர்கள் குடியிருக்க அச்சப்பட்டனர். அதன் கரணியமாக கொழை குடியேற்ற ஊரானது. இவ்வூருக்குத் தான் முதன் முதலாகச் சமயப் பணியாற்ற பிரிட்டோ வந்து சேர்ந்தார். டிகொஸ்தா தொடங்கி வைத்த பணியை பிரிட்டோ தொடர்ந்தார். கொழையில் 1673-75 ஆண்டுகளில் பிரிட்டோ பணியாற்றினார். சில வரலாற்றாசிரியர்கள், கொழைக்கு வந்த பிரிட்டோ ஏன் அய்யம்பேட்டைக்கு வரவில்லை என்று குழம்புகின்றனர். அய்யம்பேட்டை என்ற இடம் பிரிட்டோ காலத்தில் இருந்தது, ஆனால் கிறித்துவர்கள் யாரும் அங்கில்லை. அடுத்த 40 ஆண்டுகளில் பெரும் மாற்றம் கொழையில் ஏற்பட்டது.

உடையார்பாளையம் மன்னர் கி.பி. 1690 ஆண்டுகளில், கிறித்துவ சமயத்தைத் தனது பகுதிகளில் அனுமதித்ததாகச் செய்திகள் கூறுகின்றன. கி.பி. 1690 களில், தஞ்சை மன்னன், உடையார் பாளையம் மன்னனுக்கும், நாயக்க அரசி மங்கம்மாளுக்கும் எழுதிய மடல்களில், தஞ்சாவூரைப் போலவே

---

628. பேட்டை = சந்தை. வின்ஸ்லோ தமிழ் - ஆங்கில அகராதி, ப. 815.

629. Portuguese in the Tamil Coast, MaPA, Important Weaving Centres in the Coromandel Coast, p. 142.

உடையார் பாளையத்திலும் திருச்சியிலும் கிறித்துவ சமயத் துக்குத் தடைவிதிக்கக் கோரினான். இச்செய்தியின் மூலம் உடையார் பாளையத்தில், கிறித்துவர்கள் மீதிருந்த தடை விலக்கப்பட்டதாக அறியலாம்.[630] அதன் அடிப்படையில், கொழையில் இடநெருக்கடியால் அல்லலுற்ற கிறித்துவ மக்கள் மேற்கேயிருந்த அய்யம்பேட்டையில் குடியேறினர். ஏறக்குறைய பாதிக்கு மேற்பட்ட குடும்பங்கள் அய்யம்பேட் டையில் குடியேறிவிட்டனர். கி.பி. 1712ஆம் ஆண்டில் வீரமா முனிவர் இங்கு வந்த போது, அய்யம்பேட்டையில் கிறித்துவர்கள் பெருமளவில் குடியேறியிருந்தனர்.* இவ்வுண்மையை பிரிட்டோ, வீரமாமுனிவர் வரலாற்றை எழுதும் ஆசிரியர்கள் புரிந்து கொள்ள வேண்டும். அய்யம்பேட்டை 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆட்சியாளர்களால் வரதராசன் பேட்டை என்று பெயர் மாற்றம் செய்யப்பட்டது. பல்த்தசார் - டி கொஸ்தா, பிரிட்டோ, ஆந்திரே, வீரமாமுனிவர் எனச் சிறப்புமிக்கவர்கள் பணியாற்றிய இவ்வூரில், இன்று 20,000க்கும் மேற்பட்ட கத்தோலிக்கக் கிறித்துவர்கள் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் அனைவரும் வன்னியர் மரபைச் சார்ந்தவர்களாவர். இன்று அவ்வட்டாரத்தில் மிகச் சிறந்த கல்விக் கூடமாய் அவ்வூர் திகழ்கின்றது. இவ்வூரிலிருந்து ஒரு பேராயரையும் 70க்கும் மேற்பட்ட குருக்களையும் 1000க்கு மேற்பட்ட கன்னியர் களையும் கத்தோலிக்கத் திருச்சபை பெற்றுள்ளது.[631] குடந்தை ஆயத்தில் இவ்வூரே பெருமளவிலான கிறித்துவர்களைக்

---

630. History of The Nayaks of Madura, p. 164.

The King of Tanjore not satisfied with what he had done in his own territories against the Christians wished still further to have them persecuted and brought to destruction within the Kingdoms of Princes, his neighbours. With this object he wrote, while still impelled by his rage, while the fire his wrath was still burning, to the Queen of Madura and the King of Aurpaliam (Udayarpalayam), representing to them the danger they incurred for their temples and even for their thrones, if they did not expel the Christians. History of The Nayaks of Madura.

* கொழை - அய்யம்பேட்டைக் கிறித்துவர்கள் பற்றிய விளக்கங் களை தமிழ்நாட்டுக் கிறித்துவம் பகுதி II என்ற நூலில் காண்க.

கொண்டுள்ள பங்காகும். இத்தனைப் பெருமைகளுக்கும் வித்திட்டவர்கள் பிரிட்டோ, பெஸ்கி போன்ற இயேசு அவைத் துறவிகளே என்றால் அது உண்மையான கூற்றேயாகும்.

கொழையிலிருந்து கி.பி. 1675ஆம் ஆண்டு வெளியேறிய பிரிட்டோ, ஐந்தாண்டுகள் பல்வேறு இடங்களில் பணியாற்றி விட்டு, 1680ஆம் ஆண்டில் ஆந்த்ரேயுடன் மதுரை சென்றார். அங்கிருந்து மறவநாட்டுக்குச் சென்றார். கி.பி. 1669 ஆண்டில், கிறித்துவர்கள் மீது வன்முறை கட்டவிழ்த்து விடப்பட்டதால், பத்தாண்டுகள் ஒருவரும் மறவநாட்டுப் பகுதிகளுக்குச் செல்ல வில்லை. பிரிட்டோ துணிச்சலுடன் சென்று பணியாற்றினார். கி.பி. 1683ஆம் ஆண்டு, மதுரை பணித்தளத்தின் தலைவராகத் தேர்வு செய்யப்பட்டார். கி.பி. 1688ஆம் ஆண்டு, மதுரைப் பகுதிக்கான கணக்காயராக (Procurator - Procureur de la Mission)ம் பொறுப்பேற்றுக் கொண்டதால், சமயப் பணிகளுக்கான செல வினங்களை ஈடுகட்ட போர்த்துக்கல் சென்றார்.[632] அவருடன் கல்வி பயின்ற இளவரசர் அப்போது மன்னராயிருந்தார்.

## வடுகர் பேட்டையின் லிங்கா ரெட்டி

கொழையைப் போன்றே, நாயக்கர்கள் காலத்தில் வடுகர் பேட்டை கிறித்துவர்கள் நிறைந்த ஊராக இருந்தது. நாயக்க மன்னர்களின் உறவினர்களும், அரசு அலுவலர்களும் இவ்வூரில் குடியிருந்ததினால், இவ்வூர் வடுகர்பேட்டை (வடுகர் - தெலுங்கர்) எனப்பட்டது. மேலும் இது ஒரு வணிக நகரமாகவும் விளங் கிற்று. லிங்காரெட்டி என்ற அமைச்சர் தகுதியிலிருந்த தெலுங்கன் இங்கு ஆட்சி செய்துவந்தான். ரெட்டி என்ற தெலுங்கர் மரபு, திருப்பதிக்கு வடக்கே செல்வச் செழிப்புடன், பலகாணி நிலங்களுக்கு உரிமையாளர்களாக வாழ்ந்திருந்த வேளாண் மரபாகும். கி.பி. 14ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு தமிழகம் வந்து ஆண்ட நாயக்கர்களின் உயர் அலுவலர்களாக ரெட்டிகள் பணியாற்றினர். பிற்காலத்தில் நாயக்க அரசியாக அறியப்பட்ட மங்கம்மாளின் தந்தையே இந்த லிங்கா ரெட்டி ஆவான்.

---

631. தினகரன், பெரம்பலூர் மாவட்ட வழிகாட்டி மலர், 2005. ப. 73.

632. Bertrand, III, pp. 405-423.

வடுகர் பேட்டையில் லிங்கா ரெட்டி காலத்திலேயே பல கிறித்துவக் குடும்பங்கள் வாழ்ந்து வந்தனர். லிங்காரெட்டி கிறித்துவர்கள் பால் எப்போதும் பற்று கொண்டவன். கிறித்துவ சமயப் பணியாளர்களுக்குப் பெரிதும் உதவியவன்.[633] ஏற்கனவே இவ்வூரில் நொபிலி பணியாற்றியிருந்தார். கி.பி. 1683ஆம் ஆண்டில் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சி, லிங்காரெட்டியை மன மாற்றம் அடையச் செய்தது. லிங்கா ரெட்டியின் வழிகாட்டி யும் குருவுமானவொரு பிராமணர், ரெட்டியிடம் கிறித்துவர்கள் பற்றி தவறான செய்திகளைத் தெரிவித்தார். பரங்கியரும் பறையர்களும் ஒன்று சேர்ந்து கொண்டு, வடுகர் பேட்டையில் ஆலயம் கட்டி வழிபாடு நடத்தி வருவதற்கு எதிர்ப்பு தெரிவித் தான். தொன்றுதொட்டு வழிபட்டுவரும் இலிங்க வழிபாட் டைக் கிறித்துவர்கள் இழிவுபடுத்திப் பேசுவதாகவும் கூறினான். இதனால் அதிர்ச்சியுற்ற லிங்காரெட்டி, தனது அமைச்சனைக் கூப்பிட்டு, தனது, ஆளுகையில் கிறித்துவர்கள் வாழும் ஊர், எண்ணிக்கை வழிபாட்டிடங்கள் போன்ற தகவல்களைக் கேட் டான். அமைச்சனோ, "எண்ணிக்கையா? யாருக்குத் தெரியும்? எங்கும் அவர்கள் வாழ்கிறார்களே! கிறித்துவர்கள் இல்லாத ஊர் ஒன்றுகூட நமது ஆட்சியின் கீழ் இல்லை," என்று பதிலளித்தான்.[634] இருப்பினும், லிங்காரெட்டி கிறித்துவர் களைத் துன்புறுத்தவில்லை. கிறித்துவம் திருச்சிப் பகுதியில் தழைத்திருந்தது. கொழையும் வடுகர்பேட்டையும் கி.பி. 17ஆம் நூற்றாண்டிலேயே கிறித்துவ ஊர்களாயிருந்தன.

## மறவநாட்டில் பிரிட்டோ

போர்த்துக்கல் சென்ற பிரிட்டோ, கி.பி. 1691 ஆம் ஆண்டில் இந்தியா திரும்பினார். மறவநாட்டுக்குச் செல்ல முடிவு செய் தார். இரகுநாத சேதுபதியின் எதிர்ப்பை அவர் பொருட் படுத்தவில்லை. அக்காலத்தில் பயணத்தின்போது ஆறலைக்

---

633. History of The Nayaks of Madura, p. 150.

634. Bertrand, III, p. 317.

634. Linga Reddi asked what the total number of Christians in his dominious would be. His minister replied, "Their number! who could count them? They are everywhere. There is not a village where they are not found."

- R. Sathiyanatha Ayyar.

கள்வர்களின் அச்சமும் காட்டுப்பகுதி விலங்கினங்களின் நட மாட்டமும், பயணம் செய்வோருக்கு இடர்ப்பாடுகளாயிருந்தன. மேலும் கோடையின் வெப்பம், ஆடிக்காற்று, மழைக்காலப் புயல் மற்றும் வெள்ளம் போன்ற இயற்கையின் இடர்ப்பாடு களும் பயணம் செல்லத் தடைகளாயிருந்தன. ஆனால் பிரிட்டோ இவை பற்றியெல்லாம் வருத்தப்படவில்லை. கிறித்துவ சமயத் துக்காகத் தனது உயிரையும் இழக்கத் துணிந்திருந்த பிரிட் டோவுக்கு மேற்கண்டவைகளெல்லாம் இடையூறுகளாவே தோன்றவில்லை. மறவநாட்டுச் சமயப் பணிகளில் பிரிட்டோ வினுடைய மிகப்பெரிய வெற்றியென்பது **தடியத் தேவன்** என்பவனை (அடுத்து மன்னனாகும் வாய்ப்பைப் பெற்றிருந்தவன்), கிறித்துவ சமயத்திற்கு மாற்றியது தான் எனலாம்.[635] இவ் வெற்றியே பிரிட்டோவின் வாழ்வுக்கும் உலை வைத்தது. அக் காலத்து மன்னர் மரபினரும், செல்வர்களும் ஒன்றுக்கு மேற் பட்ட மனைவிகளையும் காமக் கிழத்திகளையும் கைக் கொண் டிருந்தனர். (கிழவன் சேதுபதி இறந்த போது அவனது 79 மனைவியரும் உடன்கட்டையேறியதாக செய்தியுள்ளது.)

கிறித்துவம் ஒருவனுக்கு ஒருத்தி என்ற நிலைப்பாட்டி லிருந்ததால், தடியத்தேவன் தனது முதல் மனைவியை மட்டும் வைத்துக் கொண்டு மற்ற நால்வரையும் விலக்கி வைத்து விட்டான். இவர்களில் இளைய மனைவி, மன்னன் சேதுபதியின் தங்கை மகளாவாள். மாமனிடம் வந்து முறையிட்ட தடியத் தேவனின் மனைவி மீது பரிவு கொண்ட சேதுபதி, தனது தங்கை மகளை மீண்டும் ஏற்றுக் கொள்ளுமாறு வற்புறுத்தி னான். தடியத்தேவன், தான் ஏற்றுக் கொண்டுள்ள கிறித்துவக் கொள்கை, ஒரு மனைவியை மட்டுமே அனுமதிப்பதால், மன்னனின் கோரிக்கையை ஏற்பதற்கில்லை எனக் கூறிவிட் டான். அத்துடன் கிறித்துவ சமயத்தின் பெருமைகளையும் மன்னனிடம் விளக்கத் தொடங்கினான். சினம் கொண்ட சேதுபதியால் தடியத் தேவனை ஒறுக்க இயலவில்லை. எனவே மன்னனின் பார்வை பிரிட்டோ பக்கம் திரும்பியது. பிரிட்டோ மீது வெகுண்டெழுந்தான். தன் தங்கையின் மகள் வாழா வெட்டியானதற்கு பிரிட்டோவே கரணியம் எனக் கருதிய

635. Ibid.

சேதுபதி, மறவ நாட்டிலிருந்த அனைத்துத் தேவாலயங்களையும் இடிக்க ஆணையிட்டதோடு, பிரிட்டோர்வையும் கைது செய்யக் கட்டளையிட்டான்.[636]

8.1.1693 ஆம் நாளில் ஜான்-டி-பிரிட்டோ கைது செய்யப் பட்டார். 11ஆம் பக்கலில் (தேதியில்) இராம நாதபுரம் கொண்டு வரப்பட்டார்.[637] உடனே தடியத் தேவன் செயல் படத் தொடங்கி னான். பிரிட்டோவை விடுதலை செய்யுமாறு சேதுபதிக்கு மிரட்டல் விடுத்தான். தடியத்தேவனை எதிர்க்கவும் துணிவின்றி, பிரிட்டோவை விடுவிக்கவும் மனமின்றி செய்வதறியாது சேதுபதி திகைத்தான். தடியத்தேவனுடன் மறவ நாட்டில் பெருகியிருந்த கிறித்துவர்களின் எண்ணிக்கை மன்னனை மிரள வைத்தது. இந்நிலையில் ஓரியூரிலிருந்த தனது உடன் பிறப்பு அரெங்க நாதத் தேவனிடம், பிரிட்டோவை அனுப்பிவைத்தான். கையில் விலங்கிடப்பட்டு, குதிரை வீரர்களால், இரவோடிரவாக பிரிட்டோ 80 கி.மீ. தொலைவுக்கு இழுத்துச் செல்லப்பட்ட தாகச் சொல்லப்படுகின்றது. குதிரையின் ஓட்டத்துக்கு ஈடு கொடுத்து, எங்கும் நிற்காமல் (non - stop) பிரிட்டோ ஓட வேண்டியிருந்தது.

ஓரியூர் என்பது, தொண்டிக்கு மேற்கே, பாம்பாற்றங் கரையிலிருந்த ஊராகும். அங்கு ஓரியூர்த் தேவன் என்ற அரெங்க நாதத் தேவன் ஆளுநராயிருந்தான். சேதுபதி அவனுக்கு அனுப்பி யிருந்த செய்தியில், யாருக்கும் தெரியாமல் பிரிட்டோவைக் கொன்றுவிடும்படிக் கூறியிருந்தான். இந்த ஓரியூர்த் தேவன் தொழுநோய் கொண்டிருந்தவன். இவனது மனைவி கிறித்துவ சமயத்துக்கு மாறியிருந்தவள்.[638] தன் மனைவிக்கு பிரிட்டோ வைக் கொலை செய்யப் போகும் செய்தி தெரிந்தால் தன்னைத் தடுத்துவிடுவாள் என்று அஞ்சி, தனது மனைவியிடமும் இச் செய்தியைக் கூறவில்லை. இவனது அமைச்சர் முருகப்பப் பிள்ளையிடம் மன்னனின் ஆணையைக் கூறி பிரிட்டோவைக் கொன்றுபோட ஏற்பாடு செய்தான்.

---

636. Ibid.

637. Ibid.

638. Ibid.

*3.2.1693 ஆம் நாளில், சிறையிலிருந்த பிரிட்டோ எழுதிய மடலின் ஒரு பகுதியாவது*[639] **"நான், 31.1.1693 ஆம் நாளில் ஓரியூருக்குக் கொண்டு வரப்பட்டேன். ஏற்கனவே 28 ஆம் நாளில் என்னை உசாவிய (விசாரித்த)வர்கள், எனக்கு கொலைத் தீர்ப்பு அளித்திருந்தனர். இந்நிகழ்வு அரெங்க நாதத் தேவன் முன்னிலையில் நடைபெற்றது. என் உயிரினும் மேலான கிறித்துவ மக்களிடமிருந்து தனிமைப் படுத்தப் பட்டேன் ஓரியூரில் என்னைக் கொன்று போட ஆணை யிடப்பட்டுவிட்டது என்று என்னைக் கொலை செய்யப் போகிறார்கள் என்பது தெரியவில்லை. சாவின் மடியை அமைதியின்றி எதிர் நோக்கிக் கொண்டிருக்கிறேன். எனது வாழ்நாள் முழுதும் எந்தப் பரிசை நான் விரும்பியிருந்தேனோ, அது எனது கிறித்துவ சமயப் பணிகளுக்காகவும், எனது உழைப்பிற்காகவும் அளிக்கப்படவுள்ளது. உண்மையான கடவுளை மக்களிடையே அடையாளம் காட்டியதற்காகவும், சிலை வழிபாடுகளைச் சாடியதற்காகவும், நான் குற்றவாளி யாக்கப்பட்டுள்ளேன். காவலர்கள் என்னைக் கண்காணித்துக் கொண்டிருக்கிறார்கள். இதற்கு மேலும் என்னால் எழுத இயலவில்லை".**

*பிரிட்டோவின் இறுதிச் செய்தியில் காணப்படும் உறுதி, அவர் சாவைப் பற்றிக் கிஞ்சித்தும் வருத்தப்படவில்லை யென் பதையே காட்டுகிறது. முருகப்பப் பிள்ளையின் ஆணைப் படி, 4.2.1693 ஆம் நாளில், விடியுமுன்னதாக, பிரிட்டோ கொலை செய்யப்பட்டார்.*[640] அவரது தலை துண்டிக்கப்பட்ட உடலை

---

639. Betrand, III, p. 447.

The last letter from Britto, on 3.2.1693.

"ON the 28th of January I was judged and condemned to be executed in the presence of Renganadadevan .... I was seperated from the Christians and conducted to his brother Oriyurdevan, to whom he sent secret orders to kill me without delay. I arrived here on the 31st of January. I am expecting death with impatience; it has always been the object of my desire, it is now the most precious recompense to my work and sacrifice. All the crime I am charged with is the teaching of the law of true God and the wearing of the worshippers form their idols. The soldiers watch me. I cannot write more".

640. Ibid, p. 448.

கழுவிலேற்றி, காக்கைகளுக்கும் கழுகுகளுக்கும் இறையாகப் போட்டனர்.[641] மூன்றாம் நாளில் பிரிட்டோ இறந்துபட்ட செய்தியையறிந்த கிறித்துவர்கள் திரண்டுவந்து, அவரது உடலில் எஞ்சியிருந்த எலும்புகளைப் பொறுக்கி எடுத்துக் கொண்டு போயினர் என்று சொல்லப்படுகின்றது. ஆறாயிரம் மைல் களுக்கப்பாலுள்ள நாட்டில் பிறந்து, பசி வறுமையின் கொடுமை என்ற சுவடுகளே அறியாத செல்வர் மரபில் வளர்ந்து, தனது இறைவனும் தலைவனுமாகிய இயேசு கிறித்துவுக்காக, ஏதிலி யாய்ச் செந்நீரைச் சிந்தி, ஓரியூரில் உறக்கம் கொண்ட ஜான்-டி-பிரிட்டோ, இந்தியாவுக்கு வந்த சமயப் பரப்பாளர்களில் சிறந் திருந்தோருள் ஒருவராகக் கருதப்படுகின்றார். பிரான்சிஸ் சேவி யருக்கும் நொபிலிக்கும் கூட இத்தகைய நற்பேறு கிட்டவில்லை என்பது கிறித்துவ சமய வரலாற்றறிஞர்களின் கருத்தாகும்.

பிரிட்டோ தனது செங்குருதியைக் கொட்டிய அவ் ஓரியூர் நிலமும் மண்ணும் பின்னர் சிவந்து போனதாக கிறித்துவர்கள் கூறுகின்றனர். தூயவர் கொலையுண்ட அவ்விடத்தில், அடுத் தடுத்து ஏராளமான அருஞ்செயல்கள் (Miracles) நிகழ்வுற்றன என்று செய்திகள் கூறுகின்றன. தொழுநோயால் பீடிக்கப்பட் டிருந்த ஓரியூர்த் தேவன் உடன் இறந்து போனதாகவும், முருகப்பப் பிள்ளை எதிர்பாராமல் இறந்துபட்டதாகவும், இச்சாவுகள், பிரிட்டோவைக் கொலை செய்த குற்றத்திற்கென இறைவன் கொடுத்த ஒறுப்புகள் (தண்டனைகள்) என செவி வழிச் செய்திகள் கூறுகின்றன. மானூக்கி (Manucci) என்ற இத்தாலிய நாட்டுப் பயணி, ஓரியூரில் பிரிட்டோ மறைந்த இடத்தில் ஒரு சிற்றாலயம் (Chapel) கட்டப்பட்டிருந்ததாகக் கூறுகிறார்.[642] இவ்வூர் இராமேசுவரம் செல்லும் வழியிலிருந்தது என்றும் குறிப்பிட்டுள்ளார். கி.பி. 1730 ஆம் ஆண்டில், இராம நாத புரத்து மன்னன் மரபில் வந்த கட்டையத் தேவன் சேதுபதி அச்சிற்றாலயத்தை இடித்துவிட்டு மிக அழகான பேராலயம் ஒன்றைக் கட்டிக் கொடுத்தான் என்று வேய்ரா (Fr. J. Vieyra) என்பார் உரோமைக்கு எழுதிய மடல் ஒன்றில் தெரிவிக்கின்றார்.[643]

641. Ibid, p. 445.

642. Portuguese in the Tamil Coast, p. 291.

643. Bertrand, op. cit. vol. III p. 448

## பிரிட்டோவின் இறப்புக்குப் பிறகு

பிரிட்டோ, தனது சமயத்துக்காக உயிர்துறந்தவர் (Martyr) என்று கிறித்துவ சமயம் கூறுகிறது. பிரிட்டோவின் துன்பமான முடிவுக்கு வரலாற்றாசிரியர்கள் வேறு சில கரணியங்களையும் கூறுகின்றனர். நெல்சன் என்பார், கிறித்துவ சமயத்தின் சான்றாளராக (வேத சாட்சி) பிரிட்டோவைக் கருதுகின்றார்.[644] சத்திய நாதய்யர் போன்ற வரலாற்றாசிரியர்கள் பிரிட்டோவின் அரசியல் நடவடிக்கையே அவரது இறப்புக்குக் கரணியம் என்கின்றனர். சத்திய நாதையரின் கூற்றாவது:[645]

தடியத் தேவனைக் கிறித்துவ சமயத்துக்கு மாற்றிய போதும், தன் தங்கை மகளை தடியத் தேவன் ஒதுக்கி வைத்த போதுங் கூட சேதுபதி, பிரிட்டோவை ஒறுக்க வேண்டும் என்று நினைக்கவில்லை. சேதுபதியை இறக்கிவிட்டு, தடியத்தேவனை மன்னனாக்கி, ஒரு கிறித்துவ அரசை மறவநாட்டில் உருவாக்க பிரிட்டோ முயன்றார் என்றும், அவ்வாறு ஒரு அரசு ஏற்படு மானால் கிறித்துவ சமயப் பணிகளை வெகு எளிதாகச் செய்ய முடியும் எனவும் பிரிட்டோ கருதி, ஆட்சிக் கவிழ்ப்புப் பணி யில் ஈடுபட்டார்", என்று கருதுகிறார்.

"தன்னையும் தன் ஆட்சியையும் கவிழ்க்க உள்ளறுப்பு வேலைகள் (சதி) நடைபெறுகின்றன என்பதை சேதுபதியால் செறித்துக் கொள்ள இயலவில்லை. ஆட்சிக் கவிழ்ப்பு நடை பெற்றால் தன்னையும் கொன்று போடுவார்கள் என்று சேதுபதி கருதினான். இவற்றிற்கெல்லாம் அடிப்படையாகக் கருதப் பட்டவர் பிரிட்டோ என்பதால், பிரிட்டோவைச் சேதுபதி வீழ்த்தினான்", என்கிறார். மேலும் அப்போது மதுரையை ஆண்டு கொண்டிருந்த அரசி மங்கம்மாவுக்கும் கிழவன் சேதுபதிக்கும் நல்லுறவு அமையவில்லை. தடியத் தேவனை மன்னனாக்குவதில் மங்கம்மாவின் தூண்டுதலும் இருக்குமோவென சேதுபதி கருதி னான். மேலும் மங்கம்மாள், கிறித்துவ சமயத்தலைவர்களை வெளிப்படையாகச் சார்ந்திருந்து அவர்களின் சமயப் பணிகளுக்

---

644. The Madura Country, Nelson, J.H., 1863. pp. 217-25.

645. History of the Nayaks of Madura, p. 162.

கெல்லாம் ஊக்கம் கொடுத்து வந்தாள். மங்கம்மாவின் அரசைப் போன்று கிறித்துவத்தை ஊக்குவித்த அரசு வேறெதுவுமில்லை என்பது வரலாற்றாசிரியர்களின் கருத்தாகும்.

எப்படியிருப்பினும் மறவ நாட்டில் கிறித்தவ அரசைத் தோற்றுவிக்க வேண்டும் என்று உண்மையில் பிரிட்டோ கருதியிருந்தாலும், அது சமய வளர்ச்சிக் கண்ணோட்டத்தில் செய்யப்பட்டதே என்ற அளவில், பிரிட்டோவை ஒரு சமயச் சான்றாளராகக் (Martyr) கருதுவது சரியான சிந்தனையே ஆகும். பிரிட்டோவை வீழ்த்திய பிறகு, மறவ நாட்டில் கிறித்துவம் மிகவும் விரைந்து வளர்ச்சியடைந்தது. பிரிட்டோ இறந்த ஓரியூரில் அருஞ்செயல்கள் நடப்பதாகவும், உண்மையில் பிரிட்டோ கடவுளின் அன்புக்குரியவர் என்றும், அவரைக் கொலை செய்ததின் மூலம் தீராத பழியை மன்னர் குடும்பத்தார் பெற்றுக் கொண்டனர் என்றும், மன்னர் குடும்பத்தில் அடுத்தடுத்து ஏற்பட்ட இறப்புகளும் கெடுதல்களும் பிரிட்டோவை வஞ்சித்ததனால் ஏற்பட்டவைகளே என்றும், ஓரியூருக்குச் செல்லும் மக்களுக்குப் பிரிட்டோ இறந்தும் உதவி செய்கிறார் என்றும் மறவ நாடு முழுக்க நம்பப்பட்டது. பிரிட்டோவைக் கொல்ல ஆணையிட்ட சேதுபதியே கூட தமது வாழ்நாளின் இறுதிக் காலத்தில் அச்செயலுக்கு வருத்தியதாகவும் செவிவழிச் செய்திகள் தெரிவிக்கின்றன. சேதுபதியின் மகன் இந்நிலையுணர்ந்து கொண்டு, கிறித்துவர்கள்பால் அன்பு செலுத்தினான் என வரலாறு கூறுகிறது.[646] வடுகநாதத் தேவன் என்ற சேதுபதியின் மகன் காலத்தில் மறவ நாட்டில் கிறித்துவம் வளர்ச்சியடைந்தது எனலாம்.

## மதுரைக் கிறித்துவமும் மங்கம்மாளின் ஒத்துழைப்பும்

மறவ நாட்டில் கிறித்துவம் தடை செய்யப்பட்டிருந்த காலத்தில், மதுரையில் கிறித்துவ சமயப் பணியாளர்கள் நாடெங்கும் சுற்றி வந்து தங்கள் பணிகளை மேற் கொண்டிருந்தனர். தஞ்சையில் மங்கம்மாள் காலத்திலும் கிறித்துவம்

646. Bertrand, IV Vol. pp. 64-65, quoting the Letters of Fr. Martin, dt. 1.6.1700.

தடை செய்யப்பட்டிருந்தது. உடையார் பாளையத்து மன்னருக்கும் (காளக்க தோள உடையார்), மதுரை அரசிக்கும் மடல் எழுதிய தஞ்சை மன்னன் பற்றி ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. இதற்கு மறுமொழியாக, உடையார் பாளையத்துக்கும் தஞ்சைக்கும் மங்கம்மாள் பதில் எழுதினாள்.[647]

> **"மரக்கறி உணவு சாப்பிடுபவர்களையும், இறைச்சி சாப்பிடுபவர்களையும், அவரவர் விருப்பத்துக் கேற்றவாறு சாப்பிட அனுமதிப்பது போல, ஒருவன் எந்தச் சமயம் சரியென்று நினைக்கிறானோ, அந்தச் சமயத்தில் அவன் சேரவும், அச்சமயத்தின் வழிபாட்டு முறைகளைப் பின் பற்றவும் அனுமதிப்பது, உலக வழக்கின்படியும், சட்டப் படியும் சரியானதாகும். எனவே கிறித்துவ சமயத்தைத் தடை செய்வதற்கு எந்தச் சட்டமும் இடம்தராது. ஆகவே, உங்கள் நாட்டிலும் (தஞ்சை - உடையார்பாளையம்) கிறித்துவ சமயத்துக்கு அனுமதி வழங்குங்கள்".**

மேற்கண்ட மடல் கி.பி. 1690 ஆண்டுகளில் எழுதப்பட்டதாகும். இந்தியாவை ஆண்ட மன்னர்களில், சமயங்களின்பால் பொது நோக்கு கொண்டவர்களில் முதன்மையானவராக மங்கம்மாளைக் கருதலாம். பிற சமயத்தாரை மதிக்கும் மனப்பான்மை, மங்கம்மாளிடம் இருந்தது. சமயப் பொறை (Religious tolerence) என்று தற்காலத்தில் அடிக்கடி சொல்லப்பட்டு வருகின்றது. இதற்கு சகிப்புத் தன்மை என்ற பொருளைச் சொல்கின்றனர். இச்சொல்லின் பொருள் யாதெனில், பிற சமயத்தின் பால் வெறுப்புகள் இருந்தாலும் அதை சகித்துக் கொண்டு இருக்க வேண்டும் என்றவாறு கூறப்படுவது, சமூகப் பார்வையன்று. **மங்கம்மாளுக்குச் சமயப் பொறை என்ற சிந்தனையிலும் மேலோங்கிய பெருந்தன்மை (Magnanimity) இருந்தது.** 300 ஆண்டுகளுக்கு முன்பிருந்த ஆட்சியாளருக்கு இப்படியொரு அணுகுமுறை பிற சமயங்கள் பால் இருந்தது போற்றுதற்குரியதே.

---

647. History of The Nayaks of Madura, p. 165.

647. The first of these potentates answered that, just some were allowed to rice and others meat, so also was it lawful for each man to practise or adopt whatever religion seemed to him the best".

மங்கம்மாளுக்கும் மறவ நாட்டுக் கிழவன் சேதுபதிக்கும் நல்லுறவு இருக்கவில்லை. கி.பி. 1691 ஆம் ஆண்டில், மறவ நாட்டுச் சிறையிலிருந்த மெல்லோ (Fr. Mello)வை விடுதலை செய்யுமாறு சேதுபதிக்கு மடல் எழுதினாள்.[648] சரியான நேரத்தில் மங்கம்மாள் குறுக்கிட்டதால், மெல்லோ விடுவிக்கப் பட்டார். பிரிட்டோ கைது செய்யப்பட்டதும், கொலை செய்யப் பட்டதும் மங்கம்மாளுக்குத் தெரியவில்லை. அவ்வாறு தெரிந் திருந்தால், பிரிட்டோவை விடுதலை செய்யுமாறு கேட்டிருப் பாள். மங்கம்மாள் கிறித்துவ சமயப் பணியாளர்களுக்குப் பலகாலும் உதவியிருக்கிறாள்.

ஒரு முறை, புசே (Fr. Bouchet) பாதிரியார், தன்னிட மிருந்த சமயச் சொல்லிகள் (Catechists) மூவரைப் பணிநீக்கம் செய் தார். அம்மூவரும் மங்கம்மாளின் அமைச்சர் நரசப்பையா விடம் சென்று, இயேசு அவைத் துறவிகள் மேல் பல்வேறு குற்றச்சாட்டுகளைச் சுமத்தினர். இக்குருமார்கள் (priests) பரங்கியர்கள் என்றும், அரசிக்கு எதிராகச் செயல்படுகிறார்கள் என்றும், பாதிரியார் ஒருவரைக் கொலை செய்து விட்டார் என்றும் சொல்லி, புசேவைக் கைது செய்யுமாறு தூண்டினர். நரசப்பையாவைச் சந்தித்த புசே, அவருக்கு ஐரோப்பியப் பரிசுப் பொருட்களை அளித்தார். ஐரோப்பியர்களைக் கண்டாலே பிடிக்காத நரசப்பையாவிற்கு, புசே அளித்த பரிசுகள் மகிழ்ச்சி யைத் தந்தன. புசேயின் பால் குற்றமில்லை எனக் கூறியதோடு, பொய்த்தகவல் கொடுத்த மூவரையும் கடுமையாக எச்சரித் தான்.[649] புசே அப்போது திருச்சிக்கு அருகே ஆவூர் என்ற இடத்தில் சமயப் பணியாற்றிவந்தார்.

சிலகாலம் கழித்து, திருச்சிக் கருகில் ஏற்பட்ட கொள்ளை நோயால், மக்கள் ஊரைவிட்டு வெளியேறினர். புசேவுக்கும் வேறு வழி தெரியாததால், தனது இருப்பிடத்தைவிட்டு வெளி யேறினார். நோய் அச்சம் குறைந்து போனபோது, மக்கள் மறுபடியும் தங்கள் ஊர்களுக்குத் திரும்பினர். புசே தனது பழைய இடத்திற்கு வந்து பார்த்த போது, அவ்விடத்தை ஒரு பூசாரி கையகப்படுத்தியிருந்தான். பல சிலைகள் அங்கே

---

648. Ibid. p. 163.

649. Ibid.

வைக்கப்பட்டிருந்தன. புசேயின் வேண்டுகோளை பூசாரி ஏற்க மறுத்தான். அரசு அலுவலர்களிடம் புசே எடுத்துரைத்தும் எந்த நடவடிக்கையும் அவர்கள் மேற்கொள்ளவில்லை. இறுதியில் மங்கம்மாளிடம் நேரில் சென்று புசே முறையிட்டார். அலுவலர்களை அழைத்துக் கேட்டபோது, சாமி சிலைகள் அங்கே வைக்கப்பட்டுள்ளன என்றும், புசேவுக்கு மீண்டும் அவ்விடத்தைக் கொடுத்தால், அச்சிலைகளையெல்லாம் என்ன செய்வது என்று மங்கம்மாளிடம் அலுவலர்கள் தெரிவித்தனர். பதிலுரையாக மங்கம்மாள் "அச்சிலைகளையெல்லாம் கொள்ளிடத்தில் தூக்கியெறியுங்கள்" என்று கூறியதாக, குறிப்புகள் தெரிவிக்கின்றன.[650]

வைணவக் குடும்பத்தில் பிறந்த மங்கம்மாள், திருவரங்கம் திருஅரங்கப் பெருமாளிடம் மிகுந்த பற்றுதல் கொண்டவர். அக்கோயிலுக்கும் இன்னும் பிற இந்துக் கோயில்களுக்கும் ஏராளமான நன்கொடைகளை அளித்தவள்.[651] கி.பி. 1692 ஆம் ஆண்டின் செப்பேடு ஒன்று தெரிவிக்கும் தகவலின்படி, இசுலாமியர்களின் பள்ளிவாயில் ஒன்றிற்கு நன்கொடை அளித்த செய்தி காணப்படுகின்றது.[652] எனவே கிறித்துவர்களுக்கு மட்டுமே மங்கம்மாள் சார்புடையவளாக இருந்தாள் என்பதைவிட, அனைத்துச் சமயங்களின் பெருமைகளையும் போற்றிப் பாதுகாத்தாள் என்பதே சரியான கண்ணோட்டமாகும்.

தமிழகத்தின் இன்றைய நிலையின்படி காவிரிச்சிக்கல் தீர்க்கப்படாமலேயே உள்ளது. காவிரிச் சிக்கல் முதன் முதலில் மங்கம்மாள் காலத்தில் தான் தோன்றியது. கி.பி. 1698 ஆம் ஆண்டில், மைசூரை ஆண்ட சிக்கநாயக்கன் என்பான், தற்போதுள்ள கிருஷ்ணராஜ சாகர் அணையுள்ள இடத்தில் முதன் முதல் அணைகட்டினான். தமிழகத்தின் நலன்காக்க, மைசூர் மீது போர் தொடுக்க நடவடிக்கை எடுத்த மங்கம்மாள்தான், காவிரிக்காகக் குரல் கொடுத்த முதல் அரசியல் தலைவி என்பது

---

650. சுதந்திரம் வார ஏடு. பேராசி மங்கம்மாள் ஆய்வுக்கட்டுரை, ம.சோ. விக்டர், 1.6.91 வார இதழ், பக். 5-6.

651. History of The Nayaks of Madura, p. 165.

652. Ibid.

பலருக்கும் தெரியாத செய்தியாகும்.[653] சிக்க நாயக்கன் எடுத்த முயற்சிகள் தோல்வி கண்டு, அணை உடைந்து போயிற்று என்பது வேறு செய்தியாகும். சிக்க நாயக்கன் கட்டிய அதே அடித்தளத்தில் தான், பிற்காலத்தில் விசுவேசுவரய்யா கட்டிய அணை நின்றது என்பது சிக்கநாயக்கனின் பொறியியல் நுட்பத்துக்குச் சான்றாகும் என ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.[654]

## ஜோசப் கான்ஸ் டண் டைன் பெஸ்கி
## (Giuseppe Constantino Beschi)

கி.பி. 1700களில் தமிழகத்தின் அரசியல் நிலைமை குழப்பமாயிருந்தது. தலையெடுத்தவன் எல்லாம் தண்டல்காரன் என்பது போல, தமிழகத்தின் ஒவ்வொரு பகுதியிலும் ஒரு சிலர் தோன்றி பொருளீட்டத்தையே குறியாகக் கொண்டு, கூட்டணிகள் வைத்துக் கொள்வதும், அக்கூட்டணிக்குள் இருப்பவர்களையே காட்டிக் கொடுப்பதும், நாளொரு தேடலும் பொழுதொரு வேட்டையுமாக சுற்றித்திரிந்தனர். இதற்கிடையே வடக்கிலிருந்து அடிக்கடி வந்து போகும் இசுலாமியர்களின் அச்சுறுத்தல்கள் என தமிழக மக்கள் அமைதியின்றித் தவித்தனர். ஆளுமைப் போட்டிகளுக்கு ஓர் அளவேயில்லாமற் போயிற்று.

---

653. Bertrand writes:

"The King of Mysore constructed a big dam across the Kaveri with the idea of diverting all the water of the river to his kingdom. He thought too exclusively of the advantages which would accure to himself from this scheme to consider its disastrous consequences for the kingdom of Madura and Tanjore. Even though the winds, the fore runners of rain, had blown in that year much earlier than usual, the Kavery was dry and the rulers of Madura and Tanjore came to know of the cause of this unexpected occurrence. Their wrath was roused at the prospect of an imminent drought and famine, and they planned a joint invasion of Mysore to punish the mischief done to their interests by Chikkadeva Raya. Before they could complete their perparations, they were surprised to see floods in the river. The dam constructed by the king of Mysore was strong enough only for moderate rainfall; but when heavy rains swelled the waters of the river, the anicut gave away, and his plans were totally rained". Bertrand.Ibid. 159.

654. Bertrand, Vol. IV, pp. 182-183, Vide Appendix B, Letter No. 4.

## மதுரை

மங்கம்மாள் மதுரையில் ஆண்டுவந்த காலமது. நாட்டின் பாதுகாப்பைக் கருதி திருச்சிக்குத் தனது தலைநகரை மாற்றிக் கொண்டார். தமிழகத்தின் அன்றைய காலத்தில் பரந்த நிலப் பரப்பை ஆண்டு வந்தவள் மங்கம்மாளே. மங்கம்மாள் கிறித்து வர்கள் பால் நேயத்துடனிருந்தபோதும், அவளது ஆட்சி எல்லைக்குள் பணியாற்றி வந்த உயர் அலுவலர்களில் பலர் கையூட்டுப் பெற்றுக் கொண்டு, கிறித்துவ சமயப் பணியாளர் களுக்கு இடையூறுகளைக் கொடுத்து வந்தனர். கி.பி. 1706 ஆம் ஆண்டு மங்கம்மாள் மறைந்த பிறகு, நாயக்கர் ஆட்சியும் குழப்பத்தில் திளைத்தது.[655] மங்கம்மாளின் பெயரன் விசயரங்க சொக்க நாத நாயக்கன் (1706-1732) திறமையற்றவன். இவன் வாழ்நாள் முழுதும் கோவில் குளமாகச் சுற்றிவந்தவன். நாயக்க மரபின் ஆட்சிக்கு வீழ்ச்சியைத் தொடங்கி வைத்தவன்.[656] வலிமை யற்ற மன்னனாதலால் மதுரையின் புகழ் மங்கத் தொடங்கியது எனலாம்.

## மறவநாடு

பிரிட்டோவை வஞ்சித்துக் கொன்ற கிழவன் சேதுபதி கி.பி. 1710 ஆம் ஆண்டில் மறைந்தான்.[657] 35 ஆண்டுகள் ஆட்சி செய்த சேதுபதி, மறவ நாட்டை மிகத்திறமையாகவும், கட்டுக் கோப்பாகவும் வழி நடத்தியவன். மறவநாட்டுச் செல்வந்தன் ஒருவன், கிறித்துவ சமயச் சொல்லியிடம், சேதுபதி மன்னரி டத்தில் காணப்படும் உயர்ந்த பண்புகள், மக்களிடம் அவர் கொண்டுள்ள நேயம், சரியான நீதியை வழங்குவதில் அவருக் குள்ள ஆர்வம், துன்பப்படுவோரிடம் அவர் காட்டும் பரிவு போன்ற நற்கூறுகள், கிறித்துவ சமயத் தலைவர்களிடம் யாருக் கேனும் உள்ளதா, எந்த வகையில் உங்கள் சமயம் எங்கள்

---

655. "Though a failure, Chikkadeva Raya's scheme of irrigation proveda brilliant anticipation of one of the most gigantic engineering feats of modern times". - Sathiyanath Aiyar.
655. Oriental Historical Manuscripts, William Taylor Rev. 2 Vols. 1835, Appendix D, No. 212.
656. History of Tinnevelly, 1881, pp. 253-5.
657. Bertrand, vol. IV, p. 203, vide Appendix A, letter no. 12.

மன்னரைக் காட்டிலும் உயர்ந்தது என்று கேட்டதாக, பெர்ட் ராண்ட் கூறுகிறார்.[658] மன்னர் எதைச் செய்தாலும் மக்களின் நலன் காக்கவே செய்வார் என்ற மறவ நாட்டு மக்களின் எண்ணம், கிறித்துவம் பரவுவதற்கு ஒரு தடையாகவே இருந்தது எனலாம். சேதுபதிக்குப் பின்பு மறவ நாட்டு அரசியலும் குழப்பங்கள் நிறைந்தே காணப்பட்டது. பஞ்சமும், பட்டினி யும் மக்களை வாட்டின. 1700-1710 ஆண்டுக்கால அளவுகளில் குழப்பங்களே மிகுந்திருந்தன. தனக்கு அடுத்த மன்னராக தனது வைப்பாட்டியின் மகன் பவானி சங்கரனை, சேதுபதி மன்னன், உறுதி செய்திருந்தான். ஆனால், தனது குடும்பத்தார் கொடுத்த அழுத்தங்களால், விசய ரகுநாத தேவன் என்ற தனது இரண் டாவது மகனை பட்டத்துக்கு அனுமதித்தான்.[659]

பவானி சங்கரனுக்கும் விசய ரகுநாத தேவனுக்கும் தொடர்ந்து போட்டிகள் நிகழ்வுற்றன. வடுகநாதத் தேவன் என்ற விசயரகுநாதத் தேவனின் அண்ணன், தனக்கு பட்டம் கிடைக்காத நிலையிலும், தன்னிலும் திறமையான தம்பியைச் சார்ந்திருந்தான். வடுக நாதத் தேவனுக்குக் கிறித்துவத்தின் பால் மிகுந்த ஈடுபாடும் இருந்தது.[660] தொடர்ந்து ஆட்சிப் போட்டி யில், மறவ நாடு திணறிக் கொண்டிருந்தது.

## தஞ்சை நாடு

தஞ்சையில் நாயக்க மன்னர்களின் ஆட்சி முடிவுற்று, மராட்டியர்களின் கை ஓங்கியது. சிவாஜியின் தம்பி ஷாஜி (கி.பி. 1682 - 1711) ஆட்சியைப் பிடித்துக் கொண்டு, ஏற்கனவே இருந்த கிறித்துவ எதிர்ப்பு அணுகுமுறையை இவனும் பின் பற்றினான். தஞ்சையில் வாழ்ந்திருந்த கிறித்துவ மக்களைச் சின்னாபின்னமாக்கிச் சிதறியோட விரட்டினான். ஜோசப் கார்வலோ என்னும் இயேசு அவைத் துறவியைத் தூக்கிவிட் டான். அது கண்டு அச்சமுற்று ஓடிய கிறித்துவ மக்கள், தஞ்சையின் ஆட்சி எல்லைக்கு அப்பாலும், கொள்ளிடத்தின் வடகரையிலும் இருந்த ஏலாக் குறிச்சி என்ற ஊரில் அடைக்கல மாயினர். ஏலாக் குறிச்சி, அரியலூர் குறுநில மன்னர்களின் ஆட்சிக்குட்பட்டிருந்த பகுதியாகும். அரியலூர் மன்னர்

658. Ibid, Vol. III, p. 453.

659. History of the Nayaks of Madura, p. 170.

660. Bertrand, vol. IV, p. 208.

தொடக்கத்தில் கிறித்துவர்களுக்கு அரவணைப்பாயிருந்து பின் தனது நிலையை மாற்றிக் கொண்டார். தஞ்சையில் கிறித்துவத் துக்கு எதிரான சூழலே நிலவியது.[661]

## தமிழகத்தின் நிலை

18 ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில், தமிழ்நாடு நஞ்சை யடிக்கப்பட்ட நிலம் போல், போர் மறவர்களின் கால்களில் மிதிபட்டு, செங்குருதிச் சேறாகித் தவித்தது. மன்னர்களிடையே தோன்றிய ஆளுமைப் போட்டி, மக்களை வாட்டி வதைத்தது. மதுரையிலே ஒரு காலத்தில் தமிழை வளர்த்தப் பாண்டியர் கள், தங்களின் வயிற்றை வளர்ப்பதற்கே போராட வேண்டி யிருந்தது. மங்கம்மாளின் பெயரன் சொக்க நாதன் ஒரு தெய்வக் கிறுக்கன். அவன் அரண்மனையிலிருந்த காலத்தைவிட கோயில் களில் இருந்தவையே கூடுதலாயிருக்கும். விஜய ரகுநாதத் தேவனால் மறவ நாட்டைக் கட்டுக் கோப்புக்குள் வைத்திருக்க இயலவில்லை. மறவநாடு பல துண்டுகளாகியது. இந்த சந்தடிச் சாக்கில் சேதுபதியின் தங்கை உடையக நாச்சியாரும் பதவிப் போட்டியில் இறங்கினார். நவாப் பத்தர் அலிகான் வடக்கே ஆற்காட்டுப் பகுதிகளைக் கலக்கிக் கொண்டிருந்தான். ஆங்கிலேயரும் பிரெஞ்சுக்காரரும் தங்கள் மேலாண்மையைத் தமிழகத்தில் நிலைநாட்ட நேரம் பார்த்துக் கொண்டிருந்தனர். குழப்பங்களின் கூடாரமாய், கி.பி. 1700-1710 கால இடை வெளியில் தமிழகம் தடுமாறிக் கொண்டிருந்தது. இவர்களின்றி சிறு சிறு தலைவர்கள் தங்களுக்கென ஒரு குழுவைச் சேர்த்துக் கொண்டு கொள்ளையடிப்பதும் வழிப்பறி செய்வதும் வாடிக் கையாய் நிகழ்ந்து கொண்டிருந்தன.[662]

தைரிய நாதரெனவும், வீரமா முனிவரெனவும் தமிழ் மக்களால் அழைக்கப்பட்ட பெஸ்கி இத்தாலியில் செல்வச் செழிப்புடைய குடும்பத்தில் பிறந்தவர். இரண்டு முதுகலைப் பட்டங்களைப் பெற்றிருந்த பெஸ்கி, இயேசு அவைகளில் சேர்ந்து குருவானார். காஸ்திகிளியோனே என்னும் ஊரில் உள்ள இல்லத்தாரின் குறிப்புகள் அங்குள்ள தேவாலயத்தில்

---

661. தமிழ்த் தந்தை வீரமாமுனிவர், கட்டுரை தினகரன் நாளேடு, ம.சோ. விக்டர், 16.4.2005, ப.7.

662. மேலதே.

அக்காலத்திலேயே பதிவு செய்யப்பட்டிருந்தன. அக்குறிப்பு களில் காணப்படும் செய்தியில், பெஸ்கியின் குடும்பம் பற்றி முழு தகவல்களும் காணக்கிடக்கின்றன என்று அக்குறிப்புகளை நேரில் சென்று பார்த்து வந்த அமுதன் அடிகள் கூறுகிறார்.[663] பெஸ்கியை ஈன்றெடுத்த அவ்வூர் மக்கள், தமிழ்நாட்டில் பெஸ்கி போற்றப்படும் செய்திகளை அவர்களிடம் கூறிய போது, அம்மக்கள் வியப்பும் மகிழ்வும் அடைந்ததாகவும் அடிகளார் கூறுகிறார்.

கி.பி. 1710 ஆம் ஆண்டில் தமிழகம் வந்த பெஸ்கி, கேரளத் தினின்றும் மதுரைப் பகுதிக்கு வந்து சேர்ந்தார். கி.பி. 1711 ஆம் ஆண்டில், கொழை எனப்பட்ட அய்யம் பேட்டையில் நிகழ் வுற்ற ஒரு சிக்கலைத் தீர்த்து வைக்க அனுப்பி வைக்கப்பட்டார். அவ்வூரின் முதல் பங்கு குருவாகவும் (Parish Priest) பணிக்கப் பட்டார். கி.பி. 1712 டிசம்பர்த் திங்களில் மீண்டும் மதுரைப் பகுதிக்குச் சென்றார். அங்கு சில ஆண்டுகள் பணியாற்றிய பின்பு கி.பி. 1716 முதல் கி.பி. 1742 வரையிலும் ஏலாக் குறிச்சியை மையமாகக் கொண்டு, 100 கி.மீ சுற்றளவிலுள்ள பகுதிகளில் சமயப்பணியாற்றினார். கருவிலேயே திருவுடையோராய் விளங்கிய பெஸ்கி, தனது 30 ஆவது அகவைக்குப் பிறகு தமிழ் மொழியைக் கற்றார். மிகக் குறுகிய காலத்திலேயே தமிழைக் கற்ற பெஸ்கி, தமிழில் கவிபாடும் ஆற்றலையும் பெற்றார்.[664]

இத்தாலியம், கிரேக்கம், ஃபிரெஞ்சு, ஸ்பானிஷ், செர்மா னியம் போன்ற ஐரோப்பிய மொழிகளை அறிந்திருந்த பெஸ்கி, லத்தீன் மொழியின் இலக்கண இலக்கியங்களில் தேர்ச்சி பெற்றிருந்தார். ஆங்கிலத்தை பெஸ்கி அறிந்திருந்தாரா என்று தெரியவில்லை. ஆனால், ஆங்கிலம் என்பது, கடற்கொள்ளைக் காரர்களின் மொழி என்று அடிக்கடி கூறுவார். ஆங்கிலம் என்பது உலக மொழிகளின் கலவைமொழி என்பது அவரது கூற்று. பல்வேறு மொழிகளின் இலக்கண அறிவும் நுட்பமும் அறிந்திருந்த பெஸ்கி, அவ்வறிவைப் பயன்படுத்தியும் அம்மொழி களோடு தமிழ் இலக்கணத்தை ஒப்பிட்டுப் பார்த்தும், மிக

663. வீரமாமுனிவரின் 325 ஆண்டு நிறைவு விழா, ஏலாக்குறிச்சி, அமுதன் அடிகள் சொற்பொழிவு, நாள் 7.11.2005.

664. வரலாறும் வழக்காறும் - வரதராசன்பேட்டை ஒருபார்வை, மரிய சூசை, அ. அருள்திரு., ப. 41.

எளிமையாக, தமிழருக்கும் புரியாத தமிழ் இலக்கணத்தில் புலமை பெற்றார். தொல்காப்பியம், நன்னூல் போன்ற ஆழமான இலக்கணச் செய்திகளை விளக்கும் நூல்களை, அலசி ஆய்ந்து, தனது பார்வையில் பல குறிப்புகளையும் திருத்தங்களையும் கூறியிருக்கிறார்.

## தமிழ்த்தந்தை பெஸ்கி

பெஸ்கி தமிழன்னைக்குச் சூட்டிய பெருமை தரும் இலக்கியங்கள் இறப்பு நிலை காணாதவைகளாகும். கம்பனை விஞ்சிய சந்தங்களையும், திருத்தக்க தேவரின் சிறந்த கற்பனை களையும், தனது தேனிலும் இனிய தேம்பாவணியில் கொட்டு கிறார். தமிழரும் அறியாத தமிழின் பெருமைகளை, ஐரோப்பி யருக்கு அறிவித்தவர் பெஸ்கியே ஆவார். தமிழில் கவிதைகள் செய்யுட்கள் யாப்பதில் என்னென்ன வகைகள் உள்ளனவோ, உத்திகள் உள்ளனவோ அவ்வளவு வகைகளையும் தனது இலக்கியங்களில் பெஸ்கி காட்டுகிறார். உலக மொழியியல் வரலாற்றில், தாய்மொழியை விடுத்து, அயன்மொழியாகிய தமிழில் புலமைபெற்று இலக்கண இலக்கிய நூல்கள் படைத் தவர்களில் பெஸ்கி தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இன்றி மிளிர்கிறார். (சீறாப் புராணம் எழுதிய தமிழனாகிய உமறுப் புலவர் அரபு மொழியில் யாத்த இலக்கியங்களையும் இவண் ஒப்பிட்டு நோக்கலாம்). பெஸ்கியின் தமிழ்ச் சொற்றொடர் களைப் பிரித்துப் பிரித்துப் படிப்பதென்பதும், பொருள் கொள்வதென்பதும், தமிழறிஞர்களுக்கே தலை சுற்றுகிற தென, தமிழாய்ந்த அறிஞர் பெருமக்கள் கூறுகின்றனர்.

எடுத்துக்காட்டாக, கம்பனோடு கற்பனைப் போட்டியில் இறங்கிய பெஸ்கியின் பாடலைக் காண்க.[666]

**தடுத்திமை யாமலி ருந்தவர் தாளின்**
**மடுத்ததும் நாண்நுதி வைத்ததும் நேரக்கார்,**
**கடுப்பினில் யாரும் அறிந்திலர், கையால்**
**எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார்      – கம்ப இராமாயணம்.**

**பொருள்:** இராமபிரான் மிதிலை நகரில் நடந்த போட்டி யில் பங்கேற்கிறான். சனகனின் வில்லைப் பலரும் தூக்க

665. வெள்ளைக் குயில்,. ம.சோ.விக்டர், 1981, முன்னுரை.
666. மேலதே, ப. 150.

இயலாமற் தவித்த காலை, இராமன் அவ்வில்லைக் காலால் மிதித்தலையும், நாணேற்றலையும், அதனை நிமிர்த்தியதையும் ஒருவரும் காணவில்லை. அவ்வில் ஒடிந்து விழுந்ததால் எழுந்த ஓசையை மட்டும் கேட்டனர்.

இந்தக் கற்பனையைத் தேம்பாவணியில் வரும் பாடல் எதிரொலிக்கிறது.

**கல்லையேற்றலும் கவணினைச் சுழற்றலு மக்கல்**
**ஒல்லை யோட்டலும் ஒருவருங் காண்கிலர் இடிக்கும்**
**செல்லை ஒத்தன சிலைநுதற் பாய்தலும் அன்னான்**
**எல்லை பாய்ந்திருள் இரிதென வீழ்தலுங் கண்டார் – தேம்பாவணி.**

**பொருள்:** கோலியாத்து (Goliath) என்னும் கொடிய அரக்கனை தாவீது என்று சிறுவன் போரில் எதிர் கொள்கிறான். தாவீது பெற்றிருந்த படைக்கலன் கவண்மட்டுமே. தாவீது கவணை எப்போது எடுத்தான், எப்படி அக்கல்லினைக் கவணில் வைத்தான், அக்கவணையை எப்போது சுழற்றினான் என்பதை ஒருவரும் காணவில்லை. கோலி யாத்து தரையில் வீழ்ந்ததையே அனைவரும் கண்டனர். (பெஸ்கி எழுதிய நூல்கள் பற்றிய விளக்கங்கள் அடுத்த தலைப்பில் காண்க).

## *நொபிலி வழியில் பெஸ்கி*

ஐரோப்பியர்களின் உணவு, உடை, பண்பாடுகள் ஆகிய மரபுகளை உதறித்தள்ளிவிட்டு, தமிழ்த் துறவியாகவே பெஸ்கி வலம் வந்தார். நீண்ட காவிநிற ஆடையும், அரையில் கச்சையும், கால்களில் குறடுகளையும், காதுகளின் கடுக்கன்களும், நெற்றியில் சந்தனப் பொட்டுமாகக் காட்சியளித்தார். கையில் தண்டமும் (கோல்) கொண்டிருந்தார். நொபிலிக்குத் தெரிந்திருந்த ஐரோப்பிய மொழிகள் அனைத்தும் பெஸ்கிக்கும் தெரியும். நொபிலியைப் போலவே, இந்திய மொழிகளான சமற்கிருதம், தெலுங்கு, மலையாள மொழிகளையும் அறிவார். நொபிலி, தமிழிலிலும் சமஸ்கிருதத்திலும் சரளமாகப் பேச எழுத கற்றிருந்தார். பெஸ்கியைப் போன்று தமிழ் மொழியின் இலக்கண இலக்கிய ஆழம் நொபிலிக்கு இருந்ததில்லை. நொபிலியின் தமிழ் கூட சமற்கிருதம் கலந்த மணிப் பிரவாளமாகவே இருந்தது. தனித்தமிழ்ச் சொற்கள் பற்றிய வேரோடிய அறிவு பெஸ்கிக்கு அருங்கொடையாய் அமைந்திருந்தது. வளன், கல்லூரி போன்ற

புதிய தமிழ்ச் சொற்களைத் தமிழுக்கு பெஸ்கி அறிமுகப் படுத்தினார். மறியன்னையைத் தமிழ்ப் பெண்ணாக உருவகம் செய்து, அவர் திருமேனிக்குச் சேலையும் இரவிக்கையும் உடுத்தி அழகு பார்த்தார்.

## சமயப் பணிகள்

தமிழைக் கற்பதற்கும், காப்பியங்கள் படைப்பதற்கும் எடுத்துக் கொண்ட காலத்தைப் போன்றே, சமயப் பணி களுக்கும் முதன்மையான நேரத்தை ஒதுக்கினார். அரியலூர் மாவட்டம் **வரதராசன்பேட்டை** என்ற **அய்யம் பேட்டை, கோடாலி கருப்பூர், கூவத்தூர், ஏலாக்குறிச்சிப்** பகுதிகளும், **கடலூர் மாவட்டம் எய்யலூர்** (காட்டு மன்னார் கோயிலுக்குத் தெற்கே 10 கல் தொலைவில், கொள்ளிடத்தின் வட கரையில் உள்ளது), **விருத்தாசலத்தை அடுத்த கோளான் குப்பம், திருச்சி மாவட்டம் ஆவூர், வடுகர் பேட்டை, புறத்தாக் குடி, வந்தலை, கொணலை, காட்டூர்** போன்ற பகுதிகளும், **தென் மாவட்டங் களில் காம நாயக்கன்பட்டி**, குருக்கள் பட்டி போன்ற இடங் களும், பெஸ்கி சமயப் பணியாற்றிய இடங்களாகும். இவை களில் ஏலாக்குறிச்சியே மையமான பகுதியாக அமைந்திருந்தது.[667]

அரியலூர் மன்னர் **விசயரெங்கப்ப ஒப்பில்லாத மழவராய நயினார்** என்பார், தனது விலாவில் ஏற்பட்டிருந்த பிளவை நோயால் (Cancer) பல ஆண்டுகள் துயருற்றார். பெஸ்கி ஒரு தூயவர் என்றும், அவரிடம் சென்றால் தமது நோய்க்கு மருந்து கிடைக்கும் என்றும் அறிந்த நயினார், ஏலாக் குறிச்சி வந்து சேர்ந்தார். கடும் பிளவை நோய்க்கு மருந்தேதும் அறியாத பெஸ்கி, அன்னை மறியாளிடம் மண்டியிட்டு முறையிட்ட தாகவும், கடுங்கோடையிலும் ஒரு நீரூற்று பெஸ்கி முன்பு கொப்பளித்து எழுந்ததாகவும், அந்நீரால் ஈரம் தோய்ந்த களிமண்ணையே மருந்தாக மன்னரின் விலாவில் வைத்துக் கட்டியதாகவும், மறுநாள் கட்டியுடைந்து சீழும் நீரும் வெளிப் பட்டு மன்னர் ஆழ்ந்து உறங்கி யெழுந்ததாகவும் மன்னர் முற்றி லும் நலன் பெற்றதாகவும் செவி வழிச் செய்திகள் கூறுகின்றன. இச்செய்தியை உறுதிப்படுத்தும் வகையில், மன்னர் மறியாளின் தேவாலயத்துக்கு அருங் கொடையாகத் தந்த 175 ஏக்கர் நிலத்

---

667. வெள்ளைக்குயில் - வீரமாமுனிவரது வாழ்க்கை வரலாற்று நூலிலிருந்து.

திற்கான பதிவு கல்வெட்டாய் இன்றும் காட்சியளிக்கின்றது. பெஸ்கி, அரியலூர்ப் பகுதிகளில் சமயப் பணிகளாற்ற மன்னர் தனது அனுமதியையும் வழங்கினார்,[668] (கி.பி. 1734).

அக்காலை, தமிழகத்தின் அரசியல் வானில் ஒளிர் மீனாய் சந்தா சாகிபு என்ற இசுலாமிய மன்னன் எழுந்தான். தமிழகத்தின் மன்னர்களும் பலரும் சந்தா சாகிபின் எழுச்சியைக் கண்டு அச்சமுற்றனர். திருச்சியில் தங்கியிருந்த சந்தா சாகிபை பெஸ்கி சென்று பார்த்தார். பெஸ்கியின் நுண்ணறிவையும், மொழிப் புலமையையும், எளிய வாழ்க்கையையும் கண்ட சாகிபு, பெஸ்கிக்குத் தனது பாட்டனார் பயன்படுத்திய பல்லக்கையும், பல்லக்கைச் சுமக்க ஆட்களையும், அவ்வாட்களுக்கான ஊதியத்தையும் அளிக்குமாறு பணித்தான். மேலும் அரியலூருக்கு மேற்கேயுள்ள **நல்லூர், அரசூர், உக்கனூர், மால்வாய்** என்ற நான்கு ஊர்களையும் அளித்து அதன் வருவாயைச் சமயப் பணிகளுக்குச் செலவிட்டுக் கொள்ளவும் பணித்தான். அவ்வூர்களின் வருவாய் ஆண்டொன்றுக்கு உ ரூபாய் 12000 என்று ஒரு செய்தி கூறுகிறது. அவ்வருவாயை பெஸ்கி பயன்படுத்திக் கொண்டாரா என்பது பற்றியத் தகவல்கள் ஏதுமில்லை. மேலும் சாகிபு, பெஸ்கியின் பற்றற்ற துறவு வாழ்வைக் கருதி அவருக்கு "இஸ்மதி சந்நியாசி" என்ற பட்டத்தையும் அளித்தான்.[669]

தமிழ்நாட்டில் பெஸ்கி வாழ்ந்திருந்த நாட்கள் 6000 என்றும், (கி.பி 1712-1742), இக்காலங்களில் 6000 பேருக்கு மேல் புதிய கிறித்துவர்களை அவர் உருவாக்கினார் என்ற கணக்குப் படி, நாளும் ஒருவரைக் கிறித்துவராக்கினார் என அறியலாம். பெஸ்கியின் அறிவுரையின்படி சில மரபுகள், வரதராசன் பேட்டை வடுகர் பேட்டை கோனான் குப்பம் போன்ற பகுதிகளில் அறியப்படுகின்றன. அப்பகுதிகள் இன்றும் பெஸ்கியின் சமயப் பணிகளுக்குக் கட்டியம் கூறி நிற்கின்றன. ஏலாக் குறிச்சியில் மறியன்னைக்கு பெஸ்கி விழாவெடுத்ததைத் தொடர்ந்து இன்றும் ஆண்டும் விழாக்கள் நடைபெற்று வருகின்றன. தமிழ்நாடு அரசு ஏலாக்குறிச்சியை சுற்றுலாத் தலமாக அறிவித்துள்ளது.[670]

---

668. மேலது.

669. மேலது.

670. மேலது.

தமிழ்நாட்டுக்கு வந்த இயேசு அவைக் கிறித்துவ சமயப் பணியாளர்களில், தமிழ்மக்களாலும் தமிழறிஞர்களாலும் போற்றப்படுபவர் பெஸ்கி மட்டுமே. கிறித்துவர்கள் சமயப் பணிக்காகவும் கிறித்துவரல்லாத தமிழர் அவரைத் தமிழ்ப் பணிக்காகவும் போற்றுகின்றனர். சென்னையிலும் மதுரை யிலும் பெஸ்கியின் சிலை அரசாங்கத்தால் நிறுவப்பட்டுள்ளது. **இத்தாலியில் பிறந்து, இயேசு அவைக் குருவாகி, கடல் கடந்து தமிழகம் வந்து, தமிழ் மொழியின் பால் காதலுற்று, கற்று, தமிழ் இலக்கியக் கள்ளை மாந்தி, தமிழில் மயங்கி, தமிழ் நாட்டு இலக்கியச் சோலைகளில் ஊடுருவி, தமிழ்ப் பண்ணிசைத்து, தனது சமயக் கடமைகளையும் தொய்வின்றி நிறைவேற்றி, தமிழ் மக்களின் இதயங்களில் இன்றும் வாழ்ந்து கொண்டிருக்கும் பெஸ்கி எனும் வீரமாமுனிவர், தமிழக வரலாற்றில் தனக்கென ஓரிடத்தைப் பிடித்துக் கொண்ட தகைமையாளர் என்பது கல்வில் எழுத்தாய் என்றும் கருதப்படும்.**

பெஸ்கியின் உற்ற நண்பரான சந்தா சாகிபு, கி.பி. 1742 ஆம் ஆண்டில் திருச்சியில் மராட்டியப் படைகளால் கைது செய்யப்பட்டு, சதாரா சிறைக்குக் கொண்டு செல்லப்பட்ட பிறகு, பெஸ்கி பற்றிய செய்திகள் எவையும் அறியப்படவில்லை. தஞ்சையின் மராட்டியப் படைகள் பெஸ்கிக்கு இடையூறுகள் கொடுத்திருக்க வேண்டுமென்றும், அக்கரணியம் பற்றியே, பெஸ்கி ஏலாக்குறிச்சியை விட்டு மணப்பாடு என்னும் ஊருக் குச் சென்றுவிட்டதாகவும் கூறப்படுகின்றது. அங்குள்ள கல்லறையொன்றில், பெஸ்கி கி.பி. 1747 ஆம் ஆண்டில் இறந்து அடக்கம் செய்யப்பட்ட செய்தி அறியக்கிடக்கின்றது.[671] கி.பி. 1710 ஆம் ஆண்டில் இந்தியாவுக்கு வந்த பெஸ்கி, அதற்குப் பின் தனது தாய்நாடான இத்தாலிக்குத் திரும்பவேயில்லை. தனது உற்றார், உறவினர், நண்பர்களை மீண்டும் சந்திக்க வேண்டும் என்ற ஆர்வம் அவ்வப்போது அவரது உள்ளத்தில் அலைக் குமுறல்கள் போல் வெடித்திருக்கும். **ஆனால் அத்தனை உணர்வு களையும் கிறித்துவுக்காகப் புறந்தள்ளி, புனிதராய் மரித்த வீரமாமுனிவருக்கு திருச்சபையினர் அளிக்கும் அருளாளர் பட்டம் இன்னும் அளிக்கப்படவில்லையே என்ற ஏக்கம்,**

671. மேலது.

**தமிழ்க் கிறித்துவர்களிடத்திலும் தமிழரிடத்திலும் இருந்து கொண்டுதானிருக்கிறது என்பதை மறுக்க இயலாது.**

பலநூறு ஐரோப்பியத் துறவிகள் தமிழகம் வந்திருந்த போதும், **பிரான்சீஸ் சேவியர், இராபர்ட்-டி-நொபிலி, ஜான்-டி-பிரிட்டோ, ஜோசப் கான்ஸ்டண்டைன் பெஸ்கி என்ற நால்வரும் தமிழகக் கிறித்துவ வானில் ஒளிமீன்களாய்த் திகழ் கின்றனர் என்பது வெள்ளிடை மலை.** கிறித்துவத்தை இத்தமிழ் மண்ணில் விதைக்க தோமையார் முதல் வீரமா முனிவர் வரையிலும், அவருக்கும் பின் வந்த துறவிகள் முதலான அனைவரையும் தமிழ் நாட்டுக் கிறித்துவர்கள் இன்னும் மறந்துவிடவில்லை.

## கிறித்துவமும் - தமிழ்மொழியும்

கி.பி. 1500 ஆண்டுகளில் போர்த்துக்கீசியர் இந்தியாவுக்கு வந்தனர். இவர்களது வருகைக்குப் பிறகு, கிறித்துவ சமயத்தைப் பரப்பும் பணிகள் கேரளத்திலும் தமிழகத்திலும் முனைப்பு பெற்றன. கி.பி. முதல் நூற்றாண்டில் தோமையார் தமிழகம் வந்த காலத்தில் தமிழ் நாடு, கேரளம், மைசூரை ஒட்டிய பல பகுதிகள் தமிழ் பேசும் நாடாகத் திகழ்ந்தது. தோமையார் காலத்தில் மலையாளம் என்ற மொழி அறியப்படவில்லை. கி.பி. 700 ஆண்டு களில் இசுலாமியர் இந்தியாவுக்கு வந்த போதும், மலையாளம் என்ற மொழி அறியப்படவில்லை. 700-1200 ஆண்டுகால இடை வெளிகளில் ஏற்பட்ட அரசியல் மாற்றங்களால், சேர நாடு, தமிழகத்தின் பாண்டிய சோழநாடுகளுடன் மாறிமாறிப் பகைமை கொண்டிருந்தது. இயற்கையில் அமைந்திருந்த மேற்கு மலைத் தொடர், இவ்விரு பகுதிகளின் பிரிவுகளுக்கும் ஒரு கரணியமாயிற்று. வழக்கமாக தெற்கே பேசப்படும் தமிழ், தமிழ்நாட்டின் வடபகுதித் தமிழுடன் ஒலிப்பில் சிறிது மாறு பட்டிருந்தது. சமஸ்கிருதத்தின் தாக்கம், மேற்குக் கடற்கரைப் பகுதிகளில் உணரப்பட்ட அளவுக்கு, வட தமிழகப் பகுதிகளிலும் கிழக்குக் கரைப்பகுதிகளிலும் உணரப்படவில்லை. சமஸ்கிருத மும் சேரநாட்டுத் தமிழும் கலந்து மலையாளம் என்ற புதிய மொழி உருவாயிற்று. கி.பி. 12 ஆம் நூற்றாண்டுக்குப் பிறகே மலையாள மொழியின் வரி வடிவங்கள் அறிமுகமாயின.

கி.பி. 1500 ஆண்டுகளில், மலையாள மொழி ஏறக்குறைய பேச்சு வழக்கிற்கு வந்துவிட்டது எனலாம். இருப்பினும் மேற்கு

கரையிலிருந்த வணிகர்கள் தமிழையும், உள்நாட்டு மக்கள் மலையாளத்தையும் பேசிவந்தனர். போர்த்துக்கீசியர்கள் தங்கள் பணிகளில் நிலைகொண்டபோது, தமிழும் மலையாளமும் பல ஒற்றுமைக் கூறுகளுடனும், சில மாறுபாடுகளுடனும் பேசப்படுகின்ற மொழிகள் என்பதை அறிந்தனர். தமிழ் - மலையாளம் மொழிகள், போர்த்துக்கீசிய - காஸ்டில்லியன் (Castillian) மொழிகள் போன்றவை என போர்த்துக்கீசியர்கள் கருதினர். மலையாளத்தைத் தமிழர்களும், தமிழை மலையாளி களும் புரிந்து கொள்கின்றனர் என்று போர்த்துக்கீசிய குறிப்பு களிலும் காணப்படுகின்றன.[672]

போர்த்துக்கீசியர்களின் வணிகம் மற்றும் சமயப் பணி களுக்கு, தமிழையும் மலையாளத்தையும் கற்க வேண்டிய சூழ்நிலைகளில் அவர்கள் இருந்தனர். ஐரோப்பியப் பாதிரி மார்கள், தங்கள் மொழிகளுக்குத் தொடர்பில்லாத தமிழையும் மலையாளத்தையும் கற்க மேற்கொண்ட முயற்சிகள் பற்றியும், தமிழ் கற்பதற்கு எளிமையான மொழியன்று என்பது பற்றியும் தங்களது குறிப்புகளின் வாயிலாகக் கூறுகின்றனர்.[673] தமிழைக் கற்பதற்கு அவர்கள் எவ்வாறெல்லாம் முயன்றனர் என்ற செய்திகள், இக்காலத்திலும் அயன்மொழியைக் கற்கும் தமிழர் களுக்கு எடுத்துக்காட்டுகளாய் அமைந்துள்ளன. தொடக்கத்தில் மக்களைப் பார்த்து இருகைகளையும் கூப்பி வணக்கம் சொல்லத் தெரிந்து கொண்டனர்.

பரவர்களே தமிழகத்தில் அக்காலத்தில் கிறித்துவத்தில் இணைந்தனர். பரவர்களுடன் உரையாடவும், தங்கள் உள்ளக் கருத்துக்களை வெளியிடவும், கிறித்துவ சமயம் பற்றி எடுத் துரைக்கவும் இயலாத நிலையில், சிலுவைக் குறியை அவர்கள் செய்து காட்டினர். வலதுகையால் முதலில் நெற்றியிலும், பின்னர் மார்பிலும், அடுத்து இடது வலது தோள்களிலும் தொட்டு செய்கை வழியே (இச்சொல் சைகை என்று பிற் காலத்தில் அறியப்பட்டது) சிலுவைக் குறியை வெளிப்படுத் தினர். கிறித்துவர்களின் அடிப்படை மந்திரங்களான, பரமண்ட லங்களில் இருக்கிற எங்கள் பிதாவே (Pater Noster), பிரியதத்

672. The Book of Durate Barbosa, Durate Barbosa, 2 Vols. New Delhi, 1989.
673. A letter sent to Fr. Ignatius of Loyola, by Fr. Henrique Henriques, dt. 31.10.1548, op. cit., II, p. 279.

தத்தினாலே பூரணமான மறியாயே (Ave Maria), பிதாவுக்கும் சுதனுக்கும் ஸ்பிரித்து சாந்துவுக்கும் தோஸ்திரம் உண்டாகக் கடவது, ஆமென் என்ற இறுதிச் செபத்தையும் லத்தீனிலிருந்து மொழிபெயர்த்துத் தமிழில் சொல்ல அவர்களால் இயல வில்லை.[674] இம்முயற்சியில் வெற்றி பெற அவர்களுக்கு 50 ஆண்டு காலம் பிடித்தது.

அறியப்பட்ட செய்திகளின் படி **மானுவல் கோம்ஸ்** (Manuel Gomes) என்ற போர்த்துக்கீசிய வணிகரே முதன்முதலில் தமிழில் நன்றாகப் பேசவும் எழுதவும் கற்றுக் கொண்டவர் என்பது தெளிவாகிறது. வணிகம் தொடர்பாக, தமிழ் வணிகர் களில் சிலர், போர்த்துக்கல் மன்னருக்கு ஒரு மடல் விடுத்தனர் *(10.9.1527)*. அம்மடல் தமிழிலேயே எழுதப்பட்டு, தமிழ்க் கையொப்பங்களுடன் மன்னருக்கு அனுப்பப்பட்டது. இம் மடலினை, கோம்ஸ் போர்த்துக்கீசியத்தில் மொழிபெயர்த் திருந்தார்.

பிரான்சிஸ் சேவியர், தொடக்கத்தில் தூத்துக்குடிக்கு வந்து நான்கு மாதங்கள் *(கி.பி.1542)* தங்கியிருந்தார். அக்கால அளவுகளில், பரவர்களிடையே அவரால் பேச இயலவில்லை. தனது மடல் ஒன்றில் *(15.3.1544)* சேவியர் குறிப்பிட்டுள்ளபடி, மணப் பாட்டில் தங்கியிருந்தபோது, மேற்சொல்லப்பட்ட மூன்று செபங்களையும் கொச்சையான தமிழில் (Imperfect Tamil) மொழிமாற்றம் செய்துள்ளதாகவும், இலக்கியத் தமிழில் மேலும் மெருகூட்ட முயன்று வருவதாகவும் குறிப்பிடுகின் றார்.[675] இயேசு அவைத் துறவிகள் தங்கியிருந்த குருமடத்தில் தங்களுக்குள் ஐரோப்பிய மொழிகளில் பேசக் கூடாது என்றும் தட்டுத்தடுமாறியேனும் தமிழில் தான் பேச வேண்டுமென்றும் தங்களுக்குள் ஒரு கட்டுப்பாட்டை செய்து கொண்டிருந்தனர். தவறி ஐரோப்பிய மொழிகளில் பேசுவோருக்குச் சிறிய அளவில் ஒறுப்பும் (தண்டனை) விதித்துக் கொண்டனர். அத்தண்டனை வேறொன்றுமில்லை. அவர் அன்றாடம் சொல்லும் செபத்தினை (Prayers) மேலும் ஒருமுறை சொல்லிக் கொள்ள வேண்டும் என்பதே.

---

674. The letter of Francis Xavier dt. 27.3 1544, from Manapad, in Hugues Dieder, Correspond

675. Letter of Fr. Henrique Vol. I, p. 279.

சேவியர், ஹென்றிக் (Fr. Henrique Henriques) என்பாரைத் தமிழ் படிக்குமாறு கேட்டுக் கொண்டார். ஹென்றிக் ஐரோப்பா விலிருந்த இக்னேஷியஸ் லயோலாவுக்கு எழுதிய மடலில் *(31.10.1548)*, அந்தோனியோ (Fr. Antonio Criminali) என்பார் தமிழைக் கற்கத் தொடங்கியுள்ளார் என்றும், தமிழ்மொழி ஐரோப்பியர்கள் விரைவில் கற்றுக்கொள்ள எளிமையாக இல்லை என்றும், இருப்பினும் மிகுந்த உழைப்பும் ஆர்வமும் கொண்டு தமிழைக் கற்று வருவதாகவும் குறிப்பிடுகின்றார்.[676] ஹென்றிக் பெரு முயற்சி எடுத்துத் தமிழைக் கற்றுக் கொண்டது பற்றிய செய்திகளை அவரே குறிப்பிடுகின்றார்.

## *ஹென்றிக் எவ்வாறு தமிழைக் கற்றார்?*

கி.பி. 1548 ஆம் ஆண்டில் லயோலாவுக்கு எழுதிய மடலில், ஹென்றிக் தனக்கு தமிழில் இரண்டு சொற்கள் தான் தெரியும் என்று குறிப்பிடுகிறார். தமிழ் கற்பதற்குக் கடினமாயிருந்ததால், ஒரு கட்டத்தில் தமிழ் மொழியைக் கற்பதையே நிறுத்தி விட்டதாகக் கூறுகிறார். போர்த்துக்கீசிய மொழியறிந்த தமிழன் ஒருவனை, **ஜான் கொந்தே** (Fr. Joao villa de Conde) என்பார் ஹென்றிக் அடிகளாருக்குத் துணையாகவும் மொழிபெயர்ப் பாளராகவும் அனுப்பிவைத்தார். சின்னாட்களில் அத்தமிழர் வேறுபணிகள் தொடர்பாக ஹென்றிக்கை விட்டுப் பிரிந்து போன போது, அவருடைய பணிகள் தடைப்பட்டன. இச் சூழலில் தான் ஹென்றிக் எப்பாடுபட்டாவது தமிழைப் படிப் பது என்ற உறுதியை மேற்கொண்டார். மேலும் தமிழைக் கற்க இறைவன் அவருக்கு நல்லருள் புரிந்ததாகவும் குறிப்பிடுகின்றார்.[677]

இலத்தீன் மொழியின் இலக்கண அமைவுகளைக் கொண்டு, தமிழைக் கற்க தாம் ஒரு புதிய முறையைக் கண்டுபிடித்ததாக ஹென்றிக் கூறுகிறார் (வீரமாமுனிவர் கூட இம்முறையைத் தான் பயன்படுத்தினார் எனலாம்). முதலில் தமிழ் மொழியி லுள்ள வினைச் சொற்களின் பல்வேறு நிலைகளை (Conjugations) அறிந்து கொண்டார். அதன் வழியில் இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்ற வினைச் சொற்களின் வேறு பாடுகளை அறிந்தார். பெயர்ச் சொற்கள் எவ்வாறு வாக்கியத்

---

676. Ibid.

677. Letter of Fr. Henrique, DI, Vol. I, p. 279.

தின் முதலில் வைக்கப்படுகிறன என்பதையும் (Nominatives), பெயர்ச் சொற்கள் தொடர்பு படுத்தப்படுவதையும் (Vocatives), ஒன்றின் அசைவு அல்லது செயல்பாடுகள் பற்றியும் (Accusatives), பெயர் வினைகளோடு கொள்ளும் தொடர்புகள் பற்றியும் (Genetives), மறை பொருளாயுள்ள பெயர்ச் சொற்கள் பற்றியும் (Datives), பெயர்ப் பொருளுடன் தொடர்புடைய சொற்கள் பற்றியும் (Ablatives) வினைச் சொல் கொண்ட சிறு சிறு வாக்கியங்களை அமைக்கத் தெரிந்து கொண்டார். இம்முறை யின் வழியே *18* மாதங்களில் தமிழை எழுதவும் படிக்கவும் தெரிந்து கொண்டதாக ஹென்றிக் தமது குறிப்புகளில் கூறுகிறார். பின்னர் தாம் எந்த மொழி பெயர்ப்பாளரையும் வைத்துக் கொள்ளவில்லை என்கிறார்.[678]

ஐரோப்பியர்களுக்குப் பொதுவாக ஏற்படும் பிழையான ஒலிப்புகள் ஹென்றிக்கிடமும் இருந்தன. க, ட, ண, த, ற போன்ற எழுத்துக்களின் ஒலிப்புகளை வேறுபடுத்திக் காட்ட ஐரோப்பியர்கள் பெரிதும் இன்னலுறுவர். குறிப்பாக ங என்ற எழுத்தின் ஒலிப்பு அவர்களுக்கு வரவே வராது. மாங்காய் என்பதை மான்காய் என்றுதான் கூறுவர். எங்கே என்பதை என்கே என்றே ஒலிப்பர். பிரெஞ்சுப் பாதிரியார்கள் ழகரத்தைத் தெளிவாகக் கூறுவர். ஏனெனில் ஐரோப்பிய மொழிகளில் தமிழ் ழகரம் பிரெஞ்சு மொழியில் தான் உள்ளது. போர்த்துக் கீசியர்களுக்கு ழகரம் வாயில் நுழையாது. கொழை என்ற ஊரை, கொலை என்றே அவர்களின் மடல்களில் குறிப்பிடு கின்றனர். (எ.கா. Letter of Andre Freire to Paul Oliva, Colei, 1676). மேலும் செதுக்க முடியாது என்பதனை, செடுக்க முடியாடு என்றே கூறுவர். வரிவடிவத்தைச் சரியாகக் கையாண்ட ஐரோப் பியர்கள் ஒலிவடிவத்தைக் கையாள்வதில் இடர்ப்பாடுற்றனர். (தமிழர் ஆங்கிலம் பேசுவதில் தமிழின் ஒலிப்பு நடையே மிகுந்திருப்பதைக் காண்க).

தமிழில் உள்ள வல்லினம், மெல்லினம், இடையினம் போன்ற ஒலிப்பு வேறுபாடுகளை மொழிபயில்வோர் புரிந்து கொள்ள வேண்டும் என்பதை ஹென்றிக் வலியுறுத்துகிறார்.[679] புன்னைக் காயலில் வாழ்ந்திருந்த ஐரோப்பியத் துறவிகள், தமிழ்ச் சிறுவன் ஒருவனைப் பணிக்கமர்த்தியிருந்தனர். அவனது

---

678. Ibid.

679. Ibid.

பணியாதெனில், அவர்கள் பேசும் தமிழிலுள்ள தவறுகளை அவ்வப் போது திருத்திக் கூறவேண்டுமென்பதே. அச்சிறுவன் மிகவும் கெட்டிக்காரன் என்றும், நல்ல தமிழறிவு உள்ளவ னென்றும் ஹென்றிக் குறிப்பிடுகிறார்.[680] **அந்தோ புரோ யென்சா** (Fr. Antao Proenca) என்னும் பாதிரியார், தமிழிலுள்ள சிறப்புகளையும் பெருமைகளையும், அம்மொழி உலகமொழி களினின்றும் எவ்வாறு தனித்து விளங்குகிறது என்பதையும் தமது குறிப்புகளில் கூறுகிறார். கி.பி. 1679 ஆம் ஆண்டில் முதன் முதலில் அவர், தமிழ் - போர்த்துக்கீசிய அகரமுதலி யொன்றை வெளியிட்டார். உலக வரலாற்றில், வெளியிடப் பட்ட முதல் அகராதி (Dictionary) இதுவே எனலாம். ஒரு நூற்றாண்டுக்குப் பிறகே, ஜான்சன் என்பார், ஆங்கில மொழியில் அகராதியை வெளியிட்டார். **அந்தோ புரோயென்சா, "தமிழ் மொழியிலுள்ள எழுத்துக்களை, உயிர் (life) என்றும், மெய் (body) என்றும், உயிர்மெய் (animated body) என்றும் வகுத்துள்ளனர். ஒரு மாந்தன் (human being) உயிருடன் இருப்பதாகக் கொள்ள, என்னென்ன கூறுகளும் இயக்கங்களும் தேவையோ, அதனை தமிழ் மொழியில் ஏற்றி, நல்லதோர் உவமையாக (Metapor) கூறியுள்ளனர். இவ்வழகான உவமை உலகின் எந்த மொழி களிலும் காணப்படாத வொன்று", என்று கூறுகிறார்.**[681]

கி.பி. 1598 ஆம் ஆண்டில், **தியோ கோ தோ கூத்தோ** (Diogo do Couto) என்பார், கோவா நகரில் வாழ்ந்திருந்த போர்த் துக்கீசியர் ஆவார். திருக்குறள் பற்றி[682] அவர் எழுதியுள்ள

---

680. Ibid.

681. Portuguese in the Tamil Coast, p. 337.

682. Ibid, p. 325.

682. Diogo do Couto says:

"There is a book among them by a man who is held by them to have been very wise, called Valuver, a native of the town of Meliapore who lived at the same time as the Apostle St. Thomas, which contains one thousand three hundred and thiry verses, in which he speaks of the knowledge of one sole creator, of the reverence that is due to him, of the importance of penitence and of the disdain for idols; and for these reasons and for others that are written there is learnt that he was taught by the Apostle St. Thomas himself."

குறிப்புகள், தமிழுக்குப் பெருமை சேர்ப்பன எனலாம். ஐரோப்பா விற்கு முதன்முதலில் திருக்குறளை அறிமுகம் செய்தவர் இவரே எனலாம்.

**"தமிழில் ஒரு நூலுள்ளது. மிகப் பெரிய அறிஞரான திருவள்ளுவர் என்பவர் இந்நூலை எழுதியுள்ளார். இவர் தோமையார் வாழ்ந்திருந்த மயிலாப்பூரில் தான் வாழ்ந்திருந் தார். 1330 பாடல்களில், ஒரு கடவுள் கொள்கை பற்றியும், பொறுமை, மாந்த நேயம், நடு நிலைமை, போன்ற தலைப்பு களில் எழுதியுள்ளார். சிலை வழிபாட்டை இவர் வெறுத்தவர். இவருடைய திருக்குறளை ஆய்வு செய்யும் போது, தோமை யாரிடம் இக்கொள்கைகளையெல்லாம் கற்றுத் தெளிந்திருக்க வேண்டும் என்றே தோன்றுகிறது".**

திருக்குறள் பற்றி போர்த்துக்கீசியர் ஒருவர் எவ்வளவு ஆழமாகச் சிந்தித்திருக்கிறார் என்பதை மேற்கண்ட செய்தியால் அறியலாம். திருவள்ளுவர் தோமையாரால் கிறித்துவத்தில் இணைக்கப்பட்டவர் என்றும், திருக்குறள் ஒரு கிறித்துவ நூலே என்றும் பலரால் விளக்கப்பட்டுள்ளது. திருக்குறளில் காணப் படும் மெய்யியல் கொள்கைகளில் ஒன்று கூட கிறித்துவத்துக்கு முரண்பட்டதாக இல்லை. திருக்குறளுக்கு உரையெழுதிய பரிமேலழகர் என்ற பிராமணர், திருக்குறளை ஒரு பிராமணிய நூல் போன்றே வெளிக்காட்ட முயற்சித்துள்ளார். திருவள்ளுவர் கூறாத பல செய்திகளை, பிராமணீயத்தின் சார்புச் செய்திகளாக பரிமேலழகர் காட்டுகிறார் என்பனவற்றையெல்லாம், சென்ற நூற்றாண்டில் வாழ்ந்திருந்த பாவாணர் போன்ற தமிழறிஞர் கள் சுட்டிக் காட்டியுள்ளனர். திருவள்ளுவர் கிறித்துவரே என்ற சிந்தனைக்கு வலுவூட்டும் சான்றுகள் திருக்குறளில் உள்ளன வென்றாலும், புறச்சான்றுகள் எவையுமில்லை என்பதும் தெளிவு. திருவள்ளுவர் ஆதி பகவனை முன்னிலைப் படுத்திய தாலும், அவன் பிராமணக் கடவுளே என்று பரிமேலழகர் போன்றோர் கூறியதாலுமே, தமிழ்ப் பகைவர்கள் திருக்குறளை அழிக்காமல் விட்டுவைத்தனர் என்று பாவாணர் கூறுகிறார்.

### தமிழில் வெளிவந்த முதல் அச்சிடப்பட்ட நூல்

தமிழ் வரிவடிவங்களில் முதன் முதல் அச்சிடப்பட்ட நூல் கி.பி. 1554 ஆம் ஆண்டு, பிப்ரவரித் திங்கள் இரண்டாம் நாளன்று, 38 பக்கங்களைக் கொண்டு வெளியிடப்பட்டது.[683] ஆனாலும்

இதனைத் தமிழ் நூல் என்று கூற இயலாது. லிஸ்பன் நகரில் வெளியிடப்பட்ட இந்நூலின் சொற்கள் இலத்தீன் மொழியிலும், அச்சொற்களைத் தமிழ் வரிவடிவத்திலும் அச்சிட்டிருந்தனர். எடுத்துக்காட்டாக, Anno Domini என்ற இலத்தீன் சொற்களை, அன்னோ டோமினி என்றவாறு அச்சிட்டிருந்தனர். தமிழர்கள் இந்த நூலில் உள்ள மந்திரங்களை அப்படியே சொல்லிச் சொல்லி (பொருள் விளங்காமலேயே) மனப்பாடம் செய்து கொண்டு, நாளும் அம்மந்திரத்தைச் சொல்லி வரவேண்டும் என எதிர்பார்க்கப்பட்டது.

*1950* களில் கூட, இதைப் போன்றே தமிழ் வரிவடித்தில் அச்சிடப்பட்ட இலத்தீன் மொழி மந்திரங்கள், தமிழ் நாட்டிலும் வழக்கிலிருந்தன. எடுத்துக்காட்டாக,

> ".... மேயா குல்ஃபா, மேயா குல்ஃபா, மேயா மாக்சிமா குல்ஃபா! இடயோப்ரே கோர்பியாத்தும் மறியம் சேம்பர் வீர்ஜூனும், பேயாத்தும் மிக்கேயேலி அர்க்காஞ்சலும், பேயாத்தும் யோவான்னும் பப்திஸ்தாம், சாங்குஸ் அப்போஸ் தலுஸ் பேத்ரே எத் பவுலோ ....."[684]

இதற்கு ஆங்கிலத்தில், My sin, My sin, My great (Maximum) sin என்றவாறு பொருள் விரியும். குல்பா என்ற இலத்தீன் சொல்லுக்குப் பாவம் (வினை) என்று பொருள் கொள்ளப் பட்டாலும் குற்றம் என்ற பொருளே விஞ்சி நிற்கும். (குல் என்ற தமிழ் வேர்ச்சொல் நீண்டு, குல்-குறு-குறுப்பு = அமைதி யின்மை எனப் பொருள்படும். குறுகுறுப்பு என்றும் பொருள் கொள்க. குல்-குறு-குறை = தீமை. குல்-குல்து-குத்து = கொலை செய்தல். குல்-குல்து-குற்று-குற்றம் = தீமை அல்லது வினை = குல் என்ற தமிழ் வேர்ச் சொல், குல்ஃபா என இலத்தீன் மொழி யில் திரிந்துள்ளதை நோக்குக.)[685]

பொருள் தெரியாத மொழிகளில் மந்திரங்கள் சொல்லப் படுவதைத் தடைசெய்து, அந்த நாட்டுமக்களும் அவரவர் தாய்மொழியிலேயே வேண்டுதல்கள் (Prayers) செய்ய *1962* ஆம் ஆண்டு போப்பாண்டவர் ஆணையிட்டார். கி.பி. *1554* ஆம் ஆண்டுத் தொடங்கப்பட்ட அந்த நடைமுறை கி.பி. *1962* ஆம்

---

683. Ibid, p. 327.

684. பழைய இலத்தீன் மொழிச் செபம் - நூலாசிரியர்

685. விளக்கம் - நூலாசிரியர்.

ஆண்டுடன் முடிவுற்றது எனலாம். இந்த தமிழ் வரிவடிவ இலத்தீன் மொழி நூலை, தமிழ்ப் பேரறிஞர் தனிநாயகம் அடிகளார், கி.பி. 1954 ஆம் ஆண்டில் கண்டுபிடித்தார். இந் நூல், தற்போது பெலம் அருங்காட்சியகம், லிஸ்பன் நகரில் உள்ளது. இந்நூலில், ஏற்கனவே சொல்லப்பட்ட அடிப்படை மந்திரங்கள் உள்ளிட்ட விவிலியத்தின் சில பதிகளும் (Pater Noster, Ave Maria, Credo, Salve Regina, Ten Commandments) அச்சிடப்பட்டிருந்தன.

## இந்தியாவில் முதல் அச்சுக் கூடம்

போர்த்துக்கீசியர் நாட்டில் அச்சுக் கூடம் முதன் முதலாக, கி.பி. 1495 ஆம் ஆண்டில் நிறுவப்பட்டது இந்தியாவில் அச்சுக் கூடம் நிறுவப்படுவதற்கான பொறிகள் 6.9.1556 ஆம் ஆண்டில் கோவாவிற்கு வந்து சேர்ந்தன. 20 ஆண்டுகள் செயல்படாமல் அவை முடங்கிக் கிடந்தன. தமிழில் அச்சுகள் (Types) துருவி எடுக்கப்படவில்லை. கி.பி. 1576 ஆம் ஆண்டில், **பெத்ரோ லூயிஸ்** என்பார் (இவர் இராம நாதபுரத்தைச் சார்ந்த பிராமணர்), புதிதாகக் கிறித்துவ சமயத்தில் இணைந்தார். இவருக்குத் தமிழிலும் சமஸ்கிருதத்திலுமிருந்த புலமையைக் கருத்தில் கொண்டு, இவரைக் கோவா நகருக்கு, தமிழ் அச்சுப் பலகைகள் செய்வதற்கென அனுப்பி வைத்தனர். இவருடைய முயற்சியில் கி.பி. 1578ஆம் ஆண்டு (அக்டோபர் 20, அய்பசி 20 என்றும், திங்கட் கிழமையென்றும் குறித்துள்ளனர். ஆங்கில தமிழ் பக்கல்கள் (தேதிகள்) தவறாக உள்ளன).

முதல் அச்சுக்கூடம் கோவாவில் நிறுவப்பட்டது.[686] இதுவே இந்தியாவின் முதல் அச்சுக் கூடமாகும். "தம்பிரான் வணக்கம்" தமிழில் வெளிவந்த முதல் அச்சிடப்பட்ட நூல் ஆகும். இது 16 பக்கங்களையும், 10x14 செ.மீ. அளவுகளையும் கொண்டு வெளியிடப்பட்டது. குருத்தோலை ஞாயிற்றுக் காட்சிகளைத் தாங்கி முதல் பக்கம் அச்சிடப்பட்டிருந்தது இந்நூலின் உண்மைப் படி (Original Copy), அமெரிக்க ஹார்டுவேர் பல்கலைக் கழக நூல் நிலையத்தில் இன்றும் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளது.

---

686. Portuguese Trade and Society in China and South China Sea, (1630-1754 A.D), Sousa George Bran, Cambridge 1986, op. cit., Con. I-2-12 p. 67.

இந்நூலில் உள்ள மெய்யெழுத்துக்களில் "புள்ளி" காணப் படவில்லை. எழுத்துகளில் குறில் நெடில் வேறுபாடுகள் காட்டப்படவில்லை. சொற்களின் பொருளுக்கேற்றவாறு குறி லாகவோ, நெடிலாகவோ ஒரெழுத்தைப் படித்துக் கொள்ள வேண்டும். எழுத்துக்களில் ஆ, நூ, தூ போன்ற எழுத்துக்களை நீட்டி ஒலிப்பதற்கான எந்தக் குறியும் இல்லை. அவை குறில் போலவே காணப்படுகின்றன. இடையிடையே சில போர்த்துக் கீசிய சொற்களும் தமிழ் வரி வடிவத்தில் காணப்படுகின்றன. போர்த்துக் கீசிய சொற்களையும் அயன்மொழிச் சொற்களை யும் குறிக்க, சொல்லுக்கு முன்னும் பின்னும் சில குறியீடுகள் காணப்படுகின்றன.[687] **தம்பிரான் வணக்கம் என்ற தமிழ் நூலை. இன்றைய மாணவன் ஒருவனிடம் கொடுத்தால், அவனால் அதைப் படிக்க இயலாது என்பது உறுதி.**

**தம்பிரான்**

மலையாளச் சொல் போலத் தோன்றினாலும் இது தமிழ்ச் சொல்லே. எம்பிரான் = என்தலைவன். உம்பிரான் = உயர்ந்த வானத்திலுள்ள தலைவன். தம் பிரான் - தம்பிரான் எனப் பட்டது. பிரான் என்பதற்கு இறைவன் என்பதே பொருளாகும். பெருமான் என்ற சொல்லின் நீட்சி. பொன்னந்த தம்பிரான் என்பது திருவாங்கூர் மன்னர்கள் தரும் ஓர் உயர்பட்டமாகும். சமயத் தலைவர்களைத் தம்பிரான் என அழைப்பர். இவருக்குக் கட்டளைத் தம்பிரான் என்ற பெயரும் உண்டு. சிவநெறித் துறவிகளின் தலைவன் பெரிய தம்பிரான் எனப்படுவான். தம்பிரான் என்பது பொதுவாக இறைவனைக் குறித்தாலும் இங்கு, இயேசுவைக் குறித்தது என்க.[688]

"தலை தப்பியது தம்பிரான் புண்ணியம்"

கடவுளின் அருளால் தலைதப்பியது என்பது பழமொழியாகும்.

## *தம்பிரான் வணக்கம்*

இறைவனுக்கு அல்லது இயேசுவுக்கு செலுத்தப்படும் வணக்கம். தம்பிரானுக்குப் பெண்பால் தம்பிராட்டி என்ப தாகும். பெஸ்கி தனது சதுரகராதியில் தம்+பிராட்டி எனப் பிரிக்கிறார்.

---

687. Ibid.

688. விளக்கம் - நூலாசிரியர்.

## போர்த்துக்கீசியரின் தமிழ் நடை

முறையாக எந்த ஐரோப்பியரும் தமிழ் கற்கவில்லையாதலால், மக்கள் பேசிய கொச்சைத் தமிழிலேயே, தங்களுடைய மந்திரங்களை (Prayers) மொழி பெயர்த்துக் கொண்டனர். அச்சொற்கள் தமிழ்ச் சொற்களா அல்லது சமஸ்கிருதச் சொற்களா என்று அவர்களால் அறிய இயலவில்லை. கி.பி. 16 ஆம் நூற்றாண்டில், ஏராளமான வடசொற்கள் தமிழில் கலந்திருந்தன. தனித்தமிழில் எழுதும் முயற்சியெல்லாம் அப்போது யாரும் மேற் கொள்ளவில்லை. பிராமணர்கள் தமிழில் புகுத்திய இந்த மணிப் பிரவாள நடையை இன்றும் கூட முற்றிலுமாக மாற்ற இயலவில்லை என்பதே உண்மை நிலையாகும். இராபர்ட்-டி-நொபிலியின் நூல்களும் சமஸ்கிருதத் தலைப்புகளிலும், வட சொற்கள் மிகுந்த வாக்கியங்களுமாகவே உள்ளன. வீரமா முனிவர் தனது இலக்கியங்களில் வடசொற்களைப் பெருமளவில் குறைத்தார் என்று கூறலாம். நொபிலிக்கும், பெஸ்கிக்கும் தமிழ்ச் சொல் எது, வடசொல் எது என்று அறிந்து கொள்ளும் தமிழறிவு இருந்தது. என்றாலும், ஒரு சில சொற்களை அவர்கள் புதியனவாகப் புகுத்தினாலும், மரபுகளை மாற்ற விரும்பவில்லை.

தொடக்ககால அச்சு நூல்களில் காணப்படும் சில வடமொழிச் சொற்களாவன:[689]

| வடசொல் | அதற்கிணையான தமிழ்ச் சொல். |
|---|---|
| ரட்சிக்க | மீட்க |
| புத்திரன் | மகன் |
| நமஸ்காரம் | வணக்கம் |
| ராஜ்ஜியம் | அரசு |
| ஸ்திரீகள் | பெண்கள் |
| சர்வமும் | எல்லாமும் |
| கன்னிகாஸ்திரி | கன்னி |
| லோகத்தினூடே | புவியிலே |
| தோஷம் | குறை |
| மனுஷன் | மாந்தன் |
| ஸ்நேகிச்சு | விரும்பி |
| அகங்காரம் | பெருமை |

689. Portuguese in Tamil Coast, pp. 334-335.

சில கொச்சையான சொற்கள்[690]

| | |
|---|---|
| முழிச் சேன் | விழித்தேன் |
| குறுக்கிற | கொடுக்கிற |
| இரிக்கிறே | இருக்கிறாய் |
| ரட்சிச்சு | மீட்பு |
| பாக்கிறது | பார்க்கின்ற |
| பிழைச்சேன் | பிழைத்தேன் |
| சொல்லிச்சி | சொல்லி |
| உசிரு | உயிர் |

போர்த்துக்கீசியர்களின் தமிழ் மொழி இவ்வாறிருக்க, பல விவிலியப் பெயர்களை புதிதாகக் கிறித்துவத்தில் இணைந் தவர்களுக்குச் சூட்டினர். சில போர்த்துக்கீசிய மரபு வழிப் பெயர்களும் சூட்டப் பெற்றன. பெர்னாண்டஸ், ரோட்ரிகுஸ், குருஸ் போன்றவை போர்த்துக்கீசியரின் மரபு வழிப் பெயர் களாகும். ஜுசஸ் (Jesus), மேரி (Mary), ஜோசப் (Joseph) போன்ற திருக்குடும்பத்தின் பெயர்களை முறையே ஏசு, மேரி, சூசை என்று தமிழில் அறிமுகம் செய்தனர். சூசை என்பது ஜோசப் என்ற ஆங்கிலச் சொல்லின் போர்த்துக் கீசிய ஒலிப்பாகும். உண்மை யில் எபிரேய மொழியில் ஈசா, மறியம், யூசப் என்றே இப்பெயர் கள் சொல்லப்பட்டன. இம்மூன்று சொற்களும் தமிழ்ச் சொற் களின் திரிபுச் சொற்களே எனலாம். குறிப்பாக மறி என்ற எபிரேயச் சொல், ஆடு என்ற பொருளைக் குறித்தது. மறி என்பது ஆட்டைக் குறித்த தமிழ்ச் சொல்லே. மறி என்றே எழுத வேண் டிய சொல்லை, மரி என்று தமிழில் எழுதி, எபிரேய மூலத்தின் பொருளையே மாற்றிவிட்டனர். மரி என்றால் இறந்துபோ என்பது தமிழ்ப் பொருளாகும். மேலும் விளக்கங்களுக்கு ஆசிரி யரின் "எபிரேயத்தின் தாய்மொழி தமிழே" என்ற நூலைக் காண்க.

இராபர்ட்-டி-நொபிலி, ஓர் இத்தாலியர். மேலும் தமிழ் - வடமொழி ஆகியவைகளில் புலமை பெற்றவர். அவர், விவிலியப் பெயர்கள் சிலவற்றைத் தமிழ்ப்படுத்தியுள்ளார். எடுத்துக்காட் டாக,

| | |
|---|---|
| பீட்டர் (Peter) | - மலையப்பன் |
| ஃபிடலிஸ் (Fidelis) | - விசுவாசம் (இது ஒரு வடசொல்லே) |

690. Ibid.

| | | |
|---|---|---|
| கான்ஸ்டாண்டியுஸ் (Contantius) | - | தைரியம் (இதுவும் வடசொல்லே) |
| ஹிலாரி (Hilary) | - | முத்துடையான். |
| ஜோக்கியம் (Joachim) | - | தேவரம்பர். |
| லாசருஸ் (Lazarus) | - | தானப்பன் |
| எலிசபெத் (Elizabeth) | - | தேவனம்மாள் |
| ஜான் (John) | - | அருளப்பன். |

சூசை என்ற போர்த்துக்கீசிய சொல்லை விடுத்து, வளன் என்ற தமிழ்ச் சொல்லை பெஸ்கி பயன்படுத்தினார்.

பிதா, சுதன், ஸ்பிரித்து சாந்து என இறைவனின் மூன்று நிலைகளைக் கிறித்துவம் கூறுகிறது. பிதா, சுதன் ஆகிய இரண்டும் தமிழின் வேரைக் கொண்ட வடசொற்களே. அதற்குத் தந்தை - மகன் என்ற பொருளுண்டு. Spiritus Sanctus என்ற இலத்தீன் சொல்லுக்கு இணையான சொல், போர்த்துக்கீசியருக்குத் தமிழில் கிடைக்கவில்லை அல்லது தெரியவில்லை. எனவே, இலத்தீன் சொல்லையே ஸ்பிரித்து சாந்து என்று எழுதிவிட்டனர். Sanctus = தூய்மை; Spritus = ஆவி என்றவாறு பொருள் கொண்டு, தூய ஆவி என்று தற்போது கூறுகின்றனர்.

ருஅ (Rua) என்ற எபிரேயச் சொல்லை, Spiritus என்று இலத்தீனில் மொழிபெயர்த்துள்ளனர். ருஅ என்ற எபிரேயச் சொல்லுக்கு இணையான மொழிபெயர்ப்புச் சொல் ஸ்பிரித்துஸ் அல்ல என்பது பெரும்பாலான மொழியியலாளர்களின் முடிபு. ருஅ என்ற சொல்லுக்கு இணையான பொருள் தரும் சொல் ஐரோப்பிய மொழிகளில் இல்லை.[692] ருஅ என்ற சொல்லுக்கு, தெரிந்தும் தெரியாத ஒரு வடிவம் என்பதே உண்மையான பொருளாகும். ருஅ என்ற எபிரேயச் சொல், உரு-உருவ-உருவம் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபே. காற்றில் தெரிந்தும் தெரியாமலிருக்கும் புகை போன்றே உருவத்தையே ருஅ என்றனர். ஆவி என்ற தமிழ்ச் சொல்லும் கூட முழுமையான பொருளைத் தருவதாக கூற இயலாது.

இவ்வாறு, கிறித்துவ சமயம் தொடர்பான பல சொற்களுக்கு அவைகளின் மூலப் பொருளை விடுத்து, பல்வேறு

691. Ibid, p. 335.

692. Dictionary of the Bible, p. 840.

சொற்கள் இணைக்கப்பட்டுள்ளன. Baptism என்ற சொல்லுக்கு ஞானஸ் நானம் என்று வடமொழியில் ஒரு சொல்லைச் சேர்த்தனர். Baptizo என்ற கிரேக்கச் சொல்லுக்கு ஊற்றுதல், வார்த்தல் என்பதே பொருளாகும். வார்ப்பு என்ற தமிழ்ச் சொல்லே, பார்ப்பு - பாப்டி என்று கிரேக்கத்தில் திரிந்தது. ஞானஸ் நானம் என்பதற்கு, அறிவார்ந்த குளியல் என்பதே நேரிடையான பொருளாகும். ஞானம் = அறிவு (Wisdom). தற்போது திருமுழுக்கு என்று கூறுகின்றனர்.

போர்த்துக் கீசியர்களின் வருகைக்குப் பிறகு பல நூறு சொற்கள் தமிழில் இடம் பிடித்தன. அவைகளில் சில:[693]

| போர்த்துக் கீசியச் சொல் | தமிழில் | ஆங்கிலத்தில் |
|---|---|---|
| பிஸ்கோத்து (Biscothu) | பிஸ்கோத்து | Biscuit |
| கர்தாஸ் (Cartas) | கடுதாசி | Letter |
| க்ராதி (Khradi) | கிராதி | Altar |
| மெஸ்த்ரே (Mestre) | மேஸ்திரி | Supervisior |
| கப்பித்தோ (Capitao) | கப்பித்தான் | Captain |
| மெசா (Mesa) | மேசை | Table |
| பொட்டன் (Pottan) | பொத்தான் | Button |
| பாத்ரே (Padre) | பாதிரி (யார்) | Father (Priest) |
| ஆயா (Ayah) | ஆயா (பாட்டி) | Aged woman |
| பட்டாலியோ (Bataliao) | பட்டாளம் | Army |
| செபோய் (Sepoy) | சிப்பாய் | Soldier |
| டுபாக்கி (Tuppaki) | துப்பாக்கி | Gun |
| ரெசியு (Receu) | ரசீது | Recipt |
| சவே (Chave) | சாவி | Key |
| அரடால் (Arratel) | ராத்தல் | Weight |
| அர்மாரியோ (Armaraio) | அலமாரி | Almirah |
| பனபூ (Banaboo) | பிரம்பு (தமிழ்ச் சொல்லே) | Bamboo |
| பொலாலோ (Bolao) | பலூன் | Baloon |
| கமிஸ் (Kamis) | கமிசு | Shorts |
| சா (Cha) | சாய் | Tea |

693. Portuguese in the Tamil Coast, p. 347.

| | | |
|---|---|---|
| கொபோ (Copo) | கோப்பை (தமிழ்ச்சொல்லே) | Cup |
| ஃபுனில் (Funil) | புனல் (தமிழ்ச் சொல்லே) | Funnel |
| ஜனிலா (Janela) | ஜன்னல் | Window |
| வெராண்டா (Verandah) | வரண்டா | Corridor |
| சபடோ (Sapto) | சப்பாத்து | Shoe |
| சகோ (Saco) | சாக்கு | Gunny Bag |
| பெனா (Pena) | பேனா | Pen |
| லெயிலியோ (Leileo) | ஏலம் | Auction |
| க்ராவடோ (Cravado) | கருவாடு | Salt fish |
| மாங்கா (Manga) | மாங்காய் | Mango |

**தமிழில் முதல் ஐரோப்பியரின் இலக்கண நூல்**

நமக்குக் கிடைத்துள்ள நூல்களில் தொல்காப்பியமே முதல் தமிழ் இலக்கண நூலாகும். கி.பி. 13ஆம் நூற்றாண்டில் நன்னூல் என்னும் இலக்கண நூலை பவணந்தி முனிவர் இயற்றினார். இந்நூலையே முதனூலாகக் கொண்டு, ஹென்றிக் தமிழில் ஒரு இலக்கண நூலை எழுதினார். தமிழில் இலக்கணத்தை, இலத்தீன் இலக்கண முறைகளோடு ஒப்பிட்டு இந்நூல் எழுதப்பட்டது. அவரே கூறிய செய்தியின்படி, தமிழ் இலக்கணத்தைக் கற்க தாம் புதிய முறையொன்றைக் கண்டுபிடித்துள்ளதைப் பற்றி விளக்குகிறார். மிகக் கடினமான முயற்சிக்குப் பிறகே இந்நூலை எழுத முடிந்தது என்றும் கூறுகிறார். தமிழ் இலக்கணம் பற்றிக் கூறும் இந்நூல், தமிழ் மொழியில் எழுதப் படவில்லை. மாறாக இலத்தீன் மொழியில் எழுதப்பட்டது. உண்மையில் இந்நூல் ஐரோப்பிய சமயப் பணியாளர்களுக் காகவே எழுதப்பட்டது எனலாம். கி.பி 1549இல் தொடங்கி, 1552ஆம் ஆண்டில் இந்நூலை முடித்ததாக ஹென்றிக் கூறுகிறார். இந்நூல் 1565ஆம் ஆண்டில் மேலும் விரிவுபடுத்தப்பட்டது. தமக்கு வாய்த்திருந்த இலத்தீன் மொழியின் இலக்கண அறிவே, இத்தமிழ் இலக்கண நூலை எழுத உதவியது என்று ஹென்றிக் கூறுகிறார்.[694] **தமிழ் இலக்கணத்தை அயன் மொழியில் எழுதிய முதல் தமிழ ரல்லாதவர் ஹென்றிக் என்பாரே என்பது தெளிவு.** இந்நூல் அச்சிடப்படவில்லையென்பது ஒரு வருத்தமான செய்தியாகும்.

694. Fr. Henrique's letter dt. 21.11.1549.

## தமிழில் முதல் அகர முதலி

ஹென்றிக் தமிழில் ஓர் அகரமுதலியையும் எழுதினார். **ஓர் அகரமுதலி முதன்முதல் எழுதப்பட்டது தமிழில்தான் என்பதும், ஹென்றிக் எழுதியதற்கு ஒரு நூற்றாண்டுக்குப் பிறகே ஜான்சன் ஆங்கில மொழியில் எழுதினார் என்பதும், தமிழுக்குக் கிடைத்த பெருமையாகும்.** பிரான்சீஸ் சேவியர் தனக்கு அளித்த அன்புக் கட்டளையின்படி, தமிழ் இலக்கண நூலையும் அகர முதலியையும் (Lexicon) தாம் எழுதியதாகவும், இந்நூல்களைக் காண சேவியர் உயிரோடு இல்லையென்றும், ஹென்றிக் வருந்துகிறார். ஹென்றிக் எழுதிய நூல் அச்சாக வில்லையென்றாலும், மூலப்படி (Original) இன்றும் பாதுகாப்பாக உள்ளது. (The only existing manuscript which is preserved in the "Biblioteca Nacional de Lisboa" in Portugal under the title "A Arte de Lingua Malabar".) இந்நூலின் ஒவ்வொரு பக்கத்தின் தலைப்பிலும் சேசு மறியா (Sesu Maria) என்று எழுதப்பட்டுள்ளது. இந்நூல் எழுதப்பட, இலத்தீன் இலக்கண முறைகள் பயன்பட்டன என்பது பற்றி ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது. **இந்நூல் தமிழ் இலக்கண இயலார்** (Tamil grammarians) **கண்ணோட்டத்தில் ஒரு சிறந்த நூலாகக் கருத இயலாது என்றாலும், ஹென்றிக்கின் இம்முயற்சி பாராட்டப்படக் கூடியதே எனலாம்.** பெயர்ச் சொற்கள், வினைச்சொற்கள், அவற்றிற்கான முக்காலங்கள், உரிச்சொற்கள் வாக்கிய அமைப்புகள் ஆகியவை விளக்கப்பட் டுள்ளன. எடுத்துக்காட்டாக,

"விரைவில் சென்று அவனை இங்கு வரச்சொல்"

என்ற வாக்கியம்,

"குயிட்டா போய் அவனை சட்டுனு இங்கே வரச் சொல்லு"

என்றவாறு அமைந்துள்ளது.[696]

## தமிழில் முதல் உரை நடை

தமிழில் உரை நடை எழுதும் வழக்கு தொடக்க காலத்தில் இல்லாமற் போனதற்கு, எழுது பொருட்களின் பற்றாக் குறையே அடிப்படைக் கரணியம் என்று கூறலாம். விரிந்த கருத்துக்

695. Tamil Manuscripts in European Libraries, Xavier Thaninayagam. Fr., Vol. III, Tamil Culture, 1954, pp. 210-218.
696. Biblioteca Nacional de Lisboa, Lisbon, Mss No. 3141. Files Files 2 and 3.

களை சுருங்கக் கூறும் முறையே செய்யுள் முறையாகும். ஓலைகளில் எழுதப்பட்ட செய்திகள் யாவும் செய்யுள் நடையிலேயே அமைந்திருந்தன. தொல்காப்பியம் முதல் சிலப்பதிகாரம் வரையில் எழுதப்பட்ட இலக்கண, இலக்கிய நூல்களுக்கும் பெரும்பாலும் செய்யுள் நடையிலேயே உரை எழுதப்பட்டன. இறையனார் களவியல் உரையை தொடக்க கால உரைநடையாகக் கொள்ளலாம். ஐரோப்பியர்கள் தமிழகம் வந்தபோது அவர்கள் தமிழில் புலமை பெற்றிருக்கவில்லை என்பதால், தமது சமயக் கருத்துகளை செய்யுள் வடிவத்தில் கூற அவர்களால் இயலவில்லை. தட்டுத் தடுமாறித் தமிழில் கொச்சை மொழியில் (Calloquial form) பேசக் கற்றுக் கொண்டனர். இலக்கியத் தமிழுக்கும் பேச்சுத் தமிழுக்கும் வேறுபாடுகள் இருந்ததையும் அவர்கள் அறிந்திருந்தனர். இலக்கியத் தமிழில் அவர்களுக்குத் தம் கருத்தை எழுதத் தெரியவில்லை என்பது ஒருபுறமிருக்க, அவ்வாறு எழுதப்பட்டிருந்தாலும், அது மக்களைச் சென்றடையாது என்பதும் உண்மையாகும். எனவே, சிறுசிறு வாக்கியங்களில் தமது செய்திகளை உரைநடையாக எழுத முற்பட்டனர். இதுவே தமிழ் உரை நடைக்கு நல்லதொரு தொடக்கமாக அமைந்தது. அடுத்த சில நூற்றாண்டுகளில், சிறந்த உரைநடை நூல்களை ஐரோப்பியர் தந்தனர்.

### ***கிறிசிட்டியானி வணக்கம்*** - Krisittiyani Vanakkam[697]

தமிழில் அச்சிடப்பட்ட இரண்டாவது நூலாகும். கொச்சியில், கி.பி. 1579 நவம்பரில் (கார்த்திகை 14) வெளியிடப்பட்டது. 122 பக்கங்களுடன், 10x14 செ.மீ. அளவுகளில் இந்நூல் அமைந்திருந்தது. ஹென்றிக் இந்நூலை எழுதினார். நூலாசிரியர் என்ற முறையில் தனது பெயரை, "அன்றிக்கு பாதிரியார்" (Andriku Padriyar) என்று குறிப்பிட்டிருந்தார். இது முற்றிலும் கிறித்துவர்கள் சொல்லும் செபங்கள் (Prayers) மற்றும் சமயச் செய்திகளின் விளக்கங்களை உள்ளடக்கியிருந்தது. **இதற்கு முன்பு தமிழில் இவ்வாறான ஒரு நூல் இல்லையென்பதால், ஹென்றிக் அடிகளாரைத் தமிழ் உரைநடையின் தந்தை எனக் கூறுவதில் தவறில்லை எனலாம்**. இந்நூல் **மார்க்கோஸ் ஜார்ஜ்** என்பார் போர்த்துக்கீசிய மொழியில் எழுதிய நூலின் தமிழாக்கமே ஆகும். இது பன்னிரண்டு தலைப்புகளில் எழுதப்பட்டிருந்தது. ஒவ்வொரு பகுதியின் முடிவிலும், "கிறித்துவின் வழியின்றி

697. Portuguese in the Tamil Coast. p. 341.

மாந்தனுக்கு மீட்பில்லை", என்ற வாசகம் எழுதப்பட்டிருந்தது. இந்நூலின் ஒருபடி, இலண்டன் நகரத்து நூலகம் ஒன்றில் பாதுகாக்கப்பட்டுள்ளது.

## தூயவர்கள் பற்றிய வரலாற்றுக் குறிப்பு நூல்
(Flos Sanctorum)

"அர்ச்சிய சிஷ்ட சிலுவை அடையாளத்தினாலே, எங்கள் சத்துருக்களிடமிருந்து எங்களை ரட்சித்துக் கொள்ளும், எங்கள் சர்வேசுரா! பிதாவுக்கும் சுதனுக்கும் இஸ்பிரித்து சாந்துக்கும் தோஸ்திரம் உண்டாகக் கடவது."

கிறித்துவர்கள், தங்கள் பணிகளைத் தொடங்கு முன்பும் முடித்தபின்பும் சொல்லும் அடிப்படையான மந்திரம் இது. இதில் குறிப்பிடப்பட்டுள்ள அர்ச்சிய சிஷ்ட என்ற சொல், கத்தோலிக்கத் திருச்சபையினரே பெரும்பாலும் பயன்படுத்திய வடசொல்லாகும். அர்ச்சனா என்ற சமஸ்கிருதச் சொல்லுக்குப் போற்றுதல் (அர்ச்சித்தல்) என்பதே பொருளாகும். கத்தோலிக்கத் திருச்சபையில், தங்கள் சமயத்துக்காகச் சிறப்பாகப் பணியாற்றியவர்களைப் புனிதர்கள் அல்லது தூய்மையானவர் என்ற பொருளில், அர்ச்சிய சிஷ்டவர்கள் என அழைத்தனர். பரிசுத்தவான்கள் என்று அதற்கு விளக்கமும் அளித்தனர். அர்ச்சிய = பெருமைப்படுத்துதல் அல்லது போற்றுதல் (Adorable) என்றும், சிஷ்ட = குற்றமற்ற அல்லது மேன்மையான (Excellence) என்றும், பொருள் கொண்டு, போப்பாண்டவரால் புனிதராக (Saints) அறிவிக்கப்படுபவர்களே, அர்ச்சிய சிஷ்டவர்கள் எனப்பட்டனர்.

தமிழ் நாட்டில் பணியாற்றிய பிரான்சிஸ் சேவியருக்கும், ஜான்-டி-பிரிட்டோவுக்கும் அர்ச்சிய சிஷ்ட பட்டம் போப்பாண்டவரால் அளிக்கப்பட்டது. அன்னை தெரசாவுக்கு அளிக்க முயற்சிகள் மேற் கொள்ளப்பட்டு வருகின்றன. கத்தோலிக்கத் திருச்சபையில் உள்ள புனிதர்களின் வாழ்க்கை வரலாற்றை, கிறித்துவர்களுக்கு எடுத்துச் சொல்வதால், கிறித்துவர்களும் அப்புனிதர்களைப் பின்பற்றி, அச்சமயத்தில் பிடிப்புடன் இருக்க வேண்டும் என்று தூண்டுதல் செய்வதே, இவ்வரலாற்றின் நோக்கமாகும். இப்புனிதர்கள் சிலரின் வரலாற்றை, ஹென்றிக் ஒரு நூலாக வெளியிட்டார். முன்பு வெளியிடப்பட்ட நூல்களைப் போன்று இல்லாமல், இந்நூலை தமிழர்கள் படித்துப் பார்த்து, பிழைகளை நீக்கிக் கொடுத்த பின்பே அச்சிடப்பட்டது.[698]

---

698. Portuguese in the Tamil Coast, p. 343.

இந்நூல் கி.பி. 1586 ஆம் ஆண்டில் புன்னைக்காயலில் வெளியிடப்பட்டது. இந்நூலின் படியொன்றினை, தனிநாயகம் அடிகளார் கண்டுபிடித்து, அதனை வாடிகன் நூல் நிலையத்தில் சேர்ப்பித்தார்.

தமிழ் உரை நடையில் புதிய கண்ணோட்டத்தை இந்நூல் அளித்தது. பரவர்களுக்காக வெளியிடப்பட்ட இந்நூல் 668 பக்கங்களையும் 342 தலைப்புகளையும் கொண்டிருந்தது. தமிழில் இது போன்ற நூலை அதுவரையில் கண்டறியாத பலரும், இந்நூலைக் கண்டு வியந்து போயினர். ஓலைச் சுவடியில் பார்த்து தமிழ் எழுத்துக்களை அச்சுவடிவில் கண்ட பிராமணர்கள் மலைத்துப் போயினர். அச்சடிக்கும் முறை எவ்வளவு எளிதானது புதுமையானது என்பதைத் தமிழ் மக்கள் அறிந்து கொண்டனர் என்று போர்த்துக் கீசிய குறிப்புகள் கூறுகின்றன.

## தமிழ் நாட்காட்டி

ஹென்றிக் தனது புனிதர்கள் பற்றிய நூலில், கிரகோரியன் நாட்காட்டிக்கு இணையான தமிழ்த் திங்கள், பக்கல் (தேதி) குறித்த நாட்காட்டியை அறிமுகம் செய்தார். ஏப்ரலில் தமிழாண்டுத் தொடங்குவது பற்றியும், ஐரோப்பிய நாட்காட்டியின் முதல் திங்களான சனவரிக்கு இணையாக தைத்திங்களைக் காட்டும் ஹென்றிக், இதுபற்றிய விளக்கங்களை தனது ஃப்ளோஸ் சாஸ்தோரும் என்ற நூலில், 668ஆம் பக்கத்தில் குறிப்பிட்டுள்ளார். கிறித்துவர்களின் விழாக்களில் சில, ஆண்டின் குறிப்பிட்ட நாளில் விழாமல், மாறி மாறி வருவது பற்றியும் (திருநீற்றுப் புதன், உயிர்ப்புத் திருவிழா - Ash Wednesday and Easter) விளக்கியுள்ளார். மூன்று அறிவர்கள் குழந்தை இயேசுவை சந்தித்த நாள் (Epiphany) சனவரி 6 ஆம் பக்கலிலும், இயேசு பிறப்பு டிசம்பர் 25ஆம் பக்கலிலும் நிலையாக விழும் விளக்கங்களையும் அளித்துள்ளார். தமிழர் திருநாளாம் பொங்கலை, மூன்று அறிவர் நாளுடன் இணைத்து, அந்நாளைக் கிறித்துவப் பொங்கல் நாள் என்று குறிப்பிடுகிறார்.[699] பின்னர் வந்த மரபுகள், மாட்டுப் பொங்கல் நாளை, அந்தோணியார் பொங்கல் என்று இன்றும் நாட்டுப் புறங்களில் கொண்டாடி வருகின்றனர். இச்செய்திகள் எல்லாம், கிறித்துவத்துக்கு மாறியபின்பும், தமிழ் மரபுகளை அவர்களால் விடமுடியவில்லையென்பதையே காட்டுகின்றன.



699. Ibid.

# ஐரோப்பியரின் தமிழ்ப் படைப்புகள்

## ஹென்றிக் அடிகளாரின் படைப்புகள்

ஹென்றிக் அடிகளார், பிரான்சீஸ் சேவியரின் அணுக்கத் தொண்டராவார். துறவியாக இந்தியாவுக்கு வந்தவர், பின்னர் கிறித்து சமயத்தின் இந்தியத் தலைமைப் பொறுப்பையும் ஏற்றார். நொபிலி, பெஸ்கி போன்ற ஐரோப்பியத் தமிழறிஞர் களுக்கு முன்னோடியாய்த் திகழ்ந்தவர். தமிழைக் கற்க அவர் மேற்கொண்ட முயற்சிகள் போற்றத்தக்கன. தனது எழுத்துப் பங்களிப்புகளாக,[700]

1. புனிதர்களின் வரலாறு (Lives of the Saints)
2. கிறித்துவத்தின் தத்துவம் (Doctrina Christian)
3. கிறிஸ்துவின் வரலாறு (Life of Christ till the Ascention)
4. குற்றங்களை வெளிப்படுத்தி மன்னிப்புக் கோருதல் (A manual for confession)
5. தமிழ் இலக்கணம்
6. தமிழ் - போர்த்துக்கீசிய அகராதி
7. கிறிஸ்துவத்தின் எதிராளிகளுக்கு (Refuting the fables of the gentiles and defending the Christian religion)
8. அடியார்களின் சகோதரத்துவம் (Brother hood of Saints).

## நொபிலியின் படைப்புகள்

### நொபிலியின் தமிழ் நூல்கள் மற்றும் இலத்தீன் மொழியில் எழுதிய மடல்கள்

இராபர்ட்-டி-நொபிலியைப் பற்றி ஏற்கனவே விளக்க மாகக் கூறப்பட்டுள்ளது. தமிழ், மலையாளம், தெலுங்கு,

700. Ibid.

சமஸ்கிருதம் ஆகிய மொழிகளில் புலமை பெற்றிருந்த நொபிலி, ஐரோப்பிய மொழிகளையும் கற்றறிந்தவர். பிறவிப் பேரறிஞ ரான நொபிலி, தமிழை மிகக் குறுகிய காலத்தில் கற்று தேர்ச்சி பெற்றார். தனது சொற்பொழிவுகளில், தமிழ் இலக்கியங்களி லிருந்தும், பழமொழிகளிலிருந்தும் பல மேற்கோள்களைக் காட்டுவார். வியக்கத்தக்க நினைவாற்றலைக் கொண்டிருந்த நொபிலி, தமிழ் இலக்கிய வரிகளை தடங்கலின்றி கடல்மடை திறந்தார்ப்போல் கொட்டுவார். தமிழர்களும் அறிந்திராத தமிழ் மரபுகளை விளக்குவார். அவருடைய மொழியாற்றலைக் கண்ட பிராமணர்கள், ஐரோப்பியரான நொபிலி இவ்வாற்றலை எங்ஙனம் பெற்றார் என வியந்தனர். **லாயர்சியோ** (Fr. Laerzio) என்ற இயேசு அவையின் மாநிலத்தலைவர் (Provincial), *20.11.1069* ஆம் ஆண்டு உரோமையிலுள்ள தனது தலைமையிடத்துக்கு எழுதிய மடலில்,[701] நொபிலியின் தமிழறிவைப் புகழ்கிறார். **புசரியோ** (Fr. Buccerio)வும்,[702] **அந்தோணியோ விகோவும்**[703] (நொபிலியின் உதவியாளர்) நொபிலியின் தமிழ்ப் புலமை பற்றித் தங்களது மடல்களில் புகழ்கின்றனர். **புரோயென்சா** கூறுகையில்,[704] நொபிலியின் நூல்களைத் தவிர வேறு நூல்கள்

701. Fr. Laerzio:

"Father Nobili had learnt Tamil like the Brahmins who are the most porficient in that language. He has also read many of their works and learnt by heart certain portions all as well as many verses of their most famous poets."

702. Buccerio:

"His (Nobili) knowledge of Tamil is particularly amazing that one would think it is his native language. It is wonderful how he had been able to master it so well with in these few years."

703. Antonio Vico: "Shall I speak to you of his knowledge that exposes the most abstruce question of theology as if they were child's play? with that subtle talent he (Nobili) knows how to interest and charm others while making himself understood by the ingnorant. He astonishes respect of the variety and different idioms."

704. Fr. Proneca: "There is no mystery in our religion which is not explained in the book of Fr. Roberts. There is nothing left difficult that he has not solved so that a missionary needs no other books of theology than those he has written".

எதனையும் சமயப் பணிகளுக்குப் பயன்படுத்தத் தேவையில்லை என்கிறார். கிறித்துவ சமயத்தின் மெய்யியல் கோட்டுபாடுகளைத் தெளிவான தமிழில் விளக்கியுள்ளதாகவும் குறிப்பிடுகிறார்.

I. **இலத்தீனில் எழுதியவை** (Treatises of Nobili in Latin)[705]

1. Responsio (Apologia), 1610
2. De linea Brah manum, 1610.
3. Interpretation of the General's letter: Dec. 1612.
4. Informatio - on Indian customs, 1613.
5. Responsio quibusdam etc. (Reply to Fr. Buccerio), 1615.
6. A Treatise on the 77 Prepositions.
7. Narratio Fundementorum, 1619.

   *(இவ்வறிக்கை வரலாற்றுச் சிறப்பு மிக்க ஒன்றாகும்)*

II. **56 மடல்கள்**[706]

*போர்த்துக்கீசிய மொழியில் 9,*

*இத்தாலிய மொழியில் 29,*

*இலத்தீன் மொழியில் 18.*

III. **தமிழ் நூல்கள்**[707]

1. ஞானோ பதேசம் (A Catechism in 5 parts).
2. புனர் ஜென்ம ஆட்சேபம் (Refutation of Transmigration)[708]
3. நித்திய ஜீவன் சல்லாபம் (Dialogue on eternal life)[709]
4. ஆத்தும நிர்ணயம் (A treatise on the soul)[710]
5. தூஷண திக்காரம் (Refutation of Calumnies)[711]

---

705. Fr. Robert De Nobili, p. 214.

706. Ibid.

707. Ibid.

708. Mss. in Pontificia Biblioteca Missionaria di Propaganda Fide, Rome.

Editions : Madras 1891. Trichinopoly 1906, Tuticorin Vol, I-IV, 1963-68.

709. Mss in Saraswathy Mahal Library, Thanjavur, No. 536, Files 1-88.

710. Published in Madras 1889, Tuticorin 1967.

711. Mss in Madurai Province Jesuit Archives, Fls. 1-470.

6. தேவமாதா சரித்திரம் (Life of the Mother of God)[712]
7. சேசு நாதர் சரித்திரம் (Life of Christ)[713]
8. கடவுள் நிர்ணயம் (Theodicy)
9. பேதக பரீட்சை (Examination of error)
10. ஞானதீபிகை (Spiritual torch)
11. விசுவாச சல்லாபம் (Dialogue on the Faith)
12. மந்திர மாலை (A collection of prayers)
13. ஞானோபதேசம் - 26 சொற்பொழிவுகள் (26 Sermons)
14. சின்னக் குறிப்பிடம் (Penny Catechism)
15. அஞ்ஞான நிவாரணம் (Dispelling of Ignorance)[714]

இவையன்றி தெலுங்கிலும் சமஸ்கிருதத்திலும் நொபிலி எழுதியவை கணக்கில் சேர்க்கப்படவில்லை.

## பல்த்தசார் டி கொஸ்தாவின் நூல்கள் (1610-1673)[715]

ஜான்-டி-பிரிட்டோவை அறிமுகம் செய்தவர். இவர் நொபிலியின் ஞானோபதேசம், சின்னக் குறிப்பிடம் போன்ற தமிழ் நூல்களை, போர்த்துக்கல் மொழிக்கு மாற்றினார். இந்தப் போர்த்துக்கீசிய மொழி பெயர்ப்பு நூலை, 1923 ஆம் ஆண்டில் கோவாவில் கண்டுபிடித்தனர். **ஜான்** என்பார் (Fr. Jean Castests) இந்நூலை தட்டச்சு செய்து ஒரு படியை மதுரைக்கு அனுப்பி வைத்தார்.

## ஜான் புசேவின் நூல்கள் (Fr. Jean Venant Bouchet) 1655-1732[716]

இவர் மங்கம்மாள் காலத்தில் வாழ்ந்திருந்தவர். மங்கம்மாளின் மதிப்பையும் உதவிகளையும் பெற்றுக் கொண்டவர். நாயக்க மன்னர்களின் ஆட்சி பற்றிய பல செய்திகளை இவர் அளித்துள்ளார். திருச்சிக்கு அருகிலிருந்த ஆவூரில் சமயப் பணியாற்றியவர்.

1. திவ்விய மாதிரிகை (The Divine Model)[717]

---

712. Published in Tuticorin, 1964.

713. Ibid.

714. Published in Trichinopoly 1891.

715. Portuguese in The Tamil Coast, p. 351.

716. Ibid.

717. Published in Pondicherry, 1870., Tuticorin 1966.

2. ஞான சஞ்சீவி (Spiritual Medicine)[718]
3. ஞான நட்சத்திர மாலை (Spiritual garland of stars)[719]

## வீரமாமுனிவரின் படைப்புகள் முப்பத்தேழு[720]

### பாநடைநூல்கள் எட்டு

1. தேம்பாவணி, (Garland of flowers), *1726.*[721]
2. திருக்காவலூர்க் கலம்பகம் (Poem of Thirukkavalur)
3. கித்தேரியம்மாள் அம்மானை (Poem of Quitteri), *1732.*[722]
4. அன்னை அழுங்கல் அந்தாதி (Poem of Our Lady of Affliction[723]
5. அடைக்கல மாலை. (Garland of Protection)
6. அடைக்கல நாயகி வெண்கலிப்பா (Poem of Our Lady of Refuge)
7. வண்ணக் கலைகள் (Varieties of Poems)
8. கருணாம்பரப்பதிகம் (Funeral songs)

### உரை நடை நூல்கள் பத்து

1. வேதியர் ஒழுக்கம் (Moral code for Catechists), 1727.
2. வேத விளக்கம் (Elplanation of Religion), 1728.[725]
3. பேதகமறுத்தல் (Refuting errors),[726]
4. லூத்தலினத்தார் இயல்பு (Refutation of Lutheranism)[727]
5. வாமன் சரித்திரம் (History of Waman)
6. பரமார்த்த குரு கதை (Story of Parmartha Guru)[728]

---

718. Mss in the Madurai Province Jesuit Archives, Tuticorin 1965.
719. Published in Tuticorin, 1966.
720. வெள்ளைக் குயில், ம.சோ. விக்டர், 1981.
721. Published in Pondicherry, 3 Vols, 1851-53.
722. Published in Madras, 1849 and Madurai 1947.
723. Thanjavur, 1865.
724. Pondicherry, 1847.
725. Pondicherry, 1842.
726. Pondicherry, 1868
727. Pondicherry, 1842, 1847, 1868.
728. (Mss entitled "Aventures du Gourou Paramarta", in Biblioteca Institute Historici Societatis Jesu, Rome), Fabula de Ethnicorum Magistro Paramarta guru dicto.... Tamulica Scripta eta Bispo Auctore in Latinum Versa, London, 1822. Published in Pondicherry, 1845.

7. திருச்சபைக் கணிதம் (Coe of the church)
8. ஞான உணர்த்துதல் (Spiritual Consionsness) 1727.
9. ஞான விளக்கம் (Spiritual Explanation)
10. ஞானக் கண்ணாடி (Spiritual Mirror)

**இலக்கண நூல்கள் நான்கு**

1. *கொடுந்தமிழ் இலக்கணம் (இலத்தீன்)*[729]
   - Grammar of the Vulgar dialect
2. *செந்தமிழ் இலக்கணம் (இலத்தீன்)*
   - Grammar of the Classical dialect
3. *கிளாவிஸ் (இலத்தீன்)* - Clavis
4. தொன்னூல் விளக்கம் (Explanation of old Texts), 1730.

**அகரமுதலிகள் ஐந்து**

1. சதுரகராதி (Quadurple Dictionary), 1732
2. Tamil - Latin Dictionary (9000 words)[730]
3. Portuguese - Latin - Tamil Dictionary (4353 words)
4. French - Tamil Dictionary.
5. Tamil - English Dictionary.

**மொழி யெர்ப்பு நூல் ஒன்று**

1. *திருக்குறள் (அறத்துப் பால் - பொருட்பால் மட்டும், இலத்தீன் மொழியில்)*

**மடல் இலக்கியம் இரண்டு**

1. திருக்கடையூர் திருச்சபையினருக்கு எழுதிய மடல்.
2. பொதுவான மடல்.

---

729. Gramatica Latino - Tamulica, in qua de Vulgari Tamulical Linguae Idiomate Kodum - Tamil dieto fusius tractatur.
Danish Mission Press, Tranquebar 1838, Pondicherry 1847.

730. Vulgars Tamulical Linguae Dictionarium Tamulicum Latinum : (In British Museum Library, Add 261110) Published in Trichinopoly 1882.

**மருத்துவ ஏடுகள் மூன்று**

1. வைத்திய நச காண்டம்
2. இரண வாகடம்
3. அறுபோக வைத்திய சிகாமணி

**வடமொழி நூல்கள் இரண்டு**

1. வாக்கிய சித்தாந்தம்.
2. வெளியிடப் படாததும், உறுதி செய்யப்படாததுமான வடமொழியில் கூறப்படும் திருமண வாழ்த்து, உடையார் பாளையம் பகுதியில், சமயச் சொல்லிகளால் கடந்த காலந் தொட்டு சொல்லப்பட்டு வருகின்றது. பிராமணர்கள் திருமணத்தில் ஓதுவது போன்று, திருக்குடும்பம் மணமக்களை வாழ்த்துவதாக இம்மந்திரம் சொல்லப்படுகிறது. முற்றிலும் பொருளை உணராத சமயச் சொல்லிகள், மரபு வழியாக இம்மந்திரத்தை ஓதிவருகின்றனர். தமது முன்னோர்களுக்கு வீரமாமுனிவர் இம்மந்திரத்தைக் கற்றுக் கொடுத்ததாகவும் கூறுகிறார்கள்.[731]

## சீகன் பால்கு

வீரமாமுனிவர் காலத்தில் வாழ்ந்திருந்த செர்மானியர். லூத்தரன் சீர்திருத்தச் சபையினரான இவர் தரங்கம் பாடியில் சமயப் பணியாற்றினார். இளைஞரான சீகன் பால்கு, தமிழைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்ற வெறியுடன் முயன்றவர். மிகக்குறுகிய காலத்தில் தமிழைக் கற்றார். தனது சபையினரும் தமது நாட்டவரும் சரியான ஒத்துழைப்புகளை அளிக்காத நிலையிலும், தன்னுடைய முயற்சியால் தரங்கம்பாடியில் ஓர் அச்சுக் கூடம் நிறுவி, விவிலியத்தின் புதிய ஏற்பாட்டு நூலை அச்சிட்டு வெளியிட்டார். வீரமாமுனிவருக்கும், சீகன் பால்குவிற்கும் சமயக் கொள்கையில் கருத்து வேறுபாடுகள் இருந்த போதும், இருவரும் ஒருவரையொருவர் மதித்தனர். வீரமாமுனிவரின் தமிழாற்றலை சீகன் பால்கு வெகுவாகப் புகழ்ந்துரைத்துள்ளார். அக்காலத்தில் இயேசு அவையினர் விவிலியத்தின் பழைய ஏற்பாட்டு நூலை கேள்வி - பதில் வடிவில் அச்சிட்டிருந்தனர். 21.3.1711ஆம் ஆண்டில் புதிய ஏற்பாட்டு நூலை சீகன் பால்கு வெளியிட்டார்.[732]

---

731. வெள்ளைக் குயில், ம.சோ. விக்டர், 1981.

732. Portuguese in the Tamil Coast, p. 353.

இந்நூலில் சில குறைபாடுகள் இருந்தன. விவிலியக் கருத்தினை மொழிபெயர்ப்பு முழுமைப்படுத்தவில்லையென்றும், கொச்சையான சொற்கள் பயன்படுத்தப்பட்டிருந்தன என்றும், இலக்கிய நடையில் வாசகங்கள் அமையவில்லையென்றும் சொல்லப்பட்டன. கொயூத்தோ (Fr. Coeurdoux) என்பார் காரைக் காலில் சமயப் பணியாற்றிய இயேசு அவையினர். லூத்தரன் சபையாரின் விவிலியம், நல்லமொழி நடையும், வாக்கியக் கட்டமைப்பு புகலுமின்றி வெளியிடப்பட்டுள்ளதால், அப்புனித நூலுக்கு அவை பெருமை சேர்ப்பதாக இல்லை எனக் குறிப்பிடு கிறார்.

சீகன் பால்குவிற்கு இருந்த தமிழார்வமும், விவிலியத்தை வெளியிட வேண்டும் என்ற சமய நோக்கமும் மேலோங்கி நின்றன. மேலும் அப்பணிகளுக்கு யாரும் சரியான ஒத்துழைப் பையும் அவருக்கு அளிக்க முன்வரவில்லை. அக்காலச் சூழலில் இது போன்றதொரு நூலை சீகன் பால்கு வெளியிட்டது அவரது உழைப்பையும் ஆற்றலையும் விஞ்சிய செயலாகவே கருத வேண்டும். தனது 35ஆம் அகவையிலேயே சீகன் பால்கு இறந்து விட்டார். **துடிப்புமிக்க அவ்விளைஞர் இன்னும் சில ஆண்டுகள் உயிர் வாழ்ந்திருப்பின், அரும்பெருஞ் செயல் களையெல்லாம் தமிழுக்கும் தம் சமயத்துக்கும் ஆற்றி யிருப்பார் என்பதில் ஐயமில்லை**. தமிழை வளர்த்த ஐரோப்பி யர்களில், சீகன் பால்கு சிறப்பிக்கப்பட்ட வேண்டியவர்களில் ஒருவராவார். ஒப்பிலக்கண நூலைத் தந்த **கால்டுவெல்லார்**, தமிழ் நூல்களை ஐரோப்பிய மொழிகளில் பெயர்ப்பு செய்த **போப்பையர்**, தமிழ் இசையின் மூலத்தையும் பெருமையையும் உணர்த்திய **அபிறகாம் பண்டிதர்**, இரட்சணிய யாத்திரிகம் யாத்த **கிருஷ்ணப் பிள்ளை** போன்ற சீர்த்திருத்தத் திருச் சபையினரின் தமிழ் வளர்ச்சிப் பணிகள் தமிழர் வரலாற்றில் என்றும் போற்றுதலுக்குரியனவாகும்.



# மேற்கோள் நூல்கள் பட்டியல்


1. **அமுதன் அடிகள்,**
   *வீரமாமுனிவரின் 325ஆம் ஆண்டுப் பிறந்த நாள் சொற்பொழிவு, ஏலாக்குறிச்சி, நாள் 7.11.2005.*

2. **அம்பேத்கர், பி.ஆர். டாக்டர்,**
   *சூத்திரர்கள் யார்? மொழி பெயர்ப்பு, பெ. சுந்தரம், சாந்தா பப்ளிஷர்ஸ், சென்னை, 1994.*

3. *குடந்தை மறைமாவட்டப் பொன்விழா மலர், 1949.*

4. **குணா,**
   *வள்ளுவத்தின் வீழ்ச்சி, தமிழக ஆய்வரண், பெங்களூர், 1996.*

5. **கோபாலன், மு.ம.,**
   *சங்க காலச் சோழர்களின் தலைநகர் எது, திருச்சிராப்பள்ளி நாணயவியல் கழக 5ஆம் ஆண்டுமலர், 1999.*

6. **சாமிநாதையர், டாக்டர், உ.வே.சா.,**
   *மணிமேகலை அரும்பதவுரை, பெசண்ட் நகர், சென்னை, 1998.*

7. **சாமிநாதையர், டாக்டர் உ.வே.சா.,**
   *பதிற்றுப்பத்து மூலமும் உரையும், பெசண்ட் நகர், சென்னை, 1994.*

8. **சாமிநாதையர், டாக்டர் உ.வே.சா.,**
   *சிலப்பதிகார மூலமும் அடியார்க்கு நல்லார் உரையும், பெசண்ட் நகர், சென்னை, 1992.*

9. **சிவத்தியா நாநந்த மகரிஷி,**
   *ரிக்வேத ஸம்ஹிதை, சாது அச்சுக் கூடம், இராயப்பேட்டை, சென்னை, 1937.*

10. **சுப்பிரமணியன். டாக்டர். ந..**
இந்திய வரலாறு, நியு செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை-98, 1989.

11. **சுவாமி சித்பவாநந்தர்,**
ஸ்ரீமத் பகவத்கீதை, ஸ்ரீராமகிருஷ்ண தபோவனம், திருப்பராய்த்துறை, 1993.

12. **தமிழ் இலக்கியங்கள்**
தொல்காப்பியம்
திருக்குறள்,
கம்ப இராமாயணம்
தேம்பாவணி
குறுந்தொகை
நற்றிணை
மணிமேகலை
சிலப்பதிகாரம்
சீவக சிந்தாமணி
நந்திக் கலம்பகம்

11. **திருமூலர்,**
திருமந்திரம் மூவாயிரம், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், ஆழ்வார்பேட்டை, சென்னை, 1996.

12. **தேவகலா. தெ. டாக்டர்,**
இந்தியா தோமாவழி திராவிடக் கிறித்துவ நாடே... எவ்வாறு? மெய்ப்பொருள் பதிப்பகம், சென்னை, 2004.

13. **தேவநேயன். ஞா.,**
தமிழர் வரலாறு, நேசமணி பதிப்பகம், காட்டுப்பாடி விரிவு, 1972.

14. **தேவநேயன். ஞா.,**
தமிழ் வரலாறு, நேசமணி பதிப்பகம், காட்டுப்பாடி விரிவு, 1967.

15. **தேவநேயன். ஞா.,**
முதற்றாய் மொழி I, பதி.கோ. இளவழகன், தமிழ் மண் பதிப்பகம், இராயப்பேட்டை, சென்னை, 2001.

16. **தேவநேயன். ஞா.,**
முதற்றாய் மொழி II, பதி.கோ. இளவழகன், தமிழ் மண் பதிப்பகம், இராயப்பேட்டை, சென்னை, 2001.

17. **நெடுஞ்செழியன். க.,**
பேராசிரியர், இந்தியப் பண்பாட்டில் தமிழும் தமிழகமும் மனிதம் பதிப்பகம், திருச்சி, 1989.

18. **நெடுஞ்செழியன். க.,**
பேராசிரியர், தமிழ் இலக்கியத்தில் உலகாய்தம், மனிதம் பதிப்பகம், திருச்சி, 1990.

19. **விக்டர். ம.சோ.,**
எபிரேயத்தின் தாய்மொழி தமிழே, வீரமாமுனிவர் பதிப்பகம், ஏலாக்குறிச்சி, 2005.

20. **விக்டர். ம.சோ.,**
வானியலின் மூலவர் தமிழரே (அச்சில்)

21. **விக்டர். ம.சோ.,**
சமஸ்கிருதத்தின் தாய்மொழி தமிழே! (அச்சில்)

22. **விக்டர்., ம.சோ.,**
வெள்ளைக் குயில் (வீரமாமுனிவரின் வாழ்க்கை வரலாறு), ஏலாக்குறிச்சி, 1981.

23. **விக்டர். ம.சோ.,**
பேரரசி மங்கம்மாள் ஆய்வுக்கட்டுரை, சுதந்திரம் வார ஏடு, சென்னை, 1.8.91.

24. **விக்டர். ம.சோ.,**
தமிழ்த் தந்தை வீரமாமுனிவர், தினகரன் நாளேடு, 14.4.2005.

25. **வின்ஸ்லோ.**
எம் தமிழ் - ஆங்கில அகராதி, ஏசியன் எஜுகேஷனல் சர்வீஸ், புதுடில்லி, 2001.

26. **வீரமணி. கி.,**
கீதையின் மறுபக்கம், திராவிடர் கழக வெளியீடு, சென்னை, 1998.

27. **வீரமாமுனிவர்,**
சதுரகராதி, பதி. சூ. இன்னாசி, டாக்டர்., தூய சவேரியார் கல்லூரி, பாளையங்கோட்டை, 1971.

28. **Anantha Krishna Aiyar, L.K.,**
Tribes and Castes of Cochin (Anthropology of Syrian Christians) Cosmo Publications, New Delhi, 1999.

29. **Andrew Humphregs,**
Egypt, Lonely Planet Publications, Australia, 1998.

30. **Annie Jousiffe,**
Lebanon, Lonely Planet Publications, Australia, 1999.

31. **Barros Joao De,**
Da Asia, 8 Vols. (1778), Lisboa, 1973.

32. **Basham, A.L.,**
The Wonder that was India, Vol-I, New Delhi, 1983.

33. **Basil S. Davis, Dr.**
Did the Apostle Thomas Visit South India, Journal of the Institute of Asian Studies, Sept. 2000.

34. **Benjamin Walker,**
The Hindu World, Vol. I, New Delhi, 1983.

35. **Bertrand, J.Fr.,**
La Mission du Madure, 4 Vols. Published in Paris, 1847.

36. **Beschi Joseph Constantine, Fr.,**
Gramatica Latino Tamulica, Danish Mission Pręss, Tranquebar, First Printed in 1838. Pondicherry 1843.

37. **Beschi, J.C., Fr.**
Vulgars Tamulicae Linguae Dictionarium Tamulicum, Trichinopoly, 1882.

38. **Beschi, J.C. Fr.**
Senthamizh Ilakkanam, Saraswathi Mahal Library, Thanjavur.

39. **Cheriyan C.V.,**
Kerala Historical Society, CMS Press, Trivandrum, 1973.

40. **Cureton. W.,**
Ancient Syriac Documents, London, 1864.

41. **David Crystal, Ed.**
The Cambride Encyclopedia, Cambridge University Press, 1994.

42. **Della Thompson, Ed.,**
Oxford Dictionary of Current English, Oxford University Press, 1996.

43. **Deivanayagam, M.Dr., and Devikala D. Dr.,**
Creeds and Doctrine of Trinity in St. Thomas Dravidian Christianity, Meipporul Publishers, Chennai, 2002.

44. **Devakala, D.Dr.**
Hindu Religion is the offshoot of St. Thomas Dravidian Christianity, Meipporul Publishers, Chennai, 2002.

45. **Duncan Greenless,**
The Gospel of Prophet Mani, The Theosophical Publishing House, Adayar, Chennai, 1956.

46. **Durate Barbosa,**
The Book of Durate Barbosa, New Delhi, 1989.

47. **Fansboll, V., Ed. Rhys David,**
Translator, Jatakatthavannana, Baveru Jataka, Vol. III, London, 1883.

48. **Fernando Felix Lopez,**
Chronica Serafica da Provincia de Portugal, Lisboa, 1885.

49. **Ferroli, D.,**
The Jesuits in Malabar, Vol. I, Banglore, 1939.

50. **Frederick, W. Bunce,**
An Encyclopedia of Hindu Deities; Demo Gods, D.K. Print World, New Delhi, 1935.

51. **Geddes and Michael,**
The History of the Church of Malabar, The Synod of Diamper, London, 1964.

52. **George, M.K.,**
History of Christianity - Source Materials,C.L.S., Madras, 1982.

53. **Gnanasikamani, V.,** and **Dayanandan Francis,** Early Christianity in India, 2005.

54. **Gupta, P.L.,**
Early Coins of Kerala, Dept. of Archaeology, Govt. of Kerala, Trivandrum, 1995.

55. **Henry Heras, Rev.**
Two Apostles in India, Trichinopoly, 1844.

56. **Henry James,**
The Life and letters of St. Francis Xavier, 2 Vols. London, 1881.

57. **Hirth, F., Rockhill, W.W.,**
Chinese and Arab Trade in the Twelfth and Thirteenth Centuries, St. Petersburg, 1911.

58. **James, M.R.,**
The Apocryphal New Testament, Clarendon Press, Oxford, 1924.

59. **Jayaseela Stephen, S.,**
Portuguese in the TamilCoast, Historical Explorations in Commerce and Culture (1507-1749), Navjothi, Pondicherry, 1998.

60. **John Mckenzy, S.J., Rev. Fr.** (Ed)
Dictionary of the Bible, U.S., 1960.

61. **John Samuel, G. Dr.,**
Genesis and Growth, Institute of Asian studies, Chemmen Chery, 2005.

62. **Karl Marx and Frederich Engles,**
Collected Works, Russian Edition, 1974.

63. **Kasinathan, N.,**
Esalam Copper Plates of Rajendra Chola I, Dept. of Arch., Study in Tamil Culture, 1994.

64. **Nagasamy, R.,**
Archaelogical finds in South India, Esalam Bronzes and Copper Plates.

65. **Magazine for the Clergy,**
Monthly in Kerala, Essay: St. Thomas and India, 1952.

66. **Marshall John, Sir.,**
A Guide to Taxila,Cambridge University Press, 1960.

67. **Mathew, K.S.,**
Ship Building and Navigation in the Indian Ocean, (1400-1800 A.D), New Delhi, 1997.

68. **Mathivanan, R.Dr.**
Indus Script Among Dravidian Speakers, ISIAC, Guindy, Madras, 1995.

69. **Medlycott, A.E.,**
India and the Apostle Thomas. An Inquiry with a Critical Analysis of the Acta Thomas, London, 1905.

70. **Meera Abraham,**
Two Medieval Merchant Guieds of South India, South Asia Institute, New Delhi, 1988.

71. Member of
The Catholic Biblical Association of America, The New American Bible, Catholic Educational Guild, U.S., 1970.

72. **Menacherry George,**
Christianity Older than Hinduism in Kerala, Paper presented in World Syriac Conference, Kottayam, 2002.

73. **Menacherry George,**
Glimpses of Nazeraney Heritage, Ollur, 2002.

74. **Menacherry George,**
The Thomas Christian Encyclopedia of India, Trichur, 1973.

75. **Menacherry George,**
Kodungallur, Cradle of Christianity in India, Cranganore, 2000.

76. **Michael Edwards,**
A History of India, New York, U.S., 1961.

77. **Mingana, A.,**
The Early Spread of Christianity in India, Manchester, 1926.

78. **Moraes, G.M.,**
A History of Christianity in India, Manaklalas, Bombay, 1964.

